# முடியரசனாரின் படைப்பிலக்கியக் கொள்கை

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்குப்
பகுதிநிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**ம.ஸ்டீபன் மிக்கேல் ராஜ்**

**(பதிவு எண் : 0386)**

நெறியாளர்

**முனைவர்.சே.செந்தமிழ்ப்பாவை**






**தமிழ்ப்பண்பாட்டு மையம்**

**அழகப்பா பல்கலைக்கழகம்**

**(தேசிய தர நிர்ணயக்குழுவின் மூன்றாம் சுற்றுத் தர மதிப்பீட்டில் A+ (CGPA: 3.64) தகுதி பெற்றது)**

**காரைக்குடி - 630 003**

**தமிழ்நாடு - இந்தியா**


**பிப்ரவரி - 2018**

**முனைவர் சே.செந்தமிழ்ப்பாவை, எம்.ஏ., எம்.ஃபில்., பி.எட்., பி.எச்.டி**
**பேராசிரியர் & இயக்குநர்,**
**தமிழ்ப்பண்பாட்டு மையம்,**
**அழகப்பா பல்கலைக்கழகம்,**
**காரைக்குடி – 630 003.**

**நாள்:**

# நெறியாளர் சான்றிதழ்

**“முடியரசனாரின் படைப்பிலக்கியக் கொள்கை”** என்னும் தலைப்பில் **திரு.ம.ஸ்டீபன் மிக்கேல் ராஜ்** அவர்கள் பகுதிநேர முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்காகச் செய்த இவ்ஆய்வு அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்ப்பண்பாட்டு மையத்தில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும், இந்த ஆய்விற்காக வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

**(முனைவர் சே.செந்தமிழ்ப்பாவை)**
**நெறியாளர்**

**ம.ஸ்டீபன் மிக்கேல் ராஜ், (பதிவுஎண்:0386)**
**முனைவர் பட்ட ஆய்வாளர் (பகுதிநேரம்)**
**தமிழ்ப்பண்பாட்டு மையம்,**
**அழகப்பா பல்கலைக்கழகம்,**
**காரைக்குடி – 630 003.**

**நாள்:**

# ஆய்வாளர் உறுதிமொழி

**“முடியரசனாரின் படைப்பிலக்கியக் கொள்கைகள்”** என்னும் தலைப்பில் பகுதிநேர முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்ஆய்வு எனது சொந்த முயற்சியில் உருவானது என்றும் இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்ஆய்வேடு அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

**(ம.ஸ்டீபன் மிக்கேல் ராஜ்)**

**ஆய்வாளர்**

உறுதிக்கையொப்பம்

**முனைவர் சே.செந்தமிழ்ப்பாவை, எம்.ஏ., எம்.ஃபில்., பி.எட்., பி.எச்.டி**
**பேராசிரியர் & இயக்குநர்,**
**தமிழ்ப்பண்பாட்டு மையம்,**
**அழகப்பா பல்கலைக்கழகம்,**
**காரைக்குடி – 630 003.**

# நன்றியுரை

வள்ளல் அழகப்பரின் பெயரால் அமைந்த அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்ப்பண்பாட்டு மையத்தில் **“முடியரசனாரின் படைப்பிலக்கியக் கொள்கை”** என்னும் தலைப்பிலான முனைவர் பட்ட ஆய்வு நிகழ்த்த வாய்ப்பு நல்கிய அழகப்பா பல்கலைக்கழகத்தின் மாண்பமை துணைவேந்தர் அவர்களுக்கும், மதிப்பிற்குரிய பதிவாளர் அவர்களுக்கும் என் உளமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

என் ஆய்வின் நெறியாளராகவும் எனது மற்றொரு தாயாகவும் இருந்து ஊக்கமளித்து ஆய்வேட்டைச் செம்மையாக உருவாக்குவதற்கு உதவிய தமிழ்ப்பண்பாட்டு மையப் பேராசியர் மற்றும் இயக்குநர் **முனைவர் சே.செந்தமிழ்ப்பாவை** அம்மா அவர்களுக்கு என் உள்ளம் நிறைந்த நன்றி என்றும் உரியது.

ஆய்விற்குத் தேவையான பல்வேறு நூல்களையும் அறிவுரைகளையும் எனக்கு நல்கி பெற்ற பிள்ளையாய்க் கருதிப் பரிவூட்டும் முடியரசனாரின் மூத்தமைந்தர் **எழுத்தாளர் பாரிமுடியரசன்** அவர்களுக்கும், கற்ற பிள்ளையாய்க் கருதிக் கனிவுகாட்டும் **பேராசிரியர் மு.பழனி இராகுலதாசன்** ஐயா அவர்களுக்கும், என் கட்டுரைகளைத் தொடர்ந்து வெளியிட்டு வரும் **‘கல்வி டுடே’** இதழாசிரியர் **திரு.கி.இராமசுப்பிரமணியன்** அவர்களுக்கும் இதயங்கனிந்த நன்றி.

வீறுகவியரசர் முடியரசன் அவைக்களத்தின் செயலாளராக என்னைப் பொறுப்பிலமர்த்தி முடியரசனாரைப் பற்றி ஆழ்ந்துணரச்செய்த வீறுகவியரசர் முடியரசன் அவைக்கள ஆட்சிக்குழுவினர் அனைவருக்கும் என் சிறப்பான நன்றி.

ஆய்வை நிறைவுசெய்ய ஊன்றுகோலாயிருந்த என் பெற்றோர் **அ.மரியதாஸ், ம.ஜெயமேரி,** துணைவியார் **ஞா.அருள்ஞானவித்யா,** மகள் **அ.யாழினி** ஆகியோர்க்கும்**,** தூண்டுகோலாயிருந்த தமக்கையார் **ம.சத்தியப்பிரியா** மற்றும் **ச.இளங்கோ, ஜோ.தீபன்** உள்ளிட்ட நண்பர்களுக்கும், நான் பணியாற்றும் தேவகோட்டை தே பிரித்தோ

மேல்நிலைப்பள்ளி மேலாண்மைக்கும் ஆசிரிய, அலுவலக அன்பர்களுக்கும் அன்பிற்கினிய நன்றி.

எனது ஆய்வினை மிகச் சிறப்பாகத் தட்டச்சு செய்துதந்த அன்புத் தங்கை **ப.லெட்சுமிக்கும்,** துணை நின்ற தமிழ்ப்பண்பாட்டுமைய ஆய்வாளர்களுக்கும், பல்லாற்றானும் உறுதுணையாயிருந்து என் நலனைத் தன் நலனாய்க் கருதி மகிழும் பண்பிற்கினியவர்கள் அனைவருக்கும் என் உளங்கனிந்த நன்றி.

**ம.ஸ்டீபன் மிக்கேல் ராஜ்**

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அ | - | அடிகள் |
| இ.வ. | - | இளம்பெருவழுதி |
| உ.ஆ | - | உரையாசிரியர் |
| ஊ.கோ. | - | ஊன்றுகோல் |
| எ.கா. | - | எக்கோவின் காதல் |
| எ.வ.த | - | எப்படி வளரும் தமிழ்? |
| க.மு. | - | கவியரங்கில் முடியரசன் |
| கா.பா. | - | காவியப்பாவை |
| ஞா.தி. | - | ஞாயிறும் திங்களும் |
| த.மு. | - | தமிழ் முழக்கம் |
| தா.கா. | - | தாய்மொழி காப்போம் |
| நூ.பா | - | நூற்பா |
| நெ.பூ | - | நெஞ்சிற் பூத்தவை |
| நெ.பொ. | - | நெஞ்சு பொறுக்கவில்லையே |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| பா. | - | பாடல் |
| ப.ஆ | - | பதிப்பாசிரியர் |
| பா.கு. | - | பாடுங்குயில் |
| பா.குயி. | - | பாடுங்குயில்கள் |
| பா.ப.வா.ப. | - | பாட்டுப் பறவையின் வாழ்க்கைப் பயணம் |
| பு.வி.செ. | - | புதியதொரு விதி செய்வோம் |
| புறநா. | - | புறநானூறு |
| பூ.கொ. | - | பூங்கொடி |

| | | |
|---|---|---|
| **ம.தே.** | **-** | **மனிதனைத் தேடுகிறேன்** |
| **ம.க.கொ.** | **-** | **மனிதரைக் கண்டு கொண்டேன்** |
| **முடி.க.** | **-** | **முடியரசன் கவிதைகள்** |
| **முடி.கடி.** | **-** | **முடியரசன் கடிதங்கள்** |
| **வீ.கா.** | **-** | **வீரகாவியம்** |
| **P.** | **-** | **Page** |
| **Ps.** | **-** | **Pages** |

## பொருளடக்கம்

## முன்னுரை

செம்மொழித்தமிழ் என்னும் சிறப்பினைப் பெற்றுச் சிறந்து நிற்கும் நம் தமிழ்மொழியில் பல்லாயிரக்கணக்கான இலக்கியங்கள் காலந்தோறும் முகிழ்த்த வண்ணம் உள்ளன. இதில் இருபதாம் நூற்றாண்டினை 'இலக்கிய உலகின் மறுமலர்ச்சிக் காலம்' என்பர். இந்திய விடுதலைப் போராட்டமும் மேலை நாடுகளின் படைப்பிலக்கியக் கொள்கைகளின் தாக்கமும் புதிய மறுமலர்ச்சிக்கு வித்திட்டது. பாரதி, பாரதிதாசன் போன்றோர் அடிமைத்தனத்திலும் மூடப் பழக்க வழக்கத்திலும் முடங்கிக் கிடந்த தமிழ்க்குமுகாயம் எழுச்சியுறப் பாடினர். இதில் பாவேந்தர் பாரதிதாசன் பரம்பரையின் மூத்த முன்னோடியாகத் திகழ்பவர் முடியரசனார் ஆவார். முடியரசனாரின் படைப்பிலக்கியக் கொள்கையை ஆய்வு செய்வது தமிழ் இலக்கிய வரலாற்றிற்குப் பெரிதும் துணை நல்கும்.

**ஆய்வுத் தலைப்பு:**

தமிழறிஞர் பலருடைய படைப்புகள் பல்வேறு காலச்சூழலில் பல்வேறு ஆய்வாளர்களால் ஆய்வு செய்யப்பட்டுள்ளன. அவ்வகையில் முடியரசனாருடைய இலக்கியக் கொள்கைகளை ஆய்வு செய்யும் நிலையில் **'முடியரசனாரின் படைப்பிலக்கியக் கொள்கை'** என்பது ஆய்வுத்தலைப்பாகும்.

**ஆய்வு நோக்கம்:**

தந்தை பெரியார், பேரறிஞர் அண்ணா, புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் போன்ற பல்வேறு தமிழறிஞர் பெருமக்களால் போற்றவும் பாராட்டவும் பெற்ற பெருமைக்குரியவர் வீறுகவியரசர் முடியரசன். தமிழக அரசின் பரிசு, விருதுகள், நூல்கள் அரசுடைமையாக்கல் போன்ற பல்வேறு சிறப்புகளுக்குரியவராகிய கவிஞரது படைப்புகளை ஆராய்வதன் வழி அவர் காலத்தைய குமுகாயச் சூழலை இனங்காண முடியும்; இலக்கியக் கொள்கையை அறியமுடியும் என்பது இவ்வாய்வின் நோக்கமாகும்.

**ஆய்வு எல்லை:-**

முடியரசனாரின் படைப்புகளான முடியரசன் கவிதைகள், காவியப் பாவை, கவியரங்கில் முடியரசன், பாடுங்குயில், நெஞ்சு பொறுக்குதில்லையே, மனிதனைக் தேடுகிறேன், தமிழ் முழக்கம், நெஞ்சிற்பூத்தவை, ஞாயிறும் திங்களும், வள்ளுவர் கோட்டம், புதியதொரு விதி செய்வோம், தாய்மொழி காப்போம், மனிதரைக் கண்டு கொண்டேன் ஆகிய பதின்மூன்று கவிதைத் தொகுதி நூல்களும் பூங்கொடி, வீரகாவியம், ஊன்றுகோல், இளம்பெருவழுதி ஆகிய நான்கு காப்பிய நூல்களும் எக்கோவின் காதல் எனும் ஒரு சிறுகதைத் தொகுப்பும் அன்புள்ள பாண்டியனுக்கு, அன்புள்ள இளவரசனுக்கு என்னும் இரு கடித இலக்கிய நூல்களும் தமிழ் இலக்கணம், பாடுங்குயில்கள், சீர்திருத்தச் செம்மல் வை.சு.சண்முகனார், எப்படி வளரும்தமிழ்? என்னும் நான்கு கட்டுரை நூல்களும் பாட்டுப் பறவையின் வாழ்க்கைப் பயணம் எனும் ஒரு தன் வரலாற்று நூலும் என மொத்தம் இருபத்தைந்து நூல்கள் இவ்வாய்வின் எல்லையாகும்.

**ஆய்வு அணுகுமுறை:**

படைப்பாளரது படைப்புகளைத் தொகுத்தும் பகுத்தும் விளக்கும் நிலையில் விளக்கவியல் அணுகுமுறையும் கவிஞர்தம் படைப்பிலக்கியச் சிறப்புகளை விளக்கும் நிலையில் அழகியல் அணுகுமுறையும் அவர்தம் படைப்புகளை ஒன்றோடொன்று ஒப்பிடும் நிலையில் ஒப்பியல் அணுகுமுறையும் இவ்வாய்வின் அணுகுமுறைகளாக மேற்கொள்ளப்பட்டுள.

**ஆய்வு மூலங்கள்:**

வீறுகவியரசர் முடியரசனாரின் படைப்புகள் ஆய்வுக்கு உட்படுத்தப்படுவதால் அவரது படைப்புகள் முழுமையும் முதன்மை ஆதாரங்களாக **(Primary Sources)** எடுத்துக் கொள்ளப்பெறும். முடியரசனார் குறித்து வெளிவந்த நூல்கள், இதழ்கள், கட்டுரைகள், மரபுக்கவிதை, சிறுகதை, கடிதவிலக்கியம் தொடர்பான திறனாய்வு நூல்கள் போன்றவை துணைமை ஆதாரங்களாகக் **(Secondary Sources)** கொள்ளப்பெறும்.

**இயல்பாகுபாடு:**

'முடியரசனாரின் படைப்பிலக்கியக் கொள்கை' என்னும் தலைப்பிலான இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவையாவன,

1. **முடியரசனாரின் இலக்கிய வடிவக் கொள்கை**
2. **முடியரசனாரின் இலக்கிய உள்ளடக்கக் கொள்கை**
3. **முடியரசனாரின் இலக்கிய உத்திகள்**
4. **முடியரசனாரின் இலக்கிய மரபில் புதுமையும் மாற்றமும்**

என்பனவாகும்.

**இயல் ஒன்று**

முடியரசனாரின் இலக்கிய வடிவக் கொள்கை என்பது முதலாவது இயலாகும். உயிருக்கு உடல் போன்று இலக்கியத்திற்கு வடிவம் இன்றியமையாதது. படைப்பாளா் தம் எண்ணத்தில் உதிக்கின்ற கருத்துகளுக்கு உருவம் கொடுக்கும் பொழுதுதான் அப்படைப்பு அங்கீகரிக்கப்படுகின்றது. கடிதவிலக்கியம், சிறுகதை, கவிதை, நாடகம், கட்டுரை ஆகிய வகைமைகளில் நூல்கள் படைத்திருந்தாலும் அவா் தம் வாழ்நாளில் நெடுங்காலத்தைச் செலவழித்தது கவிதைத்துறையில் தான். கவிதை, கவியரங்கக் கவிதை, இசைப்பாடல், காப்பியம் எனக் கவிதை வடிவங்களிலேயே பெரும்பான்மை இடத்தை அவா்தம் படைப்பிலக்கியம் பெற்றுள்ளது.எனவே அவா்தம் இலக்கிய வடிவக் கொள்கையை ஆய்வதற்குக் கவிதை வடிவம் முதன்மையாக எடுத்துக் கொள்ளப் பெற்றுள்ளது. பிற இலக்கிய வடிவங்களும் இவ்வியலில் ஆராயப்பெற்றுள.

**இயல் இரண்டு**

முடியரசனாரின் இலக்கிய உள்ளடக்கக் கொள்கை என்பது இரண்டாவது இயலாகும். இவா்தம் உள்ளடக்கம் மரபுப்பொருள், குமுகாயம் என்னும் இரு நிலைகளில் காணப்பெறுகிறது. இயற்கை, காதல், மொழி ஆகியவை மரபு சாா்ந்தும் தொழிலாளா் நலன், சாதி சமய வெறுப்பு, கடவுள் மறுப்பு, கல்விச்சீா்திருத்தம், அரசியல் போன்றவை குமுகாயத்தையும் பாடுபொருளாகக் கொண்டுள்ளன. எனவே முடியரசனாரின் படைப்புகளின்

உள்ளடக்கத்தை இயற்கை, தமிழ், காதல், குமுகாயம் என நான்கு நிலைகளில் இவ்வியல் ஆராய்ந்துரைக்கின்றது.

**இயல் மூன்று:-**

முடியரசனாரின் இலக்கிய உத்திகள் என்பது மூன்றாவது இயலாகும். படைப்பாளன் தனக்கும் வாசகனுக்குமான இலக்கியத் தொடர்பை வலுப்படுத்துவதற்கான வலிமையான கருவியாக உத்தியைக் கையாளுகின்றான்.

படிப்போர் இன்புறுவதற்காக மட்டுமின்றிப் படைப்பின் உருவம் உள்ளடக்கத்தைப் பிணைக்கின்ற பாலமாகவும் அமைகின்றது. எனவே முடியரசனார் கையாண்டுள்ள உவமை, உருவகம், பல்வேறு அணிகள், வருணனைகள், கற்பனை, குறியீடு, தொன்மம், அங்கதம் போன்ற உத்தி முறைகள் இவ்வியலில் ஆராயப்பெற்றுள.

**இயல் நான்கு:-**

முடியரசனாரின் இலக்கிய மரபில் புதுமையும் மாற்றமும் என்பது நான்காவது இயலாகும். காலத்திற்கும் சூழலுக்கும் தக்கவாறு இலக்கியம் தன்னைத் தகவமைத்துக் கொள்ளும். காலச் சூழலுக்கு ஒவ்வாத இலக்கிய மரபுகள் தேய்ந்து மறைவதும் தேவைக்கேற்ப, புதிய இலக்கிய மரபுகள் தோன்றி வளர்வதும் இலக்கியத் தளத்தில் இயல்பாக நிகழக்கூடியனவாகும்.

ஒரு படைப்பாளன் தான் படைக்கும் இலக்கியத்தில் பழைய இலக்கிய மரபுகளை மறுப்பதும் புதியனவற்றைப் புகுத்துவதும் அவரவரின் எண்ணவோட்டத்தை, இலக்கியக் கொள்கையை வெளிக்காட்டுவதாக அமையும். முடியரசனாரின் படைப்புகள் மரபிலிருந்து மாறாச் சிறப்புடையன. பழமை போற்றும் மரபுக் கவிஞராக இருப்பினும் தம் படைப்புகளில் சில புதுமைகளைப் புகுத்தியுள்ளார். இவ்விரண்டு கூறுகளும் இவ்வியலில் ஆராயப் பெற்றுள. இதனையடுத்து ஆய்வில் கண்ட முடிவுகள் முடிவுரையில் கூறப்பெற்றுள. ஆய்வுக்குத் துணை நின்ற நூல்களின் பட்டியலும் பின்னிணைப்பும் இதனையடுத்து இடம்பெற்றுள்ளன.

## முடியரசனாரின் இலக்கிய வடிவக் கொள்கை

உயிருக்கு உடல் போன்று இலக்கியத்திற்கு வடிவம் இன்றியமையாதது. படைப்பாளர் தம் எண்ணத்தில் உதிக்கின்ற கருத்துகளுக்கு வடிவம் கொடுக்கும் பொழுது அப்படைப்பு இலக்கிய உலகில் சிறப்புப் பெறுகின்றது. எனவே ஒரு படைப்பிற்கு '**வடிவம்**' இன்றியமையாதது ஆகும். அவ்வகையில் முடியரசனார் தம் படைப்பிற்குக் கையாண்ட இலக்கிய வடிவங்கள் குறித்துக் காண்பது இவ்வியலின் நோக்கமாகும்.

**வடிவம் - சொல்லும் பொருளும்:**

வடிவம் என்ற சொல்லிற்குத் திவாகரம், "மேனி, உரு, மெய், நிறம்"[1] என்றும் பிங்கலம், "படிவம், உருவம், சட்டகம், மேனி வண்ணம்"[2] என்றும் பொருள் உரைக்கின்றன.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி, "உள்ளடக்கத்திற்குத் தகுந்த புற அமைப்பு, உருவம், உடல், அழகு, செம்மை நேர்த்தி"[3] என்றும்

நா.கதிரைவேற் பிள்ளையின் தமிழ்மொழியகராதி, "உடல், உருவு"[4] என்றும் க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, "புறஉருவ அமைப்பு, புறத்தோற்றம், உள்ளடக்கத்துக்குத் தகுந்த புற அமைப்பு"[5] என்றும் பொருள் விளக்கம் தருகின்றன.

இதில் பேரகர முதலி, க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி ஆகியன உரைக்கும் 'உள்ளடக்கத்துக்குத் தகுந்த புற அமைப்பு' என்பது வடிவம் என்னும் சொல்லுக்குப் பொருள் பொருத்தமாக உள்ளது.

இலக்கியவாதியின் எண்ணங்களுக்கு உருவமாக, உடலாக, அவர்தம் படைப்பின் உள்ளடக்கத்துக்குத் தகுந்த புற அமைப்பாக விளங்குகின்ற வடிவம் இலக்கியக் கொள்கையில் முதன்மையான இடத்தைப் பெற்றுள்ளது.

"இலக்கியம் என்பது சமுதாய உணர்வுகளைப் பிரதிபலிக்கும் ஒரு கலை வடிவம்"[6] என்பர் ந.பிச்சமுத்து.

இலக்கியத்தில் வடிவத்திற்கும் உள்ளடக்கத்திற்கும் மிக நெருங்கிய தொடர்பு உண்டு. உருவம், உள்ளடக்கம் ஆகிய இரண்டும் ஒரு பொருளின் பிரிக்க முடியாத இரு கூறுகள்

ஆகும். உள்ளடக்கத்திற்குத் தகுந்த வடிவம் கொடுக்கும் பொழுதுதான் அவ்விலக்கியம் வெற்றி பெற முடிகிறது. தகுந்த வடிவம் பெறாத இலக்கியங்கள் காலவோட்டத்தில் கரைந்து காணாமல் போய் விடுகின்றன. அதனைப் போலவே பொருளற்ற வடிவமும் தோற்றுப் போய் விடும்.

இதனை “இலக்கியத்தில் உருவம், பொருள் என்னும் இரண்டு அம்சங்கள் உண்டு. இலக்கியம் கூறும் விஷயம் அதன் பொருளாகும். அவ்விஷயம் கூறப்படும் விதமும் அதன் நடையும் அமைப்பும் அதன் உருவமாகும். பொருளும் உருவமும் சேர்ந்தே இலக்கியமாகிறது. ஆயினும் உருவவழகு மனத்தைக் கவர்வதால் அது இலக்கியத்தில் முதன்மை பெற்று வந்திருக்கிறது”[7] என்னும் பி.கோதண்டராமனின் கூற்று நன்கு விளக்கும்.

இலக்கியக் கொள்கையைப் பொறுத்தவரையில் வடிவம், உள்ளடக்கம், உத்தி ஆகியன முதன்மையானவை. இவற்றுள் உள்ளடக்கத்தை அறிவதற்கு வடிவமும் உத்தியும் துணைபுரியும். எனவே இலக்கிய வடிவம், உள்ளடக்கம், உத்தி பற்றிய கருத்துகளை அறிவதன் மூலம் இலக்கியக் கொள்கையை அறிந்து கொள்ள முடியும்.

“வடிவம் - இலக்கியத்தின் உடல், உணர்ச்சி - இலக்கியத்தின் உயிர், கற்பனை - இலக்கியத்தின் இதயம், கருத்து (உள்ளடக்கம்) - இலக்கியத்தின் மூளை” என்று உருவகப்படுத்துகிற பேராசிரியர் அ.ச.ஞானசம்பந்தன் மேலும் “நெடுங்காலம் முதல் இந்நூற்றாண்டு வரை கவிதையே நம்நாட்டின் இலக்கியமாகக் கருதப்பட்டதால் அதனுடைய வடிவமே இலக்கிய வடிவமாகப் போற்றப்படுகிறது”[8] என்று குறிப்பிடுகிறார்.

கவியரசர் முடியரசன் தமக்கெனத் தனி நெறியும் நடையும் வகுத்துக் கொண்டு கவிதையே உயிர்மூச்சாக வாழ்ந்தவர். கடித இலக்கியம், சிறுகதை, கவிதை, நாடகம், கட்டுரை ஆகிய துறைகளில் சிற்சில நூல்களைப் படைத்திருந்தாலும் அவர்தம் வாழ்நாளில் நெடுங்காலத்தைச் செலவழித்தது கவிதைத் துறையில்தான். கவிதை, காப்பியம், கவியரங்கக் கவிதை, இசைப்பாடல் என்று கவிதை வடிவங்களிலேயே பெரும்பான்மையிடத்தை அவர்தம்

படைப்பிலக்கியம் பெற்றிருக்கிறது. எனவே, அவர்தம் இலக்கிய வடிவக் கொள்கையை ஆய்வதற்குக் கவிதை வடிவம் முதன்மையாக எடுத்துக் கொள்ளப்பெறுகிறது.

**யாப்பு வடிவம்:**

'யாப்பு' என்பதற்குக் கட்டுதல் அல்லது தொடுத்தல் என்பது பொருள். அல்லி, முல்லை, மல்லிகை முதலிய பலவகை மலர்களில் ஏற்ற இடத்தில் ஏற்ற மலரைக் கட்டித் தொடுக்கும் பூக்காரன் போலப் பலவகைச் சீர்களில் ஏற்றவற்றை ஏற்றபடி கவிஞன் தொடுப்பதே யாப்பாகும். எழுத்து, அசை, சீர் தளை, அடி, தொடை என்ற ஆறும் ஏற்ற முறையில் தொடுக்கப்படும் மாலையாக யாப்பு அமைகின்றது.

யாப்பு வடிவம் பற்றி, "தமிழ் யாப்பு முறை ஆங்கிலத்தைப் போன்றில்லாமல் இலக்கணத்தோடு கை கோர்த்து நடப்பது. கலையின் அழியாத் தன்மையைத் தமிழ்க் கவிதைகளிற்காண முடிவதற்குக் காரணம் தமிழ் யாப்பு முறையின் அமைதியேயாகும். தமிழ் தந்த கவிதைச் செல்வங்கள் இன்று வரை சாகாத பொருளாழமும், சொல்லாழமும் பெற்று விளங்குகின்றனவென்றால் அதற்கு அடிப்படை தமிழின் யாப்பு முறையே"[9] என்று பாராட்டியுரைப்பர் நா.பார்த்தசாரதி.

"செவிக்கு இனிமை பயக்கும் ஒலி நயத்தை-கவிதையில் பயிலும் பண்பை வளர்த்து வாய்பாடுகளாக்கி ஒரு வகைச் செயற்கை அமைப்பைத் தந்தனர் நம் முன்னோர். இந்த வாய்பாடுகள் அமையும் முறையையே யாப்பு (Metre) என்னும் பெயரிட்டழைத்தனர்"[10] என்பர் ந.சுப்புரெட்டியார்.

"யாப்பறிவிருந்தால்தான் செய்யுட்களை அதற்குரிய ஓசையுடனும் உணர்ச்சியுடனும் படிக்க முடியும். ஒரு செய்யுளின் பெயரும் தொடை நடையமைப்பும் தெரியாது அச்செய்யுளைப் படிப்பது குருடனும் செவிடனும் கூத்துப் பார்ப்பது போன்றதேயாகும்"[11] என்பர் புலவர் குழந்தை.

**யாப்பமைந்த கவிதை:**

செய்யுள் உறுப்புகளான எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை முதலாயினவற்றிற்கு அளவு அல்லது வரையறை உண்டு. அவ்வரையறைகளின் வேறுபாட்டால் வெவ்வேறு வகையான ஓசைகள் உண்டாகின்றன. அவ்வோசையின் அடிப்படையில்தான் பாக்கள் வகுக்கப்பட்டன.

யாப்பமைந்த கவிதையின் தேவையை உணர்த்தும் வகையில் நாவலர் ந.மு.வேங்கடசாமி நாட்டார் கூறும் கருத்து இங்கு ஒப்புநோக்குதற்குரியது. ‘‘உரைக்கும் பொருளுக்கேற்பவே ஒருசார் செய்யுட்கள் கடுமையான வரையறை யுள்ளனவாகவும், மற்றொரு சாரண அங்ஙனம் இல்லாதனவாகவும் வகுக்கப் பட்டிருக்கின்றன. எனவே யாப்பில் அமையாச் செய்யுள் ஒன்றைப் புதிதாகத் தேட வேண்டியதில்லை’’[12] என்று குறிப்பிடுகிறார்.

யாப்பமைந்தால்தான் அது கவிதையாகும் என்பது முடியரசனாரின் நிலைத்த கருத்து. இதனை,

**‘‘அவமின்றி மொழிவிளங்கக் கவிதை என்னும்**
**ஆற்றுக்கும் இலக்கணமோர் கரையே யாகும்’’ (முடி.க.ப.52)**

**‘‘.... இலக்கணமே மொழியைக் காக்கும்**
**அடிவேராம்’’ (முடி.க.ப.82)**

என்பன போன்ற கவிதை அடிகள் நன்கு விளக்கும்.

**தொல்காப்பியர் சுட்டிக் காட்டும் யாப்பு வடிவம்:**

‘‘தொல்காப்பியர் கவிஞனாகவும் பேரிலக்கணப் பேரறிஞனாகவும் பாவியல் பேராசானாகவும் இருந்தார். அவரின் கைவண்ணத்தில் மிளிர்ந்த தொல்காப்பியம் ஒரு பேரிலக்கணப் பெருநூலாகவும் பெருமை சார்ந்த ஒரு பாவியல் நூலாகவும் உள்ளது’’[13] என்பர் பேரா.ச.அகத்தியலிங்கம்.

யாப்பின் உயிர் ஓசையாகும். அதுவே பிற இலக்கிய வகைகளில் இருந்து கவிதையைப் பிரித்து நிற்கிறது என்பதைத் தொல்காப்பியர் நன்கு அறிந்திருந்தார். யாப்பு

என்ற சொல் தொல்காப்பியத்தைப் பொறுத்த மட்டில் எத்தனையோ பரிமாணங்களையும், பயன்பாடுகளையும் கொண்டுள்ளது. யாப்பு குறித்துத் தொல்காப்பியர்,

**"எழுத்து முதலா ஈண்டிய அடியின்**
**குறித்த பொருளை முடிய நாட்டல்**
**யாப்பு எனமொழிப யாப்பு அறிபுலவர்"**[14]

என்றுரைப்பர்.

மேலும் "இலக்கிய வகைகளான பாட்டு, உரை, நூல் வாய்மொழி, பிசி, அங்கதம், முதுசொல் ஆகியன யாப்பின் வழி அமையும்"[15] என்பர்.

இலக்கியத்தின் உறுப்பாகிய பாவகைகளைப் பற்றி,

**"ஆசிரியம் வஞ்சி வெண்பாக் கலியென**
**நாலியற் றென்ப பாவகை விரியே"**[16]

என்று சுட்டுவர்.

தொல்காப்பியரின் செய்யுளியல் கோட்பாட்டைப் பற்றி, "தொல்காப்பியர் செய்யுள் வடிவமாகிய யாப்பு பற்றியும், அதனுள் அமையும் பொருள் பற்றியும் தெளிவுபடச் சொல்கிறார். அவற்றை நுட்பமாக ஆராய்ந்தால் அன்று வடிவத்திற்கும், பொருளுக்கும் இருந்த பிரிக்கவியலாதொன்றிய உறவு புலப்படும்"[17] என்று விளக்குவர் தமிழண்ணல்.

தொல்காப்பியர் பாவின் இலக்கணத்தைச் செய்யுளியலில் 49 நூற்பாக்களில் விளக்கியுள்ளார். அவர் காலத்தில் வழங்கிய பாக்கள் பிற்காலத்தில் அதே பெயரோடு வழங்குகின்றன எனினும், அவற்றிற்குத் தொல்காப்பியர் கூறும் இலக்கணமும் பல கோணங்களில் வேறுபட்டு அமைந்துள்ளன. குறிப்பிட்ட பாவகை, காலந்தோறும் தோன்றுகின்ற இலக்கியங்களில் அமைகின்ற புதிய இலக்கணக் கூறுகளையும் பெற்று விளங்குவதால் பாவகைகளில் இலக்கண அமைப்பு காலத்திற்கேற்ப மாறுபடும் நிலை உளது. மேலும், தொல்காப்பியரால் கூறப்பெற்ற பாக்களின் இலக்கண அமைப்பைப் பெறாமல், புதிய இலக்கண அமைப்பு முறையைப் பெற்று விளங்குவதையும் காணமுடிகிறது.

இலக்கிய வடிவங்கள் மாறுவதற்குரிய காரணங்களாக “இசை உணர்வு, நாடக உணர்வு, புதுமை, எளிமை, கற்பனை, நாட்டுப்புறப்பாடல்கள், அரசியல், பொருளியல், சமுதாயம், பக்திஇலக்கியம், அயலவர் தொடர்பு, அச்சுக்கலை போன்று அறிவியலின் தாக்கம், பகுத்தறிவு”[18] என்னும் பன்னிரு கூறுகளைப் பேரா.ந.சஞ்சீவி குறிப்பிடுவர்.

**தமிழ் இலக்கியங்களில் யாப்பு வடிவங்கள்:**

சங்க இலக்கியங்களில் எட்டுத்தொகை நூல்களான குறுந்தொகை, நற்றிணை, ஐங்குறுநூறு, அகநானூறு, பதிற்றுப்பத்து ஆகியன முற்றிலுமாகவும் புறநானூற்றில் பல பாக்களும் பத்துப்பாட்டு நூல்களில் பெரும்பான்மையும் (திருமுருகாற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, மலைபடுகடாம், முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, நெடுநல்வாடை ஆகியன) ஆசிரியப்பா யாப்பில் அமைந்தவை.

கலித்தொகையின் பாடல்கள் முழுவதும் கலிப்பாவால் இயற்றப் பெற்றவை. இதன் வடிவமும் நடையும் அகப்பொருளை இசையோடு பாடுவதற்கும் நாடக அமைப்பில் செய்தியை விளக்குவதற்கும் ஏற்றதாகும். பரிபாடல் நூல் பரிபாடல் யாப்பில் பாடப்பெற்றுள்ளது. இதில் வெண்பா யாப்பும் ஆசிரிய யாப்பும் விரவி வந்துள்ளன. ஆனால் முழுவதுமாக ‘வெண்பா’ யாப்பில் அமைந்த பாடல் சங்க இலக்கியங்களில் காணப்பெறவில்லை.

காதல், வீரம், கொடை முதலிய சிறந்த உணர்ச்சிகளிலும், இயற்கையின்பத்திலும் ஈடுபட்டிருந்த புலவர்களின் உள்ளம் அடுத்த சில தலை முறைகளில் நீதி பாடும் நிலைக்கு மாறியது. அக்காலம் சங்கம் மருவிய காலம் அல்லது நீதிநூல்காலம் என்று அழைக்கப்படுகிறது.

சங்கப் புலவர்களால் பெரிதும் கையாளப் பெறாத வெண்பா சங்கம் மருவிய காலத்தில் முழு எழுச்சி பெற்றது. பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் வெண்பா யாப்பில் அமைந்துள்ள கீழ்க்கணக்கு நூல்களில் குறள் வெண்பாவிற்கு அடுத்த நிலையில் நேரிசை வெண்பா கூடுதலான செல்வாக்கைப் பெற்றிருந்தது.

“முற்காலக் காப்பியங்கள் நிலைமண்டில ஆசிரியத்திலும், இடைக்காலக் காப்பியங்கள் விருத்தத்திலும் பாடப்பெற்றன.”[19]

பக்தி இயக்கக் காலத்தில் மரபு வழி யாப்பினையும் மக்கள் வழக்காக நடைமுறையில் நிலவிய நாட்டுப்புற இசையாப்பினையும் விரவிப் பாடல்கள் பாடப்பட்டன. இக்காலத்தில் தாழிசை, துறை, விருத்தம் ஆகிய பாவினங்கள் எழுச்சி பெற்றன.

“கலித்தொகை, பரிபாடல், சிலப்பதிகாரம் ஆகியவற்றில் அரும்பி, மலர்ந்திருந்த பாவினம் பக்தி இலக்கியத்தில் பிஞ்சாகிக் காயாகிக் கனியும் நிலையினை எட்டியிருந்தது”[20] என்பர் முனைவர் சோ.ந.கந்தசாமி.

சிற்றிலக்கியங்களில் பல பாவின் அடிப்படையில் அமைந்துள்ளன. கலம்பகம், ஒருபோகு, வெண்பா, கலித்துறை ஆகியன முதலுறுப்பாக அமைய புய வகுப்பு, மதங்கு, அம்மானை, காலம், சம்பிரதம், கார், தவம், குறம், மறம், பாண், கலி, சித்து, இரங்கல், கைக்கிளை, தூது, வண்டு, தழை, ஊசல் என்னும் பதினெட்டு உறுப்புகளைக் கொண்டு பாடப்பெற்றுளது.

“கலம்பகம் பாடுவதற்கு ஏறத்தாழ எல்லாவகைப் பாக்களும் பாவினங்களும் இயற்றத் தெரிந்திருக்க வேண்டும். கோவை கட்டளைக் கலித்துறையாலும் பரணி ஈரடி கலித்தாழிசையாலும் தூது கலிவெண்பாவிலும் பிள்ளைத்தமிழ் ஆசிரிய விருத்தத்திலும் பாடப்பெற்றன. பழைய இலக்கியங்களுள் உருவவாதத்திற்குச் (Formalism) சிறந்த எடுத்துக்காட்டு கலம்பகம்”[21] என்று ந.பிச்சமுத்து குறிப்பிடுவர்.

திருமூலரின் திருமந்திரம் வெண்டளை மிகுந்த விருத்தமாக உள்ளது. தாயுமானவரின் பாடல்கள் நேரிசை வெண்பா, நிலை மண்டில ஆசிரியம், கொச்சகக் கலி, கட்டளைக் கலி முதலிய யாப்புகளில் அமைந்துள.

இராமலிங்க அடிகளார் மக்கள் வழங்கும் இசைப்பாடல் வடிவங்களான கும்மி, கண்ணி, சிந்து, கீர்த்தனைகள் போன்றவற்றைப் பயன்படுத்தி பாரதியாருக்கு வழிகாட்டினார்.

முழுவதும் கீர்த்தனையால் ஆக்கப்பட்ட இலக்கியங்கள் முதன் முதலில் பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோன்றின. கோபால கிருஷ்ண பாரதி பெரிய புராணத்து அடியார்கள் சிலர் வாழ்க்கையைப் போற்றி கீர்த்தனைகளாலாகிய இசைப்பாடல் பாடினார். எளிமையும் நாட்டுப்பாடல் மரபும் சமுதாயவுணர்வும் இசையும் மறுமலர்ச்சி பெற்றதால் இக்காலத்தைய இலக்கியங்கள் 'மறுமலர்ச்சி இலக்கியங்கள்' எனச் சுட்டப்பெற்றன.

இருபதாம் நூற்றாண்டின் இலக்கிய வடிவத்தைக் கருத்துமுறை, மொழிநடை, யாப்பு ஆகியனவற்றின் அடிப்படையில் பழமையைப் பின்பற்றுவன, புதுமையை எதிர்நோக்கிச் செல்வன, பழமைக்கும் புதுமைக்கும் பாலமாக அமைவன என்று வகைப்படுத்த இயலும்.

நாவலர் சோம.சுந்தரபாரதியார் இயற்றிய 'மாரிவாயில்', முனைவர் வ.சுப.மாணிக்கனார் இயற்றிய 'கொடைவிளக்கு' முதலிய நூல்கள் பழமையைப் பின்பற்றுவன. இவ்வணியில் செகவீர பாண்டியனார், கா.நமச்சிவாயனார், கரந்தைக் கவியரசு வேங்கடாசலனார், முடியரசனார் போன்றோர் கவிதைகள் சேரும்.

பாரதி, பாரதிதாசன் கவிதைகள் புதுமையை நோக்கிச் செல்வன. திரு.வி.க, சுத்தானந்த பாரதியார், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, இராய.சொக்கலிங்கனார், வி.துரைசாமி முதலானோர் கவிதைகள் பழமைக்கும் புதுமைக்கும் பாலமாக அமைவன.

முடியரசனார் இம்மூவகை வடிவம் பற்றி, 'அருஞ்சொற்கள் ஆர்ந்து யாப்பமைவு நேர்ந்து மரபு வழியில் நிற்பன ஒரு திறத்தன; எளிய சொற்களை ஏற்று யாப்பமைவு சிறிது மாறி மரபுஞ் சிறிது பிறழ்ந்து வருவன மறுதிறத்தன. கொச்சைமொழி குலவி யாப்பமைவு காணாது, மரபை மறந்து செல்வன மூன்றாந் திறத்தன' (எ.வ.த.ப.34) என்று குறிப்பிடுகிறார்.

மேலைச்செய்திகளால் ஒரு குறிப்பிட்ட யாப்பு ஒரு குறிப்பிட்ட காலத்தில் மட்டுமே கூடுதலாக ஆட்சி பெற்றுள்ளமையும் ஒரு கால கட்டத்தில் ஒரு வகை யாப்பு ஒரு வகைப் பொருளை மட்டுமே பாடுவதற்கு உகந்ததாகத் திகழ்ந்தமையும் அதே யாப்பு வேறொரு காலகட்டத்தில் வேறு வகைப் பொருளைப் பாடுவதற்குப் பயன்பட்டதையும் அறிய முடிகிறது.

**முதலும் முடிவும் :-**

முடியரசனார் சன்மார்க்க சபையினர் நடத்தி வந்த பிரவேச பண்டித வகுப்பில் தம் பதினான்காம் வயதில் சேர்ந்து நான்காண்டுகள் பயின்றார். அங்கு பெற்ற தமிழறிவுதான் அவரை ஒரு மரபுக் கவிஞராக மிளிரச் செய்தது. தேர்விற்காக மதுரை மீனாட்சியம்மன் மீது பாடிய,

**"நீல மணிநிறத்தாய் நின்மலன்றன் பாகத்தாய்**
**கோல வுருவுடையாய் கொண்டல்மீன் - போல**
**விழியுடையாய் என்றன் விழுமங்கள் யாவும்**
**அழிவுறவே நல்குன் அருள்" (நெ.பூ.ப.279)**

என்னும் பாடல் முடியரசனார் பாடிய முதல் கவிதையாக அமைந்தது.

கவியரசர் முடியரசனார் தம் வாழ்நாளின் இறுதியில் பாடிய,

**"வாளால் பிழப்பினும் வாழ்நாள் இழப்பினும் வஞ்சமனக்**
**கேளார் குழுமிக் கெடுதிகள் சூழினும் பூமியில்வாழ்**
**நாளெலாம் வாட்டும் நலிவே உறினும் நற்றமிழே**
**ஆளாதல் திண்ணம் அடியேன் நினது மலரடிக்கே" (நெ.பூ.ப.198)**

என்னும் கவிதை விளங்குகிறது. மீனாட்சியைப் போற்றிக் கவிதையைத் தொடங்கிய கவிஞர் தமிழன்னையின் தாளில் தனது கவிதையை நிறைவு செய்துள்ளார்.

**முடியரசனாரின் வடிவக் கொள்கை:**

முடியரசனார் இலக்கணம் பிறழாமல் கவிதைகள் யாத்தவர். இலக்கணத்தைப் புறக்கணித்துவிட்டுக் கவிதை பாடுவதில் அவருக்குச் சிறிதும் உடன்பாடு இல்லை (முடி.க.ப.75). மரபான வடிவம், புதிதான கருத்து, தரமான நெறி இம்மூன்றும் பொருந்தியதே கவிதை என்பது முடியரசனார் தம் கொள்கையாகும்.

'சொல், சீர் முதலியன நிரல்பட நின்று, இனிய ஓசை பொருந்தி செறிந்த பொருளுடையதாய், அணியமைப்பும் கொண்டு பயில்வார் தம் உள்ளுணர்ச்சிகளைத் தட்டியெழுப்ப வல்லதாய் அவர்தம் உள்ளங்களை எல்லாம் தன்பாற் கவியச் செய்யும்

ஆற்றலுடையதே கவிதை' (எ.வ.த.ப.42) என்பது கவிதை குறித்த முடியரசனார் தம் கருத்தாகும்.

'கருத்தில் புதுமை வேண்டுமே தவிர புதுக்கவிதை என்ற பெயரில் இலக்கணம் பிறழ்ந்து, பிறமொழிச் சொற்களைக் கலந்து, யாப்பு நெறி துறந்து பாடும் புதுக்கவிதையைக் கவிஞர் அறவே வெறுக்கிறார். மேலும் கவிதையை மரபுக்கவிதை, புதுக்கவிதையென்று பாகுபடுத்துவதைக் கடிந்துரைக்கிறார். மரபு அமைந்தால் தானே அது கவிதையாகும்' (முடி.கடி.ப.78) என்று விளக்கம் தருகிறார்.

முடியரசனார் மறைவின் போது தினமணி நாளிதழ் புதுமை பூத்த மரபுக் கவிஞர் என்னும் தலைப்பில் "முடியரசனாருடைய மறைவின் மூலம் தமிழ் உலகம் ஓர் அபூர்வப் படைப்பாளியை இழந்துவிட்டது. மரபு வழுவாமல், அதே சமயத்தில் புதுமை பூத்த இனிய கவிதைகளைச் சொரிந்து வந்த தமிழ்ப் பொழில் மறைந்து விட்டது. அதிலும், உரைநடைக்கே கவிதை போல வேடமிட்டுக் காட்டும் நவீன கவிஞர்கள் மலிந்து வரும் இக்காலத்தில் தரம்மிக்க கவிதைகளைக் காலத்தின் தேவைகளுக்கு ஈடுசெய்யக் கூடிய வகையில் சுரந்து அளித்து வந்த செந்தமிழ் ஊற்று முடியரசன்"[22] என்று அஞ்சலி தீட்டியது. இதில் முடியரசனாரின் வடிவ மேன்மை பெரிதும் புகழப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

**முடியரசனார் கவிதைகள் - வடிவம்:**

முடியரசனார் தம் கவிதைகளை நேரிசைவெண்பா, பஃறொடைவெண்பா, கலிவெண்பா, நேரிசையாசிரியப்பா, நிலைமண்டில ஆசிரியப்பா, வெண் கலிப்பா, கட்டளைக் கலித்துறை, கலித்துறை, தாழிசை, அறுசீர் விருத்தம், எழுசீர் விருத்தம், எண்சீர் விருத்தம், பன்னிருசீர் விருத்தம், பதினான்குசீர் விருத்தம், இசைப்பா என்பன போன்ற பல்வேறு வடிவங்களில் இயற்றியுள்ளார்.

**நேரிசை வெண்பா:**

முடியரசனார் 36 நேரிசை வெண்பாக்களைப் பாடியுள்ளார்.[23]

நேரிசைவெண்பா நான்கடிகள் பெற்று வரும். ஈற்றடி சிந்தடியாகவும் ஏனைய அடிகள் அளவடிகளாகவும் அமைதல் வேண்டும். இரண்டாம் அடியின் இறுதியில் தனிச்சொல் பெற்று வரும். முதலிரு அடிகளுக்கு ஒருவகை எதுகையும், பின்னிரு அடிகளுக்கு வேறொருவகை எதுகையும் நான்கடிகளுக்கும் ஒரே வகையான எதுகையும் வரலாம். செப்பலோசை பெற்றுவரும். இயற்சீர்வெண்டளையும் (மா முன் நிரை, விளம் முன் நேர்) வெண்சீர் வெண்டளையும் (காய் முன் நேர்) பெற்று வரும். ஈற்றுச்சீர் நாள், மலர், காசு, பிறப்பு என்பனவற்றுள் ஏதேனும் ஒரு வாய்பாட்டுச் சீரைக் கொண்டு முடியும்.

முடியரசனார் மாணவப் பருவத்தில் தேர்வுக்காக எழுதிய முதல் பாடலே நேரிசை வெண்பாவாக அமைந்தது. (நெ.பூ.ப.279)

'வாழ்த்துகிறார்' என்னும் தலைப்பிலமைந்த,

**"முத்தெடுக்க மூழ்கி முருகப்பா பட்டதுயர்**
**தித்திக்கும் செந்தமிழே நேர்ந்துணரும் - வைத்திருந்த**
**தஞ்சைமன்னன் ஏடுரைக்கும் தக்கபுல வோர்குழுவின்**
**நெஞ்சுரைக்கும் இவ்வுலகில் நின்று" (முடி.க.ப.147)**

என்னும் பாடல் நேரிசை வெண்பாவிற்குச் சிறந்த சான்றாகும்.

**ப..றொடை வெண்பா:**

"ஐந்தடிமுதல் பன்னீரடியீறாகப் ப..றொடை வெண்பா அமையும்."[24]

முடியரசன் ப..றொடை வெண்பா யாப்பை இரு பாடல்களில் 24 அடிகளில் பாடியுள்ளார்.[25]

'பாரதியார்' என்னும் தலைப்பிலமைந்த கவிதையில்,

**"வாழையடி வாழைக்கு வாய்மொழியால் வீரத்தைக்**
**கோழை மனத்திற் கொதிப்பேற்றிப் பாய்ச்சி விட்டான்**
**சூடு தணியவில்லை சொல்லெல்லாம் தீயாக்கிப்**
**பாடும் கவிதைகளில் பாயவிட எண்ணந்தான்;**
**நாடு பொறுக்குமோ என்றெண்ணி நல்லஇளஞ்**
**சூடு படக்கொடுத்தேன்; ஈதும் சுடுமென்றால்**
**குற்றம் எனதன்று; முற்றுந் தலைவாழை**

**பெற்ற சுவையைத்தான் பின்வாழை ஈன்றுநிற்கும்**

**நாநலம் கொண்டார்க்கு நல்லசுவை நல்கும்**

**பாநலம் வல்ல பரம்பரையில் யானொருவன்**

**ஈனும் கனியை இருந்து சுவைக்கவிட்டு**

**நானும் இருப்பேன் நயந்து" (க.மு.பக்.126-127)**

என்று பாரதி பரம்பரையில் வாழையடி வாழையாகத் தான் கவிபாடுவதை ப∴றொடை வெண்பாவில் யாத்துள்ளார்.

**கலி வெண்பா:**

முடியரசனார் தம் கவிதைகளில் விருத்தப் பாவிற்கு அடுத்த நிலையில் கலிவெண்பாவினை மிகுதியாகப் பாடியுள்ளார் 4875 அடிகள் கலிவெண்பா யாப்பில்[26] பாடப்பெற்றுள்ளன.

கலிவெண்பா பன்னிரண்டு அடிகளுக்கு மேல் பல அடிகள் வரை இயற்றப்பட்டு இரண்டு இரண்டு அடிகளுக்கு எதுகையுடன் வெண்பாவின் பொது இலக்கணத்தைப் பெற்று வரும்.

'இம்மை நலம் துய்ப்போம்' என்னும் தலைப்பிலமைந்த கவிதையில்

**"வாலாட்டி நாளெல்லாம் வம்புசெயும் மாந்தரைமுப்**
**பாலூட்டி ஆளாக்கும் பாவலனை இவ்வுலகில்**
**மாந்தர் குலமனைத்தும் மாறாத இன்பத்தில்**
**நீந்திக் களிக்கவைத்த நேரியனைத் தீந்தமிழில்**
**தக்க புலவரெனச் சான்றோர் நமையுரைக்கத்**
**தக்கவழி நல்கும் தகவோனை மிக்க**
**அறியாமை என்னும் அகத்திருளை ஓட்டச்**
**சரியான நல்வழிகள் தந்தானை நெஞ்சில்**
**இடுக்கண் வருங்கால் இனிதுரைத்துத் துன்பம்**
**துடைத்து மகிழ்வூட்டுந் தூயவனைப் பாருலகோர்**
**உள்ளத்தை எல்லாம் ஒருசேர ஈரடியால்**
**அள்ளிக்கொண் டன்புடனே ஆள்பவனை வள்ளுவனைச்**
**செந்தமிழ்க்குக் காவலனைச் சென்னி மிசைவைப்போம்**

**சிந்தைக்குள் நல்ல திருமறையை வைத்திருப்போம்**

**செம்மை யுளத்தோமாய்ச் செந்நெறியில் நின்றொழுகி**

**இம்மைநலந் துய்த்திருப்போம் இங்கு” (வள்.கோ.ப.28)**

என்று திருவள்ளுவரையும், திருக்குறளையும் கலிவெண்பாவில் போற்றுகிறார்.

**நேரிசையாசிரியப்பா:**

இப்பா, மாச்சீர், விளச்சீர் பெற்று நேரொன்றாசிரியத் தளை, நிரையொன் றாசிரியத் தளை என்னும் தளைகளைப் பயின்று ஈற்றயலடி முச்சீராயும், ஏனைய அடிகள் நாற்சீராயும் வரும். ஈற்றடியின் ஈற்றுச்சீர் ஏகாரத்தில் அமைந்திருக்கும். அகவல்ஓசை பெற்று வரும். மூன்றடிச்சிற்றெல்லையும், பாடுபவரின் உள்ளக் கருத்திற்கேற்பப் பேரெல்லையும் கொண்டு அமையும்.[27]

முடியரசனார் பாடல்களில் நேரிசையாசிரியப்பா யாப்பில் 716 அடிகள் பயின்று வந்துள்ளன.[28]

‘எனக்கும் ஓர் அதியன்’ என்ற தலைப்பில்,

**“குறள்நெறி வாழும் கொள்கைக் கோவே!**

**அருள்நெறி ஒழுகும் அண்ணால்! எங்கள்**

**சுப்பிர மணியத் தோன்றால்! வணக்கம்**

**மெய்ப்பொருள் உணர்ந்த மேலோய்! வணக்கம்**

**தந்தாய்! என்னுயிர் தந்தாய்! என்கோ?**

**அன்னாய்! என்னுயிர் அன்னாய்! என்கோ?**

**இன்னருள் புரியும் என்கோ! என்கோ?**

**எவ்வணம் நின்னை ஏத்திப் புகழ்வேன்!**

**செய்வணம் அறியேன் சிறியேன் நின்னடி**

**நெஞ்சத் திருத்தி நினைவேன்**

**அஞ்சலென் றருளுக தஞ்சம் நீயே” (க.மு.ப.80)**

என்று அண்ணல் பு.அ.சுப்பிரமணியனார் தன்னுயிர் காத்து உடற்பிணி நீக்கியமையை நேரிசையாசிரிய யாப்பில் பாடியுள்ளார்.

**நிலை மண்டில ஆசிரியப்பா:**

“நிலைமண்டில ஆசிரியம் ஆசிரியப்பாவின் பொது இலக்கணத்தைப் பெற்று, அடிகள் எல்லாம் அளவடிகளாய் அமைந்திருக்கும். ‘என்’ என்னும் அசைச்சொல்லிலோ, ஏகாரத்திலோ நிறைவுற்றிருக்கும்.”[29]

முடியரசனார் தம் கவிதைகளில் நிலை மண்டில ஆசிரியப்பாவை அதிகம் கையாண்டுள்ளார். 8292 அடிகள் நிலைமண்டில ஆசிரியயாப்பில் பாடப்பெற்றுள்ளன.[30] முடியரசனாரின் ‘ஒற்றுமையும் ஒருமையும்’ என்னும் தலைப்பில் அமைந்த,

**“ஒற்றுமை எனவும் ஒருமை எனவும்**
**சொற்றிடும் இருசொலைச் சற்றிவண் நோக்குதும்**
**வேறுபடு பொருள்களைக் கூறிடும் அவற்றுள்**
**சாரும் பொருண்மை தேறுதல் நம்கடன்**
**ஒன்றுடன் மற்றொன் றிணைவதே ஒற்றுமை**
**ஒன்றினுள் ஒன்று மறைவதே ஒருமை**
**மலைப்பினி வேண்டா மனத்தினிற் பொருந்த**
**இலக்கணச் சொல்லால் விளக்குதும் கேண்மின்;**
**பலபல எனுஞ்சொல் கலந்தே நிற்கும்;**
**முன்னதை அடுக்குத் தொடரென மொழிவர்**
**பின்னதை இரட்டைக் கிளவியென் றியம்புவர்;**
**அடுக்குத் தொடரென ஆகுவ தொற்றுமை**
**இரட்டைக் கிளவியென் றிருப்பதே ஒருமை;**
**இடர்ப்படல் தவிர்த்தினி இருவகைப் பொருளும்**
**மனத்தினில் தெளிகநும் மயக்கமும் விடுத்தே” (பு.வி.செ.ப.150 )**

என்ற பாடல் இதற்குச் சிறந்த சான்றாகும்.

**வெண்கலிப்பா:**

வெண்கலிப்பா,“கலித்தளை நிறைந்து கலியோசையும், வெள்ளோசையும் தழுவி நான்கடி முதல் எத்தனை அடியாயினும் வந்து ஈற்றடி மூன்று சீரால் முடியும்.”[31]

முடியரசனார் வெண்கலிப்பா பாவகையில் 366 அடிகளில் பாடல் புனைந்துள்ளார். [32]

தஞ்சை, கம்பன் திருநாள் கவியரங்கில் 'கம்பன்குரல்' என்னும் தலைப்பில் பாடப்பெற்ற,

**"…. கன்னித் தமிழ்வாழக் காவியச் சுவைவாழ**
**உன்னிப் போடிருந்திடுக ஊறுசெய்வார் பலருண்டே**
**என்றுரைத்துப் புகையோ டேகிவிட்ட தவ்வுருவம்**
**நின்றிருந்த நான்வணங்கி நிமிர்கையிலே கைநழுவிப்**
**பொத்தென்று வீழ்ந்து புரண்டதுகைப் புத்தகந்தான்**
**மெத்தென்ற படுக்கைமிசை விதிர்ப்புற்றுக் கண்விழித்தேன்**
**கம்பன் புகன்றகதை கவிபாட உதவுமென்று**
**நம்பிக் கவிபுனைந்தேன் நான்" (முடி.க.ப.168)**

என்ற கவிதை வெண்கலிப்பாவிற்குச் சிறந்த சான்றாகும்.

**பாவினம்:-**

வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்னும் நால்வகைப் பாக்களின் இனங்களான 'தாழிசை, துறை, விருத்தம்' ஆகிய மூன்று பாட்டுகளும் தனித்தனியே இனமாய் வருதல் 'பாவினம்' எனப்படும்.

"தாழம் (மந்தம்) பட்ட ஓசையொடு வருவதனைத் தாழிசை என்றது காரணப்பெயர். தத்தம் பாவிற்குத் துறைபோல வருவது துறை எனப்படும். விருத்தம் என்பது நிகழ்ச்சியைக் கூறுவது"[33] ஆகும்.

முடியரசனார் தாழிசை, துறை, விருத்தம் ஆகிய பாவினங்களைப் பயன்படுத்தி கவிதைகள் படைத்துள்ளார். கவிஞர் தம் பாடல்களில் எட்டு தாழிசைகள் பயின்று வந்துள்ளன. [34]

'தோற்றுவிட்டேன்' என்னும் தலைப்பிலமைந்த,

**'போர்க்களத்தில் எதிர்நிற்க எவருங் காணேன்**
**பூரித்தேன் வீரத்தாற் செருக்குங் கொண்டேன்**
**தார்க்கழுத்தில் வன்புயத்தில் முகத்தில் எங்கும்**

**தளிரடியால் எனை மிதித்தாய் தோற்றுவிட்டேன்**

**.........................................................................................**

**...............................................................................**

**எழுதரிய ஓவியமே! என்றன் நெஞ்சில்**

**எழுந்துநடம் செயுந்தேவே! எங்கள் காதற்**

**பழந்தந்த சுவையே!எப் படியோ என்னைப்**

**பணிவித்து நல்லாட்சி செலுத்து கின்றாய்!" (முடி.க.ப.93)**

என்னும் பாடல் இதற்குத் தக்க சான்றாகும்.

முடியரசனார் கவிதைகளில் கலித்துறைப் பாடல்கள் எட்டும் கட்டளைக் கலித்துறைப் பாடல்கள் ஆறும் அமைந்துள்ளன.[35]

ஊன்றுகோல் காப்பியத்தில் கலித்துறை யாப்பில்,

**"உண்பதும் ஓய்வதும் என்பயன்**

**தந்தன உற்றறிவால்**

**எண்ணு கநற்பணி செய்திட**

**நண்ணுக என்றிசைத்தே**

**வண்முகில் போலுளங் கொண்டவர்**

**வாழ்பல வான்குடியில்**

**கண்மணி வாசகச் சங்கமென்**

**றொன்றனைக் கண்டனரே**

**.......................................................**

**.......................................................**

**ஏசாச் சிறப்பின் எழில்ராம**

**சாமி எனுமவர்க்குக்**

**காசாற் பெறவிய லாத**

**கலையெழில் காட்டினரே" (ஊ.கோ.11:18-21)**

என்று நான்கு பாடல்கள் பாடியுள்ளார்.

**கட்டளைக் கலித்துறை:**

எழுத்து எண்ணி இயற்றும் ஒரு வகைக்கலித் துறையைக் கட்டளைக் கலித்துறை என்பர். இத்தனை எழுத்து இப்படித் தொடங்குவதற்கு வரவேண்டும் என்னும் நியதி அல்லது கட்டளைக்குட்பட்டு இக்கலித்துறை வருவதால், இவ்வகை கலித்துறைக்கு 'கட்டளைக் கலித்துறை' என்று பெயர்.

"கட்டளைக் கலித்துறை நான்கு அடிகளில் அமைந்திருக்கும். ஒவ்வோரடியும் நெடிலடியாய் ஐந்து சீர்கள் கொண்டு ஒவ்வோரடியின் ஐந்தாம் சீரும் கூவிளங்காயாகவோ, கருவிளங்காயாகவோ இருக்கும். அருகில் கூவிளங்காய்க்கு ஈடாகத் தேமாங்கனிச் சீரும் கருவிளங்காய்க்கு ஈடாகப் புளிமாங்கனிச் சீரும் வருதலுமுண்டு. மெய்எழுத்துகளை நீக்கி நேரசையில் முதற்சீர் தொடங்கும் அடியில் 16 எழுத்துகள் இருக்க வேண்டும். நிரையசையில் முதற்சீர் தொடங்கும் அடியில் 17 எழுத்துகள் இருக்க வேண்டும். நான்கடிகளுக்கும் ஒரே எதுகை வர வேண்டும். முதல்சீரிலும் நான்காம் சீரிலும் மோனை இருத்தல் சிறப்பு. பெரும்பாலும் முதற்சீர்கள் நான்கும் ஈரசைச்சீர்களாகவே வரும். ஈற்றடியின் ஈற்றுச்சீர் ஏகாரத்தில் முடிய வேண்டும்"[36]

கவிஞர் தம் மாணவப்பருவத்தில் 'உதவுவையே' என்னும் தலைப்பில்,

**"பெற்றார் உயிரென நட்டார் பெரியர் சிறியரெலாம்**
**கற்றா நிலைசீ எனஎற் கடிந்தே இகழ்ந்துரைக்கச்**
**சற்றா கினுமதைத் தாளேன் சிறையில்நக் கீரனுக்கா**
**உற்றாய் தமிழினைப் பெற்றாய் கலைஎற் குதவுவையே" (நெஞ்.பூ.ப.278)**

என்று நேரசையை முதலாக உடைய கட்டளைக் கலித்துறை யாப்பில் கவி பாடியுள்ளார். இதில் ஒவ்வோரடியிலும் மெய்யெழுத்து நீங்கலாக 16 எழுத்துகள் இருத்தலைக் காணஇயலும்.

**அறுசீர் விருத்தம்:**

"கழிநெடில் நான்கு ஒத்து இறுவது குறைவில் தொல்சீர் அகவல் விருத்தம்"[37] என்கிறது யாப்பருங்கலக் காரிகை.

முடியரசனார் கவிதைகளில் அறுசீர் விருத்த யாப்பில் 588 பாடல்கள் இடம் பெற்றுள்ளன. [38]

'நீர்ப்பானை ஓட்டையானால்..' என்னும் தலைப்பில் சாதி ஒழிப்பின் தேவையை,

**"தமிழரெலாம் ஒன்றானார் தமிழர்க்குப்**

**பகைவரெலாம் தாழ்ந்து போனார்**

**அமிழ்தனைய இம்மொழியை அகம் மகிழ**

**என்செவியில் ஆரு ரைப்பார்?**

**இமிழ்கடல்சூழ் இவ்வுலகில் எந்தமிழர்**

**சாதியினை எரித்தே விட்டார்**

**தமிழினந்தான் இனியுண்டு தலைநிமிர்ந்து**

**வாழ்வரெனச் சாற்று வார்யார்?" (பு.வி.செ.ப.166)**

என்று அறுசீர் விருத்தத்தில் உரைப்பர்.

"கழிநெடிலடிகள் (ஐந்து சீர்களுக்கு மேலான) நான்கு சீரின் அளவில் ஒத்து முடிவது குறைபடுதல் இல்லாத சீர்களையுடைய அகவல் விருத்தமாகும். அகவல் விருத்தம் அறுசீர்விருத்தம் முதல் முப்பத்திரண்டு சீர்விருத்தம் வரையில் உண்டு. பதினான்கு சீர் விருத்தத்திற்கு மேற்பட்டு வரும் விருத்தப்பாடல்கள் பாட்டாக இரா; உரைநடை போலவேயிருக்கும். அறுசீர் விருத்தம் முதலானவை 'கழிநெடிலடிஆசிரிய விருத்தம்' என்றழைக்கப்படும்."[39]

முடியரசனார் எழுசீர் விருத்த யாப்பில் 25 பாடல்கள் இயற்றியுள்ளார்.[40]

ஊன்றுகோல் காப்பியத்தில் சபை காண் காதையில் எழுசீர் விருத்தத்தில்,

**"கணக்கிட்டுச் செட்டோடு வாழுமவர்**

**கல்விக்குக் கணக்கின்றி வழங்கி வந்தார்;**

**பணக்கட்டுப் பாடின்றி வழங்கியதால்**

**பாரிலுளார் வள்ளலென அவரைச் சொன்னார்;**

**மணக்கட்டும் அறிவுமணம் மலரட்டும்**

**கலைமலர்கள் எனவிழைந்து செல்வ நீரை**

**அணைக்கட்டுப் போடாமல் திறந்துவிடும்**

**அழகுளத்தைப் பெருமனத்தை வியவார் யாரே?" (ஊ.கோ.ப.54)**

என்று வள்ளல் அழகப்பர் போன்றோரை வாழ்த்துகிறார்.

முடியரசனார் கவிதைகளில் எண்சீர் விருத்த யாப்பில் 1995 பாடல்கள் அமைந்துள்ளன.[41]

'அழகப்பர்' என்னும் தலைப்பிலான பாடலில் எண்சீர் விருத்தத்தில்,

**"அள்ளியள்ளி வழங்குதற்குக் கையை ஈந்தான்**
**அழகாகப் பேசுதற்கு வாயை ஈந்தான்**
**உள்ளமெனும் ஒருபொருளை உரத்துக் கீந்தான்**
**உடம்பினையும் கொடுநோய்க்கே ஈந்தான் அந்தோ!**
**வெள்ளமென வருநிதியம் வாழும் வீடு**
**வினைமுயற்சி அத்தனையுங் கல்விக் கீந்தான்**
**உள்ளதென ஒன்றில்லை அந்தப் போதும்**
**உயிருளதே கொள்கவென சாவுக் கீந்தான்" (க.மு.ப.65)**

என்று வள்ளல் அழகப்பரின் வள்ளன்மையைப் புகழ்ந்துரைப்பர்.

'வேண்டுவன' என்னும் தலைப்பில் மற்றுமொரு புதிய வடிவத்தில்,

**"குணத்தாலும் உடலாலும்**
**அழகு மிக்க**
**குமரிஎனை மணந்தின்பம்**
**கொடுக்க வேண்டும்;**
**கணக்கோடு மகப்பேறு**
**நிகழவேண்டும்;**
**கள்ளமிலா நண்பருடன்**
**தொடர்பு வேண்டும்;**
**மணத்தோடு தென்றல்வந்**
**துலவு கின்ற**
**மாடியுள்ள வீடொன்று**
**வேண்டும்; வாழ்வு**
**பணத்தாலே இடரின்றி**

**நடத்தல் வேண்டும்**

**பகையில்லா அருளுள்ளம்**

**இருத்தல் வேண்டும்" (முடி.க.ப.75)**

என்று தனக்கு வேண்டுவனவற்றை அடுக்கிக் காட்டுவர்.

**பன்னிரு சீர் விருத்தம்:**

தமிழன்னை பிள்ளைத்தமிழின் காப்புப் பருவப் பாடலில்,

**"கலவைகள் விலகிடத் தனிமொழி உலவிடக்**

**கருதிய முதல்மகனாம்**

**கலைபல தெளிவுறு மறைமலை யடிகளைக்**

**கருதிவ ணங்கிடுவோம்**

**குலமொழி அடிமுதல் தெளிவுறும் படிவளர்**

**கூர்மதிப் பாவாணர்**

**குளிர்மிகும் மலரடி வழிதரும் எனமனங்**

**கொண்டுப ணிந்திடுவோம்**

**உலகினில் முதன்முதல் நிலவிய மொழியெனும்**

**உரைபெறுந் திருமகளாம்**

**உயர்தனி மொழியென அயலவர் புகன்றிட**

**ஒளிதரு செம்மகளாம்**

**அலைபல எதிரினும் நிலைபெறும் கலைமகள்**

**அமுதெனும் மொழியினளாம்**

**அழகிய கழகமொ டுலவிய தமிழ்மகள்**

**அணிநலம் புரந்திடவே" (தா.கா.ப.102)**

என்று தமிழ்ப்பணியாற்றிய மறைமலையடிகள், பாவாணர் ஆகியோரை பன்னிரு சீர் விருத்தப்பாவில் வணங்குவர்.

**பதினான்கு சீர் விருத்தம்:**

'பொதுமை காண்போம்' என்னும் தலைப்பில் பதினான்குசீர் விருத்தத்தில்,

**"வறுமை மிக்கு வலிமை கெட்டு**

**வறியார் வாடும் போதிலே**

**வலியர் மட்டும் வளமை யுற்று**

**வள்வ தென்ன நீதியோ?**

**பொறுமை யற்றுப் புலிநி கர்த்துப்**

**பொதுமை காணும் போரிலே**

**புரட்சி தோன்றும் புதிய போக்கில்**

**புரளி என்ன நேருமோ?**

**இருமை போக ஒருமை காண**

**இறைவன் சொற்ற பாட்டிலே**

**இடரி லாத வழிகள் காண**

**இறங்கி வாரும் நாட்டிலே**

**வறுமை போக வளமை சேர**

**விழிகள் யாவை? தேடுவோம்**

**வளரும் நாடு பொதுமை யாகி**

**வாழ்க என்று பாடுவோம்'' (பு.வி.செ.ப.118)**

என்று பொதுமை காண அழைப்பு விடுப்பர் கவிஞர்.

முடியரசனார் கவிதைகளில் பதினான்குசீர் விருத்தம் ஒன்றும், பதினாறு சீர்ச் சந்த விருத்தம் ஒன்றும் பயின்று வந்துள்ளன. [42]

'புலியேறென எழுவாய்' என்னும் தலைப்பிலமைந்தது பதினாறு சீர்ச் சந்த விருத்தமாகும். (முடி.க.ப.117)

**உள்ளடக்கத்துக்குத் தகுந்த புற அமைப்பு:**

முடியரசனாரது ஊன்றுகோல் காப்பியத்தில் கலிவெண்பா 28 அடிகளும் நேரிசையாசிரியப்பா 161 அடிகளும் நிலைமண்டில ஆசிரியப்பா 582 அடிகளும் அறுசீர் விருத்தம் 148 பாக்களும் எழுசீர் விருத்தம் 18 பாக்களும் எண்சீர் விருத்தம் 160 பாக்களும் கலித்துறை 4 பாக்களும் கட்டளைக் கலித்துறை 4 பாக்களும் பயின்று வந்துள்ளன.

வீரகாவியம் முழுமையும் எண்சீர் விருத்தயாப்பிலும், பூங்கொடி காப்பியம் முழுமையும் நிலைமண்டில ஆசிரியப்பாவிலும் பாடப் பெற்றுள்ளன. [43]

பழந்தமிழ்க் காப்பியங்களான சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகியன நிலைமண்டில ஆசிரிய யாப்பில் பாடப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

'முடியரசன் கவிதைகள்' நூலில் முதலிரண்டு நெடுங்கவிதைகளும் நிலைமண்டில ஆசிரிய யாப்பில் அமைந்தவை. அவற்றில் முதலாவதாக அமைந்தது பாரசீகக் கவிஞர் நிசாமி படைத்த கோசுரு சிரீன் என்னும் பெருங்காப்பியத்தைத் தழுவி எழுதப்பட்டது. இரண்டாவது நெடுங்கவிதை மணிமேகலை காப்பியத்தில் இடம்பெற்றுள்ள சுதமதியின் வரலாற்றை விரிவுபடுத்தி எழுதப்பட்டது.

சிலப்பதிகாரக் காப்பிய மாந்தர் மாதவியைப் பற்றிய 'மாதவி' என்னும் கவிதையும் நிலைமண்டில ஆசிரிய யாப்பில் இயற்றப்பட்டுள்ளது. பூங்கொடி காப்பியத்திற்கும் வேறு காப்பியங்களில் பாத்திரங்களைக் கருவாய் சமைத்திருக்கும் நெடுங் கவிதைகளுக்கும் ஆசிரிய யாப்பைப் பயன்படுத்தியுள்ளார்.

இயற்கையை உள்ளடக்கமாகக் கொண்ட கவிதைகளை முடியரசனார் பாடும் பொழுது விருத்தப் பாவினையே மிகுதியாகப் பயன்படுத்தியுள்ளார். சிற்சில கவிதைகளை வேறுவகை யாப்பிலும் பாடியுள்ளார். 'இயற்கையின் எழுச்சி' என்னும் தலைப்பில் நேரிசையாசிரியப்பாவும், 'படைத்தோன் வாழ்க' என்னும் தலைப்பில் நிலைமண்டில ஆசிரியப்பாவும் பாடியுள்ளார். இவை போன்று மிகச் சிலவான கவிதைகளைத் தவிர பெரும்பாலானவை விருத்தப்பாவில் அமைந்தவையே.

'இயற்கை உலகம்' என்னும் தலைப்பில் எண்சீர் விருத்தத்தில்,

**"கால்முளைத்த தாமரையின் மொக்குள் போலக்**
**காட்சிதரும் குஞ்சுகள்தம் வாயில் கோழி**
**வேல்மூக்கால் அன்புகலந் திரையை ஊட்டும்**
**வேளையிலும் வானத்து வீதி செல்லும்**
**பால்மதியப் பெண் தனது விண்மீன் என்னும்**
**பல்விரித்துச் சிரிக்கின்ற போதும், மண்மேல்**
**கால்மடித்துத் தவழ்கின்ற குழந்தை பேசும்**

**காலத்தும் நல்லழகின் சிரிப்பைக் கண்டேன்'' (முடி.க.ப.37)**

என்று ஒரு கோழி மற்றும் குழந்தையின் செயல்களில் தான் கண்ட அழகினைக் காட்சிப்படுத்துவர். இது போன்று எழில், நிலவு, ஆறு என்னும் கவிதைகள் எண்சீர் விருத்த யாப்பில் காய் காய் மா தேமா, காய் காய் மா தேமா என்னும் சீர் வரிசை அடுக்கில் வந்து தனதன தனதன தன தன, தனதன தனதன தன தன என்னும் சந்தக் குறிப்புடன் அமைக்கப் பெற்றுள. கவிஞர் அறுசீர் விருத்தத்திலும்

**''வளைந்துள்ள வெண்ணிறத்துப் பிறை நிலவே**
**வானத்தில் கப்பல் என்று**
**தளைந்துள்ள முகிலலையின் நடுவிடத்தே**
**தவழ்ந்தோடச் செய்தாள்; இன்பம்**
**விளைந்துள்ளம் களிகூரப் பகலெல்லாம்**
**விளையாட இருட்பு லத்தைப்**
**பிளந்தெழும்பும் கதிரவனைப் பந்தெனவே**
**பிள்ளையெனக் களித்தாள் அன்னை'' (முடி.க.ப.42)**

என்று இயற்கையைப் பாடியுள்ளார். இதே போன்று காற்று, கடல், மயில் என்னும் தலைப்பிலமைந்த கவிதைகளும் அறுசீர் விருத்தத்தால் பாடப்பெற்றுள. [44]

இயற்கையைப் பாடுபொருளாகக் கொண்ட அறுசீர் விருத்த யாப்பினை மற்ற பிற உள்ளடக்கத்திலிருந்து வேறுபடுத்தி காய் காய் காய், காய் மா மா என்னும் சீர் வரிசை அடுக்கில், தனதன தனதன தனதன தனதன தன தன என்னும் சந்தக் குறிப்பில் அமைந்துள்ளார்.

காதலை உள்ளடக்கமாகக் கொண்ட கவிதைகளிலும் விருத்தப் பாக்களே அதிகம் பயின்று வந்துள்ளன. சிற்சில விதிவிலக்காக காதல் நெஞ்சம் நேரிசை வெண்பா யாப்பிலும் குளிர் நிலா - நேரிசை ஆசிரிய யாப்பிலும் எம்மவர் தந்தார் - நிலை மண்டில ஆசிரிய யாப்பிலும் பாடப் பெற்றுள்ளன.

'ஏன் வரவில்லை?' என்னும் தலைப்பிலமைந்த அறுசீர் விருத்தத்தில்,

**''அகத்தியின் குவிபூத் தோற்றம்**

**அன்னதோர் பிறைநி லாவே!**

**பகற்பொழு தகலும் நேரம்**

**பார்த்ததும் வருவேன் என்றாள்**

**இகழ்ச்சியோ செய்கின் றாள்என்**

**றேங்கிடும் உள்ளம் ஆங்கே**

**பகர்ந்ததை மறந்தா போனாள்?**

**பாவைஎன் வரவே இல்லை?" (முடி.க.ப.73)**

என்று விளம் மா தேமா, விளம் மா தேமா என்னும் சீர் வரிசை அடுக்கில் 'தனன தன தன தனன தன தன' என்ற சந்தக் குறிப்பில் பாடியுள்ளார்.

மொழியுணர்வை உள்ளடக்கிய கவிதைகள் பெரும்பான்மை விருத்தப் பாவில் அமையப் பெற்றுள்ளன. மொழியுணர்ச்சி, அவளும் நானும், தமிழ்க் காதலி, உறுதி கொள்வீர், தமிழ் வாழ்வு, தமிழ்த் தொண்டு, தமிழ் வணக்கம், தமிழ் காப்போம், கனன்றெழு, உயிர் கொடுப்போம், சாவுக்கும் அஞ்சோம், வாகை கொள்வோம், இனி விடோம், மாவீரன் பலருண்டு, தமிழே வெல்லும் போன்ற கவிதைகள் எண்சீர் விருத்தத்தில் பாடப்பெற்றுள்ளன.

முடியரசனார் கவிதைகளில் தமிழ்தான் என் பேர், துறைதோறும் தமிழே காண்பீர், தமிழ் வாழ்த்து, பிரிந்து போ, உய்யுமோ தமிழர் நாடு போன்ற அறுசீர் விருத்தப்பாக்கள் விளம் மா தேமா, விளம் மா தேமா என்னும் சீர் அடுக்கு வரிசையில், 'தனன தன தன, தனன தன தன' என்னும் சந்தக் குறிப்பில் பாடப்பெற்றவை.

**"உருக்கிடு தமிழிற் சொன்ன**

**ஒருமறை அறியா ராகி**

**அருத்தியில் தழுவிக் கொண்ட**

**அயலவர் மறையே சொன்னார்**

**திருக்குறள் எங்கள் வாழ்க்கைத்**

**திருமுறை என்று கூற**

**ஒருத்தரை இங்குக் காணேன்**

**உய்யுமோ தமிழர் நாடு?" (வ.கோ.ப.93)**

என்னும் பாடல் இதற்குத் தக்க சான்றாகும்.

“ஒரு குறிப்பிட்ட ஓசையை மட்டும் பயன்படுத்திக் கவிதைகளை வளர்த்துச் செல்லுதல் உயிரற்றது. தொடர்ந்து படித்தலாகிய ஆர்வத்திற்குத் தடையமைப்பது. எனவே, உணர்ச்சிக்குத் தக்கவாறு ஓசையை மாற்றி மாற்றி அமைத்தல் தேவையாகிறது.”[45] என்ற முனைவர் பெ.சுயம்புவின் கூற்று இங்கு குறிப்பிடத்தக்கது.

“கம்பர் அறுசீர் விருத்தங்களை ‘காய் காய் காய் காய் மா மா’ என்னும் சீர்வரிசை அடுக்கைப் புலம்பல் சூழலுக்கும் ‘விளம் மா தேமா விளம் மா தேமா’ என்னும் சீர் வரிசை அடுக்கை உரையாடல், தற்கூற்று, நிகழ்வுகளை விவரித்தல் போன்றவற்றிற்கும் பயன்படுத்தியுள்ளார்.”[46]

முடியரசனாரும் அறுசீர் விருத்தங்களில் இயற்கையை உள்ளடக்கமாகக் கொண்ட கவிதைகளில் ‘காய் காய் காய், காய் மா மா’ என்னும் சீர்வரிசை அடுக்கிலும் பிற உள்ளடக்கங்களில் அமைந்த அறுசீர் விருத்த யாப்பினை ‘விளம் மா தேமா, விளம் மா தேமா’ என்னும் சீர்வரிசை அடுக்கிலும் அமைத்துப் பாடியுள்ளார். அறுசீர் விருத்தங்களை உள்ளடக்கத்திற்குத் தகுந்தவாறு மாற்றியமைத்திருப்பது சுட்டத்தக்கது.

“கவிஞன் கருத்தில் இசை செய்யுளின் கதியாக உருவெடுத்து வெளிவந்து ஒழுகுகின்றது. காலகட்டங்களுக்குத் தக்கவாறும், அங்கு கூறவேண்டிய கருத்துக்களுக் கேற்பவும் விருத்தவகைகள் தாமாகவே மாறுவது போல் மாறிவிடுகின்றன.”[47] என்ற பேரா.ந.சுப்புரெட்டியார் அவர்களின் கருத்து கவிச்சக்கரவர்த்திக்கு மட்டுமின்றி, கவியரசருக்கும் முற்றிலும் பொருந்துகின்றது.

முடியரசனாரின் குமுகாயம் பற்றிய உள்ளடக்கம் கொண்ட காலம் வரும் நேரம் வரும், புறமும் அகமும், வாழ்க்கைப் போராட்டம், போலிக் குடும்பம், நல்ல சமையமடா, நல்ல உலகமடா, தேர்தல் திருவிழா, நமது வாணிகம், சமுதாய வீதியிலே, திரையுலகக்கற்பு, இன்றைய மனிதன், இதுவா முன்னேற்றம், வெம்புவான் கம்பன், பாரதி கண்ட பெண்ணுரிமை, புதுமைப் பெண், தமிழின வரலாறு, நீரின் பெருமை, விண் குடும்பம், ஊர்வலக் காட்சி,

நெல்லின் கதை, உணவு, அண்ணல் நடந்த அடிச்சுவடு, திராவிட நாட்டின் வளம் என்பன போன்ற தலைப்பிலான கவிதைகள் கலிவெண்பா யாப்பில் இயற்றப் பெற்றுள.

குமுகாய அவலங்களைச் சாடுவதற்கு கலிவெண்பா வடிவத்தையே கவிஞர் பெரும்பான்மையான கவிதைகளில் பயன்படுத்தியுள்ளார். 'நாடு உருப்படுமோ?' என்னும் தலைப்பிலமைந்த,

**"நாட்டுக்கு நன்மைசெய நாடும் அரசியலைக்**
**கேட்டுக்கே ஆக்கிக் கிடைத்தவெலாஞ் சுற்றுகிற**
**தந்நலத்தை நாடும் தகவில்லாத் தன்மையரை**
**இந்நிலத்தே காணுங்கால் ஏங்கித் தவிக்கின்றேன்**
**...........................................................................................**
**சாதி ஒழிப்பதெனச் சாற்றிவிட்டுத் தேர்தலுக்கு**
**தேதி வரும்போது சாதிக்கும் காப்பளிப்போர்**
**கூடி அரசியலைக் கொண்டு நடத்துவரேல்**
**நாடிங் குருப்படுமோ நன்கு?" (ம.தே.ப.113)**

என்னும் பாடல் இதற்குச் சிறந்த சான்றாகும்.

இவ்வாறு முடியரசனார் உள்ளடக்கத்துக்குத் தகுந்தவாறு வடிவங்களை மாற்றியமைத்து மரபு நெறி வழுவாமல் கவிதைகள் படைத்துள்ளார். பாரதியார் மரபுக்கவிதையிலிருந்து புதுக்கவிதை நெறிக்கு மாறியதைப்பற்றி,

'இருபதாம் நூற்றாண்டில் தோன்றியுள்ள கவிதைகள், பெரும்பாலும் அனைவரும் எளிதில் பொருளுணரத்தக்க சொற்களால் அமைந்தனவேயாகும். இதற்குப் பாரதிதாசன் முன்னோடியாக விளங்குகின்றார். சங்க இலக்கிய நடையிலிருந்து சிறிது சிறிதாக இறங்கி எளிமையின் இறுதி கட்டத்திற்கே வந்துவிட்டது இன்றுள்ள கவிதை நடை.

மக்கள் அடிமையில் மூழ்கித்தாய்மொழியை மறந்து செயலற்றுக் கிடந்த காலம் பாரதியார் காலம். ஆதலின், அவர்களுக்கு ஆவேச வெறியூட்ட உள்ளத்தில் விடுதலைக் கனலை மூட்டக் கவிதைகளைக் கருவியாக்கிக் கொண்டார் அவர். அதனால் கற்றாரும் மற்றாரும் புரிந்து கொள்ளக் கூடிய, அவர்கள் வாய் தானே பாடக்கூடிய எளிய நடையமைத்து

இசையமையப் பாடினார். பாரதிதாசனும் பிறரும் அவரை அடியொற்றிப் பாடுவதையே குறிக்கோளாகக் கொண்டொழுகினர். பாரதியார் எளிய நடையை வேண்டுபவராயினும் கவிதைக்குத் தனிநடை கொண்டவராகவே விளங்கினார்' (எ.வ.த.ப.38) என்றுரைப்பர்.

யாப்பில்லாக் கவிதை பாடவேண்டுமென்று நினைப்பதைக் கவிஞர் அறவே வெறுக்கிறார். அடிமைக் காலத்தில் தேவைப்பட்ட எளிமையை உரிமைக்காலத்திலும் எதிர்பார்ப்பது வளர்ச்சியைக் குறிப்பதல்ல என்பதில் உறுதியோடிருந்தார். எளிமையின் எல்லைக்கே இறங்கிய நடை பள்ளிகளும், கற்றவர்களும் பெருகிவிட்ட காலத்தில் மீண்டும் உயர வளரவேண்டுமென்பது கவிஞரின் எண்ணமாகும்.

'நினைக்க நினைக்க என்றும் இனிக்கும் கவிதைக்கு நன்மொழி புணர்த்தலே அழகாகும். ஆதலின் தூய, இனிய பொருள் செறிந்த முழுமை பெற்ற தமிழ்ச் சொற்களாலான கவிதைகள் பெருகுதல் வேண்டும்' (எ.வ.த.ப.39) என்று அவர் உரைப்பது அவரது இலக்கிய வடிவக் கொள்கையைப் பறைசாற்றுவதாக அமைந்துள்ளது.

**முடியரசனாரின் இசைப்பாடல் வடிவம்:**

இயற்றமிழ் கவிதைகள் படைத்தது போலவே, இசைத் தமிழுக்கு மொழி-நாடு-காதல்-அறம் முதலிய உள்ளடக்கங்களை மையமாக கொண்ட தமிழிசைப் பாடல்களைக் கவிஞர் இயற்றியுள்ளார்.

முடியரசனார் கவிதைகளில் 200 இசைப்பாடல்கள் அமைந்துள்ளன.[48] தமிழிசைப் பாடல்கள் முழுவதுமாய் அமையப் பெற்ற காவியப்பாவை நூலும் சந்த நயத்துடன் பாடுவதற்கேற்ற பனுவல்களின் தொகுப்பாய்ப் பாடுங்குயில் நூலும் பாடப்பெற்றுள்ளன. 'பொற்கிழி பெற்றவன்' என்னும் தலைப்பிலான,

**"சேரன் நல்லிளங் கோவின் நூலினைச்**
**சிந்தை மேவிய ஆசையால்**
**ஓரும் நுண்புலம் கொண்டு தேர்ந்ததை**
**ஓதி உண்மகிழ் வுற்றவன்**
**யாரு மேமணம் சேரும் நட்பினை**
**ஆக்கும் புன்னகை கொள்முகன்**

**ஊரும் வாழ்த்திட நாடும் ஏத்திட**

**ஓங்க பாமொழி வாயினன்**

**.............................................................**

**.........................................................**

**சோம சுந்தர நாமம் மேவிய**

**தோழ னாமவன் வாழ்கவே" (ம.க.கொ.ப.227)**

என்னும் பாடல் "மானின் நேர்விழி மாதராய்! வழுதிக்கு மாபெரும் தேவி! கேள்"[49] என்ற திருஞானசம்பந்தரின் தேவாரப் பண்அடிப்படையில் அமைந்துள்ளது.

பல்லவி, அநுபல்லவி, சரணம் என்பவற்றைப் பெற்றுத் தாளமும் முறையும் வழுவாமல், இராகதாளம் சேர்த்து, இசையறிவு வல்லோரால் பாடப்படும் பாடல் கீர்த்தனையாகும். முடியரசனார் பல்லவி, அநுபல்லவி, சரணம் ஆகிய சொற்களுக்குப் பதிலாக தூய தமிழில் எடுப்பு, தொடுப்பு, முடிப்பு என்னும் சொற்களைப் பயன்படுத்துவது குறிப்பிடத்தக்கது.

'தமிழில் பாடு' என்னும் தலைப்பிலமைந்த கீர்த்தனையில்,

எடுப்பு

**பாடுவ தென்றால் தமிழினில் பாடு**

**பாவையே உளமகிழ் வோடு! - (பாடு)**

தொடுப்பு

**வாடிடும் என்மன வேதனை தீர்ந்திட**

**வாழ்வு மலர்ந்திட அன்பு நிறைந்திடப் - (பாடு)**

முடிப்பு

**வையம் பெற்றது தமிழ்மொழியாம் - அதன்**

**வழி வழி வந்தன பிறமொழியாம்**

**ஐயம் இல்லை உண்மையிதாம் - கண்ணே**

**அருமைத் தமிழே நமதுயிராம் - (பாடு)**

**இடுக்கண் வருங்கால் சிரித்திடுவாய் - மன**

**இழுக்கெனும் மாசுகள் துடைத்திடுவாய்**

**வடுக்கள் நீங்கிட வாழ்ந்திடலாம் - என**

**வள்ளுவன் சொன்னதைப் பாடிடுவாய் - (பாடு)**

**நன்மைகள் செய்ய முயன்றிடுவாய் - இன்றேல்**
**நலிவுகள் செய்திட முனையாதே**
**என்னும் மேலோர் அறவுரையை - நல்ல**
**எழிலொடு காதலை வீரமதை (கா.பா.ப.8)**

என்று தமிழில் பாட வலியுறுத்துவர்.

எங்கள் நாடு, மறவர் நாடு, வாழ்க தாயகம், ஆடினாள், பிள்ளைக் குறும்பு, நாடகம் ஆடுகிறான், தேடிய எழில், ஆடு மயிலே!, மாமியும் மருமகளும்!, அத்தர் விற்போன், விளம்பர உலகம் ஆகிய தலைப்பிலமைந்த பாடல்கள் தொடுப்பு இன்றி எடுப்பு, முடிப்பு மட்டும் அமையப் பெற்றவை.

நாணம் ஏனோ? என்னும் பாடலில் முடிப்பு இன்றி எடுப்பு, தொடுப்பு மட்டும் கொண்ட வடிவம் காணப்பெறுகிறது.

'நெஞ்சிற் பூத்தவை' நூலில் காதலர் சொல்லாடல், பருவப் பேச்சு, காவிய மேடையில், அதுவா இதுவா, பேதமேது? ஆகிய பாடல்களும் 'காவியப்பாவை' நூலில் நடந்தது என்ன?, விளையும் பயிர், வீணை மீட்டுவோம் ஆகிய பாடல்களும் உரையாடல் வடிவில் அமைந்தவை.

திரையிசைப் பாடல்களாகச் சிரித்தமுகம், சீரழிந்து போகாதே, பொய்மைகள் மாயும், மையல் தீர, முகக்கண்ணாடி, பேதமேது?, சிரிப்பதேனடி? ஆகிய பாடல்கள் 'கண்ணாடி மாளிகை' திரைப்படத்திற்காக கவிஞர் இயற்றியவையாகும்.

**முடியரசனாரின் நாடக இலக்கிய வடிவம்:**

இயலும் இசையும் சேர்ந்து கதையைத் தழுவி வரும் கூத்தே நாடகமாகும். நாடக இலக்கியங்கள் பண்டைக் காலத்தில் கலிப்பா, பரிபாடல் பாவகைகளில் இயற்றப்பட்டன. "நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும் பாடல் சான்ற புலனெறி வழக்கம்"[50] என்னும் தொல்காப்பிய அடிகள் நாடகக்கலை தொன்று தொட்டு தமிழ்நாட்டில் வழங்கப்பட்டு வருவதனை அறிவிக்கும்.

முடியரசனார் இயற்றியுள்ள நாடகக் காப்பியம் 'இளம்பெருவழுதி' என்பதாகும். 23 காட்சிகளைக் கொண்ட செய்யுள் வடிவ நாடக நூலாக இஃது அமைந்துள்ளது.

"நாடகம் செய்யுளாலும் அமையலாம். உரைநடையாலும் அமையலாம். செய்யுள் வடிவில் நாடகம் அமைதல் போற்றத்தக்கது. பாட்டு நன்கு விளங்கும் இடமாக உள்ளது நாடகமே"[51] என்பர் அறிஞர் எலியட்.

கதைக்கோப்பு, பாத்திரம், உரையாடல், பின்னணி, வாழ்க்கையின் பேருண்மைகள் ஆகிய கூறுகள் நாடகத்திற்கு இன்றியமையாதவை. நிகழ்ச்சிப் போக்கு அல்லது நடிப்பு, உரையாடல் ஆகியன பாத்திரப் பண்புகளை வெளிப்படுத்தும் கருவிகளாகும். 'இளம்பெருவழுதி' நாடகத்தில் வாழ்த்துடன் தொடங்கி, கதை மாந்தர் அறிமுகம், கதை நிகழும் காலம், இடம், சூழல், பின்னணி ஆகியன குறித்து ஒவ்வொரு காட்சியிலும் விளக்கி உரைத்தல் என்னும் அமைப்பில் நாடகத்தை வடிவமைத்துள்ளார். பாத்திரங்களின் மெய்ப்பாடு, இயக்கம், மேடை நெறிக் குறிப்புகள் போன்றவை தகுந்த இடங்களில் கையாளப்பட்டுள்ளன.

நாடகத்தை நடிப்பதற்கு மட்டுமே உரிய நாடகம், படிப்பதற்கு மட்டுமே உரிய நாடகம், நடிப்பதற்கும் படிப்பதற்கும் உரிய நாடகம் என்று மூவகைப்படுத்துவர். அவ்வகையில் 'இளம் பெருவழுதி' வடிவச் சிறப்பால் நடிப்பதற்கும் படிப்பதற்கும் உரியதாகக் திகழ்கின்றது.

**முடியரசனாரின் சிறுகதை இலக்கிய வடிவம்:**

"ஒரே மூச்சில் படித்து முடித்தற்குரிய கதையே சிறுகதை"[52] என்பர் வில்லியம் ஹென்றி அட்சன். தேவையற்றதைத் தவிர்த்துச் சுருக்கமாகவும், செறிவாகவும் சிறுகதை எழுதப்பட வேண்டும். கதையில் கூறப்படும் ஒவ்வொரு நிகழ்வும் பொருளும் கதையோடு தொடர்பு கொண்டிருக்க வேண்டும். தொடக்கம், வளர்ச்சி, உச்சம், வீழ்ச்சி, முடிவு என்னும் ஐந்து கூறுகளைச் சிறுகதை கொண்டிருக்கும்.

முடியரசனார் 'அழிந்துவிடுமோ' என்னும் சிறுகதையைக் கனவு காணும் உத்தியின் வழி அமைத்துள்ளார். கவிஞர் மறைந்தார் என்னும் பத்திரிகைச் செய்தியிலிருந்து கதை தொடங்குகிறது. கதையாசிரியர் தான் கண்ட கனவை மனைவியிடம் கூறிச் சிரித்து மகிழ்வதாகக் கதை முடிகின்றது. இதன் கதைக்கோப்பு பின்வருமாறு,




எதிர்பாராத முடிவை நோக்கி நகரும் நல்ல சமூகத்தை மையப்படுத்திய எக்கோவின் காதல் முதல் இரண்டு தந்தி கதை முடிய முடியரசனாரின் பதினொரு கதைகளும் வித்தியாசமான துவக்கம், படிப்படியான வளர்ச்சி, எதிர்பாராத உச்சம், வீழ்ச்சி, முடிவு என்னும் சிறுகதைக்கான வடிவப்பண்புகளைப் பெற்று விளங்குகின்றன. இவர்தம் சிறுகதைகளில் கண்மூடி வழக்கம், சந்தேகமுடிவு, கிருஷ்ணார்ச்சுன யுத்தம், அவமானச் சின்னம், அழிந்துவிடுமோ? ஆகிய ஐந்து சிறுகதைகள் இன்பியல் முடிவுகளையும் எக்கோவின் காதல்,அத்தைவீட்டில் பேய், கடைமுழுக்கு, காக்கையின் கடிதங்கள், அணைந்த விளக்கு, இரண்டு தந்தி ஆகிய ஆறும் துன்பியல் முடிவுகளையும் கொண்டுள்ளன.

ஒரு பாத்திரம், ஒரு மன உணர்ச்சி, ஒரு நிகழ்ச்சி என ஏதேனும் ஒன்று மட்டும் நிலைக்களனாக அமைந்து புனையப்படும் சிறுகதை வடிவம் முடியரசனாரின் சிறுகதைகளில் சரியாகப் பொருந்தியுள்ளது. நல்லதொரு கதைக்கரு, கதையை வளர்த்துச் செல்லும்

கதைப்பின்னல், உச்சம், வீழ்ச்சி, முடிவு என்னும் அடிப்படையில் சிறுகதைக்குரிய வடிவ இலக்கணத்தை முடியரசனார் சிறப்புறக் கையாண்டுள்ளார்.

**முடியரசனாரின் கடித இலக்கிய வடிவம்:**

எண்ணங்களைப் பரிமாறிக் கொள்ள உதவும் நல்லதொரு தொடர்பியல் சாதனம் கடிதமாகும். கடிதம் எழுதுவது ஒரு கலையாகப் போற்றப்படுகின்றது. தற்சார்புக் கடிதங்கள், தற்சார்பில்லாத கடிதங்கள் என கடிதத்தில் இருவகையுண்டு. முதல்வகை, தொடர்புடைய இருவரின் பயன்பாட்டுக்கு உட்பட்டது. இரண்டாம் வகை எல்லோர்க்கும் எக்காலத்திற்கும் நாடு, இனம், மொழி, கல்வி போன்ற பொருள்களைப் பற்றியதாக அமையும். இவ்வகைக் கடிதம் தனிநபரால் எழுதப்பட்டாலும் அனைவருக்கும் பயனாகும் பொதுமை நலம் பெற்று விளங்குவதால் இக்கடிதவிலக்கியம் சிறந்த இலக்கிய வகையாக அமைகிறது.

கடிதம் அமையும் முறை குறித்து "தலைப்பு, கொளு, விளி, செய்தி, உறவுத்தொடர்மொழி, கையெழுத்து, முகவரி ஆகியன கடித்தில் அமைந்திருக்க வேண்டும்"[53] என்றுரைப்பர் தேவநேயப் பாவாணர்.

முடியரசனார் மொத்தம் 32 கடிதங்கள் எழுதியுள்ளார். 'அன்புள்ள பாண்டியனுக்கு' என்னும் நூலில் அறஞ்செய விரும்பு, அன்பாய் இரு, இணக்கம் அறிந்து இணங்கு, உண்மை விளம்பு, ஒப்புரவொழுகு, ஒழுக்கம் கைக்கொள், ஓதுவதொழியேல், கேள்விமுயல், சோம்பித்திரியேல், தாய்மொழிபேண், தாயகம் காத்து நில், நன்றிமறவேல், நா நலம் நாடு, பணிவுடன்பழகு, மானம் போற்று ஆகிய தலைப்புகளிலமைந்த பதினைந்து கடிதங்களிலும் 'அறிவுடை நம்பி' என்ற தந்தையின் பெயரில் மகன் பாண்டியனுக்கு என எழுதியுள்ளார். ஒவ்வொரு கடிதத்தின் நிறைவிலும் கடிதச் செய்திக்குப் பொருத்தமான திருக்குறளை எடுத்தாண்டுள்ளார்.

'இளவரசனுக்கு' என்னும் நூலில் எனது கடமை, ஒற்றுமை வேண்டும், ஒழுக்கம் ஓம்பு, திருக்குற்றாலம் சென்று வந்தேன், கண்குளிரும் குற்றாலத்து அருவிகள், குற்றாலத்திற் பெற்ற இன்பம், பொறுத்தது போதும், பொருள் மாறி வரும் சொற்கள், சொற்றமிழ் பாடு, பைந்தமிழ்ப்

பின் சென்றவன், எது குறுகிய மனப்பான்மை?, பிறமொழிப் பயிற்சி எப்பொழுது?, மனம் வைத்தால் வழியா இல்லை?, கவிஞனாக விரும்புகிறாயா?, கவிதை படைப்பதெப்படி?, எது சரி என்னும் பதினேழு தலைப்புகளிலமைந்த கடிதங்களில் நிறைவில் தேதியைக் குறிப்பிட்டு 'உன் தந்தை முடியரசன்' என்று எழுதியுள்ளார். மேற்குறிப்பிட்ட கடிதவிலக்கியத்திற்கான அமைப்பு அன்புள்ள பாண்டியனுக்கு, இளவரசனுக்கு நூல்களில் பொருத்தமாக அமைந்துள்ளது.

**முடியரசனாரின் கட்டுரை இலக்கிய வடிவம்:**

சுருங்கிய வடிவில் நிறை பொருளையுணர்த்துவது கட்டுரையாகும். சுருக்கமும் பொருளாழமும் இயைந்திருத்தல் ஒரு சிறந்த கட்டுரையின் பண்பாகும். முடியரசனார் 'எப்படி வளரும் தமிழ்?' என்னும் நூலில் பதினான்கு கட்டுரைகளையும் 'பாடுங்குயில்கள்' நூலில் நான்கு கட்டுரைகளையும் 'சீர்திருத்தச் செம்மல் வை.சு.சண்முகனார்' என்னும் நூலில் எட்டுக் கட்டுரைகளையும் 'பாட்டுப் பறவையின் வாழ்க்கைப் பயணம்' என்னும் நூலில் 12 கட்டுரைகளையும் எழுதியுள்ளார்.

**தலைப்பு:**

'தலைப்பு, தொடக்கம், முடிவு, நன்னடை ஆகியன சிறந்த கட்டுரையின் கூறுகள்'[54] என்பர் இரா.மோகன்.

கட்டுரையின் தலைப்பு படிப்போரைச் சிந்திக்கவும் படிக்கவும் தூண்டுவதாக அமைதல் வேண்டும். அவ்வகையில் முடியரசனார் 'பாடுங்குயில்கள்' என்னும் கட்டுரை நூலில் இசைக்குயில் வேதநாயகர், மணிக்குயில் தேசிகவிநாயகம், விடுதலைக் குயில் பாரதியார், புரட்சிக்குயில் பாரதிதாசன் என்னும் தலைப்புகளில் கவிஞர்களைக் குயில்களின் வகைமையில் தலைப்பிட்டுக் காட்டியுள்ளார். கவிஞரது தன்வரலாற்றுக் கட்டுரைநூலின் பன்னிரு தலைப்புகளும் பறவைகளைத் தலைப்பாகக் கொண்டுள. 'எப்படி வளரும் தமிழ்?' என்னும் கட்டுரை நூலில் மகார் நோன்பு, ஒருமையா? ஒற்றுமையா?, கவிதை பிறந்தகதை, புலவர் உள்ளம் போன்ற தலைப்புகள் சிந்திக்கவும், படிக்கவும் தூண்டுகின்றன. அந்நூலில் அமைந்த

‘வேர்ப்பலா’ என்னும் கட்டுரைத் தலைப்பு யாரைக் குறிப்பிடுகிறது என்று அறியத் தூண்டுகிறது. ‘கோரிக்கையற்றுக் கிடக்குதண்ணே, இங்கு வேரில் பழுத்த பலா’ என்ற பாரதிதாசனாரின் கவிதையும் சு.சமுத்திரம் எழுதிய ‘வேரில் பழுத்த பலா’ என்னும் சாகித்திய அகாதெமி பரிசு பெற்ற நூலும் நினைவிற்கு வந்து செல்கின்றன. இவ்வாறு முடியரசனாரின் கட்டுரைத் தலைப்புகள் படிப்போருக்கு ஆர்வத்தைத் தூண்டுவதாய் உள்ளன.

**தொடக்கம்:**

கட்டுரையின் தொடக்கம் படிப்போரை ஈர்க்கும் தன்மையுடையதாய், தொடர்ந்து வாசிக்கத் தூண்டுவதாய் அமைய வேண்டும். “நல்ல தொடக்கம் பாதி வெற்றிக்குச் சமம்”[55] என்னும் ஆங்கிலப் பழமொழி இக்கூற்றை உறுதிப்படுத்துகிறது.

‘கவிதை பிறந்த கதை’ என்னும் தலைப்பிலான கட்டுரையின் தொடக்கத்தில் ‘குழந்தை எளிதாகப் பிறப்பதும் உண்டு, பெரும் வேதனைகளுக்கிடையே பிறப்பதும் உண்டு. அவ்வவர் உடல்நிலைக்கேற்ப அது நிகழும். கவிதை பிறப்பதும் அப்படித்தான் எளிதாகவும் பிறக்கும், இடர்ப்பாடுகள் தந்தும் பிறக்கும். அவ்வப்பொழுது ஏற்படும் மனநிலைக்கேற்ப அது பிறக்கும்’ (எ.வ.த.ப.25) என்று குழந்தைப் பிறப்போடு கவிதைப் பிறப்பை ஒப்பிட்டு கட்டுரையைத் தொடங்கும் விதம் படிக்காத பாமரருக்கும் எளிதாய்ப் புரியவைக்கும் வகையில் அமைந்துள்ளது.

**முடிவு :**

தொடக்கத்தைப் போலவே கட்டுரையின் முடிவும் இன்றியமையாததாகும். கட்டுரையின் முடிவு படித்த பின் உள்ளத்தைவிட்டு அகலாத வண்ணம் வாசகரின் எண்ணத்தில் ஆழப் பதிய வேண்டும்.

‘வேர்ப்பலா’ என்னும் கட்டுரையின் முடிவுப் பகுதியில் ‘எழுச்சி கொண்ட மாதர் துணிச்சல் கொண்டு கைம்மைத் துயர் துடைக்க வழி காண்பாராகுக’ (எ.வ.த.ப.84) என்று மகளிரின் துயர்துடைக்க ஆடவரோடு பெண்டிரும் முனைந்தெழ வேண்டுமென்று

எழுச்சியூட்டுகின்றார். கட்டுரையின் முடிவு படிக்கும் மாதருக்கு உணர்வெழுச்சியைத் தூண்டுவதாய் அமைந்துள்ளது.

**நன்னடை:**

"இலக்கிய உலகில் கவிஞராக அடையாளம் காணப்பெற்றவர்கள், கட்டுரைக் கலையில் ஆர்வமும் ஈடுபாடும் கொண்டு கட்டுரை படைக்க முற்படும்போது, அவர்களது படைப்புகளில் ஆங்காங்கே கவிதைப் பண்புகள் அல்லது கூறுகள் வெளிப்பட்டே தீரும்"[56] என்னும் கூற்று முடியரசனாரின் 'வேர்ப்பலா' என்னும் கட்டுரையில் நன்கு பொருந்துகிறது. பாவேந்தரின் வேர்ப்பலா கவிதைகுறித்து, 'ஏ, குமுகாயமே! கைம்பெண்களின் நிலையைக் கண்விழித்துப் பார்! வேரிலே பழுத்துக் கிடக்கும் இனிய பலாக்கனி வேண்டுவார் அற்று வீணே கிடப்பதைப் பார்! குளிர்ச்சி நிறைந்த முழுநிலவு கொடியதென எண்ணப்படுவதைப்பார்! என்னும் கூற்று துயரந் தோய்ந்த இளகிய நெஞ்சிலிருந்து பொங்கி வெளிப்படும் நெட்டுயிர்ப்பு நம் செவியில் விழுகிறது.தென்றல் உலவும் பூஞ்சோலை சீரற்றுக் கிடக்கிறது. நறிய பூ மாலை சீ என்றிகழப்படுகிறது. நல்ல கனி நாடத்தகாதது என்றொதுக்கப்படுகிறது. எழில் வீணையின் இசை நஞ்சென்று வெறுக்கப்படுகிறது. பொன்முடி, சூடப்படாமல் மண்ணிற் கிடக்கிறது. தேன் நிறைந்த பொற்குடம் தொடத் தகாததென்று கூறப்படுகிறது' (எ.வ.த.ப.81) என்று கைம்பெண் நிலையைக் கூறுமிடத்து கவிஞரின் கவிநடை நன்னடையாய்க் கட்டுரை வடிவத்தில் எழில்நலம் பெறுகிறது.

**தொகுப்புரை:**

- 20-ஆம் நூற்றாண்டு இலக்கிய வடிவங்களில் கவிதை, நாடகம், சிறுகதை, கடிதம், கட்டுரை போன்ற பெரும்பாலான வடிவங்களில் முடியரசனார் தம் படைப்புகளை உருவாக்கியுள்ளார்.
- அனைத்துவகைப் பாக்களும் புனையும் வல்லமையுடைய முடியரசனார் விருத்தப்பாவை மிகுதியாக (2608 பாக்கள்) இயற்றியுள்ளார்.
- புதருள்கனி, வேண்டுவன என்னும் கவிதைகள் வேறுயாரும் பாடாத எண்சீர் யாப்பு வடிவத்தில் அமைந்துள.
- இயற்கையை உள்ளடக்கமாகக் கொண்ட கவிதைகளைப் பாட விருத்தப்பா யாப்பினையே மிகுதியாகப் பயன்படுத்தியுள்ளார்.
- இயற்கை பற்றிப் பாடுவதற்கு அறுசீர் விருத்தங்களைக் கையாண்ட முடியரசனார் அதனை காய் காய் காய் காய் மா மா என்னும் வாய்பாட்டில் அமைத்துள்ளார். மேலும் இயற்கை, காதல், மொழியுணர்வு போன்ற பாடுபொருளை விளக்க எண்சீர் விருத்த யாப்பினைக் கையாண்டு காய் காய் மா தேமா, காய், காய் மா தேமா என்னும் சீர் வரிசை அடுக்கில் பாடியுள்ளார்.
- குமுகாயம் பற்றிய உள்ளடக்கக் கவிதைகளில் கலிவெண்பாவினை மிகுதியாகப் பயன்படுத்தியுள்ளார். கலிவெண்பாக்கள் அனைத்தும் இன்னிசைக் கலிவெண்பா வகையிலேயே இயற்றப்பட்டுள்ளன.
- அடி அளவில் நிலைமண்டில ஆசிரியப்பா யாப்பில் 8292 அடிகளும், அதற்கடுத்த நிலையில் கலிவெண்பா யாப்பில் 4875 அடிகளும் மிகுதியாகப் பாடப்பெற்றுள.
- விருத்தப் பாக்களில் எண்சீர் விருத்தம் மிகுதியாகவும், அறுசீர் விருத்தம், எழுசீர் விருத்தம், பன்னிரு சீர் விருத்தம், பதினான்கு சீர் விருத்தம், பதினாறு சீர் விருத்தம் ஆகியவை அடுத்தடுத்த நிலைகளிலும் பயன்படுத்தப்பட்டுள.

- முடியரசனார் காப்பியம் பாடுவதற்கும் காப்பிய நூல்களில் குறிப்பிடப்படும் பாத்திரங்களைக் கருவாய்க் கொண்டு பாடும் நெடுங்கவிதைகளுக்கும் நிலைமண்டில ஆசிரிய யாப்பைக் கையாண்டுள்ளார்.
- இசைப்பாடல்களில் பல்லவி, அநுபல்லவி, சரணம் போன்ற சொற்களை மாற்றித் தூயதமிழில் எடுப்பு, தொடுப்பு, முடிப்பு என்று பெயர்களிட்டு இசைப் பாடல்களை இயற்றியுள்ளார்.
- வஞ்சிப் பா யாப்பில் முடியரசனாரது கவிதை அமையப்பெறவில்லை. மரபு மாறாமல் இலக்கணத்தை இகழாமல், உயரிய இனிய அழகிய ஒண்டமிழ்ச் சொற்களால் நற்கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு கவிதைகள் பாடுவதே முடியரசனாரின் இலக்கிய வடிவக் கொள்கையாக உள்ளது.
- முடியரசனாரின் இளம்பெருவழுதி நாடகம் வாழ்த்துடன் தொடங்கி கதை மாந்தர் அறிமுகம், கதை நிகழும் இடம், காலம், பின்னணி ஆகியன குறித்து ஒவ்வொரு காட்சியிலும் விளக்கி உரைக்கின்றது. பாத்திரங்களின் மெய்ப்பாடு, இயக்கம், மேடை நெறிக்குறிப்புகள் போன்றவை தகுந்த இடங்களில் கையாளப் பெற்றுள.
- ‘எக்கோவில் காதல்’ சிறுகதைத் தொகுப்பிலுள்ள பதினொரு சிறுகதைகளும் நல்ல தொடக்கம், கதையை வளர்த்துச் செல்லும் கதைப்பின்னல், உச்சம், வீழ்ச்சி, முடிவு என்னும் அடிப்படையில் சிறுகதைக்குரிய வடிவ இலக்கணத்தைப் பெற்றுள்ளன.
- ஐந்து சிறுகதைகள் இன்பியல் முடிவுகளையும், ஆறு சிறுகதைகள் துன்பியல் முடிவுகளையும் கொண்டுள்ளன.
- முடியரசனாரின் 32 கடிதங்களும் தலைப்பு, கொளு, விளி, செய்தி, உறவுத்தொடர்மொழி, கையொப்பம் எனக் கடிதத்திற்குரிய அத்துணை வடிவமைப்பையும் பெற்றுள்ளன.

- கட்டுரைகள் சுருக்கமும், பொருளாழமும் கொண்டு தலைப்பு, தொடக்கம், முடிவு, நன்னடை ஆகிய கட்டுரையின் கூறுகளைப் பெற்று கவிதைப் பண்புகள் வெளிப்படுமாறு அமைந்துள்ளமை சுட்டுதற்குரியது.

**சான்றெண் விளக்கம்:**


1. முனைவர் ச.வே.சுப்பிரமணியன் (பதி.) தமிழ்நிகண்டுகள் - தொகுதி-1, ப.152
2. மேலது, ப.338
3. செந்தமிழ்ச்சொற்பிறப்பியல் பேரகர முதலி, முதல் பாகம், ப.181
4. நா.கதிரைவேற்பிள்ளை, தமிழ்மொழியகராதி, ப.1230
5. க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.895
6. ந.பிச்சமுத்து, திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கைகளும், ப.2
7. பி.கோதண்டராமன், எழுத்தாளர் தர்மம், ப.75
8. பேரா.அ.ச.ஞானசம்பந்தன், இலக்கியக்கலை, ப.44
9. நா.பார்த்தசாரதி, கவிதைக்கலை, ப-67
10. பேரா.டாக்டர்.ந.சுப்புரெட்டியார், இலக்கிய வகையின் வளர்ச்சியும், இக்கால இலக்கியங்களும், ப.46
11. புலவர் குழந்தை, யாப்பதிகாரம், முன்னுரை, ப.iii
12. நாவலர் ந.மு.வேங்கடசாமி நாட்டார், ஆய்வுக்கட்டுரைகள், ப.344
13. முனைவர் ச.அகத்தியலிங்கம், தொல்காப்பிய இலக்கியக் கோட்பாடுகள், கருத்தரங்கச்சிறப்புரை, ப.vii
14. தொல்காப்பியம், செய்யுளியல் நூற்பா, 74.
15. மேலது, நூற்பா, 75.
16. ” 104.
17. முனைவர் தமிழண்ணல், தொல்காப்பியர், பக்.96-97
18. டாக்டர் ந.சஞ்சீவி, இலக்கிய இயல், ப.116.
19. பேரா.முனைவர் பாக்கியமேரி, வகைமை நோக்கில் தமிழ்இலக்கியவரலாறு, ப.203
20. முனைவர் சோ.ந.கந்தசாமி, தமிழ் யாப்பியலின் தோற்றமும் வளர்ச்சியும், முதற்பாகம் - இரண்டாம்பகுதி, ப.136
21. ந.பிச்சமுத்து, திறனாய்வும் தமிழிலக்கியக் கொள்கைகளும், ப.186
22. தலையங்கம், தினமணி (05.12.1998), ப.6
23. பின்னிணைப்பு, ப.1
24. ந.வீ.செயராமன், யாப்பியல் திறனாய்வு, ப.101
25. பின்னிணைப்பு, ப.1
26. மேலது, ப.1
27. அ.கி.பரந்தாமனார், கவிஞராக, ப.214
28. பின்னிணைப்பு, ப.1
29. அ.கி.பரந்தாமனார், கவிஞராக, பக்.224 -225

30. பின்னிணைப்பு, ப.1
31. அ.கி.பரந்தாமனார், கவிஞராக, பக்.255-256
32. பின்னிணைப்பு. ப.1
33. யாப்பருங்கலம், காரிகை, 298
34. பின்னிணைப்பு. ப.1
35. மேலது, ப.1
36. அ.கி.பரந்தாமனார், கவிஞராக ப.263
37. யாப்பருங்கலம், காரிகை,
37. பின்னிணைப்பு, ப.1
38. மேலது, ப.1
39. அ.கி.பரந்தாமனார் பக்.224-225
40. பின்னிணைப்பு, ப.1
41. மேலது, ப.1
42. ”
43. ”
44. ”
45. முனைவர்.பெ.சுயம்பு, தமிழ் இலக்கிய அறிமுகம், ப.154
46. Dr.K.V.Dakshayani, The metres in Kambaramayanam. Pg.139-141
47. பேரா.ந.சுப்பு ரெட்டியார், இலக்கிய வகையின் வளர்ச்சியும், இக்கால இலக்கியங்களும், ப.80
48. பின்னிணைப்பு, ப.1
49. தேவாரம், 3211
50. தொல்காப்பியம், 1999
51. மு.வரதராசனார், இலக்கியமரபு, ப.72
52. W.H.Hudson, An Introduction to the Study of Literature, P.337 (we may say that a short story is a story that can be easily read at a single sitting.)
53. முனைவர் பாக்யமேரி, வகைமை நோக்கில் தமிழிலக்கிய வரலாறு, ப.491.
54. இரா.மோகன், தமிழ்க்கட்டுரைக்களஞ்சியம், ப.11
55. The New Dictionary of Cultural Literacy, P.57 ( Well begun is half done definition-A good beginning almost assures success.)
56. இரா.மோகன், தமிழ்க்கட்டுரைக்களஞ்சியம், ப.25

## முடியரசனாரின் உள்ளடக்கக் கொள்கை

இலக்கியப் படைப்பாளன் தன் உணர்வுகளுக்கு முக்கியத்துவம் அளித்து இலக்கியத்தைப் படைக்கின்றான். எனினும் அவ்வுணர்வுகளுக்கெல்லாம் மையமான, உயிர்ப்பான ஒருகருத்தோ அல்லது சிந்தனையோ இருப்பது இயற்கையே. அக்கருத்தையோ அல்லது சிந்தனையையோ உலகறிய வெளிப்படுத்தும்போது மிகச் சுவையான கலையாக அது மிளிர்கின்றது. ஒரு சிறந்த இலக்கியத்திற்கு அதன் உருவத்திற்கும் உள்ளடக்கத்திற்குமுள்ள ஒருமைப்பாடு என்பது மிகவும் இன்றியமையாதது.

இலக்கிய வகைமையைத் தீர்மானிப்பதில் யாப்பைப் போன்றே உள்ளடக்கமும் முக்கிய இடம் பெறுகின்றது. காலந்தோறும் இலக்கிய வகைமையில் யாப்பு வடிவம் வேறுபடுவதைப் போல உள்ளடக்கமும் மாறுபடுகின்றது. அவ்வகையில் முடியரசனாரின் கவிதைகள் உணர்த்தும் உள்ளடக்கம் குறித்து இவ்வியல் ஆராய்கின்றது.

**முடியரசனாரின் பாடுபொருள்:-**

“எந்த ஒரு கவிதைக்கும் பாடுபொருள் உண்டு. கவிதை பற்றி ஆராய்கின்ற பலரும் கவிதையின் பாடுபொருள் பற்றியும் அதன் உருவம் பற்றியும் பேசி வந்திருத்தல் காணலாம். இவ்விரண்டும் ஒன்றி உறவாடும் நிலையிலேயே சிறந்த கவிதைகள் உருவாகின்றன”[1] என்பர்.

“ஒரு கவிதையின் வெற்றி, உருவத்தில் இல்லை. உணர்த்தும் முறையிலேயே உள்ளது”[2] என்பர் க.ப.அறவாணன்.

படைப்பாளனின் பாடுபொருள் அவன் வாழுகின்ற சமூகம், அரசியல், பொருளாதாரக் காரணிகளை அடிப்படையாகக்கொண்டு அமைகின்றது.

முடியரசனார் படைப்புகளில் இயற்கை, காதல், தமிழ்ப்பற்று, குமுகாய மேம்பாடு, தொழிலாளர் நலன், சாதி சமய வெறுப்பு, கடவுள் மறுப்பு, கல்விச்சீர்திருத்தம் போன்றவை பாடுபொருள்களாக அமைந்துள.

**இயற்கை:**

இயற்கை குறித்து, “பண்டைத் தமிழ்ச் சான்றோர் தம் கவிதைகளில் இயற்கையைத் தனியொரு பொருளாகக் கருதிப் பாடினாரல்லர். காதல், வீரம் என்பனவற்றைத் தலைமைக்

கூறுகளாகக் கொண்டு பிற பல கூறுகளையும் துணையாகப் பெற்றுள்ளது மனித வாழ்க்கை. மனித வாழ்க்கையின் பல்வேறு கூறுகளையும் வருணித்துத் தெளிவுபடுத்துவதற்காகவே பண்டைத் தமிழ்ச் சான்றோர் இயற்கையைப் பயன்படுத்தினர். சுருங்கச் சொன்னால் மனித இதயத்தின் உணர்வுகளையும் இயற்கையின் கவர்ச்சி நிறைந்த எழிலையும் நெருங்கிய பிணைப்புடையனவாய், இனிய உறவுடையனவாய் இணைத்தனர்"[3] என்று குறிப்பிடுவர் மு.வரதராசனார்.

கவிஞன், இயற்கையிடம் தான் பெற்ற உள்ள மகிழ்வை தன் படைப்பில் வெளிப்படுத்த விரும்புவான். இதனால் சாதாரண மனிதனின் பார்வைக்கு இயல்பாகத் தெரிகின்ற இயற்கை கவிஞனின் பார்வைக்கு இன்பம் ஊற்றெடுக்கும் அமுதசுரபியாக மாறி விடுகின்றது.

சங்க காலம் தொட்டு இற்றைக் காலம் வரைக்கும் கவிதைகளில் இயற்கைக்குத் தனி முக்கியத்துவம் உண்டு. எல்லாக்காலத்து மனித இதயத்தையும் கவர்ந்து தன் வயப்படுத்தும் ஆற்றல் இயற்கைக்கு உண்டு. கவியரசர் முடியரசனார் இயற்கையைத் தாயாக உருவகித்துப் பாடும் பாடல் இயற்கையின் மீது கவிஞருக்கு இருக்கும் அளப்பரிய அன்பிற்குச் சான்றாக விளங்குகின்றது.

இயற்கையின் சிறப்பை 'இயற்கைத் தாய் தென்றலென்னும் தொட்டிலில் தன்னைக் கிடத்தி, தமிழ்பாடும் வண்டொலியால் தாலாட்டுப் பாடிடுவாள். பாதி உறக்கத்தில் எழுந்து அழுதால் ஆறு, குன்று, அருவி, கடல், மலர் ஆகியவற்றை வேடிக்கை காட்டிக் கொஞ்சிடுவாள். அதிகாலையில் இருள் கதவைத் திறந்து, சினத்தால் முகம் சிவந்து கதிர்க்கரத்தால் உறக்கத்திலிருந்து எழுப்புவாள். ஆறு என்னும் கைநீட்டிக் குளிக்க அழைப்பாள். மௌனமாயிருந்தால் இடியொலியால் அதட்டி மழைத்துளியால் நனைத்து, மின்னலாய்ச் சிரிப்பாள். குளிர் மிகுந்து நடுக்கமுற்றால் ஞாயிறு என்னும் ஒளி நெருப்பைக் கொணர்ந்திடுவாள். குளிர்காய்ந்த பிறகு மலர்க்காட்டிற்குள் ஓடியோடி மலர்களின் நறுமணத்தை வாரிவந்து உடலில் பூசிடுவாள்'.

‘விண் அரங்கத்தில் கரு மேகமாம் திரை நீக்கி, விதவிதமான வானம்பாடிகள் பண்ணிசைக்க, விண்மீன் என்னும் பெண்கள் கண்சிமிட்டி உடன் ஆட, நிலவுப் பெண் நடனமாட மண்ணிலுள்ள மக்களெல்லோரையும் மகிழ வைப்பாள். வளைந்துள்ள வெண்ணிறத்துப் பிறை நிலவை வானத்தில் கப்பலாக்கி மேக அலைகளினிடையே தவழ்ந்தோடச் செய்வாள். கதிரவனைப் பந்தாக்கி விளையாட எனக்களிப்பாள். கடற்கரையில் அலைகளால் ஓடிப்பிடித்து விளையாட வைப்பாள். மலையில் தங்கும் இயற்கைத்தாய் மண்ணில் மக்கள் பசித்திருப்பரென்று மனம் வருந்த ஆறாகிக் கீழிறங்கி வயலில் பாய்ந்து நெற்கதிர் கையால் உணவூட்டிப் பசி களைந்திடுவாள்’ என்று பாடுவர். (முடி.க.பக்.40-42)

**வானம்:-**

வானம் வழங்கும் வனப்பு மிகுந்த காட்சிகளை முடியரசனார் ‘குறைந்த மதியர் புகழ் மிக விரைவில் குறைந்துவிடுமென்று பிறைநிலவு வானத்தில் கூத்தாடி மறைந்து எடுத்துக் காட்டும். மதியுடையார் பேசுவதைக் கேட்டால் நல்ல மாண்பு வரும் என்று விண்மீன் கூட்டம் குழுமும். வானத்து மேடையில் நிலவு சொற்பொழிய, மேகம் ஓடி ஒளி மறைத்து இடியிடித்து குழப்பமேற்படுத்தும். அதற்காக நிலவு நாளை மேடையேறாமல் இருக்குமோ? என்றும் நிலவு, கதிரவனைக் கூடி நலம் நுகரும் பஞ்சணையாக வானம் உள்ளது; வானம் வம்படித்து விளையாடித் திரியும் கதிரவன் என்ற சேய்க்குத் தாயாக விளங்குகிறது.’ (முடி.க.ப.47) என்று வானத்தை, அழகுறக் காட்சிப்படுத்துவர்.

‘முகிலால் முகம் மூடி நிலவோடும் வானம்’ (கா.பா.ப.92) ‘மனம் மகிழுகின்ற பலவகை நிறத்துடன் மாலை நேரம் தோன்றும் வானம்’ (கா.பா.ப.98) ‘எழில்மிகு இயற்கை மங்கையின் மேனி மாலை நேரத்தில் மேற்கு திசையில் மினுக்கிடும் வான்’ (பா.கு.ப.231) என்று வானத்தை வருணிக்கிறார்.

அகன்ற வானம் தனக்குப் புதிய கதை பலவும் சொல்ல இணை கூற முடியாத உலகு சென்றதாகக் களிகூறுகிறார். (நெ.பூ.ப.256)

கதிரவன் மாலை வேளையில் வண்ணங்கள் பலவற்றை வானில் பூசிய காட்சியைக் கண்டவாறே எண்ணங்கள் சுழன்றாடக் கவிஞர் நடந்து செல்வது அவருக்கு வழக்கமாக இருந்துள்ளது. (ம.தே.ப.112)

கவிஞர் மாலை நேர வானத்தைக் கண்டு மனம் மயங்கியது போலவே, அதிகாலையில் கீழ்வானில் கண்கவரும் எழிலோடு கதிர்க்கரம் நீட்டிச் செவ்வொளியால் கோலம் செய்யும் வானின் காட்சியிலும் தம்உள்ளத்தைப் பறிகொடுத்ததாகப் பாடுகிறார். (வீ.கா.29:120)

**ஞாயிறு :-**

காலை வேளையில் இளங்கதிரோன் தோன்றுகின்ற காட்சியைக் கவிஞர்,

**"செம்மை எனும் நிறத்தைச் செந்தழலிற் போட்டுருக்கி**
**வெம்மை தணித்து வெளிவானக் கீழ்த்திசையில்**
**பூசி மெருகிட்டுப் பொங்கும் எழில்பரப்பித்**
**தேசு மிகவாகச் செந்நிறத்தை மேற்பாய்ச்சித்**
**தங்கத் தகடொன்று தன்னந் தனியாகப்**
**பொங்குங் கடலகத்துப் பூத்துக் கிளம்புதல்போல்**
**தோன்றும் இளங்கதிரோன் தொல்லுலகில் பொன்னொளியை**
**கான்று தகதகக்கக் கண்களிக்கச் செய்து நின்றான்**
**ஓய்ந்திருந்த இந்த உலகத்தை வாழ்விக்கப்**
**பாய்ந்துவரும் அந்தப் பகலவனைச் சூரியனைப்**
**போற்றி வணங்குதற்கும் பூவெடுத்துத் தூவுதற்கும்**
**ஏற்ற இருகைகள் இல்லா திருக்கின்றோம்" (வ.கோ.ப.13)**

என்று பாடுவர்.

ஞாயிற்றின் பல்வேறு இயல்புகளை முடியரசனார்,

**"வெயிலவன் போல வெண்முகம் சிவந்தது" (முடி.க.ப.26)**
**"வானை மினுக்கி மறைவுறுங் கதிரென"(முடி.க.ப.33)**
**"ஞாயிறென்னும் ஒளி நெருப்பு" (முடி.க.ப.41)**
**"இருட்புலத்தைப் பிளந்தெழும்பும் கதிரவன்" (முடி.க.ப.42)**
**"கடலிடையே எழும் பரிதி" (முடி.க.ப.182)**
**"மயல் இரிந் தோட வருமிள ஞாயிறாய்" (முடி.க.ப.187)**
**"மாலைக் கதிரோன் மனம் மயங்கப் பாய்ச்சியதால்" (முடி.க.ப.251)**

**“வேலையில் ஆதவன் மெல்லவே மறைந்திட” (கா.பா.ப.98)**

**“கண்ணழகன் சேயோன் கதிர்க்கையால்” (த.மு.ப.181)**

**“பேரொளியை வீசுதற்குப் பகலோன் வந்தான்” (ம.தே.ப.135)**

**“சூடெடுத்த வெங்கதிரோன் சுட்டெரிக்குங் காரணத்தால்”(பு.வி.செ.ப.108)**

**“செங்கதிரோன் தோன்றக் கண்டேன்” (பு.வி.செ.ப.157)**

**“தோன்றும் இளங்கதிரோன்” (வ.கோ.ப.13)**

**“நெடுங்கடலாம் எழிற்பாயல் நீங்கி வெய்யோன்” (வீ.கா.14:49)**

**“கருத்ததனிற் செய்யவனும் நினைத்தான் போல” (வீ.கா.25:97)**

எனப்பாடுவர். இதில் ஞாயிறுக்குக் கதிர், வெயிலவன், ஞாயிறு, கதிரவன், இளஞாயிறு, பரிதி, கதிரோன், ஆதவன், சேயோன், பகலோன், வெங்கதிரோன், செங்கதிரோன், இளங்கதிரோன், வெய்யோன், செய்யவன் எனப் பல பெயர்கள் சூட்டுகின்றார். மேலும் இளஞாயிறு, காலைக் கதிரவன், ஞாயிறு போற்றுதும், காஞ்சிக் கதிரவன் எனக் கவிதைகளுக்கும் ஞாயிற்றின் பெயரால் தலைப்பிட்டுள்ளமை அவர் தம் ஞாயிற்றுக்காதலைப் புலப்படுத்தும்.

சங்க இலக்கியங்களில் சான்றோரை ஞாயிற்றுக்கு ஒப்புமையாக்கிப் பாடும் பாடல்கள் உண்டு. மரபு போற்றும் முடியரசனாரும் சான்றோர்களுக்கும் தலைவர்களுக்கும் கதிரவனையே அதிகம் ஒப்புமைப்படுத்திப் பாடியுள்ளார். இயேசு நாதரைப் பற்றி ‘இளஞாயிறு’ என்னும் பாடலில்,

**“துயருறுங் காலை சுடரொளி பரப்பி**
**மயல்இரிந் தோட வருமிள ஞாயிறாய்த்**
**தோன்றினை ஏசெனும் தோன்றலே!” (முடி.க.ப.187)**

என்றும் மகாத்மா காந்தியடிகளை,

**“போர்பந்தர் என்னுமொரு பொற்புடைய பேர்தாங்கும்**
**ஊர்தந்த ஞாயிறென ஓர்மகன் தோன்றினன்காண்” (த.மு.ப.219)**

என்றும் மறைமலையடிகளாரை,

**“இடமகல் நாகை எனும்பெயர்ப் பட்டினத்**
**தெழுந்ததோர் ஞாயிறு கரைந்தது வெண்பனி” (தா.மொ.கா.ப.89)**

என்றும் பாவேந்தா் பாரதிதாசனை,

**“நிறைவான தமிழ்வாழ்வு மிளிர வேண்டி**
**நீள்துயிலை நீக்கஎழும் கதிரோன் போல்வான்” (த.மு.ப.205)**

என்றும் சான்றோர்களின் தோற்றத்தைக் கதிரவனின் எழுச்சியோடு கவிஞா் ஒப்புமைப்படுத்திப் பாடியுள்ளார்.

தான் சார்ந்திருந்த இயக்கத் தலைவா்களையும் கதிரவனின் சாயலாகவே கவிஞா் காணுகின்றார். தந்தை பெரியாரை,

**“காரோட்டும் பெருவளிபோல் உலகைப் பற்றும்**
**காரிருளை ஓட்டுகிற பகல வன்போல்**
**ஈரோட்டில் வந்துதித்த பெரியார்”(ஞா.தி,ப.125)**

என்றும் அறிஞா் அண்ணாவை,

**“அடிமை எனும் இருளகற்ற வந்த காஞ்சி**
**அறிஞனொரு செம்பரிதி” (ஞா.தி.ப.151)** என்றும்,

கலைஞா் மு.கருணாநிதியை,

**“குளிர்புனற் பொய்கையுள் குளித்தெழுந் ததுபோல்**
**ஒளிபடர் கதிரென உய்ந்திவண் வந்தும்” (பு.வி.செ.ப.187)**

என்றும் பாடியுள்ளார்.

தந்தை பெரியாரை ஞாயிறாகவும் அறிஞா் அண்ணாவைத் திங்களாகவும் உருவகப்படுத்தி முடியரசனார் இயற்றிய கவிதை நூல் ‘ஞாயிறும் திங்களும்’ என்பதாகும். இதில் அண்ணாவைத் திங்களென்று தலைப்பில் சுட்டியிருந்தாலும் அந்நூலின் பலவிடங்களில் தன்னையும் மீறிக் கதிரவனாகவே சுட்டுகின்றார். இதற்கு, ‘காஞ்சிக் கதிரவன்’ என்ற தலைப்பிலான கவிதை சிறந்த சான்றாகும். அக்கவிதையின் நிறைவில்,

**“பகுத்தறிவுப் பெருங்கடலுள் முளைத்து வந்த**
**பகலவனை, அறியாமை இருட்க ணத்தைச்**
**செகுத்தொழிக்கும் பரிதிதனை, துயிலை நீக்கச்**
**சிவந்தெழுந்த சூரியனை, அரசியல்வான்**
**தகதகக்கப் பண்பொளியைப் பாய்ச்சி எங்கள்**

**தமிழ் செழிக்கக் கிளர்ந்தெழுந்த செஞ்ஞாயிற்றை**
**உகப்புடனே தமிழரினம் மலர்ந்து தோன்ற**
**உதித்தெழுந்த கதிரவனை வாழ்த்து கின்றேன்" (ஞா.தி.ப.152)**

என்பதில் பகலவன், பரிதி, சூரியன், ஞாயிறு, கதிரவன் என்று கதிரவனின் பல்வேறு பெயர்களைக் கொண்டு அண்ணாவைப் போற்றி வாழ்த்துகின்றார்.

தான் சார்ந்திருந்த திராவிட முன்னேற்றக் கழகத்தின் சின்னமென்பதால் இயல்பாகவே கதிரவனைத் தனித்துவமாய் உயர்வுபடுத்தியும் முதன்மைப்படுத்தியும் பாடியுள்ளார். 'எனது உலகம்' என்னும் தலைப்பிலான கவிதையில்,

**"மடம்படு சாதிகள் தொலையும் - அங்கு**
**மதமெனும் போர்வைகள் கலையும்**
**கடவுளின் கதைகளும் விலகும் - செம்மைக்**
**கதிரவன் ஒளிதரப் பொலியும்" (பா.கு.ப.224)**

என்று பாடுவர். கதிரவன் உதித்தெழும் காட்சியை,

**"கருநீலங் குழைத்தெடுத்துக் கரைத்து ஞாலம்**
**கண்ணுக்குப் புலனாகா வண்ணம் பூசிப்**
**பொருள்யாவும் மறைத்ததுபோல் உலகில் யாண்டும்**
**புகுந்ததனை விழுங்கிவரும் இருளின் கூட்டம்**
**மருளோடு வெருண்டோடச் செய்து கீழை**
**வான்வெளியைச் சிவப்பாக்கிப் புதிய ஆட்சி**
**உருவாக்கி விழித்தெழுந்தோர் நெஞ்ச மெல்லாம்**
**உவப்பாக்கிச் செங்கதிரோன் தோன்றக் கண்டேன்"**

**(பு.வி.செ.ப.157)**

என்று பாடுவர்.

காலைக் கதிரவனின் தோற்றத்தை 'எக்கோவின் காதல்' என்னும் சிறுகதையில் 'மக்கள் உரிமைக்குப் போரிட்டு இரத்தந் தோய்ந்த உடலுடன் தோன்றும் வீரனைப் போலக் காட்சியளித்தது' என்று (எ.கா.ப.118) உவமிப்பர். கவிஞருக்குப் பார்க்கும் இடமெல்லாம் பகலவனாகத் தெரிதல் சுட்டத்தக்கது.

**நிலவு:**

ஞாயிறு தரும் கவர்ச்சியினும் புலவர்க்குத் திங்கள் தரும் கவர்ச்சி அதிகம். முடியரசனாரும் நிலவின் அழகைப் பல்வேறு கவிதைகளில் படம் பிடித்துக் காட்டுகிறார்.

**"வயங்கித் திகழுமெழில் வட்ட முழுமதியம்" (பு.வி.செ.ப.108)**

**"................... இரவெனும்**
**ஓவியன், மாதர் ஒளிமுகந் தீட்ட**
**நீல வான நெடுந்திரை தன்னில்**
**கோல வட்டம் குறித்தனன் அதனை**
**ஞாலம் நிலவென நவின்று மகிழ்ந்தது' (பூ.கொ.6:4-8)**

**'மேகத் திரைக்குள்ளே மேனி மறைத்தாலும்**
**வேகத் தொடுமீண்டும் விண்ணில் உலவிவந்து**
**வட்ட எழில் முகத்தை வந்துவந்து காட்டிநலம்**
**கொட்டுங் குளிர்மதியைக் கோதில்லா வெண்ணிலவை" (வ.கோ.ப.14)**

என்று முழுமதியின் அழகைக் கவிஞர் வருணித்துள்ளார். நிலவைப் பெண்ணாக உருவகித்துப் பாடும் பண்டைத் தமிழ் மரபின் வழிநின்று,

**"முழு நிலவுக் காரிகையும் நடனம் ஆட" (முடி.க.ப.42)**
**"மென்னடையில் நிலவுப்பெண் ஊர்ந்து செல்ல" (முடி.க.ப.44)**
**"நிலவணங்கே! உனைக் கதிரோன் கூடுங் காலை" (முடி.க.ப.47)**

**"வெள்ளை நிலாமகட் கன்னி உலாவரும்**
**வீதியில் எத்தனை கோலமடி!" (பா.கு.ப.155)**

என்று நிலவைப் பெண்ணாக உருவகித்துப் பாடியுள்ளார். நற்றிணையில் தலைவன் தலைவியை நிலவாக உருவகித்துப் பாடுகின்ற,

**"குன்றுஊர் மதியம் நோக்கி நின்று நினைந்து**
**உள்ளினென் அல்லெனோ யானே - முள்ளெயிற்றுத்**
**திலகம் தைஇய தேங்கமழ் திருநுதல்**
**எமதும் உண்டு ஓர்மதிநாள் திங்கள்"[4]**

என்னும் பாடல் இங்கு ஒப்புநோக்குதற்குரியது.

கவிஞரின் பார்வையில் ‘நிலவு’ பெண்ணாக மட்டுமன்றிக் களவொழுக்கத் தலைவனாக, வீரனாக, திருடனாகவும் காட்சியளிக்கிறது (முடி.க.பக்.47-48)

**“ஆரியத்தால் ஒளியிழந்த தமிழர் போலே**
**அழகிழந்தாய் உனையடைந்த மேகத் தாலே;**
**நாரியரின் முகங்கண்டு நாணி உள்ளே**
**நண்ணினைநீ எனஎண்ணி நகைத்தாள் முல்லை;**
**வேறினத்தார் நாடாள வீணன் அல்லேன்**
**வேலெடுத்துப் போர்தொடுப்பேன் வெற்றிகொள்வேன்**
**சீரழிப்பேன் எனக்கிளம்பும் வீரன்போலச்**
**சிரித்தெழுந்தாய் மேகத்தைப் பிளந்து மேலே” (முடி.க.ப.67)**

என்னும் பாடலில் நிலவை மேகத்தைப் பிளந்து எழும்புகின்ற வீரனாகக் காட்சிப்படுத்துகிறார்.

நிறைமதி, குறைமதி என்ற நிலவின் இரு தன்மையை,

**“நிறைமதியர் நிலவுலகம் நிலைக்குங் காறும்**
**நீள்புகழால் ஒளிபரப்பு வார்இவ் வுண்மை**
**நிறைமதியம் இரவிங்கு நிற்குங் காறும்**
**நெடுங்கதிரால் ஒளிபரப்பிக் காட்டும்; மேலும்**
**குறைமதியர் புகழெல்லாம் வெளிப்ப கட்டாய்க்**
**குறைந்துவிடும் மிகவிரைவில் என்ற உண்மை**

**குறைமதியம் சிறுநேரம் பகட்டி வானிற்**
**கூத்தாடி மறைந்துநமக் கெடுத்துக் காட்டும்” (முடி.க.ப.47)**

என்று மனிதர்களின் இயல்போடு ஒப்புமைப்படுத்திக் காட்டுவது குறிப்பிடத்தக்கது.

**விண்மீன்:**

விண்மீன்களைக் கவிஞர் உடுக்கை, மீனினம், மீனத்துக் குழு என்று பல்வேறு பெயர்களால் குறிப்பிடுகிறார்.

**“.........................ஒளிவீசிப் புடைசூழும்**
**பல்வகையாம் மீனப் பெண்கள்**
**கண்சிமிட்டி உடனாட” (முடி.க.ப.42)**

**“விண்பரப்பில் மீன்நடுவே ஒளியைக் கான்று” (முடி.க.ப.44)**

**“மதியுடையார் பேசுவதைக் கேட்டல் நன்று**

**மாண்புவரும் எனக்குழுமும் விண்மீன் கூட்டம்” (முடி.க.ப.47)**

**“வானகப் பள்ளியில் மாணவக் குழுவென**

**மீனினம் ஆங்காங்கு மிடைந்து விளங்கிட” (பூ.கொ.22:41-42)**

என்று நிலவுக்குத் துணையாய்ச் சுற்றி நிற்கும் விண்மீன் கூட்டங்களை வெவ்வேறு கோணங்களில் காட்சிப் படிமங்களாக்கிக் காட்டுகிறார்.

தலைவியைச் சுற்றி நிற்கும் தோழியராகவும் பேச்சாளரைச்சுற்றி நிற்கும் பார்வையாளர்களாகவும் ஆசிரியரைச் சுற்றி நிற்கும் மாணவர்களாகவும் அரசனைச் சுற்றியிருக்கும் குடிமக்களாகவும் படைத்தலைவனைச் சுற்றி நிற்கும் படை வீரர்களாகவும் நிலவையும் அதனைச் சுற்றிக் குழுமியிருக்கும் வீண்மீன்களையும் பல்வேறு விதமாய்க் காட்சிப்படுத்துகிறார்.

“ஒரு மரபுக்கவிஞன் தான் கண்ட இயற்கைக் காட்சியைக் கவிதை ஓவியமாக்கிக் காட்டுவான். அது படிக்கும்தோறும் இன்பம் நல்கும்”[5] என்பர் புலவர் தி.குலோத்துங்கன்.

அவ்வகையில் வானத்து விண்மீன்கள் கவிஞருக்கு விதவிதமான காட்சிப் பிம்பத்தைத் தோற்றுவித்ததை ‘யாரடியோ?’ என்னும் தலைப்பிலமைந்த பாடலில்,

**“கொள்ளைப் பனிபொழி மார்கழித் திங்களில்**
**கோலமி டத்தெரு வாயிலிலே**
**அள்ளிப் புனல்தெளித் தென்மகள் புள்ளிகள்**
**ஆயிரம் வைத்தனள் பாரடியோ!**
**வெள்ளை நிலாமகட் கன்னி உலாவரும்**
**வீதியில் எத்தனை கோலமடி!**
**வெள்ளி எனும்பெயர் கொண்டிடும் புள்ளிகள்**
**விந்தையில் வைத்தவள் யாரடியோ?” (பா.கு.ப.155)**

என்று பாடுவர். இதில் நிலவு ஊர்வலம் செல்லும் வான வீதியில் கோலமிடப்பட்ட புள்ளிகளாக விண்மீன்களைக் கவிஞர் கற்பனை செய்கிறார். மற்றொரு கவிதையில் மனிதக் குடும்பங்களையும் விண்குடும்பத்தையும் பொருத்திப் பார்க்கிறார். விண் குடும்பத்தில்

கதிரவனாகிய தலைவனுக்கும் திங்களாகிய தலைவிக்கும் இடையேயான இல்லற வாழ்வை விண்மீன்களெனும் சுற்றத்தார் வாழ்த்தொலி எழுப்பித் தொடங்குவதாகவும் ஊடிநின்ற நிலவுத் தலைவியின் கருமுகிலெனும் துகிலைத் தொட்டிழுக்க முன்பற்றுகின்ற மேகலையின் முத்துகள் அத்தனையும் கொட்டிச் சிதறி உடுக்கணமாய் முகிழ்த்தன என்றும் பாடும் கவிஞர் மேலும்,

**"கட்டுப்பா டில்லாத காலத்தே இவ்விருவர்**
**கட்டுப்பட் டில்லறங் கண்டமையால் தம்வாழ்வில்**
**எண்ணில்லாப் பிள்ளைகளை ஈன்றனரோ? அம்மக்கள்**
**விண்ணிற் றிரிந்து விளையாடுங் காட்சியைத்தான்**
**மண்ணகத்து மாந்தர் உடுவென்று மாற்றினரோ?" (த.மு.பக்.181-182)**

என்று குடும்பக் கட்டுப்பாடு இல்லாமல் பெற்றுக் கொண்ட பிள்ளைகளாக விண்மீன்களைக் கற்பனை செய்வது இயற்கைப் புனைவின் உச்சமாகும்.

"வானமெனும் கூத்தன் நிலவழகியின் ஆடல் கண்டு களித்துத் துகில் மீது வீசியெறிந்த வெள்ளிக் காசுகள் விண்மீன்"(பு.வி.செ.பக்108-109)

"நிலவாகிய தலைவி தன்னைப் பிரிந்து சென்ற தலைவனை நினைத்துப் பிரிவுத்துயரில் வாடி வகுத்த கண்ணீர்த் துளிகள் விண்மீன்கள்" (பூ.கொ.22:80-81) என்றும் கற்பனை செய்கிறார். வான்வெளியைக் காணும் போதெல்லாம் அவரது கற்பனைவெளி விரிந்து விதவிதமாய், புதிதுபுதிதாய்க் காட்சியளிப்பதை மேலைச்செய்திகள் நன்கு விளக்கும்.

**முகில்:**

வானில் திரியும் மேகக்கூட்டமாகிய முகிலைக் கவிஞர் துகிலாகப் பலவிடங்களில் கற்பனை செய்து பாடுகின்றார்.

**"விண்ணரங்கிற் கருமுகிலாம் திரை நீக்கி" (முடி.க.ப.42)**
**"முகிலென்னும் துகிலுடுத்து நாணம் ஓங்க" (முடி.க.ப.48)**

என்று முகிலைத் திரையாகவும், துகிலாகவும் பாடுகின்ற கவிஞர் வானத்தில் பல வண்ணம் காட்டுகின்ற மேகக் காட்சியைப் பற்றி,

**'வானத்துக் கார்முகில்கள் வண்ணம் பலகாட்ட**
**நானந்தக் காட்சி நலங்கண்டு மெய்ம்மறந்தேன்' (நெ.பூ.ப.251)**

என்று பாடுவர். ‘முகில் விடு தூது’ என்னும் கவிதையில் வறுமைத் துயரில் வாடுகின்ற தம் துயரைத் தலைவனிடத்தில் சென்று தூதுரைக்குமாறு தலைவி வேண்டுகின்ற பாடலில்,

**“வான வெளியரசே! வள்ளல் பெருமனம்போல்**
**தானம் பொழிகின்ற தண்முகிலே காற்றைப்**
**புரவியெனக் கொண்ட புரவலனே! எங்கே**
**விரைகின்றாய்? ஒன்று விளம்புகின்றேன் சற்றேநில்!**
**ஈர மனமுடையாய் இவ்வுலகில் எப்பொருளும்**
**சோர விடமாட்டாய் என்னுந் துணிவால் மொழிகின்றேன்**
**ஆர அமர அரிவையுரை கேட்டிடுவாய்” (முடி.க.ப.95)**

என்று முகிலை வான்வெளி அரசனாகவும் புரவலனாகவும் ஈர மனமுடைய வள்ளலாகவும் காட்சிப்படுத்துகின்றார்.

**மின்னல் / இடி :**

மின்னல்ஒளியை இயற்கைத் தாயின் சிரிப்பாகக் காணுகின்ற கவிஞர்,

**“கொடிநிகர்த்த மின்னொளியால் நகைத்திடுவாள்” (முடி.க.ப.41)**

என்றுரைப்பர்.

இயற்கைத்தாய் தன்னைக் குளிக்க அழைக்கும் போது, பேசாதிருந்தால் இடியொலியால் அதட்டுவதாகக் (முடி.க.ப.41) கவிஞர் உரைப்பது இயற்கையை வாழ்வியலொடு இரண்டறக் கலந்த கூற்றாகும்.

முறுவலனின் வீரத்தைக் குறிக்க,

**“முறஞ்செவிய களிறுகளும் முழக்கங் காட்டும்**
**மொய்யுளைய அரியினமும் வருதல் காணின்**
**குறிஞ்சியகம் எதிரொலிக்க இடிபோல் ஆர்த்துக்**
**குதித்தவற்றின் மேற்பாய்ந்து கொன்று மீள்வான்**
**வேட்டைஎனிற் பெருவிருப்பம்; கான்வி லங்கின்**
**வேந்தனெனில் தனிவிருப்பம்; முழக்கம் ஒன்று**
**கேட்டுவிடின் உருமுழக்கம் இவனும் செய்வான்”**

**(வீ.கா.53:243-244)**

என்றும் இடியோடு ஒப்புமைப்படுத்தும் கவிஞர் இடியை **‘உரும்’** என்ற மற்றொரு பெயராலும் குறிப்பிடுவர்.

**மழை-அருவி-ஆறு-கடல்:**

நீர்வளம் பொருந்திய நாடு வறுமைத்துயர் ஏதும் அணுகாதவாறு வளமும் நலமும் பொருந்தியதாக இருக்கும். ஆற்றுநீர், ஊற்றுநீர், மழைநீர் ஆகிய முந்நீரால் நீர் வளம் அமையும். 'நீரின் பெருமை' என்னும் கவியரங்கக் கவிதையில் நீர் தன் பெருமையைப் பேசுவதாகக் கவிஞர் நீண்டதொரு கவிதையைப் படைத்துள்ளார்.

**"காக்குமிக் காரணத்தால் காதல்மீக் கூரஎனை**
**ஆறென் றழைத்திடுவர், ஏரிகுளம் என்றிசைப்பர்**
**ஊறுங் கிணறென்பர், ஓங்கும் அருவிஎன்பர்,**
**கொட்டும் மழைஎன்றுங் கோலச் சுனை என்றும்**
**சொட்டும் பனிஎன்றும் சூழும் புனலென்றும்**
**பாயுமொரு வெள்ளமெனப் பற்பலவாம் தோற்றத்தில்**
**ஆயிரம்பேர் சொல்லி அழைப்பார்கள்; நீக்கமற**
**எங்கும் நிறைந்திருப்பேன், இல்லா இடமில்லை" (த.மு.ப.164)**

இதில் நீரின் வெவ்வேறு வடிவங்களைக் கவிஞர் சுட்டிக்காட்டுகிறார், இதே போன்று 'நானே அரசிருப்பேன்' என்னும் மற்றுமொரு கவிதையிலும் முகிலாய், மழையாய், அருவியாய், ஆறாய்த் திகழும் நீரின் தன்மையைக் கவிஞர்,

**"ஏரியும் குளமும் நிறைந்திருப்பேன்**
**எளிதே மணலுள் மறைந்திருப்பேன்**
**ஊரவர் தொடத்தொடச் சுரந்திருப்பேன்**
**உலகஞ் செழித்திட வரங்கொடுப்பேன்**
**மழலையின் இதழில் துடிதுடிப்பேன்**
**மகளிரின் விழியில் குடியிருப்பேன்**
**அழகிய சோலையில் கொடிபிடிப்பேன்**
**அவனியில் நானே அரசிருப்பேன்" (பா.கு.ப.136)**

என்று பாடுவர். இது மட்டுமின்றி மழலையின் வாயில் ஊறும் எச்சிலையும் மகளிரின் விழியில் வழியும் கண்ணீரையும் கவிஞரின் கற்பனை நீட்சி தொட்டுச்செல்கிறது.

அருவியை, ‘குன்றிருந்து வீழருவி, பாய்ந்தோடும் அருவி, ஓங்கும் அருவி’ என்று அடைமொழிகளால் சுட்டுகின்ற கவிஞர் ‘மலையிற் பிறந்த மகள்’ என்னும் கவிதையில் மலைமகளுக்குப் பிறந்த மகளாக அருவியைக் கற்பித்து,

**“கலகலத்த குரலெழுப்பும் அருவி என்ற**
**காதல்மக வீன்றெடுத்தாள் அந்த நங்கை**
**பெற்றெடுத்த பிள்ளையினைத் தனது மார்பில்**
**பேதையவள் தத்திவிளை யாடவிட்டாள்;**
**கற்றொடுத்த இடமெல்லாம் தவழ்ந்து தத்திக்**
**கனிமரங்கள் இடைப்புகுந்து குதித்துத் தாவி**
**மற்றடுத்த பள்ளமெலாம் விழுந்தெ ழுந்து**
**மலர்க்கொடிகள் செடிகள்பல பறித்தெ றிந்து**
**கற்றடுக்கச் சலசலக்கும் மழலை பேசிக்**
**கண்குளிர ஆடிவந்த தந்தப் பிள்ளை!” (நெ.பூ.ப.239)**

என்று பாடுகிறார். ‘அன்புள்ள இளவரசனுக்கு’ என்னும் கடிதவிலக்கிய நூலில் திருக்குற்றாலம் சென்று வந்தேன், கண் குளிரும் குற்றாலம், குற்றாலத்து அருவிகள், குற்றாலத்திற் பெற்ற இன்பம் என்னும் நான்கு தலைப்புகளில் குற்றால அருவியின் அழகையும் அருவி தந்த இன்பத்தையும் எழுதியுள்ளார்.

“முடியரசனாரின் இயற்கைப் புனைவில் ‘ஆறு’ மிகச் சிறந்த இலக்கியப் படைப்பு தனிக்கவிதைகளிலே இரண்டாயிரம் ஆண்டுகளாக உயிர்பெற்று வாழும் சங்க இலக்கியம் போல் அது திகழ்கிறது” என்று முடியரசன் கவிதைகள் நூலின் அணிந்துரையில் தமிழண்ணல் அவர்கள் குறிப்பிடுவது இங்கு சுட்டத்தக்கது.

ஆறு கவிஞருக்கு விதவிதமான எண்ணவோட்டங்களைத் தருகின்றது. கவிதைக்கு இலக்கணம் கட்டாயம் வேண்டுமென்பதை ஆற்றுக்குக் கரை எவ்வளவு தேவையோ அவ்வாறே கவிதைக்கு இலக்கணமும் என்று எடுத்துரைக்கின்றார். ‘மொழியாம் ஆற்றில் படிந்தெழுந்தால் மடமை கரைந்து போகும்’ என்று உருவகித்துப் பாடும் கவிஞர், ஊர்மக்கள் வெறுத்தொதுக்கும் கழிவு நீர் எல்லாம் ஓடி வந்து கலந்தாலும் ஊர்விட்டு நீங்குகையில்

மாசுநீங்கித் தூய்மையாகிவிடும் ஆற்றைப் போல் தனித்தியங்க வல்ல தமிழ்மொழியில் பிறமொழிகள் கலந்த போதும் நேர்வுற்று மாசின்றி இயங்குகின்ற பண்பினை நினைவூட்டுகின்ற ஆற்றுக்கு வாழ்த்துக் கூறவேண்டுமென்று பாடுகின்றார்.

மலைமீது தோன்றிப் பின் அருவியாக ஆர்த்து நிலையில்லாமல் ஓடிக் கடலில் கலந்து மறைகின்ற ஆறு இவ்வுலகில் தோன்றிய பொருள் அனைத்தும் ஒரு நாள் மறைதல் என்ற உண்மையை உணர்த்துகிறது. ஆகவே மறைவதன்முன் மக்கள் வாழ்வைக் காக்கின்ற ஆற்றைப் போல் கடமை செய்கவென்று கவிஞர் அறிவுறுத்துகிறார்.

ஆறு கவிஞரிடத்தில் அழகியல் சிந்தனைகளை மட்டும் தூண்டவில்லை. மாறாக மொழித்தூய்மை, நிலையாமை, உழைப்பாளர்களின் நிலை, சாதிப் பாகுபாடின்மை எனக்குமுகாயச் சிந்தனைகளைத் தோற்றுவிக்கும் ஊற்றாகவும் திகழ்தலை,

**“உருக்குலைய உழைத்துழைத்துச் செல்வம் இல்லா**
**உழைப்பாளர் வாழ்வினைப்போல் வறண்டு தோன்றும்**
**பெருக்கில்லாக் காட்டாறு காண்பாய்!” (முடி.க.ப.54)**
**“கிளர்ச்சி செயும் தொண்டர்களின் உணர்ச்சி வெள்ளம்**
**கெடுவழியில் செல்லாமல் தடுத்து நன்கு**
**வளர்ச்சி பெறச் செய்கின்ற தலைவன் போல**
**வருவெள்ளப் பெருக்கனைத்தும் பாழ்ப டாமல்**
**அளப்பரிய நன்மைசெயத் தடுத்து நிற்கும்**
**அணைக்கட்டின் அழகைப் பார்!” (முடி.க.ப.55)**
**“......................................................இந்த ஆற்றில்**
**ஒருசாதிக் கொருதுறையுண் டென்ற கொள்கை**
**ஒழிந்ததையும் பாரடிநீ! செல்வோம் வாவா!” ((முடி.க.ப.56)**

என்பன போன்ற அடிகள் புலப்படுத்தும்.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நானிலங்களில் ஏனைய மூன்று நிலங்களோடு ஒப்பிடும் பொழுது நெய்தல் நில வருணனைப் பாடல்கள் குறைவே. “நெய்தல் திணைப் பாடல்கள் சங்க இலக்கியத்திலே நிரம்ப உண்டு; அவற்றிலே நெய்தல் நில வருணனைகளும் உண்டு; எனினும் கடற்கரைச் சார்பே பெரிதும் பாடப்பட்டுள்ளதேயன்றிக்

கடலின் உட்பரப்பு பற்றிய வருணனை காண்பது அருமையாயுள்ளது. தமிழகம் வடதிசை தவிர்த்த ஏனை மூன்று திசைகளிலும் கடலால் சூழப்பட்ட நாடு; பண்டைக் காலந்தொட்டுக் கடற்பயணத்திலே தமிழர்கள் தேர்ச்சி பெற்றிருந்தனர் என்பதும் உண்மை. எனினும் கவிதையுலகினருக்கு மட்டும் ஏனோ பேரளவில் கற்பனைக் கவர்ச்சியைக் கடல் ஊட்டவில்லை"[6] என்பர் மு.வரதராசனார். முடியரசனார் இக்குறையை நீக்குவது போன்று கடல் தந்த காட்சி ஈர்ப்பில், கற்பனைக் கவர்ச்சியில் கவிதைகள் பல யாத்துள்ளார்.

**"கடற்கரையில் விளையாட இடந்தந்தாள்;**
**கலகலத்த இரைச்ச லோடு**
**படர்ந்தலைகள் கரைநோக்கி விளையாடப்**
**பாய்ந்துவரும், நானும் செல்வேன்,**
**மடங்கியொடுங் கிக்கடலுள் எமைக்கண்டு**
**பிடியென்று மறைந்து போகும்**
**அடங்கிடுவேன்; உடன்சிரித்து மற்றோர்பால்**
**அலையெழும்பும் அயர்ந்து போவேன்" (முடி.க.ப.42)**

என்பதில் கடலலைகளுடனான விளையாட்டில் குழந்தையாக மாறிப்போனதைப் பாடுகின்ற கவிஞர் ஆழி, பரவை என்று கடலை அழைப்பதற்கான காரணத்தையும் சுட்டுகின்றார்.

**"கற்றுணர்ந்த சான்றோரின் உள்ளம் போல்**
**கடலே நீ ஆழம் கொண்ட**
**பெற்றியுணர்ந் தாழி என்றார்; யாதும்மூர்**
**பிறரெல்லாம் கேளிர் என்ற**
**பற்றுடைய தமிழினத்தார் பரந்தமனப்**
**பான்மையெனப் பரந்து நிற்கும்**
**ஒற்றுமையைக் கண்டன்றோ எம்முன்னோர்**
**உனைப்பரவை என்று சொன்னார்" (முடி.க.ப.59)**

என்று பாடுவர். மேலும் கடல் தன்னை நாடி வந்த அனைவர்க்கும் இன்பம் தருதலை 'கடன்பட்ட மாந்தர்க்கும், காதல் வாழ்வில் தவழ்கின்ற இளைஞர்க்கும், மணங்கொண்டோர்க்கும் நீர்த்திவலையுடன் அலையெழுப்பி கவலைதீர்த்து, ஒரு சேர இன்பம் கொடுக்கின்றது' (முடி.க.ப.57) என்கிறார்.

தன் வளங்களையெல்லாம் மனிதர்க்கு அள்ளி வழங்குகின்ற அதே கடல்தான் சில வேளை சீறிப் பொங்கி கரந்தைத் திணையைப் போல தன்னிடம் மனிதர் கரந்த பொருள்களை மீட்டெடுக்கப் படையெடுத்து வருவதையும், மரங்கள், வீடுகள், ஆவினங்கள், மக்கள் எனஅனைத்தையும் அழிப்பதையும் பாடுகிறார். நெய்தலுக்குரிய இரங்கல் உரிப்பொருளை, கடல் அழித்தழித்தே இரங்கியழச் செய்த செய்கையோடு பொருத்திக்காட்டுவதோடு பயிர் வளர முகிலுக்கு நீர்கொடுக்கும் செய்ந்நன்றியை நினைத்து கடல் தந்த துயரை மறந்துவிட்டதாக உரைப்பர். (முடி.க.ப.58)

கடற்கரையில் நண்டுகள் ஊர்ந்த தடம் பற்றிக் குறுந்தொகை,

**“அளைவாழ் அலவன் கூருகிர் வரித்த**
**ஈர்மணன் மலிர்நெறி சிதைய விழுமென**
**உருமிசைப் புணரி யுடைதரும்”[7]**

என்றுரைக்கும்.

இதேபோன்று நண்டுகள் கோலமிடுவதையும் மனிதர்களைக் கண்டால் அவை ஓடி மறைவதை,

**“விளங்காத மொழிபேசும் என் மகவு**
**விளையாடும் பொழுது மண்ணில்**
**மழுங்காத சிறுவிரலால் கீறிவிடும்**
**வளைவுகள்போல் கரையில் நண்டு**
**ஒழுங்காக அமையாமல் ஓடியோடிக்**
**கோலமிடும்; ஆளைக் காணின்**
**இளங்காளை முன்வந்தால் நாணமுறும்**
**இளையவள் போல் மறையும் ஓடி” (முடி.க.ப.59)**

என்று பாடுவர்.

“கடலிடத்தில், முத்து, பவளம், மீன் என மனிதர்க்குப் பயன்படுவனவும், வணிகக் கப்பல்களைப் பாழாக்கும் சுறாவினங்களும் திமிங்கலங்களும் உண்டு. நிலத்திலும் பிறர்வாழ்வை அழிக்கும் திமிங்கிலங்கள், சுறாக்கள் போன்ற மனிதர்கள் உண்டு” என்று ஒப்பிட்டுரைக்கின்றார். (முடி.க.ப.59)

‘கடலின் பெயர்கள்’ என்னும் கவிதையில், கண்ணுக்கும் எட்டாது கடந்து நிற்கும் காரணத்தால் ‘கடல்’ என்றும் எண்ணுக்குள் அடங்காத புனற்பரப்பை ஏற்றுளதால் ‘பரவை’யென்றும் உவர்ப்புடைய தன்மையினால் ‘உவரி’ என்றும், மலையிலிருந்து மண்ணுக்குள் ஓடிவரும் எல்லா ஆறும் மருவிப் புணர்வதால் ‘புணரி’ என்றும் அளக்கரிய பெருமையுடையதால் ‘அளக்கர்’ எனவும் ஓய்வேயின்றி முப்பொழுதும் வேலை செய்வதனால் ‘வேலை’ என்றும் விளக்கமுறச் சொல்ல முடியா ஆழம் கொண்டு விளங்குவதால் ‘ஆழி’ என்றும் ஆக்கல், அழித்தல், காத்தல் என மூன்று நீர்மை அமைந்தமையால் ‘முந்நீர்’ என்றும் முத்தும் பவளமும் வாரி வாரி அளிப்பதனால் ‘வாரி’ என்றும், எந்நேரமும் சலசலவென்று ஒலிப்பதாலே ‘சலதி’ என்றும் பல்வேறு பெயர்களைப் பொருத்தப்பாட்டுடன் விளக்குவர். (நெ.பூ.ப.238)

‘திராவிட நாட்டின் வளம்’ என்னும் கவிதையில் கடல்வளத்தால் நலம்கொழிக்கும் தன்மையை,

**“சேருங் கரையுண்டு செந்தமிழர் நாகரிகம்**
**கூறுந் துறைமுகங்கள் கூடிக் கிடப்பதுண்டு;**
**நெய்தல் வளத்தால் நெடுநாளாச் செல்வமழை**
**பெய்யும் பெருநாடு பேணும் திருநாடு” (க.மு.ப.100)**

என்று பாடுகின்றார்.

**காற்று:**

நிலம், நீர், நெருப்பு, வளி, வெளி என்னும் ஐம்பூதங்களில் ‘வளி’ இல்லாவிடில் உயிர்கள் பிழைக்க வழியில்லை. உலக உயிரினங்களுக்கு மிக இன்றியமையாத ஒன்றாய்த் திகழ்வது காற்று. இக்காற்றின் சிறப்பை,

**“ஐம்பூதத் தொன்றான காற்றிலையேல்**
**அம்புவியில் இயக்கம் ஏது?**
**தெம்பேது மக்களுக்கு? துயில்பவனைத்**
**தெருளில்லா இரவுப் போதில்**

**நம்பூறும் படி அவனோர் பிணமல்லன்**
**எனுந்திறத்தை நவில்வ தெல்லாம்**
**மென்பூவின் மூக்கில்வரும் காற்றன்றோ?**
**மேதினியே காற்றால் வாழும்" (முடி.க.ப.50)**

என்று பாடுவர். இதில் உயிரோடிருப்பதற்கும் பிணமாவதற்கும் மூச்சுக்காற்றுதானே அறிகுறியென்பதை சுட்டிக் காட்டும் கவிஞர் உலகமே காற்றால்தான் வாழ்கிறது என்றுரைக்கிறார்.

குளிர்நிலத்தில் மலர்ச்செடியில் உராயும் பொழுது குளிர்மணத்தை வீசும் காற்று, சுடுநிலத்தில் வெப்பத்தை வீசுகின்றது. சான்றோரிடம் நட்புகொள்வோர் அறநெறியராகவும் தீய மனத்தோரிடம் சேருபவர் நேர்மையின் வழியையும் சார்வர் என்பதைக் காற்று நமக்கு உணர்த்துவதாகத் தெரிவிக்கிறார்.

வடக்கிருந்து வீசும் காற்றை 'வாடை' என்றும் தெற்கிருந்து வீசும் காற்றை 'தென்றல்' என்றும் கூறுவர். இக்காரணப் பெயர்கள் கவிஞருக்கு ஒரு பேருண்மையை உணர்த்துகிறது.

**"வடக்கிருந்து வருவாடை வாட்டுவதும்**
**தெற்கில்வரும் தென்றல் இன்பம்**
**கொடுப்பதுவும் காட்டுமொரு பேருண்மை,**
**கொடுமையிலாத் தமிழ் நாடும்**
**வடக்கிருந்து வருபவையால் துயருழந்து**
**வாடுவதும் தெற்கோ இன்பம்**
**படைப்பதுவும் நாடறியும், உயர்வாம்இப்**
**பண்புணர்த்தும் தென்றல் வாழ்க" (முடி.க.ப.51)**

என்று காற்றைப் பாடுமிடத்திலும் தமிழ்த் தேசியச் சிந்தனையைப் புகுத்திப் பாடுகிறார்.

தாமரை, முல்லை இதழ்களை வருடி அவற்றின் மணத்தைச் சுமந்து வரும் தென்றல் மேனியைத் தீண்டும்போது சொல்லரிய இன்பத்தை அடைந்ததை 'காலம் வரும் நேரம் வரும்' என்னும் கவிதையில் (நெ.பூ.ப.251) உரைப்பர்.

தென்றல் தந்த இன்பத்தை 'இளவரசனுக்கு..' எனும் கடித நூலில் 'தண்டுளிச் சாரலோடு வீசுந் தென்றற் காற்றத்தனையும் என் உடற்குள்ளேயே புகவிட்டேன். சட்டையிட்டு

உடலை மூடினேனல்லேன். நீ மழலை மொழிக் குழவியாக இருந்த பொழுது என் மார்பிலும் தோளிலும் எவ்வாறு தவழ்ந்தோடி விளையாடினாயோ அதைப் போலவே தென்றலையும் என் மீது தவழ்ந்தாட விட்டேன். சுருங்கக்கூறின் தென்றற் காற்றில் முங்கிக் குளித்தேன் என்று தான் கூறுதல் வேண்டும்' (முடி.கடி.ப.16) என்றெழுதியுள்ளார். நீர்த் தடாகத்தில் முங்கிக் குளிப்பதுபோல் தென்றற்காற்றில் முங்கிக் குளித்தேன் என்று கவித்துவமாய் தென்றலின்பத்தைக் குறிப்பிடுகிறார். மென் காற்று தரும் இன்பத்தைக் கூறும் கவிஞர் புயல்காற்றின் பாதிப்பையும் பாடத் தவறவில்லை.

'இயற்கையின் எழுச்சி' என்னும் கவிதையில் புயல்காற்றின் சீற்றத்தால் விளக்குக் கம்பமும் தந்திக் கம்பமும் தலைவணங்கின; வீடுகளும் வீழ்ந்து வணங்கின. உச்சியை அசைத்து நின்ற உயர் பெரிய மரங்களெல்லாம் நின்ற நிலையில் நெடுக வீழ்ந்தன. பறவையினங்கள் வாய்புதைத்து நின்றன. வீடுகளின் மேற்கூரையிலிருந்து ஓடுகள் எல்லாம் மலர்களென உதிர்ந்தன. சிற்சில குடிசைகள் புயல்காற்றில் சிதறி வானில் வாணவேடிக்கை காட்டின. உயிர் அச்சத்தில் மக்கள் அங்குமிங்கும் அலைந்து திரிந்தனர். கதிரவனும் திங்களும் மறைந்து கொண்டனர். ஊர்முழுதும் பேரொலி ஓங்கியது என்று புயலின் சீற்றத்தைப் பாடியவர், புயல்நின்ற பின் அது விட்டுச் சென்ற சுவடுகளைக் கூறும்பொழுது 'மண்ணில் புதைந்த மகவைத் தோண்டியெடுத்து தாங்கவியலாத் துயரால் தாயர்தம் கதறலும் கைகால் இழந்தோரின் அழுகுரலும் வீடுகளை இழந்தோர் அரற்றும் கூக்குரலும் தான் வளர்த்த ஆடுகளும் மாடுகளும் இறந்ததைக் கண்டு ஏழையர் எழுப்பிய அலறலும் என எங்கு நோக்கினும் இழப்பொலி ஒலித்தன.' (முடி.க.பக்.62-63) என்று புயற்காற்று விளைத்த சேதத்தையும் காட்சிப்படுத்துகிறார்.

இயற்கையின் நன்மை, தீமை ஆகிய இரு நிலைகளையும் பாடுவதில் தனித்துவம் மிக்க கவிஞராய் முடியரசன் திகழ்கிறார்.

**மலை:**

நானிலங்களுள் முதனிலமாகச் சுட்டப்பெறுவது குறிஞ்சி நிலமாகும். மலையும், மலைசார்ந்த இடமுமான குறிஞ்சி நிலம் கவிஞர்களுக்குப் புத்தெழுச்சியைத் தூண்டி கவிதைகளை ஊற்றெடுக்கவைக்கவல்லது.

"புலவர்கள் ஏனைய காட்சிகளைத் தீட்டுவதிலும் குறிஞ்சிக் காட்சிகளைக் தீட்டுவதில் சிறப்பான ஆர்வம் காட்டுகின்றனர். தகுந்த வாய்ப்பு நேரிடின், ஆங்காங்கு உள்ள மலைகளின் பெயர்களையும் சுட்டிச் செல்வதை சங்க இலக்கிய நூல்களில் காணலாம்."[8] என்பர் மு.வரதராசனார்.

முடியரசனாரும் கவியரங்கக் கவிதையில் குறிஞ்சிநிலத் தலைவி, தலைவனிடம் மலைவளம் காண அழைப்பதாகப் பாடுகின்றார். திராவிட நாட்டின் குறிஞ்சி வளத்தைப் பாடும்பொழுது, "நீண்ட தொடர்மலைகள், நெஞ்சைக் கவரும் உயர்ந்த அழகு மிளிரும் மலைகள், கோடையின் வெப்பம் போக்கும் குளிர்மலை, வாய்க்கும் பழமலைகள் என எண்ணக் குறையாமல் எத்துணையோ இங்குண்டு. தென்னாட்டாரின் வீரமறியாமல் போர்தொடுத்து வெல்லமுடியாமல் புறமுதுகிட்டு மாற்றுருவில் ஓடி மறையும் வீரனைப் போல் ஓங்குகின்ற மலைமேல் உராய்கின்ற முகில்கூட்டம் குளிர்தாக்கத் தேய்ந்து உருமாறி நீராகி, ஆறாகி நிற்காமல் ஓடி ஒரு பேராழியுள் மறையும் தன்மை இங்கிருக்கும். படைமுரசம் போன்று தடதடவென்று ஆர்த்திரங்கி கார்முழக்கம் அஞ்சக்கடுகிவரும் பேரருவிக் கூட்டம் பலவுண்டு; முகிலினங்கள் கூடிக் காட்டகத்து மேய்வது போல் காட்சிதரும் யானைக்கூட்டம் இங்குண்டு. தேக்கும், அகிலும், சந்தனமும், குளிர் தென்றலும், காரமிளகும், ஏலமும் இவை போன்ற எஞ்சா வளம் சுரந்து காலம் முழுவதும் களிப்புத்தரும் நம் மலை' (க.மு.ப.99) என்று மலைக் காட்சியினையும், மலை தரும் வளங்களையும் தொகுத்துரைக்கிறார்.

பாரியின் பறம்புமலை வளத்தைக் கவிஞர்,

**"வான் பொய்த்த காலத்தும் சுனையின் ஈட்டம்**
**வற்றாத புனல்சுரந்து வளமை காட்டும்;**
**மான்மொய்த்துத் திரிகின்ற சாரல் எல்லாம்**
**வளவியவேய் நெல்விளைந்து செழுமைகாட்டும்;**

**தேன்கைத்த தென்னநறுஞ் சுளைகள் நல்குந்**

**தீம்பலவின் பழம்முதிர்ந்து கனிவு காட்டும்;**

**மீன்மொய்க்குஞ் சுளைகளெல்லாம் இறாலு டைந்து**

**மேலிருந்து தேன்சொரிய இனிமை காட்டும்" (த.மு.ப.170)**

என்று கவிஞர் காட்சிப்படுத்தும் மலைக்காட்சி பறம்புமலையை மனக்கண்முன் நிறுத்துகின்றது. பூங்கொடி காப்பியத்தில் பொதிகைக் காட்சியை,

**"தென்திசைப் பொதியில் காணிய வந்தேன்;**
**முடியும் நடுவும் முகிலினம் படர்தரக்**
**கொடிபடர் சந்தனக் கடிமணம் அளாவிச்**
**சில்லெனுந் தென்றல் மெல்லென வீச**
**நல்லிளஞ் சாரல் நயந்திடத் துளிர்ப்ப**
**அலரும் மலரும் அடருங் கடறும்**
**பலவும் குலவி நிலவும் மாமலைக்**
**காட்சியும் மாட்சியும்" (பூ.கொ.18:109-116)**

என்று காட்சிப்படுத்துவர். இளமைக்காலத்தில் முடியரசனார் பிறந்து வளர்ந்த மலைகள் சூழ்ந்த பகுதி கவிஞரின் உள்ளத்தில் பசுமையாகப் பதிந்திருப்பதனை இப்பாடல்கள் நன்கு புலப்படுத்தும்.

**மரம்-செடி-கொடி:**

சங்க இலக்கியங்களில் மரம், கொடிகளை விளித்துப் பாடுவதாகப் பாடல்கள் அமைந்துள்ளன. நொச்சிமரம்[9], வயலைக் கொடி[10], முல்லைக்கொடி[11] ஆகியன விளித்துப் பாடப்படுகின்றன.

கவியரசர் முடியரசனார் 'மரத்தின் பெருமை' என்னும் கவியரங்கக் கவிதையில் பல்வகை மரங்களின் பயன்களையும், தன்மைகளையும் விளக்கிப் பாடுகின்றார்.

**"விதையென்னும் சிறுமுதலைப் போட்ட பின்னர்**

**வியன்பெரிய மரமாகிப் பூத்துக் காய்த்துச்**

**சதையுடைய சாறுடைய கனிகள் ஆக்கிச்**

**சார்ந்தோர்க்குச் சுவைநல்கிப் பசியை நீக்கி**

**விதைமுதலாம் ஒரு விதையைப் பன்னூ றாக**

**விளைவித்துக் கண்டுமுதல் பெருக்கிக் காட்டும்**

**கதையுடைய மரம்போல வணிகப் பாங்கு**

**கற்றவரை யாண்டுலகிற் கண்டோம் நாமே" (த.மு.ப.193)**

என்று மரத்தை வணிக வழிகாட்டியாக்கிப் பாடுகின்றார். ஆலமரம், மூங்கில்மரம், எட்டிமரம், அரசமரம், குருந்தமரம், சந்தன மரம், வேப்ப மரம், பனைமரம் போன்ற பல மரங்களைப் பாடும் கவிஞர் வாழை மரத்தைப் பற்றிப் பாடும் பொழுது,

**"தோன்றிவரும் நாள்தொட்டு மடியுங் காறும்**
**துணைசெய்யும்; மடிந்தபினும் பயனேநல்கும்;**
**ஊன்றிவளர் வேர்முதலாத் தன்பா லுள்ள**
**உறுப்பெல்லாங் கொடுத்துதவும்; உயிரும் ஈயும்;**
**மான்திரியுங் காட்டகத்தும் மாந்தர் வாழும்**
**நாட்டகத்தும் மதில்சூழும் வீட்ட கத்தும்**
**வான்தடவித் தலைவிரித்து நிமிர்ந்து நிற்கும்;**
**வாழ்வெல்லாம் பிறருக்கே ஆக்கி நிற்கும்" (த.மு.ப.196)**

என்று அதன் அனைத்துச் சிறப்பினையும் புகழ்ந்து பாடுவர். வண்டுகளின் பாட்டிற்குச் செடிகொடிகள் நடனமாடுவதாகக் கற்பனை செய்வர். (முடி.க.ப.50)

வீரகாவியத்தில் வேல்விழியின் தோழி, வேல்விழிக்கு மணமுடிக்கவேண்டி வேந்தனிடம் தூதுரைப்பதாக அமைந்த பாடலில் மணம் நிறைந்த மலர்களைக் கொண்ட முல்லைக் கொடி செழித்து வளரப் பற்றுக் கொம்பு தேவைப்படுவதைப் போன்று வேல்விழி எனும் பூங்கொடிக்கும் தலைவன் என்னும் கொழுகொம்பு தேவை என்றுரைக்கிறார். (வீ.கா.31:126)

**மலர்:**

கவிஞர்களின் கற்பனையைத் தூண்டிவிடும் புறக்காரணிகளுள் மலருக்குத் தனித்த இடம் உண்டு. மலர்களின் வண்ணமும், மணமும் இன்பமூட்டவல்லன. இயற்கைக் காட்சிகளைப் பாடுகின்ற கவிஞர்கள் மலரைப் பாடாதிருப்பதில்லை.

முடியரசனாரும் இயற்கைத் தாய் என்னும் கவிதையின் துவக்கத்தில் பல்வேறு மலர்களின் மணமாய் இயற்கைத்தாய் விளங்குவதை,

**"புனல் நிறைந்த தடமலர்கள், படர் கொடியிற்**
**பூத்தமலர், கோட்டுப் பூக்கள்**
**இனையபல மலர்நாறும் மணமானாள்" (முடி.க.ப.40)**

என்று காட்சிப்படுத்துவர்.

முடியரசனாரின் இயற்கைச் சித்திரிப்பு குறித்த கவிதைகளைப் பற்றி, “இயற்கையின் எண்ணற்ற வரங்களைப் பற்றிப்பாடும் அவர், படைப்பின் அழகைக் கண்டு பேரின்பம் அடைகிறார்”[12] என்று வி.ஆர்.எம் செட்டியார் குறிப்பிடுவது இங்கு சுட்டத்தக்கது.

‘சுதமதி’ என்னும் குறுங்காப்பியத்தில் ‘பூவும் பூவையும்’ என்னும் தலைப்பில் அமைந்த பாடலில் இளம் பெண்ணின் இடையையொத்திருப்பதாக நினைத்த பூங்கொடி தன் நல்லரும்பால் நகைத்துச் செருக்கோடிருக்க, அத்தருக்கினை அடக்க அப்பெண் தலை கொய்தாள். அவ்வேளையில் தாமரைப் பொய்கையுள் முகைப் போதுகளை நோக்கி கருவிளை விழியாள் தன்னிடம் இச்சிறு முகைக்கொரு ஒப்பாய் எதுவுமில்லையே என்று வெய்துயிர்ப்புறும்போது தன் விம்மிய மார்பகம் கண்டு களித்து, தண்டொடு திருகி அம்முகையைக் கொண்டனள்’ (முடி.க.ப.29) என்று மலரின் வடிவத்தினை மங்கையின் அங்கங்களோடு ஒப்பிட்டுப் பாடுகிறார். தாமரையை ‘முளரி’ என்னும் அரியசொல் கொண்டு பாடியிருப்பது குறிப்பிடத்தக்கது (வீ.கா.42:179)

உருவாகி மணம் வீசி ஒளிசேரும் பூவிலே எழில் வாழும் இடம்தேடி இரவு பகலாய் தான் அலைந்தோடியதாகக் கவிஞர் பாடுகிறார். (கா.பா.ப.92)

மலரை இயற்கை ஆசானாய்க் காணும் கவிஞர் ‘மலர்தந்த பாடம்’ என்று கவிதையில் மலரின் படிநிலைகளை,

**“உருவாய் வருங்கால் அரும்பென்பார் - நின்றன்**
**உடலோ பருத்தால் போதென்பார்**
**சிறிதே விரிந்தால் மலரென்பார் - கீழே**
**சிதறி விழுந்தால் வீ என்பார்**
**இருக்கும் பொழுதில் பிறர்மகிழ - உன்னால்**
**இயலும் வகையால் உதவிடுக**
**குறிப்பு மொழியால் அறிவுரையை என்பால்**
**கூறி முடித்தாய் நினதுயிரை” (பா.கு.பக்.171-172)**

என்று பாடி மணம் தந்து மகிழ்வித்த மலர்வாடி உதிர்ந்த பொழுது, அவை இவ்வுலகிற்கு அறிவுரை கூறுவதாக உரைப்பது, இயற்கை வெறும் அழகுமட்டுமல்ல; அது பாடம் போதிக்கும்

ஆசானாகவும் உள்ளது. நாம் தான் அதைப் புரிந்து கொள்வதில்லை எனும் உண்மையைப் புலப்படுத்துகின்றார்.

'வண்ணமும் எண்ணமும்' என்னும் தலைப்பிலான பாடலில் கொடியில், செடியில், நீரில் பூத்திருக்கும் மலர்களின் வண்ணத்திலும் மணத்திலும் மனம் ஒன்றிய கவிஞர்,

**"கொடி விரித்த மலர்கண்டேன் கிளையின் நீரில்**
**குலவுகின்ற மலர்கண்டேன் தலைய சைக்கச்**
**செடிசிரிக்கும் மலர்கண்டேன் அவற்றி லெல்லாம்**
**செப்பரிய வண்ணங்கள் சிந்தை யீர்க்கும்**
**படியிருக்கக் கண்டுகளி கொண்டேன்; காற்றில்**
**பரவிவரும் நன்மணத்தில் ஒன்றி நின்றேன்;**
**செடிகொடியில் இதழ்விரித்த மலர்கள் தோறும்**
**தேனீக்கள் படிந்தெழுந்து போதல் கண்டேன்" (ம.தே.ப.110)**

எனப்பாடுவர்.

**"மலர்தனிற் பனிநீர் குந்தும்-அதுதான்**
**மனமகிழ் அழகினைச் சிந்தும்**
**உலரிய விழிநீர் சிந்தின் - என்றன்**
**உளமோ கடலெனப் பொங்கும்" (பா.கு.ப.123)**

என்பதில் மலரில் படியும் பனிநீரை சகமனிதரின் துயரக் கண்ணீரோடு ஒப்புமிப்பது கவிஞரின் அழகியல் உணர்வையும், குமுகாயப் பற்றினையும் ஒரு சேர வெளிப்படுத்துகிறது. இயற்கையை வருணிப்பதோடு மட்டுமல்லாமல் இயற்கையைப் பாட்டாளி ஏழை மக்களோடு ஒப்பிட்டுப் பார்க்கின்ற பொதுவுடைமைப் பார்வை கவிஞருக்கு அதிகம் உள்ளது.

"பாடும் புலவன் தன் கருத்தினை எவ்வளவு சமுதாயத்திற்கு இயைபாகப் பாடுகின்றானோ, அவ்வளவுக்கு அவன் படைப்பு உலக உயிர்ப்புடையதாக இருக்கும்; நெடிது வாழும்"[13] என்னும் வ.சுப.மாணிக்கனாரின் கூற்று முடியரசனாரின் கவிதைகளுக்கு முற்றிலும் பொருந்துகின்றன.

**வண்டு:**

முடியரசனார் தம் கவிதைகளின் பலவிடங்களில் வண்டுகளைப் பாடியுள்ளார்.

**“பல்வகை மலர்தொறும் பாடிப் பாடிப்**
**புல்லிதழ் அகமெலாம் ஞெகிழப் புக்குத்**
**தேறல் மாந்திச் சுரும்பினம் திரிதரும்” (முடி.க.ப.29)**

என்று மலர்தோறும் தேடிச் சென்று பாடிப் பாடி தேனருந்தும் வண்டுகளைப் பாடுகின்றார். வண்டுகளின் பாட்டொலியை,

**“... தேன் நுகர மலர்கள் தோறும்**
**சென்றிருந்து தமிழ்பாடும் வண்டொலியால்**
**செவிகுளிரத் தாலே தாலோ**
**என்றினிய தாலாட்டித் துயிற்றிடுவாள்” (முடி.க.ப.40)**

எனப்பாடுவர். இதில் வண்டுகள் எழுப்பும் ஒலி தமிழ்ப்பாடலாய்த் தாலாட்டாய்க் கவிஞருக்கு ஒலிக்கிறது. இயற்கையைப் பாடுமிடங்களிலெல்லாம் தமிழுணர்வும், குமுகாயச் சிந்தனையும் மிளிர்வதைக் காணமுடிகிறது. மலர்தோறும் தாவிச்செல்கின்ற தும்பியைக் கடன் வாங்கியவர்களிடம் வட்டிப் பணத்தை வசூலிக்கக் கடைகள் தோறும் புகுந்து வரும் கணக்கனோடு உவமிக்கிறார். (முடி.க.ப.44) வண்டின் செயலைப் போல் பிறிதொன்றை நாடும் எண்ணம் தலைவனுக்குத் தோன்றாது ஒழிக என்று ‘ஒருவனுக்கு ஒருத்தி’ என்னும் தமிழ்ப்பண்பாட்டின் மேன்மையைச் சுதமதி வழிச் சுட்டுகின்றார். (முடி.க.ப.32)

‘களிதரு சுரும்பு’ என்னும் பாடலில் மென்சிறகால் எழுப்பிடும் மெல்லிசை யாழிசையின் பான்மையதாகி செவிபாய்ந்து உள்ளம் தழைத்திடச் செய்ததாகவும், புள்ளிகள் மேவியுள்ள பொன்னிறச் சிறகால் அழகின் வண்ணம் கண்ணுக்கினிய காட்சியாய் அமைந்ததாகவும் கண்ணும் கருத்தும் களிகொளச் செய்யும் பண்ணும் எழிலும் படைத்த சுரும்பின் செயல் தன்னை நெகிழச் செய்ததாகவும் பாடுகிறார். (நெ.பூ.ப.235) ‘தும்பிகள் யாழெனப் பாடிடுமே’ (பா.கு.ப.217) என்று தும்பியின் இசையை யாழிசைக்கு ஒப்புமையாக்குகிறார்.

**பறவைகள்:**

முடியரசனாரின் படைப்புகளில் மயில், குயில், கிளி, காகம், புறா, பருந்து, குருவி, அன்றில், அன்னம், சிட்டு, வானம்பாடி, தூக்காணங்குருவி போன்ற பறவைகள் இடம்பெற்றுள்ளன. பறவைகளின் உருவ அழகையும் அவை கூடடைந்து ஒலியெழுப்புவதையும்

காட்சிப்படுத்தியுள்ளார். பறவைகள் மனிதர்களின் அன்றாட வாழ்க்கையோடு நெருங்கிய தொடர்புடையன. எனவே பறவைகளைப் பாடும் பாடல்கள் கவிஞரின் எண்ணத்தில் முகிழ்ப்பதில் வியப்பில்லை. பெண்ணின் சாயலை மயிலுக்கும் அன்னத்திற்கும் ஒப்புமையாக்கும் இலக்கிய மரபில் கவிஞரும் உடன்படுகிறார். எழில் மயிலாய்த் தோகை விரித்தாடி நிற்பாள் (முடி.க.ப.100), கோலமயில் இளவரசி (வீ.கா.18:66), மடஅன்ன நடை நடந்தாள் (பா.கு.ப.142) போன்ற கவிஞரின் சொற்றொடர்கள் இதனை நன்கு விளக்கும்.

குயிலினமும், பசுங்கிளிகளும் தத்தம் தாய்மொழியிலேயே பாடுகின்றன. மனிதர் நாமும் நம் தாய்மொழியிலேயே பேசிட, பாடிட வேண்டும் (முடி.க.ப.41) என்று அறிவுறுத்துகிறார்.

'ஆடு மயிலே' என்னும் தலைப்பிலமைந்த பாடலில்,

**"பண்ணமைக்கும் பாவலர்கள் பாடும் பொருளாய்ப்**
**பயில்வல்ல ஓவியர்கள் தேடும் பொருளாய்**
**வண்ண வகைக் கண்படைத்த தோகைமயிலே**
**வட்டமிட்டு வட்டமிட்டே ஆடு மயிலே" (கா.பா.ப.95)**

என்று பாவலர்க்கும் ஓவியர்க்கும் பாடுபொருளாய், தேடுபொருளாய் மயில் விளங்குதலைப் பாடுகின்றார்.

**"கார்மேகம் நெடுவானில் சூழும் போது**
**கானமயில் தோகைவிரித் தாடல் செய்யும்;**
**கூர்வேனிற் பருவநிலை வந்தால் எங்கும்**
**கூவுகிற இசைக்குயில்கள் பாடல் செய்யும்" (வ.கோ.ப.73)**

என்று கார்காலத்தில் மயிலும், வேனிற் காலத்தில் குயில்களும் பருவநிலைக்கு வரவுரைப்பதாகப் பாடுகிறார். 'தோகை விரித்து ஆடும் மயிலுக்கு ஆடலையும் தீங்குயிலுக்கு தேன்குரல் பாடலையும் தூக்கணங்குருவிக்கு கூடுகட்டும் திறனையும் கற்றுக் கொடுத்தவர் யார்?' என்று வியப்பில் வினவுகிறார் (பா.கு.ப.156).

கவிஞர் பறவைகளின் மீது தனி விருப்புக் கொண்டிருந்தார் என்பதைப் பாடுங்குயில், பாட்டுப் பறவையின் வாழ்க்கைப் பயணம், பாடுங்குயில்கள் என்னும் அவரது கட்டுரை நூல் தலைப்புகளும், மயிலே, கூண்டுக்கிளி, குயில் பாட்டு ஆகிய கவிதைத் தலைப்புகளும்,

‘காக்கையின் கடிதங்கள்’ என்னும் சிறுகதைத் தலைப்பும், ‘பாட்டுப் பறவைகளின் வாழ்க்கைப் பயணம்’ என்னும் தன் வரலாற்று நூலிலுள்ள பயிலும் பூவை, கூண்டுக்கிளி, இணைபிரியா அன்றில், அன்புப் பார்ப்புகள், வலைப்படாமயில், மணிக்குயில், வானம்பாடி, புகழ்ச்சிட்டு, தோழமைப் புறா, குயிலும் குஞ்சும், அரங்கக்குயில், அளிபெறு தும்பி ஆகிய கட்டுரைத் தலைப்புகளும் உணர்த்துகின்றன.

கவிஞர் தன்னைக் கவிவானில் சிறகடித்துப் பறக்கும் பறவையாகக் கற்பனை செய்து பாடும் பாடல்கள் பலவுண்டு. ‘நானொரு பாடும் பறவை’ என்னும் கவிதைத் தலைப்பும் அவரது தன் வரலாற்று நூலான ‘பாட்டுப் பறவையின் வாழ்க்கைப் பயணம்’ என்னும் நூல் தலைப்பும், பாடுங்குயில் நூலில் ‘குயிலின் குரல்’ என்னும் அவர் தம் நூல் முன்னுரைத் தலைப்பும் இதை உறுதிசெய்யும்.

**விலங்கினம்:**

காட்டு விலங்குகளையும், வீட்டு விலங்குகளையும் கவிஞர் தம் படைப்புகளில் ஆங்காங்கே உவமைகளாகக் கையாண்டிருக்கிறார். ஆண் மக்களின் வீரத்தைச் சுட்டிக்காட்ட சிறுத்தை, புலி, சிங்கம், யானை, காளை போன்ற விலங்குகளை உவமையாக்குகிறார்.

**சிறுத்தை:**

புதியதொரு விதிசெய்வோம் என்னும் நூலில் ‘சிறுத்தையே விழித்தெழு’ என்னும் தலைப்பிலான கவிதையில் தமிழினத்திற்காய்ப் போராடி தன்னுயிர் ஈந்தவர்களை ‘அரிநிகர் தோழர்’ ‘புலிநிகர் கூட்டம்’ ‘காளையர் உயிர்கள்’ என்றெல்லாம் சுட்டுகின்ற கவிஞர் அத்தகையோரை மறக்கக் கூடாது என்று இளையோர்க்கு அறிவுரை கூறுகிறார்

**“முறைப்படி ஆண்டநின் முத்தமிழ் நாட்டைச்**
**சிறைப்பட விடாமல் சிறுத்தையே விழித்தெழு!” (பு.வி.செ.ப.134)**

என்று இளையோரைப் பார்த்து ‘சிறுத்தையே’ என்று விளிக்கின்றார்.

**புலி:**

வீரகாவியம் நூலில் மாவேழன் மகன் முறுவலனைக் குறிப்பிடுகின்ற கவிஞர் 'பேரழகுப் பறழ்புலிபோல் வளர்ந்து வந்தான்' 'புலிபோலும் அவ்விளைஞன்' என்று புலியோடு ஒப்புமைப்படுத்துகிறார்.

**"பாய் புலிகள் போலானார் வீர ரெல்லாம்" (வீ.கா.60:283)**

**"பாய் புலிகள் நகருக்குட் புகுந்த காலை" (வீ.கா.61:284)**

என்பதில் படைவீரர்களைப் பாய்புலிகள் என்று கவிஞர் பாடுகிறார். புலியைக் குறிக்கும் 'வல்லியம்' என்னும் சொல்லையும் கவிஞர் தம் பாடலில் கையாண்டுள்ளார்.

**"வல்லியம் போல் மறவர்புடை சூழ வந்தான்" (வீ.கா.77:344)**

என்று மாவேழன் தன் படைவீரர்கள் புடைசூழ வருவதைக் குறிப்பிடுகிறார்.

**சீயம் (சிங்கம்) :**

கவிஞர் வீரம் பற்றிய பொருண்மையிலான பல பாடல்களில் சிங்கம் பற்றிக் குறிப்பிடுகிறார்.

**"வலைப்பட்ட அரியேறு போன்று" (வீ.கா.17:59)**

**"காட்டுகின்ற பெருவலியால் கார்மு ழக்கால்**
**கண்டவர்தாம் கோளரிஎன் றழைக்க லுற்றார்" (வீ.கா.53:244)**

**"கடுஞ்சீயம் உறுமுதல்போல் சிறுவன் ஆர்த்தான்" (வீ.கா.90:390)**

**"பாய்ந்துவரும் அரிபோலும் அஞ்சா நோக்கும்" (வீ.கா.91:394)**

**"மாமடங்கல் இரண்டுடன்று பொருவதென்ன" (வீ.கா.94:401)**

என்பனவற்றில் சீயம், அரி, கோளரி, மடங்கல், அரியேறு என்று சிங்கத்தின் வெவ்வேறு பெயர்கள் பட்டியலிடப்பெற்றுள.

"ஆளி என்ற சொல் அகநானூற்றிலும் பெரும்பாணாற்றுப் படையிலும் சிங்கத்தைக் குறிக்கிறது. பின்னை இலக்கியங்களில் இச்சொல் சிங்க உடலும், ஆனைத் துதிக்கையும் கொண்டதாக வரும் புராணக் கதையின் விலங்கைக் குறிக்கிறது"[14] என்பர் மு.வரதராசனார்.

**"யாளிக்கு நிகராகும் கலைஞர் தம்மை" (ம.க.கொ.ப.254)**

**"காட்டாளி வலிமைக்குக் காட்டாய் நின்று" (வீ.கா.4:13)**

**"ஆளியிவன் வாளுக்கே இரையாய் வீழ்வோம்" (வீ.கா.73:331)**

என்னும் அடிகள் கவிஞர் மரபு போற்றுபவரென்பதை நன்கு புலப்படுத்தும்.

**யானை:**

வீரத்தைக் குறிப்பிட சிங்கத்தினைக் குறிப்பிடுவதைப் போன்று களிறையும் உவமையாக்கிக் காட்டுகிறார். ஒத்த வீரமுடைய ஆண்மக்கள் இருவர் பொருதுவதனைச் சுட்டும்பொழுது யானையையும் சிங்கத்தையும்

**“களிறனைய பெருமகனும் கடுங்கட்சீயம்**

**கடுக்கவரும் ஒருமகனும் பொருத வந்தார்” (வீ.கா.90:390)**

**“கத்துகுரல் யானையின்மேற் சிங்கம் என்ன” (வீ.கா.105:430)**

என்னும் பாடலடிகள் உணர்த்தும்.

இளைய யானையை,

**“குழக்களிற்றின் அனையானைக் கூற்ற மன்ன” (வீ.கா.58:272)**

என்றுரைப்பர்.

**குதிரை:**

குதிரையின் தோற்றம் குழந்தை முதல் பெரியவர்கள் வரை ஈர்க்கவல்லது. கவிஞர் தம் பாடல்களில் இவுளி, பரிமா, புரவி என்ற சொற்களில் குதிரையைச் சுட்டுவதோடு குதிரையின் சேணத்தைக் ‘கலனை’ என்றும் குதிரையின் வெட்டிவிடப்பட்ட பிடரிமயிரை ‘கொய்உளை’ என்றும் பழந்தமிழ்ச் சொற்களை மீட்டுருவாக்கம் செய்துள்ளார். இதனை,

**“வயங்கெழுமும் ஒரு பரிமான் கலனை யின்றி” (வீ.கா.6:19)**

**“கொய்யுளையாற் பொலிபுரவி முகத்தான் மோதி” (வீ.கா.6:22)**

என்னும் அடிகள் புலப்படுத்தும்.

**மான்:**

வீரகாவியத்தில் வேல்விழியின் பார்வையைக் கவிஞர்,

**“விழிகள் கண்டால் நவ்வியினம் வணங்கி வரும்” (வீ.கா.18:65)**

**“மான் விழைந்த பார்வையினாள்” (வீ.கா.36:154)**

என்று மானே வணங்கும் மான்விழிப் பாவை என்பர்.

படைத்தலைவன் கோளரியின் கூக்குரலைக் கேட்ட வீரர் சிதறியோடுவதனை 'வேங்கையினைக் கண்ட மான்கள் கலைந்தோடும் நிலைபோலச் சிதறிச் சென்றார்' (வீ.கா.88:385) என்று உவமிக்கிறார்.

**மாடு:**

காட்டு விலங்குகளை மட்டுமல்லாமல் வீட்டு விலங்குகளையும் கவிஞர் பாடியுள்ளார். வீரம் செறிந்த ஆண்மகனை,

**"விடை வென்ற தோற்றத்தன் என்பேர்கேட்பின்" (வீ.கா.85:374)**

**"விடைபோலும் மாவலியை விளித்துத் தன்பால்" (வீ.கா.102:422)**

என்று காளைக்கு உவமிக்கிறார்.

பசுவையும், கன்றையும் போல் தாயும், சேயும் பிரியாமலிருக்கத் துணை புரிவதாக வேல்விழியிடம் அவள் தந்தை வயத்தரசன் கூறுவதாக,

**"கன்றினைவிட் டகல்கின்ற ஆவின் தன்மை**
**கனவகத்தும் வாராமல், காத்து நிற்பேன்" (வீ.கா.52:237)**

என்றுரைக்கின்றார்.

**தாயும் கடவுளுமாய் இயற்கை:**

கவிஞர் இயற்கையைத் தாயாக உருவகித்துப் பாடும் பாடலில் தன்னை இயற்கைத் தாயின் குழந்தையாகப் பாவித்துள்ளார். (முடி.க.ப.40) இப்பாடல் சாகித்திய அகாதெமியால் இந்திய மொழிகள் அனைத்திலும் மொழிபெயர்க்கப் பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

சாதிசமய மறுப்புக் கொள்கையுடையவராய்க் கவிஞர் இருப்பினும் இயற்கையையும் தாய்மொழியையும் ஆசிரியர்களையும் இல்லாளையும் கடவுளாய்ப் பாடுகின்ற உளப்பாங்கை அவரது படைப்புகளில் காணமுடிகின்றது. சான்றாகக் 'கடல்' என்னும் தலைப்பிலமைந்த கவிதையில்,

**"நீல மணிக் கடற்கப்பால் கீழ் வானில்**
**நெடுங்கதிரோன் செந்நி றத்தைக்**
**கோலமுடன் பூசுவதைக் கண்டேன் நான்**
**குதித்தெழுந்து கடவுள் என்றேன்" (முடி.க.ப.60)**

என்று கதிரவனைக் கடவுளாய்க் காணுகின்றார்.

இவ்வாறு இயற்கையைத் தாயாக, கடவுளாக மட்டுமல்லாமல் ‘இயற்கையின் எழுச்சி’ என்னும் கவிதையில் அரசியாகவும், (முடி.க.ப.62) ‘ஆறு’ என்னும் கவிதையில் வள்ளலாகவும், (முடி.க.ப.49) ‘காற்று’ என்னும் கவிதையில் ஆசானாகவும் (முடி.க.ப.52) கவிஞர் உருவகித்துள்ளார்.

**தமிழ்:**

“மொழி மனிதப் பிறப்பிற்கு உரிய தனியுடைமை. எண்ணம் மொழித் துணையின்றி வளராது. எண்ண விரிவிற்கு மொழி விரிவும், மொழி விரிவிற்கு இலக்கியப் பயிற்சியும் வேண்டும்”[15] என்பர் வ.சு.ப.மாணிக்கனார்.

முடியரசனாரது படைப்புகளில் தமிழ் குறித்த உள்ளடக்கம் தனித்தஇடம் பெறுகின்றது. மொழி, இனம், நாடு போன்ற தளங்களில் தமிழில் தோய்ந்து எழுந்து எழுச்சி மிக்க படைப்புகளைப் படைத்த வீறு தமிழ்க் கவிஞராக முடியரசனார் காட்சியளிக்கிறார். அறிஞர் அண்ணாவின் மீதும் பாவேந்தர் பாரதிதாசனாரின் மீதும் கொண்ட ஈடுபாட்டால் முடியரசனாரது படைப்புகளில் தமிழ்மொழி, தமிழ் இனம், தமிழ்நாடு குறித்த சிந்தனைகள் முழுவீச்சில் இடம்பெற்றுள.

புதுதில்லியில் இயங்கி வரும் Indian council of Philosophical Research என்னும் நிறுவனம் வெளியிட்டுள்ள The Life & world of the Tamils: Past and present I & II என்ற தலைப்பிலான நூலின் இரண்டாம் பாகத்தில் மொழியியல் அறிஞர் முனைவர் பிரேமா நந்தகுமார் அவர்கள் முடியரசனாரின் படைப்புகள் பற்றி “துரதிர்ஷ்டவசமாக, பல கவிஞர்கள் தங்களின் தனித்தன்மை என்ற சிறகை விரித்து முத்திரை பதித்ததை விட மற்றவர்களைப் பின்பற்றுவதையே முதலாகக் கொண்டிருந்தார்கள். தங்களின் தனித் தன்மையோடு கவிதைகளை இயற்றியவர்களில் முடியரசனார் குறிப்பிடத்தக்கவர்.

முடியரசனார் தமிழ் மொழியை பல்வேறு வகைகளில் புகழ்ந்து நிறைய பாடல் வரிகளை இயற்றியுள்ளார். அவரின் தமிழ் மொழிப் பற்று ஏறத்தாழ அதீத மன உணர்வைப்

போன்று உள்ளது. அம்மொழிப் பற்று அவருக்கென்று ஒரு அடையாளத்தை ஏற்படுத்தியுள்ளது”[16] என்று உரைப்பது இங்கு சுட்டத்தக்கது.

முடியரசனார் தமிழ்மொழியின் மீது கொண்டிருந்த பற்று அளவிடற்கரியது. “கவிஞர் முடியரசனாரின் தமிழ்ப்பற்று கரை புரண்டோடும் தகையது. இந்த அளவிற்குத் தமிழ்பாடிய இன்னொரு கவிஞரைக் காண்பதரிது. பாவேந்தர் உட்பட, பாவலர்கள் அனைவரையும் மிஞ்சித் தமிழ்மொழி பற்றிப்பாடியுள்ள பெருமை கவியரசர் முடியரசனுக்குண்டு. வாழ்நாள் முழுவதும் தாய்த்தமிழின் பெருமையை, சிறப்பை தன்னை மறந்து பாடிப் பரவிய பாவலன் அவர்”[17] என்பர் முனைவர் வா.செ.குழந்தைச்சாமி.

**தமிழ்த் தொன்மை:**

முடியரசனாரது தமிழ் உணர்வைத் தமிழ்மொழி, தமிழ்இனம், தமிழ்நாடு என பகுத்துக் காண இயலும். உலக மொழிகளுள் தொன்மைச்சிறப்பும் இலக்கிய இலக்கண வளமும் உடையது தமிழ்மொழி. இதன் சிறப்பை “உலகத்தில் தொன்மை மிக்க மொழிகளான கிரேக்கம், இலத்தீன், ஈப்ரு, வடமொழி போன்றவை இன்று வழக்கில் இல்லை, ஆனால் தொன்மை மிக்க தமிழ்மொழி இன்று இலக்கியத்திலும் வாழ்கிறது. வழக்கிலும் வாழ்கிறது. திராவிட மொழிக் குடும்பத்தில் மூத்த திராவிட மொழியாகத் திகழ்வதால் மூலத் திராவிட மொழி தமிழ் என்ற சிறப்பும் தமிழுக்கு உண்டு”[18] என்பர் முனைவர் இரா.பாலசுப்பிரமணியன்.

முடியரசனார் தமிழ் மொழியின் தொன்மை குறித்துத் தம் படைப்புகளில் பரவலாகச் சுட்டிக்காட்டியுள்ளார்.

**“வையம் பெற்றது தமிழ் மொழியாம் - அதன்**
**வழிவழி வந்தன பிற மொழியாம்**
**ஐயம் இல்லை உண்மையிதாம்” (கா.பா.ப.8)**

என்பதில் தமிழின் தலைமைத் தன்மையை உரைப்பர்.

**“பூமியில் மானிடர் தோன்றிய நாளே**

**பூத்தனை தாமரைப் பூவினைப் போலே” (கா.பா.ப.5)**

**“முன்னைப் பழம் பொருளே - வேந்தர்**

**மூவர் உயிர்த்தமிழே” (கா.பா.ப.13)**

**“முந்தை மொழிகளிலே - அவளும்**

**மூத்தவ ளாய்ப் பிறந்தாள்” (கா.பா.ப.24)**

**“முன்னைத் தமிழ் மொழியே - உலகில்**

**மூப்பறி யா முதலே” (கா.பா.ப.27)**

**“வையகம் ஈன்ற மக்கள்**

**முதன்முதல் வாய் திறந்து**

**பையவே நாவ சைத்த**

**பைந்தமிழ் மொழியை” (ஊ.கோ.ப.153)**

என்றெல்லாம் உலகின் முதன்மொழி தமிழ்மொழி என்று அறுதியிட்டு உரைக்கின்றார்.

தமிழின் தொன்மை இத்தனை யாண்டுகள் என்று காலங்கணித்துக் கூற இயலாத அளவிற்கு ஆய்விற்கும், கற்பனைக்கும் எட்டாதது என்பதனை,

**“ஆய்தற் றொழிலோர் அறிவினுக் கெட்டாக்**

**காலங் கடந்தநும் தாய்மொழி வாழ” (பூ.கொ.7:141-142)**

**“கற்பனைக் கெட்டாக் காலங் கண்ட**

**நற்றமிழ்ப் பணியே” (பூ.கொ.27:134-135)**

என்று பூங்கொடிக் காப்பியத்தின் வழி உணர்த்துகிறார்.

கன்னடம், துளு, மலையாளம், தெலுங்கு ஆகிய தென்திராவிட மொழிகளுக்குத் தாய்மொழி தமிழ் என்பதைக் காவியப்பாவையில் சுட்டுகிறார். (கா.பா.ப.24)

பூமி முழுதும் நீர் நிறைந்து நிலப்பரப்பே காண இயலாமல் வெள்ளம் பரவியிருந்த காலத்தில், நீர் குறைய அங்கிருந்த உயர்மலை தலைகாட்டி வானோக்கி நின்றதையே பழந்தமிழ்ச்சான்றோர் ‘கற்றோன்றி மண்தோன்றாக் காலத்தே’யென நிலவியல் அறிந்து தம் நூலில் கணித்தார்கள் என்று புறப்பொருள் வெண்பாமாலை வரியை ஆய்வுக்குட்படுத்தி நுட்பமாகப் புலப்படுத்துகிறார். (தா.மொ.கா.ப.8) குறிஞ்சியில் வாழ்ந்த ஆதிமனிதன் பேசும் மொழியறியா பிள்ளைநிலையுற்றிருந்த காலத்தில் தன் நெஞ்சிற்படும் கருத்தினைச்

சைகையினால் எடுத்துரைத்தான். அதுவே கூத்தாக முகிழ்த்தது, கூத்தில் பிறந்த பேருணர்ச்சி மனத்தில் கூத்தாட வாய்திறந்து ஆர்ப்பரித்துக் கூவினான். பெருவியப்புக் கொண்டு மீண்டும் மீண்டும் குரலெடுத்துக் கூவினான். கூவிய குரல்கேட்டு பெருமகிழ்வால் கை கொட்டினான். கூவுதலும் கொட்டுதலும் கூடி இசைத்தமிழ் தோன்றியது. கண்ணசைத்தும் கையசைத்தும் காலம் கடந்துவரப் பைய நாவசைத்தான், பாலோ தெளிதேனோ நற்கரும்பின் தீஞ்சாறோ என்னுமளவில் சொல் மொழிந்தான். மீண்டும் அதைச் சொல்லிச்சொல்லிப் பழகினான். அதுவே மெல்லத் தமிழாகி இல்லைநிகர் என்ன இயலாய்க் கனிந்தது (தா.மொ.கா.பக்.9-10) என்று கூத்து, இசை, இயல் என முத்தமிழ் தோன்றியதை மொழியியல் நோக்கில் கவிஞர் விளக்குவர்.

**தமிழ்த்தூய்மை:**

பிறமொழிக் கலப்பின்றித் தனித்தியங்கும் ஆற்றல் தமிழுக்கு உண்டு. தமிழ்மொழியில் கலந்துள்ள பிறமொழிச் சொற்களுக்கு மாற்றாகத் தூயதமிழ்ச் சொற்களைப் பயன்படுத்த தமிழில் சொல்வளம் நிறைய உண்டு என்பது கவிஞர் கருத்தாகும். ஏனெனில் மொழித்தூய்மை இல்லை எனில் மொழியைக் காத்தல் இயலாது.

இதனை "மொழித்தூய்மை என்பது ஒரு கருத்தியலாக மட்டுமின்றி ஒரு செயல்பாடாகவே கருதப்படுகிறது. எனவே மொழித் தூய்மையாக்கத்தை மொழித் திட்டமிடுதலின் ஒரு பகுதியாகக் கொள்ளலாம். மொழிவளர்ச்சிக்காகச் செய்யப்படும் செயல்பாடாக இருந்தாலும் இச்செயல்பாட்டில் மொழியின் பாதுகாப்பும் மொழியின் மீட்சியும் முக்கியமானதாகிறது"[19] என்னும் எல்.இராமமூர்த்தியின் கருத்து மெய்ப்பிக்கும்.

முடியரசனார் தமிழின் தனித்தன்மைகளை,

**"முதலோடு முடிவில்லாப் பெருமை, நான்கு**
**மொழிபெற்றும் மூப்பில்லா இளமைத் தன்மை**
**அதனோடு மிகுமினிமை, காலஞ் சொல்ல**
**அமையாத பழந்தொன்மை, தனித்தி யங்கி**
**உதவுநிலை வளர்பண்பும், எளிமை யாவும்**
**உயர்தனிச்செந் தமிழுக்கே உண்டாம்" (முடி.க.ப.134)**

என்று போற்றிப் பரவுகின்றார்.

‘தூய நற்றமிழ்’ (பூ.கொ.11:148), ‘உயர்தனிச் செம்மொழி கலப்பிலாதியங்கும்’ (முடி.க.ப.81), ‘உயர்தனிச் செம்மை வாய்ந்த ஒருமொழி தமிழாம்’ (வ.கோ.ப.92), ‘தனிமொழி எதுவோ அந்தத் தூய்மொழி’ (ஊ.கோ.ப.152) என்று உயர்தனிச் செம்மொழியாம் தூய்மொழி என்று தமிழைப் பாடுகின்றார்.

**“வயலுக்கு வரப்பொன்றும் வேண்டா மென்றால்**
**வளக்கரைகள் ஆற்றுக்கு வேண்டா மென்றால்**
**இயல்மொழிக்கும் இலக்கணமே வேண்டாம் பெண்ணே” (முடி.க.ப.123)**

என்பதில் மொழியைக் காக்கும் வரம்பிலையேல் எம்மொழியும் அழிந்துபோகும் என்பது முடியரசனார் கருத்து, முடியரசனார் கவிதைகளில் பழந்தமிழ்ச் சொற்கள் பல மீட்டுருவாக்கம் பெற்றுள்ளன. சான்றாக, “ஓகை (மகிழ்ச்சி), நூறி (அரைத்து), நாப்பண் (நடுவில்), அயிர்ப்பு (ஐயம்), சோரி (குருதி), நென்னல் (நேற்று), வெந் (முதுகு), வெய்துயிர்த்து (பெருமூச்சுவிட்டு), மேதி (எருமை), தள்ளை (தாய்), இரிந்தோட (தோற்றோட) குய்யம் (வஞ்சனை), சாலி (நெற்பயிர்), அளறு (சேறு), களமர் (உழவர்), காவணம் (பந்தல்), வதியிடன் (தங்குமிடம்), சாளரம், பலகணி (சன்னல்), வட்கார் (பகைவர்)”[20] போன்ற பல சொற்களைக் குறிப்பிடலாம். முடியரசனாரின் கவிதை, கட்டுரை, கடிதம், சிறுகதை முதலிய படைப்புகள் அனைத்தும் பிறமொழிக் கலப்பின்றி மொழித்தூய்மையை நிலை நாட்டுவனவாய் அமைந்துள்ளன.

‘செம்பொன்னோடு செம்பு கலந்தால்தான் அணிகலன்கள் செய்திட இயலும். அதுபோல் தமிழ்மொழியோடு பிறமொழி கலப்பதைத் தடுப்பதால் தமிழ் வளராது’ என்று தமிழர்சிலர் மொழிக்கலப்பினை ஆதரிப்பதனைக் கண்டு உள்ளம் பொறாது பூங்கொடி காப்பியத்தில்,

**“அமிழ்தம் இனிக்க அச்சு வெல்லம்**
**கலப்போர் உலகிற் கண்டோ மில்லை;**
**உலப்பிலாத் தமிழ்மொழி உயர்தனிச் செம்மொழி**
**கலப்பிலா தியங்கும், கற்றவர் அறிவர்;**
**செம்பு கலந்தணி செய்வதும் இயற்கை,**

**செம்பும் மிகவே சேந்திடப் பெறுமேல்**

**கலன்செய அப்பொன் பயன்படா தொழியும்" (பூ.கொ.12:52-58)**

என்று மொழிக்கலப்பிற்கு எதிராய்க் கண்டனக்குரல் எழுப்புகிறார்.

'அயன்மொழிச் சொற்களைக் கையாளும் போது அவற்றிற்கேற்ப ஆக்கச் சொற்களைக் கண்டுபிடித்தெழுது. புதுப்புது ஆக்கச் சொற்களை ஆக்கிக் கொள்வதற்கேற்ற உயர்தனிச் செம்மொழிதான் நம்மொழி. இதனை மொழியறிஞர் பலரும் ஒப்புக்கொண்டுள்ளனர். ஆக்கச் சொல்லுக்கு அடங்காதாயின் நம் ஒலி மரபிற்கேற்ப மாற்றிக் கொள்ளுதல் வேண்டும்' (முடி.கடி.ப.71) என்று தம் கடிதத்தின் வழி உரைக்கின்றார்.

**"வட சொற்கிளவி வட எழுத்து ஒரீஇ**

**எழுத்தொடு புணர்ந்த சொல்லாகும்மே"[20]**

என்ற தொல்காப்பிய நூற்பாவிற்கு உடன்படும் கவிஞர் இருக்கும் சொற்களை விடுத்து வேறு மொழிகளிடம் கடன் வாங்குதல் கூடாது. பிறமொழிக் கலப்பால் தமிழின் தன்மை கெட்டுவிடாமல் பார்த்துக்கொள்ளுதல் வேண்டும். பிறமொழிச் சொற்களைக் கையாளும் போதும் தமிழ் ஒலி மரபிற்கேற்பவே கையாளுதல் வேண்டும் என்பன போன்ற கொள்கையில் உறுதியாக உள்ளார்.

**தமிழ்ப்பற்று:**

"முடியரசனார் தமிழின் மீது கொண்டிருந்த பற்று அளவிடற்கரியது. தமிழ் அவரது உயிர் எமக்குத் தெரிந்தவரை தமிழை இத்துணை நேசித்த ஒருவரை யாம் இதுவரை கண்டதில்லை என்போம்"[21] என்று முனைவர் தமிழண்ணல் குறிப்பிடுவது ஈண்டு சுட்டுதற்குரியது.

தமிழர்களிடையே தமிழ்ப்பற்று இல்லா நிலை கண்டு வருந்துகிற முடியரசனார் 'பிற நாட்டினர்க்கு மொழிப்பற்று, மொழியுணர்ச்சி யென்பது இயல்பாக வாய்ந்த ஒரு பண்பு. தமிழ்நாட்டில் மட்டும் தமிழ்ச்சான்றோர் தட்டித் தட்டி யெழுப்பியும் அரசியல் தலைவர்கள்

போர்ப்பறை சாற்றியும் மொழிப்பற்றை உண்டாக்க வேண்டிய ஓர் அவலநிலை இருந்து வருகிறது' (எ.வ.த.பக்.3-4) என்று மனம் புழுங்குகின்றார்.

**"மணவினையில் தமிழுண்டா? பயின்றார் தம்முன்**
**வாய்ப்பேச்சில் தமிழுண்டா? மாண்ட பின்னர்**
**பிணவினையில் தமிழுண்டா? ஆவணத்தில்**
**பிழையோடு தமிழுண்டு; கோவில் சென்றால்**
**கணகணவென் றொலியுண்டு; தமிழை கேட்கக்**
**கடவுளரும் கூசிடுவர்; அந்தோ! அந்தோ!**
**அணுவளவும் மொழியுணர்ச்சி இல்லா நாட்டில்**
**ஆத்திகரே இறையுணர்ச்சி வளர்வ தெங்கே?" (முடி.க.ப.121)**

என்று வினவுகின்றார்.

தன்னைப் பழிப்பவனைப் பகையாய் நினையாத உள்ளம், தமிழைப் பழிப்பவனைப் பகையாய் நினைப்பதாகப் பாடும் கவிஞர்,

**"தீங்குனைச் சாரு தென்றால்-என்றன்**
**சிந்தை கொதிக்கு தம்மா!**
**பாங்குனை மேவு தென்றால் - நெஞ்சம்**
**பாய்ந்து மகிழு தம்மா!**
**தாயைப் பழித்துரைத்தால் - நெஞ்சம்**
**தாங்கிட ஒப்பவில்லை**
**நாயவன் என்றுமிழ - உணர்வு**
**நாடிப் பெருகுதம்மா" (கா.பா.ப.13)**

என்று தமிழுக்குத் தீங்கு நேர்ந்தால் தன் சிந்தை கொதிப்பதாகவும், நன்மை சேர்ந்தால் உள்ளம் பாய்ந்து மகிழ்வதாகவும் தம் தமிழ்ப்பற்றை வெளிப்படுத்தியுள்ளார்.

பாரதியார் கண்ணனைப் பல்வேறு பரிமாணங்களில், உறவுகளாய் கண்ணன் என்தோழன், கண்ணன் என்தாய், கண்ணன் என்தந்தை, கண்ணன் என்சேவகன், கண்ணன் என்அரசன், கண்ணன் என்சீடன், கண்ணன்-எனதுசற்குரு, கண்ணம்மா என்குழந்தை, கண்ணன் என் விளையாட்டுப்பிள்ளை, கண்ணன் என்காதலன், கண்ணன் என்காந்தன், கண்ணம்மா என்காதலி, கண்ணன் என்ஆண்டான், கண்ணன் எனது குலதெய்வம் என்றெல்லாம் சித்திரித்துப்

பாடுவதைப் போன்று முடியரசனார் தமிழ் என்தெய்வம், தமிழ் என்தாய், தமிழ் என்தந்தை, தமிழ் என்காதலி, தமிழ் என் மனைவி, தமிழ் என்மகன் என்று பல்வேறு உறவு நிலைகளில் தமிழைப் பாடியுள்ளார். தமிழைத் தம் மனைவியாகப் பாடியுள்ளமை கவிஞரின் புதுமைச் சிந்தனைக்குச் சான்றாகும்.

முடியரசனார் கடவுள் மறுப்புக் கொள்கையுடையவராயினும் தம் படைப்புகளில் பலவிடங்களில் தமிழைத் தம் தெய்வமாகப் பாடியுள்ளார். பூங்கொடி காப்பியத்தின் தமிழ்த்தெய்வ வணக்கப் பாடலில்,

**“பாவால் தொழுதேத்திப் பாரில் நினையுயர்த்தும்**
**ஓவாப் பணிசெய்ய உன்னுகின்றேன் - நாவாழும்**
**மூவா முதலே முழுமைபெறும் செம்பொருளே**
**சாவா வரமெனக்குத் தா**
**தென்பால் உகந்தாளும் தெய்வத் திருமகளே**
**என்பால் அரும்பி எழுமுணர்வை - அன்பால்**
**தொடுத்தே அணிதிகழச் சூட்டினேன் பாவாய்**
**அடிக்கே எனையாண் டருள்” (பூ.கொ.ப.15)**

என்று தமிழ்த் தெய்வத்திடம் சாவா வரம் தந்து தன்னை ஆண்டு அருளுமாறு வேண்டுகிறார்.

தாய்மொழியைத் தாழ்த்திவிட்டு, புறந்தள்ளி விட்டு பிறமொழிகளை உயர்த்திப் பிடிப்பதை, தேடிப்படிப்பதை அறவே வெறுக்கின்ற கவிஞர் இளவரசனுக்கு என்னும் கடிதவிலக்கிய நூலில் ‘தாய்மொழியைப் புறக்கணித்துவிட்டுப் பிறவற்றிற்கு ஆக்கந் தேடுதல் தகாது என்றுதான் சொல்கிறேன். பிற மொழிகளே கூடாதென்று கூறவில்லை, தமிழறியாத, தமிழுணர்வே இல்லாத நிலையிற் பிறமொழி கற்பது கூடாதென்றுதான் சொல்கிறேன்; பிறமொழிப் பயிற்சியும் தமிழுக்கு ஆக்கந்தருமேல் வேண்டற்பாலது; வரவேற்கத்தக்கது. தமிழுக்கு ஊறு நேருமேல் அப்பயிற்சி அறவே கூடாது’ (முடி.கடி.பக்.64-65) என்று உறுதிபடத் தெரிவிக்கிறார்.

இந்தித் திணிப்பிற்கெதிரான மொழிப் போரில் முன்நின்ற கவிஞர் இந்திமொழி திணிப்பிற்கு எதிராய்ப் படைத்த கவிதைகள் தாய்மொழி காப்போம் நூல் முழுமையும் இடம் பெற்றுள்ளன.

**"எப்படியும் இந்தியினைத் திணிப்ப தென்றே**
**எண்ணிமுடி வெடுத்துள்ளார் வடக்கில் வாழ்வோர்**
**ஒப்புடைய செயல்செய்ய எண்ண வில்லை;**
**உயர்ந்தவர் சொல் அவர்செவியில் ஏற வில்லை;**
**அப்படியே விடுமெண்ணம் எமக்கும் இல்லை**
**அவரவர்க்குத் தாய்மொழியுண் டென்று ணர்த்தி**
**இப்படியில் தமிழ்மொழியின் உரிமை காக்க**
**எழுந்துவிட்டோம் இரண்டிலொன்று பார்த்தே நிற்போம்"**

**(தா.கா.ப.25)**

என்று போராட்டத்தின் முன்னின்று பாடுகின்றார்.

**"என்னாட்டிற் கலைக்கூடம் ஆட்சி மன்றம்**
**எத்துறையும் தமிழ்மொழியின் ஆட்சி வேண்டும்;**
**இந்நாட்டம் நிறைவெய்த வில்லை என்றால்**
**இருந்தென்ன வாழ்ந்தென்ன சாவே மேலாம்" (தா.கா.ப.11)**

என்று தமிழை உயிருக்கும் மேலாகக் கருதிப் பாடுகின்றார்.

'தம்மை நினைந்தவர் தமிழை மறப்பர்; தமிழை நினைந்தவர் தம்மை மறப்பர்' (எ.வ.த.ப.96) என்று பாடியதோடு அதைத்தம் வாழ்விலும் கடைப்பிடித்தவர் முடியரசனார்.

**"என்னுயிரை இருவிழியைத் தாயின் மேலாம்**
**எழில் மொழியை நான்வணங்குந் தெய்வந் தன்னை" (ஞா.தி.ப.168)**

என்று தமிழ் மீதான தம் உறவை, உணர்வை அடுக்கியுரைக்கின்றார்.

'காக்கையின் கடிதங்கள்' என்னும் சிறுகதையில் கதைத் தலைவி தன் தாய்க்கு எழுதும் கடிதத்தில் தமிழாசிரியரை மணம்செய்வித்து தம் வாழ்வைப் பாழாக்கிவிட்டதாகவும், தம் கணவர் நல்ல தமிழிலேயே பேசச் சொல்லி வற்புறுத்துவதாகவும் கடிதங்கள் எழுதுகிறாள். பிறகு காலஞ் செல்லச் செல்ல தாய்மொழியைப் புறக்கணித்தல் தவறு என்பதை உணர்ந்து தனித்தமிழில் உரையாடுவதையும் இலக்கியங்களைச் சுவைத்து மகிழ்வதையும் மொழிப் போராட்டத்தில் பங்கேற்றுச்சிறை செல்வதையும் கடிதமெழுதுகிறாள். மொழிப் பற்றின்றியிருத்தல் கயமை என்பதை அச்சிறுகதையின் வழி உணர்த்துகிறார் கவிஞர்.

“முடியரசனார் தாம் பணியாற்றிய பள்ளிக்கூடங்களில் வகுப்பறையில் நுழைந்ததும் வணக்கம் கூறுவதற்கு முன்பாக ‘வெல்கதமிழ்’ என்று மாணவர்களோடு ஒரு சேர முழங்கிவிட்டுத்தான் பாடத்தைத் தொடங்குவார். இதனால் கவிஞரை ‘வெல்கதமிழ் வாத்தியார்’ என்று பட்டம் சூட்டி மாணவர்கள் அழைப்பர்.”[22]

முடியரசனாரின் தமிழ்ப்பற்று குறித்து, “நம் தாய்மொழியைக் குறித்துப் பாடும்போது முடியரசனார் அடையும் பேரானந்தத்திற்கு அளவேயில்லை, தமிழ் செழித்து வளர வழிமுறைகளை வகுத்துக்காட்டுகிறார். மொழிப்பற்று ஊட்டும் அவரது கவிதைகள் குழந்தைகளுக்கும் புரியும் எளிமை வாய்ந்தன” (முடி.க.ப.16) என்று வி.ஆர்.எம். செட்டியார் முடியரசன் கவிதைகள் நூலின் முன்னுரையில் போற்றுகின்றார்.

முடியரசனார் தமிழ் நாட்டு இசையரங்குகளில் தமிழ் பாடாமல் பிறமொழியில் பாடுவதனைக் கண்டு உள்ளம் கொதித்து எழுதிய தமிழிசைப் பாடல்களின் தொகுப்பு நூலே காவியப்பாவை. முடியரசனார் மூப்பால் உடல் தளர்வுற்ற போதும் மொழிப்பற்றில் தளராது,

**“இடர்பல சூழ்ந்த போதும்**
**என்னுடல் தளர்ந்த போதும்**
**மிடியெனைத் தின்ற போதும்**
**விழியொளி குறைந்த போதும்**
**கடமையில் தவறேன் அம்மா;**
**கனிந்துனைப் பாடிப் பாடி**
**இடுபணி புரித லன்றி**
**இனியெனக் கென்ன வேலை?” (நெ.பூ.ப.199)**

என்று பாடியுள்ளார். மேலும் வாழ்நாளில் இறுதி வரையிலும் தமிழையே தம் உயிர் மூச்சாகக் கொண்டிருந்தார் என்பதனை,

**“வாளால் பிழப்பினும் வாழ்நாள் இழப்பினும் வஞ்சமனக்**
**கேளார் குழுமிக் கெடுதிகள் சூழினும் பூமியில்வாழ்**
**நாளெலாம் வாட்டும் நலிவே உறினும் நற்றமிழே**
**ஆளாதல் திண்ணம் அடியேன் நினது மலரடிக்கே” (நெ.பூ.ப.198)**

என்று அவர் இறுதியாக இயற்றிய கவிதையும் புலப்படுத்தும்.

**"பாடிக்கொண் டேயிருப்பேன் - என்**
**பைந்தமிழைச் செந்தமிழை நான்**
**ஓடிக்கொண் டேயிருக்கும் ஊறுஞ்செங் குருதி**
**ஓடா துறைந்தே ஓய்ந்திடும் நாள்வரை" (கா.பா.ப.104)**

என்ற அவர் பாடிய பாடலைக் கேட்டவாறே கவிஞரின் உயிர் பிரிந்தது.[24] என்னும் செய்தி அவர்தம் தமிழ்ப்பற்றினைப் பெரிதும் விளக்கும்.

"கவிஞர் முடியரசனாரின் தமிழ்ப்பற்று கரை புரண்டோடும் தகையது. இந்த அளவிற்குத் தமிழ்பாடிய இன்னொரு கவிஞரைக் காண்பதரிது. பாவேந்தர் உட்பட, பாவலர்கள் அனைவரையும் மிஞ்சித் தமிழ்மொழி பற்றிப் பாடியுள்ள பெருமை கவியரசர் முடியரசனுக்குண்டு. வாழ்நாள் முழுவதும் தாய்த்தமிழின் பெருமையை சிறப்பை தன்னை மறந்து பாடிப் பரவிய பாவலன் அவர்"[25] என்பர் வா.செ.குழந்தைசாமி.

**தமிழ் வளர்ச்சி:**

முடியரசனார் தமிழ் மொழியின், பழம்பெருமைகளைப் போற்றிப் பரவியதோடு நின்றுவிடவில்லை.

**"தேமதுரத் தமிழோசை உலகமெலாம்**
**பரவும் வகை செய்தல் வேண்டும்**
**சேமமுற வேண்டுமெனில் தெருவெல்லாம்**
**தமிழ் முழக்கம் செழிக்கச் செய்வீர்!**
**பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்**
**தமிழ்மொழியிற் பெயர்த்தல் வேண்டும்;**
**மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள்**
**சொல்வதிலோர் மகிமை இல்லை;**
**திறமையான புலமையெனில் வெளிநாட்டோர்**
**அதைவணக்கஞ் செய்தல் வேண்டும்"[25]**

என்று பாரதியும்,

**"எளிய நடையில் தமிழ்நூல் எழுதிடவும் வேண்டும்:**
**இலக்கணநூல் புதிதாக இயற்றுதலும் வேண்டும்"[26]**

என்று பாரதிதாசனும் தமிழ் வளர்ச்சிக்குக் கூறிய வழிமுறைகளை,

தெருவெல்லாம் தமிழ் முழங்கப் போராட்டங்களை முன்னின்று நடத்தியதன் வழியும் பாரசீகக் கவிஞர் நிசாமி எழுதிய கோசுருசிரீன் என்னும் பெருங்காப்பியக் கதையைத் தழுவி எழுதிய ‘காதற்சிலை’ என்னும் நெடும்பாட்டையும் (முடி.க.ப.18), ஆங்கில எழுத்தாளர் மாத்யூ அர்னால்டு எழுதிய பாரசீகக் கவிதையை ‘வீரகாவியம்’ என்னும் காப்பியமாகவும், ஊட் என்பவரின் பாடலைத் தழுவி ‘அன்றும் இன்றும்’ (நெ.பூ.ப.222) என்னும் கவிதையை எழுதியும் பிறநாட்டு நல்லறிஞர் நூல்களைத் தழுவல் நூல்களாகத் தமிழில் படைத்து  தம்படைப்பின் வழிச் செயல் வடிவம் கொடுத்தவர் முடியரசனார்.

மேலும் எளிய நடை ‘தமிழ் இலக்கணம்’ என்னும் நூலையும் எழுதியுள்ளார். ‘பூங்கொடி’ என்னும் மொழிப் போர் காப்பியம், ‘இளம்பெருவழுதி’ நாடகக்காப்பியம், இசைத்தமிழ் பாடல்களடங்கிய ‘காவியப்பாவை’ போன்ற இறவாத புகழுடைய புதுநூல்களை எழுதினார். கவிஞரின் புலமையை  வெளிநாட்டாரும் வணங்கினர். குறிப்பாகச் சோவியத் நாட்டறிஞர் ரூதின், ‘மொழி ஆய்வாளனாகிய என் மனத்தைக் கவர்ந்தது அவர் (முடியரசன்) மொழி, அவர் (முடியரசன்) நடை என்று போற்றியுரைக்கின்றார். மலேசியத் ‘தமிழ்நேசன்’ இதழ், ‘பாரதிதாசன் வழித்தோன்றல் கவிஞர் முடியரசன் தீட்டும் தீஞ்சுவைக் கவிதைகள்’ (பா.ப.வ.ப.ப.175) என்று புகழ்சூட்டியுள்ளது,

‘தாய் மொழியை வளர்ப்பதில் கட்சி, சாதி, சமயம் பாகுபாடு இருத்தல் கூடாது. தமிழர் யாவர்க்கும் தாய்மொழியை வளர்ப்பதிலே உரிமையுண்டு. சாதியினைப் புகுத்துவது சதியாகும், மொழிவளர்ப்பதில் சமயம் வரின் மொழியழியும் சமயந்தோன்றும்’ (தா.கா.ப.59) என்று எச்சரிக்கை விடுக்கின்றார்.

தமிழ்மொழி ஆட்சி வேண்டுமென்று உரிமை விழைவதனை சிலர் குறுகிய நோக்கமென்று பழிதூற்ற, அவர்களுக்குப் பதிலுரைக்கும் கவிஞர் ‘இந்த நாட்டிலே வேறுமொழி ஆதிக்கம்  செலுத்த வேண்டுமென்பது தான் குறுகிய நோக்கமும் கெட்ட நோக்கமும் ஆகும்.

நாம் வேறொரு நாட்டிலே சென்று தமிழ்மொழிதான் ஆட்சி செலுத்த வேண்டுமென்று கூறினால் அது தவறு; குறுகிய நோக்கமும் ஆகும். நாம் நம்முடைய நாட்டிலே நம் மொழி வாழ, வளர, வளம் பெற, ஆள விரும்புகிறோம். இது தவறென்றோ குறுகிய நோக்கமென்றோ அறிவுடைய எவருமே சொல்லார்' (முடி.கடி.ப.62) என்று தெளிவுறுத்துகிறார்.

'நம் ஊர்ப் பெயர்கள், தெருப்பெயர்கள், மக்கள் பெயர்கள் அனைத்தும் தமிழாக்கப்படல் வேண்டும்' (முடி.கடி.ப.72) என்று வலியுறுத்தும் கவிஞர் இசையரங்குகளிலும் தமிழ்ப்பாடலே ஒலிக்க வேண்டுமென்று விழைகின்றார். 'மொழி, நாடு, காதல், அறம் முதலியவற்றை மையமாகக் கொண்டவை இப்பாடல்கள் இவை. தமிழிசைக்கு ஒரு வளர்ச்சிப்படியாக அமையும் என எண்ணுகிறேன்' என்று தம் காவியப்பாவை நூலின் முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார்.

பூங்கொடி காப்பியத்தில் பன்மொழிப் பயிற்சிக்குழு, இலக்கியம் பரப்புக்குழு, புதுநூல் படைப்புக்குழு, வழூஉக் களைவோர் குழு, அறப்போர் ஆற்றுங்குழு (பூ.கொ, 29:81-226) ஆகிய குழுக்களின் நோக்கங்களையும், பணிகளையும் தமிழ்வளர்ச்சிக்கான திட்டமிடலாக பூங்கொடி வாயிலாகத் தெளிவுறுத்துகிறார்.

'தேமதுரத் தமிழோசை உலகமெலாம் பரவி வரும் காலம் இது. அவ்வோசையைக் கவிதைகளாற்றான் நன்கு ஒலித்துக் காட்டமுடியும். பட்டப்பகலிலே பாவலர்க்குத் தோன்றுவதாகிய நெட்டைக் கனவு நனவாவது உறுதி; உறுதி. தமிழ்ப்பாட்டுத் திறத்தால் வையத்தைப் பாலிக்கும் நாள் நம் எதிரே காட்சியளிக்கிறது' (எ.வ.த.ப.41) என்று தம் படைப்புகளின் வழி ஓங்கி ஒலிக்கின்றார்.

தூயதமிழ் ஆட்சியே தம் குறிக்கோள் என்பதனை,

**"அரியணை தமிழுக் கென்றே**
**அரசினர் புகன்றா ரேனும்**
**புரிமொழி என்று சொல்லிப்**
**பிறமொழி புகுத்தல் காணின்**
**சரிஎன ஒப்பேல்! தக்க**

**சான்றவர் புலத்தால் ஆய்ந்த**
**முறையினால் கலைச்சொல் ஆக்க**
**முனைந்திடச் செய்தல் வேண்டும்**
**அரியணை ஏற்றி வைத்த**
**அரசுக்கு நன்றி சொல்லித்**
**திருமண நிகழ்ச்சி யாவும்**
**தெளிதமிழ் கேட்கச் செய்வீர்!**
**இறைமுனும் தமிழே கேட்க**
**இணைந்துநீர் தொண்டு செய்வீர்!**
**துறைதொறும் தமிழே காணின்**
**தூய்தமிழ் ஆட்சி என்போம்" (முடி.க.ப.133)**

என்று அரசு தமிழ் மொழியை ஆட்சிமொழியாக்கியது மட்டும் போதாது. தமிழர்களும் தம்மாலான முயற்சிகளை மேற்கொண்டு கலைச்சொல் ஆக்கம், திருமணநிகழ்வு, இறைவழிபாடு ஆகியவற்றிலும் தூயதமிழ் கேட்க அனைவரும் இணைந்து தொண்டாற்ற வேண்டும். துறைதொறும் தமிழ் ஆட்சி நிலைபெறச் செய்ய வேண்டுமென்று தமிழ் வளர்ச்சிக்கு வழியுரைக்கின்றார்.

**இனம்:**

முடியரசனார்க்கு மொழியுணர்வைப் போன்றே இனவுணர்வும் மிகுதியாக இருந்தது. ஒவ்வொரு இனத்திற்கும் அவரவரின் தாய்மொழியே அடையாளமாகத் திகழ்கிறது.

**"திங்களொடும் செழும்பரிதி தன்னோடும் விண்ணோடும் உடுக்களோடும்**
**மங்குகடல் இவற்றோடும் பிறந்ததமிழுடன் பிறந்தோம் நாங்கள்"** [28]

என்று பாரதிதாசனார் தமிழோடு தமிழினம் பிறந்ததைச் சுட்டுகின்றார்.

"தமிழ் வேறு தமிழன் வேறென்று பிரித்தறியா வகையில் மொழியும் இனமும் ஒன்றோடொன்று பின்னிப்பிணைந்திருக்கிறது."[29]

'முடியரசனார் மாபெரும் தமிழ்த் தேசியப் பாவலர்; தமிழின எழுச்சிப் பாவலர். தமிழுணர்ச்சியும் தமிழ் வீறும் மிக்க அவரது பாடல்கள் தமிழ்த் தேசியப்

படைக்கலன்களாகும். இயற்கை, காதல், குமுகாயம், அரசியல் என எதைப் பாடினாலும் அவற்றில் தமிழ் மொழி, இனம், நாடு இவைகளே ஊடாடும். அவரது எண்ணம் எப்பொழுதும் தமிழாகவே இருந்தது. தமிழும் தமிழரும் நாடாள வேண்டுமென்பதே அவரது இலக்கு. அந்த இலக்கை நாம் அடைவதே அவருக்கு நாம் காட்டும் நன்றி'[30] என்பர் பாவலரேறு பெருஞ்சித்திரனார்.

**இனமாட்சி:**

முடியரசனாரின் இனவுணர்வு குறித்த பொருண்மையை இனமாட்சி, இனக்காட்சி, இனமீட்சி என்னும் தலைப்புகளில் பகுத்தறிய இயலும். தமிழர் இனம் தனித்த பெரும் புகழுடையது, 'புதியதொரு விதி செய்வோம்' என்னும் நூலில் 'தமிழின வரலாறு' என்னும் நெடுங்கவிதையைக் கவிஞர் பாடியுள்ளார்.

'கல்லையும் முள்ளையும் எடுத்துக்காட்டும் பெருவெளியைத் தம்உழைப்பால் வளப்படுத்தி ஊராக்கி ஓங்கும் நகராக்கி நாடென்ற பேராக்கி வாழ்ந்த பெருமையை அவன் பெற்றான். நிலத்தைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்று நானிலமாய்ப் பிரித்தான் நாகரிக மாந்தன். கோட்டைச் சுவரெடுத்து, நாளும் குடி பழி தூற்றாது கோலோச்சி நல்லபடி அரசு செய்து, மாந்தர் உயிரானால் வேந்தர் உடலாகவும், வேந்தன் உயிரானால் மாந்தர் உடலாகவும் வாழ்ந்தான். ஆழக்கடல் கடந்தான். அஞ்சும் சமர் கடந்தான். சூழும் பனிமலையைச் சுற்றிக் கொடி பொறித்தான். ஆழிக்குள் முக்குளித்தான். தோணிக்குள் முத்தெடுத்தான். ஏலம், மிளகு முதற்பண்டங்கள் ஏற்றிப் பயன்நல்கும் வாணிகத்தால் கண்டங்கள் சுற்றிக் கலமேறி வந்தான். காட்டைத் திருத்திக் கழனி எனவாக்கி மேட்டைச் சமமாக்கி வேளாண் தொழில் புரிந்தான். பாராளும் காராளர்க்கும் பாட்டாளும் பாவலர்க்கும் ஏராளும்காராளன் செய்யுதவி ஏராளம். சாவா மருந்தாகிய அமிழ்தம் கிடைத்தாலும் தனித்துத் தானே உண்ணான். வெறுப்பவர்களையும் அன்பு செலுத்துவான். துஞ்சுதலும் அஞ்சுதலுமின்றி நெஞ்சில் உரமும் நெடுந்தோளில் வல்லமையும் மிகுந்தவன். ஆனாலும் அஞ்சுவதை அஞ்சி அகற்றி விலக்கிடுவான். புகழ் கிடைக்குமென்றால் உயிரும் கொடுப்பான். பழிவருமென்றால்

தூவென்று உமிழ்ந்து ஒதுக்கி கடல்சூழ் உலகமே கிடைப்பதாயினும் மறுத்துவிடுவான். தன்னலம் தவிர்த்துப் பிறர் நலம் பேணுவான். யாதும் என் ஊர் யாவரும் கேளிர் என்பான். தீதும் சூதும் அறியாதவன். சாவைக் கண்டு அஞ்சான். தன்னிற் பெரியோரைத் தான் வியந்து நின்றாலும் தன்னிற் சிறியோரைச் சற்றும் இகழ்ந்தறியான். ஒன்றே குலமென்றான். தேவன் ஒருவனென்றான். நல்ல இறையுணர்வை நாட்டிற்கு உணர்த்தி வந்தான்' (பு.வி.செ.ப.135) என்று பழந்தமிழ் இலக்கியங்களிலுள்ள பண்டைத் தமிழர் வாழ்வியலைப் பாட்டாய் வடித்துள்ளார்.

**"வாழ்ந்த தமிழினத்தின் வாய்த்த வரலாறு**
**சூழ்ந்து சொலக்கருதின் சொல்லில் அடங்காது;**
**நாகரிகத் தொட்டில் நமது திருநாடு**
**வாகுடனே வாழ்ந்த வரலா றிதுவாகும்" (பு.வி.செ.ப.136)**

என்று தமிழின வரலாற்றின் சிறப்பினைப் பாடுவர்.

**தமிழ் வாழ்வு:**

பண்டைத் தமிழரின் வாழ்வியல் சீர்பெற்றுச் சிறந்திருந்ததாகக் குறிப்பிடும் கவிஞர் தமிழ்வாழ்வு எத்தகையது என்பதனைச் சுட்டும்பொழுது உயிர் பெரிதா? மானம் பெரிதா? என்று தமிழனிடம் கேட்டால் உயிர் சிறிது. மானம் தான் பெரிது என்பான். உயிர் கொடுத்தும் தன்மானம் காக்கின்ற ஒரு வாழ்வே தமிழ்வாழ்வு. தமிழனைத் தருக்குடைய பிறநாட்டான் இழித்துரைத்தால் என்னினத்தை இகழ்ந்தவனை விட்டு வைக்கமாட்டேன் என்றெழுந்த மற வாழ்வே தமிழ் வாழ்வு. ஒரு கடவுள் ஒரு சாதி என்ற பாங்கில் ஓரினமாய் அயலவரும் உறவாய், நட்பாய்ப் பெருமையுடன் தமிழ் மொழியை, தமிழ் நாட்டைப் பேணிப் பெருமைபெற வாழ்வதுவே தமிழ வாழ்வு என்று பெருமை பாராட்டுகின்றார்.

**"நம் பெயரில் தமிழிருத்தல், ஆடல் பாடல்**
**நாம்காணும் நிழற்படங்கள் தமிழைக் காட்டல்**
**செம்மையுறு திருமணத்தில் தமிழை ஓதல்**
**செய்தித்தாள் நற்றமிழை எழுதிக் காட்டல்**

**நம்மினத்தார் உழைப்பிலுருப் பெற்ற கோவில்**
**நல்லதமிழ்ப் பாட்டொலியே முழங்கச் செய்தல்**
**நம்பிள்ளை பயில்கல்வி தமிழாய் நிற்றல்**
**நாடெல்லாம் தமிழாயின் தமிழ வாழ்வு" (கடி.மு.ப.5)**

என்று மொழியை முன்னிறுத்தி இனம் வாழும் தன்மையை எடுத்துரைக்கின்றார்.

'கயல், வில், புலிக் கொடிகளை இமய மலையில் நாட்டி அதன் எல்லைவரை தமிழர் ஆண்டு, வியனுலகில் புகழ்நாட்டி வீர வாழ்வில் வியப்பூட்டி வாழ்ந்து பாண்டிய நன்னாட்டில் சங்கம் கண்டு பாவேந்தர், கோவேந்தர் ஒன்றுகூடி அங்கு தமிழாய்ந்து மொழியைப் பேணி இலக்கியங்கள் படைத்து கைவேலைக் களிற்றின் மேல் பாய்ச்சி நின்று விரைந்து வரும் வேழத்தை எதிர்க்க வேண்டி தன்னுடம்பில் பாய்ந்திருக்கும் வேலைப் பறித்தெடுத்து நகைத்து நின்று பகைவரை வென்றதுதான் தமிழ்வாழ்வு'. (க.மு.ப.8)

வடமொழிக்காப்பியக் கதாபாத்திரமான திரௌபதியின் கற்பு நெறியைப் பழித்துரைக்கும் கவிஞர் 'ஐவருக்குப் பத்தினியாய் இருந்தும் கூட அயலான் மேல் ஆசை உள்ளதென்றுரைத்த மைவிளைக்கும் கண்ணுடையாள் கற்பின் போக்கு மாண்புடைய தமிழ் வாழ்வா? வெட்கம் வெட்கம்' என்கிறார். தமிழின் தொன்மைக் காப்பியமான சிலப்பதிகாரக் கதைத் தலைவி கண்ணகியின் கற்பு நெறியை,

**"கைவிளைந்த பொருளெல்லாம் பரத்தைக் காக்கிக்**
**கணவனவட் பிரிந்திருந்தும் தனது நெஞ்சில்**
**மொய்விளைக்கும் நிறைகாத்து வாழ்ந்த எங்கள்**
**முன்னையவள் கற்பன்றோ தமிழ வாழ்வு!"(க.மு.ப.9)**

என்று போற்றியுரைக்கின்றார்.

**தமிழர் வாணிகம்:**

பண்டைக் காலத் தமிழர் கடல்கடந்து வாணிகம் செய்து பொருளீட்டினர். தோணிகள் ஓட்டி சூழ்கடல் சுற்றி எங்கும் நம்புகழ் நாட்டினர். ஆழ்கடலாயினும் சூழ்புயலாயினும் அஞ்சா நெஞ்சினராயக் கீழ்கடல் மேல்கடல் எங்கும் ஓடி பொருள்குவித்தனர். தெற்குக் கடலில்

கொற்கைத் துறைமுகத்தில் தேடிக் கிடைத்த நன்முத்துகளை விற்கத் திசைதோறும் சென்று, பொற்குவியல் வேண்டிய மட்டும் குவித்தனர்.

**“மீனக் கொடியுடன் காணப் படுங்கலம்**
**மேலைக் கடல்தனில் ஓடிவரும்**
**மானப் புலிக்கொடி விற்கொடி ஏந்திய**
**வங்கங்கள் தென்கடல் கூடிவரும்**
**மெல்லிய நற்றுகில் பட்டுடை பொன்மணி**
**மேவிப் படர்தரு செம்பவழ**
**வல்லியும் நல்லகில் ஆரமும் ஆகிய**
**வாரிக் கொடுத்தது நம்புவியே**
**ஆழ்கடற் சாவகம் புட்பகம் சீனமும்**
**ஆதி யவனம் கடாரமுடன்**
**ஈழம் முதலன தேயமெ லாமிவர்**
**ஏகினர் தோணியில் வீரமுடன்” (கா.பா.பக்.40-41)**

என்று பண்டைத் தமிழர் பல நாடுகளில் வாணிகம் புரிந்ததை எண்ணிப் பெருமிதம் கொள்கிறார்.

**தமிழர் வீரம்:**

வீரமும், காதலும் இரு விழிகளாய்க் கருதி வாழ்ந்தோர் நம் தமிழர். முடியரசனார் வீரம் முளைக்கும் விளை நிலங்களைச் சுட்டும் பொழுது நாடு, மொழி, மனைவி, வீடு முதலான உரிமைகளுக்கு ஏதேனும் ஊறு விளைவிக்கும் பகை கண்டால் வீரம் முளைத்தெழுமென்கிறார். (த.மு.ப.158)

பண்டைத் தமிழரின் வீரத்தினை இலக்கியங்களில் கற்று இன்புற்ற கவிஞர் தம் படைப்புகளில் பரவலாகச் சுட்டிக்காட்டி தமிழர் வீரத்தின் பெருமையை நினைவூட்டுகின்றார்.

பகைவர் தம்மிடம் வந்து இரந்து வேண்டினால் ஆட்சியை மட்டுமன்று உயிரையும் தந்திடுவேன். தமிழர் குலமானத்தை, வீரத்தை எள்ளி எவரேனும் மோத வந்தால் போர்க்களிற்றின் காலடியில் கீழ்பட்டு அழியும் வேய்முளைபோல் சேர்த்தழித்திடுவேன். தூங்குகின்ற புலியின் மீது காலிடறிவிழும் குருடன் தப்பமுடியுமா? தப்பாது அழித்து தறுகண்மை காட்டிடுவேன். இவ்வுலகம் எமக்குரிமையுடையது. அதை யாருக்கும் விட்டுவிட

மாட்டேன் என்று வஞ்சினம் உரைத்தவன் என்முன்னோன்' என்று பெருமிதம் பாராட்டுகிறார் கவிஞர். (த.மு.ப.159)

'தாய்க்குலத்தின் வீரத்தைச் சற்றே நினைத்துவிட்டால் போய்க்களத்தில் இன்றே புகுவோம் எனத் தோன்றும்' என்று மறவர்குலப் பெண்களின் பெருமையை புறநானூற்று வீரத்தாயின் வரலாறுரைத்துப் பேருவகை கொள்கிறார். 'நமது வீரம்' என்னும் தலைப்பிலான கவிதையில்,

**"வெங்கொடுமைச் சாக்காட்டை வீர விளையாட்டென்**
**றெங்கள்குலம் எண்ணும் இயல்பினது; போர்ப்பரணி**
**பாடி மகிழும் பரம்பரையேம்; வாகை மலர்**
**சூடி வருகின்ற தொல்குடியேம்; ஏந்திய நற்**
**கைவேல் களிற்றொடு போக்கி வரும்போதும்**
**மெய்வேல் பறித்தெடுத்து மேலேறிப் பாய்ந்திடுவோம்;**
**போரில் விழுப்புண் படாஅத நாளெல்லாம்**
**சீரில்லா நாளென்று செப்புந் திறலுடையேம்" (த.மு.ப.160)**

என்று தொல்குடிப் பரம்பரையின் வீரத்தைப் பறைசாற்றுகிறார்.

**தமிழர் நாகரிகம்:**

சீர்த்த நாகரிகம் கொண்டது நம் தமிழரினம். யாதும் ஊரே யாவரும் கேளிர் என்று உலகப்பொதுமை பாடிய புறநானூற்றுப் புலவனின் செம்மை நோக்கினைச் சுட்டுகின்ற கவிஞர் 'யாதும் நம் ஊரென்றால் மாற்றாருடைய நாடுகளை சூதுமுறை செய்து சுருட்டி விழுங்க வேண்டும் என்று பொருளில்லை. நாடு, மொழி, இனம், பண்பால் வேறுபட்டிருப்பினும் பகையின்றி எதிர்ப்பின்றி வாழும் நெறியறிந்து நட்புறவால் உளமொன்றி நடக்க வேண்டும் என்பதுவே அதன் பொருளாகும்' என்று தெளிவுறுத்துகிறார்.

யாவரும் கேளிர் என்பதற்கும் உயரிய பொருளுண்டு என்று குறிப்பிடும் கவிஞர் அவரவர் தம் நெறி போற்றி அன்பொன்றே குறிக்கோளாய்க் கொண்டு மனம் காத்து, செயலறம் மிகக் காத்து தோழமையால் ஒன்றாகித் தூய்மையோடு உறவாகி வாழ விரும்பவேண்டும் என வகுத்ததுவே அதன் பொருளாகும் என்று உணர்த்துகிறார் (கடி.மு.ப.45)

நாகரிகம் என்பது நகரமைப்பு, இல்ல அமைப்பு, தெருவமைப்பு, உடை, உணவு முதலியன சிறப்புற அமைந்திருப்பது. பண்பாடு என்பது உள்ளம், எண்ணம், ஒழுகலாறு முதலியன சிறப்புற அமைந்திருப்பது. நாகரிகம் புறத்தைப் பொறுத்தது, பண்பாடு அகத்தைப் பொறுத்தது என்று வேறுபாடு உணர்த்தும் கவிஞர் நாகரிகம் என்னும் சொல் அகத்தின் செயலையும், புறத்தின் செயலையும் சுட்டிக்காட்டும் பொதுச்சொல்லாக வருதலையும் சுட்டுகின்றார்.

**“நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே**
**மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்”**[30]

என மோசிகீரனார் உலகத்துக்கு மன்னன் உயிராவான் என்று குறிப்பிடுவதன் மூலம் உலக இயக்கத்திற்கு, உலக இன்பத்திற்கு மன்னன் இன்றியமையாதவன் என்னும் அரசின் உயரிய நாகரிகக் கோட்பாட்டை மேற்கோள் காட்டுகின்றார்.

‘குடிமக்கள் நலம் காக்கும் கொள்கையில் மன்னர் கொண்டிருந்த அக்கறையைப் பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் கூறும் வஞ்சினம் மூலமாகவும், நீதி முறை தவறியதால் உயிர்துறந்த பாண்டிய மன்னன் இறப்புச் செய்தியை சாத்தனார் உரைக்கக் கேட்ட செங்குட்டுவன் வருந்தி உரைத்ததையும்’ பார் போற்றும் தமிழர் நாகரிகம் என்னும் கட்டுரையில் (எ.வ.த.ப.92) விளக்கிக் கூறி மன்பதை காக்கும் பொறுப்புணர்ச்சி மிக்க முடியாட்சியின் அரசியல் நாகரிகத்தைப் போற்றுகின்றார்.

பண்டைய நாளில் நம் சமுதாயம் நாகரிகத்தின் உச்சியில் மின்னிப் பொலிந்ததை ‘உண்டாலம்ம இவ்வுலகம்’ என்னும் கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி இயற்றிய புறநானூற்றுப் பாடல் வழி எடுத்தியம்புகிறார். “சாவா மருந்தெனப்படும் அமிழ்தமே கிட்டினும் தனித்திருந்து உண்ணார், யாரோடும் வெறுப்பில்லாதவர், பிறர் அஞ்சுவதற்கு அஞ்சிச் சோம்பியிரார்; புகழுக்காகத் தம்முயிரையும் ஈவர்; பழியெனின் உலகம் முழுவதையும் பெறினும் கொள்ளார்; மனக் கவலையில்லாதவர்; தமக்கென முயலார்; பிறர்க்கென முயலுவர்;

இத்தன்மையர் உண்மையால் இவ்வுலகம் இருக்கிறது"[32] என்று அப்பாடல் கூறுவதன் மூலம் மன்பதையின் பெருநாகரிகம் கண்டு முடியரசனார் வியப்புறுகின்றார்.

குடும்ப நாகரிகத்தைப் பற்றிக் குறிப்பிடுகையில் "பண்டை நாளில் திருமணமான ஆடவன், தான் உழைத்து அறஞ்செய்து, தானும் உண்பானேயன்றிச் சோம்பியிரான். ஏதேனும் ஒரு தொழிலை உயிராய்க் கருதி ஓம்புவன். மனைவி, கணவனே உயிரெனக் கொண்டு மனைத்தக்க மாண்புடையளாகி இல்வாழ்க்கை நடத்துவள்"[33] என்று பாலைபாடிய பெருங்கடுங்கோ பாடிய குறுந்தொகைப் பாடல் வழி உணர்த்துகின்றார். இவ்வாறு நம் பண்டைத் தமிழ் இலக்கியங்கள் வழி பண்டைநாளில் பெருகிக்கிடந்த தமிழரின் அரசியல் நாகரிகத்தையும், மன்பதை நாகரிகத்தையும், குடும்ப நாகரிகத்தையும் எடுத்துக்காட்டி தமிழர் நாகரிகத்திற்குப் பெருமை சேர்க்கின்றார்.

**தமிழினக் காட்சி:**

பண்டைத் தமிழினத்தின் மாட்சியைத் தமிழவாழ்வு, தமிழர் வாணிகம், தமிழர் வீரம், தமிழர் நாகரிகம் போன்ற பல்வேறு படிமானங்களில் கண்டு வியப்புறும் முடியரசனார் சமகாலத் தமிழினத்தின் நிலையோடு ஒப்பிடும்போது வேதனையுறுகிறார்.

மலைக்கும் மடுவிற்குமான வேறுபாடுபோல் தமிழினம் தாழ்வுற்று இழிவுநிலை நோக்கிச் சென்று கொண்டிருப்பதனைக் கண்டு உள்ளம் கொதிப்புறுகின்றார்.

'தமிழன் ஏக்கம்' என்னும் தலைப்பிலான பாடலில் 'தமிழன் என்றாலே மிகப்பரிதாபம் பிறக்கிறது, இமயம் வென்றவன் தன் ஏற்றத்தில் குறைந்து விட்டான். சாதி சமயத்தில் சிக்குண்டு சமத்துவ வாழ்வைத் தொலைத்து விட்டான். உழுபவனும், நெய்பவனும் நைந்துபோக உழைக்காமல் இவர்கள் உழைப்பில் வளம் பெறும் நிலையும், குழந்தை பாலுக்கு ஏங்கி அழ கல்லுருத் தெய்வங்களை பாலால் கழுவும் நிலையும், ஓட்டைக் குடிசையுள்ளே உண்ண உணவின்றி வயிறு ஒட்டி உலர்ந்த ஒருவன் உடுத்த உடையுமில்லாமல் பரிதவிக்கும் நிலையும் என்று மாறுமோ?' (கா.பா.ப.39) என்று தன் ஏக்கத்தை வெளிப்படுத்துகிறார்.

இன்பூட்டும் முன்னைத் தமிழ் வாழ்வைப் பாடும் பொழுது இதயம் பூரிக்கும் கவிஞர் பின்பாட்டுப் பாடுகின்ற பின்னைத் தமிழர் வாழ்வைப் பேசுதற்கு நாணிக் கூசுவதாகக் குறிப்பிடுகின்றார் கவிஞர். துயர் வரும்போது மானத்தை விலையாகக் கூறி உணவும், உடையும் நிறையப் பெற்று வயிறு வளர்த்து உயிரைப் பேணுவது தமிழ்வாழ்வு அன்று; அது மனுவின் வாழ்வு, தன்னலம், தன்புகழ், பொருள் காக்க சூழ்ச்சி செய்து தன்னினத்தை மாற்றார்க்குக்காட்டிக்கொடுத்து அவர் காலைத் தாங்குவது தமிழ் வாழ்வன்று ஈனவாழ்வு, கடவுளரையும் சாதிகளையும் பெருக்கிவிட்டுக் குறுமனமும் பேதமையும் அடிமைப் பண்பும் கொள்வது தமிழ் வாழ்வன்று கொடுமை வாழ்வென்றும் இன்றைய தமிழரின் வாழ்வு நிலையைச் சாடுகின்றார். (கடி.மு.பக்.4-5)

'எங்கெங்கு காணினும் தீமை' என்னும் கவிதை குமுகாய நிலையைக் கண்டு கவிஞர் வேதனையின் விளிம்பில் நிற்பதை,

**"எங்கெது காணினும் வஞ்சமடா - அதை**
**எப்படித் தாங்கிடும் நெஞ்சமடா**
**இங்கெவர் போக்கிலுங் குற்றமடா -இதை**
**எண்ணிடும் போதெலாம் செற்றமடா**
**எங்கணுங் கீழ்மையைச் சாடிடுவேன் - மனம்**
**ஏற்றம் பெறக்கவி பாடிடுவேன்**
**நாயினுங் கீழென வாழ்வதுவோ - திரு**
**நாட்டின் பெரும்புகழ் சாய்வதுவோ?**
**ஈயென எங்கணுந் தோய்வதுவோ? - மனம்**
**ஈனத் தனத்தினிற் பாய்வதுவோ?**
**போயெதிர் காலத்தை நோக்குகிறேன் - மனம்**
**புண்பட்டுப் போவதால் தாக்குகிறேன்" (நெ.பொ.ப.9)**

என்று எடுத்துக்காட்டுகிறது. தமிழினத்தின் எதிர்கால நிலையைக் கண்டு அஞ்சி நிகழ்காலப் போக்கை செம்மை வழிக்குத் திருப்ப முனைகின்றார்.

‘உறங்குந் தமிழ் மகன்’ என்னும் பாடலில் பெயரால் தமிழனாயிருக்கும் தமிழர் மொழியுணர்ச்சி சிறிதுமின்றித் தன் மொழி தாழ்வுறல் கண்டும் அதைக் கண்டு வருந்தாது உறங்கும் நிலையிலிருப்பதைக் கண்டு உள்ளம் பொறாது,

**“தமிழன் போலத் தன்னுயர் மானம்**

**உமிழ்ந்தான் ஒருவற் காண்கிலம் உலகில்” (தா.கா.ப.55)**

என்று தமிழனின் இழிநிலையைப் பழிக்கின்றார்.

‘தமிழனா நீ?’ என்னும் பாடலிலும் இதே போன்று

**“தமிழன் எனும் பெயர் தகுமா? உனக்குச்**

**சான்றோர் மொழிசெவி புகுமா?” (தா.கா.ப.63)**

என்று வினவுகின்றார்.

பழம்பெருமை பேசி மடமையுள் மூழ்கி நிற்கும் பதர் (தா.கா.ப.65), தாய்மொழிக்கு இன்னல் விளைக்க எண்ணித் திரியும் அடிமை (தா.கா.ப.73) இன மாண்பு மறந்தோரைச் சாடுகிறார்.

‘தமிழின வரலாறு’ என்னும் பாடலில் முன்னைத் தமிழினப் பெருமையைப் பாடியவர் வீழ்ந்த வரலாற்றைச் சொன்னால் மனம் நோகுமென்று தமிழினத்தின் நிகழ்காலக் காட்சி கண்டு உள்ளம் பதைக்கின்றார்.

‘ஆங்கிலத்தால் ஆரியத்தால் ஆதிக்க இந்தியினால் தீங்கு வருமோவென்று திண்டாடி நிற்கின்றான், மன்பதையின் பண்பழிக்கும் ஏடுகளை எழுதிக் குவிக்கின்றான். காசுக்கும் மாசுக்கும் கண்டபடி எழுதும் ஆசைக்குட்பட்டு அலைகின்றான் நல்ல அரசியலில் நச்சைக்கலந்து விட்டான். பண்பாட்டரசியலைப் பாழடித்துச் சாகடித்துத் தன்பாட்டில் மட்டும் தனியார்வம் காட்டுகின்றான். மானம் மறந்தான் மனத்தைத் துறந்து விட்டான். போனது போகப் பொருள் வந்தால் போதுமென்றான். பாவம் பழியென்று பாராமல் தனதுமனம் தாவும் செயலென்று தக்கதெனப் புரிவான். சின்ன நலமொன்று தனக்குச் சேருமென்று தெரிந்தால் எந்தப் பெரும்பழியையும் ஏற்கத் தயங்க மாட்டான். எல்லாம் பொதுவென்பான்; என் பொருள்கள் மற்றவர்க்கல்ல என்பான். தன்னிலையிற் தாழ்ந்தும் தனதுயிரைக் காப்பதற்குப்

பின்னடையவில்லை பெரும் பேதையாகிவிட்டான். சொந்தமெது வந்ததென்று சொல்ல வகையறியாமல் வெந்ததைத் தின்று வெறுமனே சாகின்றான்' (பு.வி.செ.ப.136) என்று உள்ளம் வெதும்பும் கவிஞர்,

**"விண்முட்ட வாழ்ந்து வியந்த வரலாறு**
**மண்முட்டச் சாய்ந்து மடிவதோ? பீடுடுத்து**
**வாழ்ந்த வரலாறு வீழ்ந்து மறைவதோ?**
**தாழ்ந்து கெடுதல் தகுமோ?" (பு.வி.செ.ப.138)**

என்று தமிழின மாட்சி கெடுதல் தகுமோ? என்று வினா எழுப்புகின்றார்.

தமிழின் மாட்சியையும் தமிழினக் காட்சியையும் ஒப்பிடும் கவிஞர் தமிழின மீட்சிக்கும் வழி கூறுகிறார்.

**தமிழின மீட்சி:**

தமிழின மீட்சிக்காகத் தன் படைப்புகளைப் படைக்கலன்களாகக் கொண்டு போராடிய முடியரசனார் இனம் மீள மொழி வாழ வேண்டுமென்பதில் உறுதியோடிருந்தார்.

**"தமிழ்காக்கப் போர்செய்ய உணர்வு வேண்டும்**
**தமிழ்கொன்று வாழ்கின்ற கயமை வேண்டாம்**
**தமிழ்காக்கப் போர் செய்யப் புலிகள் வேண்டும்**
**தடுமாறி ஓடிவிடும் எலிகள் வேண்டாம்**
**தமிழ்காக்கப் போர்செய்ய சிங்கம் வேண்டும்**
**தாளமிடும் ஓலமிடும் நரிகள் வேண்டாம்**
**தமிழ்காக்கப் போர்செய்ய மானம் வேண்டும்**
**தாலமுத்து நடராசன் துணிவு வேண்டும்" (முடி.க.ப.121)**

என்று மொழிகாக்கப் போர் செய்யும் போர்க்குணம் தமிழர்க்கு வேண்டுமெனக் குறிப்பிடுகிறார்.

தமிழ்நாட்டுக் கோவில்களில் ஆலயவழிபாட்டு மொழியாகத் தமிழ்மொழி இல்லாத நிலை கண்டு வருந்தும் கவிஞர்,

**"தமிழைக் கோவிலுள் தடுத்திடும் பகையைத்**
**தவிடெனப் பொடியெனச் செய்திடல் வேண்டும்**
**தமிழன் என்றொரு இனமுண் டாயின்**
**தயங்குவ தேனோ? எழுவீர்! எழுவீர்!" (கா.பா.ப.10)**

எனத் தயக்கத்தைத் தூர எறிந்துவிட்டு எழுந்து வருமாறு குறிப்பிடுகிறார். தமிழர் மானம் துறந்து வீரம் மறந்து உழலுவதனைக் கண்டு

**“வேலெடுத்துப் போர்தொடுத்த வீரம் எங்கே?**
**வெங்குருதி வாளெங்கே? தோள்கள் எங்கே?**
**கோலெடுத்த பேரெல்லாம் ஆள வந்தார்**
**கொட்டாவி விட்டபடி தூங்கு கின்றாய்!**
**மாலுடுத்த தமிழ்மகனே! மானம் எங்கே?**
**மயங்காதே விழி! எழு! பார்! உலகை நோக்கு!**
**கால்பிடித்து வாழ்வதுவோ தமிழ வாழ்வு?**
**கானத்துப் புலிப்போத்தே வீரங் காட்டு” (கடி.மு.ப.10)**

என்று கவிஞர் சீறுகிறார். தமிழரிடையே ஒற்றுமையுணர்வு தேய்ந்து போனதைக் கண்டு வருந்தும் கவிஞர் நம்மை நாம் உணராமல், நமக்குள்ளே பகைமை கொண்டு இருப்பதனால் தும்மினால் வீழ்பவர் கூடத் துரும்பென நம்மை எண்ணித் தாக்குகின்றார். இந்நிலை மாற ஒற்றுமை ஓங்க வேண்டுமென்று வலியுறுத்துகின்றார்.

**“நம்மின வுணர்வு தோன்றின்**
**நரிகளா அரியைத் தாக்கும்?**
**எங்குள தமிழ னுக்கும்**
**இடரொன்று நேர்ந்த தென்றால்**
**இங்குள தமிழ ரெல்லாம்**
**எதிர்த்திட ஒன்றாய்க் கூடிப்**
**பொங்கிடின் நம்மைத் தாக்கும்**
**கொம்பனும் புவியி லுண்டோ?” (நெ.பொ.ப.77)**

என்று வினவுகின்றார். தமிழர் நாட்டைத் தமிழரே ஆள வேண்டுமென்பதில் உறுதி கொண்டிருந்த முடியரசனார் தமிழர்க்கு தன்னம்பிக்கை ஊட்டுகின்றார். நாளைய நாடு நமதாட்சியிலே என்றெண்ணி மாட்சியில் நடந்திட வேண்டும். தீமையை எதிர்த்துக் கற்றவர் நூல்களை ஆய்ந்திட வேண்டும். கீழ்மையைத் தாக்கிட வேண்டும். பண்புகளை ஊட்ட வேண்டும் என்றெல்லாம் வழியுரைக்கும் கவிஞர்,

**“தீய குணங்களைத் தூக்கிஎறி-அது**
**தெள்ளிய நாட்டினைக் காக்கும்நெறி**

**தூய மனத்தினைப் போற்றிநட - பொதுச்**
**சொத்தினைக் கண்ணெனக் காத்துநட**
**சேயுன தன்னையின் நாடுயர - மனச்**
**செம்மையைக் காத்திடப் பாடுபடு**
**தாயக மேன்மையை ஆக்கிவிடு - வளர்**
**தம்பிஎன் வேதனை நீக்கி விடு" (நெ.பொ.ப.10)**

என்பதில் தாயகத்தை மேன்மையுடையதாக ஆக்கித் தம் வேதனையை நீக்கிடுமாறு தமிழிளைஞர்களுக்கு வேண்டுகோள் விடுக்கின்றார்.

**நாடு:**

அரசு என்பது குறிப்பிட்ட மன்னனின் ஆட்சிக்குட்பட்ட பகுதியோடு நிற்பது; நாடு என்பது அரசிலிருந்து விரிவுபட்டது; அரசியல் எல்லைகளையும் மீறிக் குறிப்பிட்ட பண்பாட்டு எல்லையில் அமைவதே நாடு. மொழி ஓர்மை, பண்பாட்டு ஓர்மை, இயைந்த வாழ்க்கை முறை ஆகிய தொடர்புகளில் நாடு அமையும்.

முடியரசனார் நாடு என்பதைத் தமிழ்நாடாகவே கண்டார். இதனைப் பெருஞ்சித்திரனாரின் "முடியரசனார் மாபெரும் தமிழ்த் தேசியப் பாவலர்; தமிழின எழுச்சிப் பாவலர்; தமிழுணர்ச்சியும் தமிழ் வீறும் மிக்க அவரது பாடல்கள் தமிழ்த் தேசியப் படைக்கலன்களாகும்"[34] என்னும் கூற்று நன்கு விளக்கும்.

"கவியரசர் முடியரசனார் தமிழ்த் தேசியம் பாடிய வானம்பாடியாகக் கவிதை வானில் சிறகடித்துப் பறந்தவர். தமிழின விடுதலைக்காக ஓயாது குரல் கொடுத்தவர்"[35] என்பர் பழ.நெடுமாறன்.

இவ்வாறாகத் தமிழகத்தின் தலைசிறந்த சான்றோர்களும் கவிஞர்களும் முடியரசனாரது தமிழ் எழுச்சிக் கவிதைகளைப் பற்றிப் போற்றியுள்ளனர்.

முடியரசனார் சார்ந்திருந்த திராவிட இயக்கம் 1939-இல் 'தனித்தமிழ்நாடு' கோரிக்கையை முன் வைத்தது. தனித்தமிழ்நாடு வேண்டுமெனத் தொடர்ந்து போராடியது. ஆனால் 1964-இல் மைய அரசு பிரிவினைத் தடைச் சட்டம் கொண்டு வந்த பிறகு தி.மு.க

தனித்தமிழ்நாடு கோரிக்கையைக் கைவிட்டது. ஆனால் முடியரசனார் தமிழ்த் தேசியத் கொள்கையிலிருந்து பின்வாங்கவில்லை. இறுதிவரை ‘தமிழ் நாடே தாய்நாடு’ என்னும் கொள்கையில் விடாப்பிடியாய் உறுதியோடிருந்தார்.

பாரதி, பாரதிதாசனாரின் கவிதை மரபில் வந்தவராகத் தம்மைக் குறிப்பிடும் கவிஞர் அவர்களிருவரிடமிருந்தும் தேசியக் கொள்கையில் மாறுபடுகிறார். பாரதி இந்தியத் தேசியத்தையும் பாரதிதாசன் திராவிடத் தேசியத்தையும் பாட முடியரசன் தமிழ்த் தேசியத்தைப் பாடுகின்றார்.

‘புலியேறென எழுவாய்’ என்னும் தலைப்பிலான பாடலில்,

**“உழுவார்கரம் உயர்வாய் வர**
**உலகோர் முயல் திருநாள்**
**உனதாகிய திருநாடொரு**
**தமிழ்நாடென வருநாள்” (முடி.க.ப.117)**

என்று நம்நாடு தமிழ்நாடென வரும் நாளை வரவேற்கிறார்.

‘எங்கள் நாடு’ என்னும் தலைப்பிலான பாடலில்,

**“இசைவாணர் கலைவாணர் விஞ்ஞானப் பெருமக்கள்**
**எழுத்தாளர் பெரும்புலவர் கவிவாணர் நாடுய்ய**
**வசையில்லா வழிகாட்டும் பேரறிஞர் தமிழ்காக்க**
**வரிந்துகட்டி முன்னிற்கும் புலிக்கூட்டம் மிகுநாடு” (கா.பா.ப.35)**

என்று தமிழ்நாட்டின் பெருமையைப் போற்றுகின்றார்.

‘தமிழகமே நம் நாடு’ என்று ‘தமிழகம் தாழ்ந்ததேன்?’ என்னும் பாடலிலும் (கா.பா.ப.37) ‘நம் நாடு தமிழ்நாடு’ என ‘தமிழ்வாழ்வு’ என்னும் பாடலிலும் (க.மு.ப.3) தமிழ்த் தேசியத்தை வலியுறுத்துகின்றார்.

தொல்காப்பியப் பாயிரத்தில் பனம்பாரனார் “தமிழ்நாட்டின் எல்லைகளைக் குறிக்கும் பொழுது வடக்கு எல்லையை வேங்கடமாகவும், தெற்கு எல்லையைக் குமரியாகவும் குறிப்பிடுகின்றார்.”[35]

‘திராவிட நாட்டின் வளம்’ என்னும் தலைப்பிலான பாடலில் முடியரசனார்,

**“பண்பாடிக் கூத்தாடிப் பாரெங்கும் சென்றோடிப்**
**பண்பாடு காட்டிப் பயிற்றுவிக்கும் தாயகமாய்த்**
**தெற்கில் குமரியொடு சேரா வடதிசையில்**
**நிற்கும் ஒருவிந்தம் நீள்கடல்கள் கீழ்மேலாய்**
**எந்நாளும் மாறா இயல்பமைந்த எல்லையதாய்**
**இந்நான்கின் எல்லை யிடைவிரிந்த நீள்பரப்பாய்க்**
**கன்னடமாய் ஆந்திரமாய்க் கண்குளிரும் கேரளமாய்**
**இன்னவற்றின் தாயாய் இலங்கும் தமிழகமாய்க்**
**கூடும் திராவிடமாய்க் கோலோச்சும் தென்னகமே**
**நாடி வருகின்ற நம்நாடு பொன்னாடு” (கடி.மு.பக்.97-98)**

என்று திராவிட நாட்டின் எல்லைகளையும், பெருமைகளையும் சுட்டுகின்றார். நாளைய நாடு என்னும் பாடலில் ‘எத்தனை எத்தனைக் கலைகள் அவை அத்தனையும் தமிழ் மொழியில் இத்தரை மீதினில் உலவும் கலை எத்தனை அத்தனை நிலவும்’ (பா.கு.ப.229) என்று கனவு காண்கிறார்.

இந்திக்கும், வடநாட்டார்க்கும் மட்டுமே முன்னேற்றம் தந்து தென் நாட்டைப் புறக்கணிப்பதாயிருந்தால் தனித்தமிழ்நாடு கோருவதைத் தவிர வேறு வழியில்லை என்று அறுதியிட்டுக் கூறுகின்றார். (தா.கா.ப.37)

**“எம்மொழியும் சமமாக இனியதொரு**
**வழிசெய்க இணைந்து வாழ்வோம்**
**நும்மொழிதான் கோலோச்ச நுழைப்பீரேல்**
**தனிநாடு நொடியில் தோன்றும்” (தா.கா.ப.38)**

என்று ஆட்சியாளருக்கு அறை கூவல் விடுக்கின்றார்.

இந்தியன் என்று தன்னைத் தமிழன் சொன்னால் அவன்தான் இங்கே ஏமாளி, கூத்தன் இயக்கிட இயங்கும் கோமாளி; உள்ளத்து உணர்வால் தமிழன் என்றே தன்னை உரைப்பவனே மானம் உயர்ந்துள திறனாளி; அவனே இந்தியத் தமிழன் என்றால் அடிமை யென்றெழுதிய முறியாளி. தமிழ் இந்தியனென்று தன்னைச் சொல்பவன் சரிநிகர் சமனாளி என்று வேறுபாடுரைக்கின்றார் (பு.வி.செ.ப.153)

‘தமிழ்நாடு’ என்ற பெயர்சூட்டிய அறிஞர் அண்ணாவின் செய்கையைப் பாராட்டும் கவிஞர்,

**“பெற்றெடுத்த தாய்நாட்டைத் தமிழ்நா டென்று**
**பேர்சொல்ல வைத்தவன்யார்? வாய்மை வெல்லும்**
**பெற்றிமைக்குக் கோட்டைமுகம் சான்று சொல்லும்” (ஞா.தி.ப.171)**

என்று பாராட்டுவர்.

இந்தியாவை நாடென்று குறிப்பிடாமல் பல மொழி, இனம், பண்பாடு, நாகரிகங்கள் கொண்ட ஒன்றியம் என்றே கவிஞர் குறிப்பிடுகின்றார். ‘ஒருமையா? ஒற்றுமையா?’ என்னும் தலைப்பிலான கட்டுரையில் ‘அந்தந்த மாநிலத்து இனம், மொழி, பண்பாடு கெடாமல் தனித்தன்மை இழந்து விடாமல் காத்துக் கொண்டு இந்திய ஒன்றியத்திற் கூடி வாழ்வது நோக்கமெனில் ஒற்றுமை என்ற சொல்லே சாலப் பொருத்தமுடையது’ (எ.வ.த.ப.23) என்பர்.

கவிஞர் தம் வாழ்நாள் முழுமையும் தமிழ்த் தேசியக் கொள்கையில் சற்றும் பிறழாமல் நிலைத்த உறுதியோடிருந்தார் என்பதைப் பல்வேறு கால கட்டங்களில் அவர் எழுதிய படைப்புகளில் தமிழ்த்தேசியத்தை வலியுறுத்துவதைக் கொண்டு அறிய முடிகின்றது.

முடியரசனாரின் கொள்கை உறுதிப்பாட்டை “முடியரசன் தம் வாழ்நாள் முழுவதும் சான்றோரைப்போல் பீடும் பெருமிதமும் கொண்டு நெஞ்சில் உரமும், நேர்மைத் திறமும் களிநடம் புரியத் தமிழுக்குப் பல்லாற்றானும் பணி செய்து வாழ்வதையே தம் குறிக்கோளாகக் கொண்டிருந்தார்”[36] என்று இரா.மோகனும் “தமிழ் இனப் போரில் தொடக்கம் முதல் இறுதிவரை இடம்மாறாத கொள்கைக்குன்று”[37] என்று வைரமுத்து அவர்களும் குறிப்பிடுவது இங்கு சுட்டுதற்குரியது.

முடியரசனார் ‘நாட்டு வாழ்த்து’ என்னும் தலைப்பிலான பாடலில் ‘நல்லவர் ஆட்சியில் நாடு செழித்திட, அல்லவை நீங்கிட, நாட்டினில் செந்தமிழ் ஆட்சி தழைத்திட, கல்வி வளர்ந்திட, பண்பு செழித்திட, செல்வம் மிகுந்திட எங்களின் தாயகம் சீருடன் வாழியவே!’ என்று பாடுகிறார் (கா.பா.ப.45).

முடியரசனாரைப் பொறுத்தவரையில் தாயகம் என்பது தமிழகமே. இந்தியாவை நட்புணர்வோடு பார்ப்பதாகக் குறிப்பிடும் கவிஞர் தமிழ்நாட்டில் செந்தமிழ் ஆட்சி தழைக்க வேண்டும், நிலைக்க வேண்டுமென்று விழைகின்றார். தமிழ்த் தேசியக் கொள்கையினின்று பின் வாங்காத திராவிட இயக்கக் கவிஞராக முடியரசனார் காட்சியளிக்கிறார்.

**காதல்:**

ஆண் பெண் இருபாலருடைய பாலுணர்வுகளின் தூண்டுதலே காதல் உணர்வு என்று அறிவியல் காதலை உடல் சார்ந்த நோக்கில் அணுகும் பொழுது இலக்கியமோ அதனை அகம் சார்ந்த நோக்கில் அணுகுகிறது. அதற்கான காரணம் காதலர்களுடைய உடல் ஒன்றுபடுவதற்கு முன்னர், உள்ளங்கள் ஒன்றுபட்டு விடுகின்றன என்பதுதான்.

“உள்ளங்கள் ஒன்றுபடுவதால்தான் உடற்புணர்ச்சி இல்லாதிருந்தும் கூட காதலர்கள், தாம் வாழும் சமுதாயத்தையும் உலகத்தையும் மறந்தும் புறக்கணித்தும் தாம் இருவர் மட்டுமே வாழும் கனவுலகத்தையும், கற்பனையுலகத்தையும் படைத்துக் கொண்டு விடுகிறார்கள்”[38] என்பர் பேரா.இரா.மணிமேகலை.

“பொருள் கருவியாகத் துய்க்கும் புற இன்பத்தை விட மனம் கருவியாகத் தூய்க்கும் இலக்கிய இன்பம் தலைசிறந்தது. முன்னது நிலைத்து நிற்பதன்று; நாளடைவில் தானும் தேய்ந்து தன் மூலமாகிய பொருளையும் தேய்த்து விடக் கூடியது. பின்னதோ நிலைத்து நிற்பது; தானும் வளர்ந்து தன் மூலமாகிய மனத்தையும் நெறிப்படுத்திச் செம்மையாக்கும் தன்மையுடையது. மனம் பல்வேறு கருத்துப் பொருள்களைத் துய்க்கும் பொழுது நாம் பெறும் இன்பம் எல்லையற்றது. காட்சிப் பொருள்களைவிட கருத்துப் பொருள்களைத் துய்க்கும் பொழுதுதான் இவ்வின்பம் பன்மடங்கு மிகுந்து நிற்கும்”[39] என்பர் ந.சுப்பு ரெட்டியார். முடியரசனாரின் காதல் இலக்கியங்களும் படிப்போரின் உள்ளத்தை பன்மடங்கு இன்பம் துய்க்க வைப்பதாய்த் திகழ்கின்றன.

களவு வாழ்க்கையில் ஈடுபட்டோ, கற்பு வாழ்க்கையில் ஈடுபட்டோ காதற்சுவை அனுபவிக்க அதன் பயனாக அவர்களிடையே முகிழ்க்கும் அன்பின் பெருக்கையும், அதன்வழி

எழுகின்ற இன்ப நினைவுகளையும், அவற்றின் நடுவே ஊடாடும் பண்பாட்டு மரபினையும் விளக்குவதாக தமிழிலக்கியத்தின் காதல் கவிதைகள் அமைகின்றன.

**காதற்சிறப்பு:-**

ஒத்த தலைவனும், தலைவியும் தம்முள் ஒருமித்த அன்பைப் பகிர்வதே காதல் ஆகும். ஒருவர் மட்டுமே காதல் வயப்பட்டுப் பரிதவிக்கும் கைக்கிளை, பொருந்தாக் காமமான பெருந்திணை ஆகியவற்றை அன்பின் ஐந்திணைக்குள் அடக்காமல் அகத்திணைக்குள் வகைப்படுத்தினர் நம் தமிழ்ச் சான்றோர்.

முடியரசனாரும் தலைவன்-தலைவி இருவருக்குமிடையேயுள்ள உளக்கருத் தொற்றுமையே காதலின் அடிநாதம் என்பதைப் பூங்கொடி காப்பியத்தின் வழி வலியுறுத்துகின்றார்.

**"விருப்பிலா மகளிரை விழைவது முறையோ?**
**கருத்தொரு மித்தால் காதல் சிறக்கும்;**
**ஒருபால் அன்பால் உறுபயன் ஒன்றிலை" (பூ.கொ.4:106-108)**

என்று தலைவன், தலைவியரிடையே கருத்தொருமித்தால்தான் காதல் சிறக்கும் என்று குறிப்பிடுகிறார். 'மலரினும் மெல்லிது காமம்' என்கிறது வள்ளுவம். இம்மெல்லிய காதலின் தன்மையை வேல்விழியின் தோழி, வேல்விழியின் தந்தை வயத்தரசனுக்கு உரைப்பதான,

**"காதலெனின் ஆணைக்குக் கட்டுப் பட்டுக்**
**கருகிவிடும் பொருளன்றாம்; எதிர்த்து வந்து**
**தீததனை நெருங்குமெனில் தளிர்த்து நிற்கும்**
**தெய்வீகத் தன்மையது வாய்ந்த தென்றே**
**ஓதலிலே வல்லவர்கள் உரைப்பர்" (வீ.கா.33:139)**

என்னும் பாடலடிகளில் மலரினும் மெல்லிய காதலுக்கிருக்கும் வலிமையை உணர்த்துகிறார்.

**காதலின் படிநிலைகள்:**

'கண்டதும் காதல்' என்ற வெள்ளித்திரைக் காதல், அக இலக்கியங்களில் இல்லை. காட்சி, ஐயம், தெளிவு, தேறல் ஆகிய படிநிலைகளில் காதல் வளர்ச்சியுறும். இதனை முடியரசனார் 'குறிஞ்சி' என்னும் கவிதையில் காதற்சித்திரமாகப் படைத்துள்ளார்.

**காட்சி:**

தலைவனும் தலைவியும் முதன்முறையாக இருவரும் ஒருவரை ஒருவர் காணுதல் 'காட்சி' எனப்படும். மலைச்சாரலில் ஆழச்சுனையாடச் சென்ற தலைவனுக்கு, அங்கு வேங்கைமரத்தின் கீழ் தோழிகளுடன் விளையாடக் கண்ட தலைவியின் தோற்றம் வியப்புற வைக்கிறது. ஆடுகின்ற மயிலின் சாயலுடன், அன்னத்தின் மென்னடையும், கிளிமொழியும் கூடிய கூட்டுப் படைப்பாகத் தலைவனுக்குத் தலைவி காட்சியளிக்கிறாள்.

**"கண்ணுக் கினியாளைக் கண்டேன் விழிவழியே**
**நண்ணிக் கலந்துளத்து நானானாள்; கட்டுண்டேன்" (க.மு.ப.73)**

என்று தலைவி தன்னுள் கலந்து தானாக மாறிய காட்சியினைத் தலைவன் வாயிலாகக் கவிஞர் உணர்த்துகிறார்.

**ஐயம்:-**

தலைவியைக் கண்ட தலைவன் இவள் தங்கத்தில் வார்த்தெடுத்த சிலையோ, வெண்ணிலவைப் போர்த்தெடுத்துச் செய்த பெண்ணுருவோ? மின்னல் கொடியோ? எள்ளின் மலரும் மகிழம் பூவும் முல்லைமொட்டும் செங்காந்தள் பூவும் சேர்ந்து மலர்ந்திருக்கும் இளவஞ்சிப் பூங்கொடியோ? என்றெல்லாம் சிந்தை தடுமாறி, வானுலகின் ஆரணங்கோ? தென்னாட்டுக் காரிகையோ? அல்லது வடநாட்டுப் பேரணங்கோ? இவள் யாரென்று தெரியவில்லையே என்று ஐயுற்றுப் பேதுறுகின்றான். (க.மு.ப.74)

'காவிய மேடையில்' என்னும் தலைப்பிலான பாடலில் தலைவன் தலைவி இருவரும் ஒருவரையொருவர் கண்டு ஐயுறுவதை 'காவிய மேடையில் பாவலன் பாடிய காரிகை இவள்தானோ? ஓவியம் வரைய வல்லவனின் தூரிகை தீட்டிய ஒருயிர்க் கலைதானோ? கற்பனை என்னும் மன்னவனின் முத்திரைப் புனைகதை கண்ட மகளோ? சிற்பியொருவன் சிற்றுளியாக்கிய மாதவிச் சிலையோ?' என்று ஐயுறுகிறான். தலைவி தலைவனைக் கண்டு 'பாரிமுனை யாண்ட பாண்டிய மன்னரின் பரம்பரை இவர்தானோ? முல்லைக் கொடிக்குத்

தேரீந்த பாரியைச் சேர்ந்தவரோ? கோட்டையில் பூங்கொடி கட்டிய கொற்றவனோ? கடலென வீரரின் காவியம் படைத்திடக் கற்றவரோ? என்று ஐயுறுகிறாள். (நெ.பூ.ப.263)

**தெளிவு:-**

தலைவியைக் கண்ட தலைவன் ஐயுற்றுப் பிறகு காரண காரியங்களால் தெளிவுற்றுத் தலைவியை, 'இத்தகையவள், இந்நாட்டவள்' என்று அறிந்துகொள்ளும் நிலையே 'தெளிவு' என்பதாகும். 'குறிஞ்சி' என்னும் பாடலில் தலைவியைக் கண்டு, எந்நாட்டவளோ என்று ஐயுற்ற தலைவன், 'தலைவியின் சிற்றிடையில் காஞ்சிபுரச்சீலையை உடுத்தியிருப்பதால், மணிமேகலை அணிந்திருப்பதால், மார்பில் சிந்தாமணி என்னும் செம்மணியைப் பூண்டிருப்பதால், செந்தாமரை போன்ற சிவந்த பாதத்தில் சிலம்பு கொஞ்சுவதால், கையில் வளையாபதியும், காதணியாய் குண்டலமும் விளங்குவதால் மேனாட்டு ஆரணங்காகவோ வடநாட்டுப் பேரணங்காகவோ இருக்க இயலாது. இவள் தென்னாட்டுக் காரிகையே, தமிழணங்கே என்று ஐயம் நீங்கித் தெளிவுறுகின்றான்.' (க.மு.ப.74)

**தேறல்:-**

தெளிவுபெற்ற தலைவன், தலைவியிடம் தன் காதலைத் தன் கண்களால் உணர்த்துவான். தலைவியின் தோற்றம் கண்டு ஐயுற்றுத் தெளிவுற்ற தலைவன் 'என் பாட்டிற் கூடும் தலைமகளே என்றுணர்ந்தேன்' என்று தேறுகிறான் (க.மு.ப.74).

**புனல் தரு புணர்ச்சி:-**

மலையிலுள்ள சுனை நீரை அள்ளித் தாகம் தீர்க்க முற்படும் பொழுது தலைவி கால்தவறி சுனைக்குள் விழுந்தாள். அணையில் நீராடவந்த தலைவன் நீரில் தாவிக்குதித்து தன் தடந்தோளில் சுமந்து காப்பாற்றுகிறான். தலைநிமிர்ந்து பார்த்த தலைவி நாணத்தால் மண்கீறும் தன் கால் விரலைப் பார்த்தாள். தலைவன் அவளைப் பாராதிருக்கும்பொழுது தலைவனைப் பார்த்து நகைத்தாள். பாவை தன் புன்னகையைக் காட்டாமல் கனியிதழ்க் கதவுகளால் மூடி மறைத்தாள். பூவையின் இமையசைவு தலைவனை வாவாவென்று வரவேற்புச்

செய்வது போல் தலைவனுக்கு நன்றியறிவிப்பாகவும், காதலுக்குத் தக்க பரிசளிப்பாகவும் தலைவனுக்குத் தென்படுகிறது. (க.மு.ப.75)

**குறிப்பறிதல்:**

தலைவன், தலைவி தன் மீது காதல் கொண்டுள்ளாளோ என்றறிய இயலாமல் தடுமாறி ஏங்கும்போது தலைவியின் வேல்விழிப் பார்வையில் தென்படும் குறிப்புணர்கிறான். தலைவியின் ஒப்புதலை அவள் பார்வை மூலம் கண்டுகொள்கிறான். இத்தனையும் ஒரு நொடியில் ஒன்றாய் நிகழ்ந்ததாய்க் கவிஞர் குறிப்பிடுகிறார். பார்வையின் பொருளை உணர்வதைக் குறிப்பறிதலாகக் கவிஞர் சுட்டிக் காட்டுகிறார். (க.மு.ப.75)

**நலன் புனைந்துரைத்தல் :**

ஒத்த அன்புடைய தலைவனும், தலைவியும், ஒருவரையொருவர் நலம் புனைந்துரைப்பர். முடியரசனார் படைப்புகளில் தலைவன் தலைவியின் தோற்ற நலன்களைப் புனைந்துரைப்பதையும் தலைவி தலைவனின் தோற்ற நலனைவிட குணநலன்களை அதிகம் புனைந்துரைப்பதையும் காணமுடிகிறது.

தலைவி மீது காதல் கொண்டுள்ள தலைவன் தலைவியின் அங்க அவயங்களைக் குழல் முதல் இடை வரை வருணிக்கிறான்.

**கூந்தல்:**

தலைவியின் கூந்தலை மேகத்தோடு ஒப்பிடும் கவிஞர் கூந்தல் மேகத்தையும் புறங்கண்டதாகப் பாடுகிறார். (முடி.க.ப.71)

தலைவியின் கூந்தலை முகிலோ? குழலோ? என்று ஐயுறுதலையும் (கா.பா.ப.53) தலைவியின் கூந்தலில் சூடிய பூக்களில் ஒன்று கீழே விழுந்ததை எடுத்துத் தலைவன் முகர்ந்ததையும் உரைப்பர். (வீ.கா.13:44)

**நெற்றி:-**

பெண்களின் நெற்றியைப் பிறைக்கு ஒப்பிட்டுப் பாடுவர் கவிஞர். முடியரசனாரும் ‘கூடித்திரிவோர்’ என்னும் பாடலில் **“நெற்றிப் பிறை தனிலே - புரளும்**

**நீள்சுருள் கூந்தலடி**

**முற்றத் துறந் தவரைக் - காதல்**

**மோகத்தில் ஆழ்த்துமடி” (கா.பா.ப.61)**

என்று பாடுவர்.

**புருவம்:-**

பெண்களின் முகத்திற்கு அழகு சேர்ப்பதில் புருவத்திற்குத் தனித்த சிறப்புண்டு, வில்லை ஒடித்து வைத்தாற்போல புருவம் என்பதனை ‘வில்லொடித்த புருவத்தாள்’ (மு.க.ப.71) என்றும் பூங்கொடி காப்பியத்தின் பூங்கா புக்க காதையில் பூங்கொடியின் அழகைச் சுட்டுமிடத்து ‘நெற்றியிற் புருவம் வில்லினை நிகர்க்கும்’ (பூ.கொ.3:41) என்றும் புருவ அழகை வருணிக்கிறார்.

**விழிகள்:-**

தலைவனும், தலைவியும் காதலைப் பகிர்ந்துகொள்ள முதன்மையாய்த் துணை நிற்பது விழிகளேயாகும். முடியரசனார் ‘காதல் நெஞ்சம்’ என்னும் தலைப்பிலான பாடலில் தலைவன் தலைவியின் கண்களைக் கூறுமிடத்து ‘கொல்லும் விழியுடையாய்’ (முடி.க.ப.68) என்று வருணிக்கிறார்.

மைதீட்டிய கண்கள் கஞ்சமலரை விஞ்சியதாக

**“அஞ்சனமைக் கண்ணிரண்டும் கஞ்சமலர் விஞ்ச” (கா.பா.ப.58)**

என்றும், பூங்கொடியின் கண்கள் அழுத காட்சியைக் கூறுமிடத்து

**“கண்ணீரிடைவிரி கருவிளை மலரென**
**எண்ணும் படிக்கிரு கண்களும் இலங்கின” (பூ.கொ.3:11-12)**

என்று விழிகளுக்குக் கஞ்சமலரையும், கருவிளை மலரையும் கவிஞர் ஒப்பிட்டுப் பாடுகிறார்.

**இதழ்-பற்கள்:-**

பெண்ணின் இதழுக்குக் கொவ்வைக் கனியை ஒப்புமையாக்குவர் புலவர். முடியரசனார் வீரகாவியத்தில் மாவேழன் வேல்விழியின் ஓவியம் கண்டு வெதும்புவதாகப் பாடும்பாடலில்

**“கனியிதழ்கள் பவளத்தின் செம்மை காட்டிக்**
**காணுகிற என்னுளத்தில் வெம்மை கூட்டும்” (வீ.கா.17:62)**

என்பர். காதலியின் பற்கள் முத்துப் போன்றிருப்பதை 'நகைக்கும் பற்கள் முத்தனையாள்' (முடி.க.ப.70) என்று குறிப்பிடுவர்.

**முகம்:-**

தலைவியின் முக அழகைப் பாடும் கவிஞர் பல்வேறு மலர்கள் ஒரே கொடியில் பூத்திருப்பதாக வருணிக்கிறார். தாமரைப் பூவிற்குள் இருகுவளைகள் விரிந்திருப்பது போல் தலைவியின் முகத்தில் இரு கண்கள் காட்சியளிக்கின்றன. எள்ளின் பூவாய் மூக்கும், ஆம்பல் மலராய் இதழும் முல்லைப் பூக்களாய்ப் பற்களும் கவிஞருக்குத் தோற்றமளிக்கின்றன. இதனை 'புதிய உலகம்' என்னும் பாடலில்,

**"அழகொழுகுந் தாமரைப்பூ மலர்ந்து காட்ட**
**அதன்நடுவே இருகுவளை விரிந்திருக்க**
**எழில்தவழும் எள்ளின்பூ எடுப்பாய் நிற்க**
**இனியநிறத் தரக்காம்பல் அவிழ்ந்து தோன்ற**
**கொழுமுகைகள் செறிமுல்லை வரிசை காட்டக்**
**குவிகமல மொட்டிரண்டு நிமிர்ந்து நிற்கக்**
**செழுமையுறு செங்காந்தள் விரிந்து தோன்றச்**
**செப்பரிய மெல்லியநல் லனிச்சம் தாங்கி**
**ஒசிந்தாடி வருகின்ற கொடியைக் கண்டேன்" (நெ.பூ.ப.255)**

என்று வருணிக்கும் கவிஞர் தலைவியின் முகத்தில் மாங்கதுப்பில் அரும்பி நின்ற அழகுமிகுந்த இளஞ்சிவப்பை மலையிலும் மண்ணில் தவழும் பூக்களெதிலும் தாம் கண்டதில்லை என்றும் பாடுகின்றார்.

கண்ணாடி மாளிகை திரைப்படப் பாடலொன்றில் முடியரசனார்,

**"சிரித்த முகம் வேணுமடி**
**பெண்ணே -அதுதான்**
**சேவை செய்யும் பெண்களுக்கு**
**அழகுதரும் கண்ணே!" (நெ.பூ.ப.27)**

என்று பெண்களுக்கு சிரித்த முகம் அழகு தருமென்று குறிப்பிடுகிறார்.

**மார்பு-இடை:-**

தலைவியின் மார்பிற்குக் கவிஞர் தாமரை மொட்டுகளை ஒப்புமையாக்குகின்றார் இதனை,

**“குவிகமல மொட்டிரண்டு நிமிர்ந்து நிற்க”** (நெ.பூ.ப.255)

**“குலங்கு மலர்த் தாமரையை நோக்கு வான்போல்**
**ஒன்றிநிற்கும் அவ்விரண்டு மொட்டும் வேண்டி**
**உனையிரப்பன் மகிழ்ந்தளிக்க வல்லாய் கொல்லோ” (வீ.கா.27:107)**

என்பன போன்ற அடிகள் விளக்கும்.

மங்கையின்பமும், மாத்தமிழ் இன்பமும் மகவுதரும் இன்பத்திற்கு ஈடாகுமோ? என்று குழந்தை இன்பம் பாடலில் வினவும் கவிஞர்,

**“மரஞ்சேர்ந்த மாதுளைபோல் தோன்றும் உன்றன்**
**மார்பகத்தால் பேரின்பம் தந்த போதும்” (முடி.க.ப.91)**

என்று மாதுளம்பழத்திற்குத் தலைவியின் மார்பகத்தை உவமையாக்குகிறார்.

மார்புக் கச்சையைக் குடமென உருவகிக்கும் கவிஞர்

**“வடந்தாங்கும் குடமாடக்**
**குடந்தாங்கும் இடைஆட” (கா.பா.ப.57)**

என்றும்,

**“கச்சுக் குடங் களினால் - எனக்குக்**
**கள்வெறி மூண்டதடி” (கா.பா.ப.61)**

என்றும் வருணிக்கிறார்.

**“கச்சுக்குள் அடங்காமல் அழுங்கும் கொங்கை” (வீ.கா.27:104)**

என்று வேல்விழியின் அழகை மாவேழன் வருணிப்பதாகப் பாடுகிறார்.

பெண்ணின் இடையை வருணிக்கும் பொழுது ‘நூல்புரை மெல்லிடை’ (வீ.கா.27: 113), ‘துணர்க்கொடியின் இடை’ (வீ.கா.30:124), ‘மின்னனைய இடையுடையாள்’ (வீ.கா.32:132) என நூல், கொடி, மின்னல் போன்றவற்றிற்கு ஒப்புமையாக்குகிறார்.

**காதலின் தன்மை:-**

பருவக் கூத்தின் மேல் விளைவான காதலுக்கு ஆட்படாதவர் எவருமில்லை என்று குறிப்பிடும் கவிஞர் அதனை,

**"அளப்பரிய நூல்பலவும் கற்றா ரேனும்**
**அறிவொன்றும் அறியாத மற்றா ரேனும்**
**களப்பலிகள் பலகொடுத்த வலிய ரேனும்**
**கனவகத்தும் போர்காணா மெலிய ரேனும்**
**உளப்படுத்தி உலகியலிற் சிறந்தா ரேனும்**
**உறவறுத்துப் பற்றனைத்தும் துறந்தா ரேனும்**
**விளக்கரிய காதலெனும் கூத்துள் நின்று**
**விளையாடா மாந்தரெங்கும் இல்லை என்றாள்"**

**(வீ.கா.35:151)**

என்று வேல்விழியின் தோழி வாயிலாக உணர்த்துகிறார்.

வேல்விழி மீது காதல் வயப்பட்ட மாவேழன் காதலின் மேன்மையை,

**"ஈவாருங் கொள்வாரும் இங்கே யில்லை**
**உரிமைதனைக் கொள்வதற்கோர் தடையு மில்லை;**
**பூவாருங் கொடிக்குரியை நீயே என்று**
**பூண்டுள்ளேன் ஓருறுதி; கண்ட ஞான்றே**
**நீவேறு நான்வேறென் றெண்ண வில்லை!**
**நீங்கியது நானெனதென் றெண்ண மன்றே" (வீ.கா.27:111)**

என்னும் பாடலில் கொடுப்பார் கொள்வார் என்ற வேறுபாடு காதலில் இல்லை தலைவன்-தலைவி இருவருமே ஒத்த உரிமையுடையவர்கள் என்றும், ஒருவர் மீது ஒருவர் காதல் கொண்ட பொழுதே 'நான், எனது' என்ற சுயநலம் மறைந்து 'நாம், நமது' என்ற பொதுமை தோன்றுவதை அழகுற எடுத்துரைக்கின்றார்.

காதலியின் கடைப்பார்வை காட்டிவிட்டால் ஆடவர்க்கு இயலாத காரியமென்று ஏதுமில்லை. காதலியின் கடைக் கண்பார்வைக்கு அத்தகைய வலிமையிருப்பதை,

**"காற்றி லேறியவ் விண்ணையும் சாடுவோம்**
**காதற் பெண்கள் கடைக்கண் பணியிலே"[40]**

என்று பாரதியும்

**“கண்ணின் கடைப்பார்வை காதலியா் காட்டிவிட்டால்**

**மண்ணின் குமரருக்கு மாமலையும் ஓா் கடுகாம்”[41]**

என்று பாரதிதாசனும் பாடுவா்.

முடியரசனாரும் ‘காதற்சிலை’ என்னும் கவிதையில் இளவரசி மயிலி, தன் காதலனான சிற்பியிடம் ஏழு நாட்களில் தன்னைப் போல் சிலையொன்றை செதுக்கித் தருமாறு வேண்ட காதலியின் கடைக்கண்பாா்வைக் கோரிக்கையை ஏற்று உண்ணாமல், உறங்காமல், உடல்நலம் பேணாமல் ஓய்வுறக்கமின்றி சிலை வடிக்க முற்படுகிறான். இதனை,

**“காதல் மடவாா் கடைக்கண் பணித்தால்**
**ஈதொரு பணியோ? ஏழ்சிலை முடிப்பா்!**
**காதல் வேகம் கடிதே கடிதே!” (முடி.க.ப.22)**

என்று பறைசாற்றுவா்.

‘ஆடவா்’ என்னும் கவியரங்கக் கவிதையில் சீதையின் கடைக்கண் பாா்வை கண்ட இராமன் வில்லொடித்த நிகழ்வை,

**“காதல் மடவார் கடைக்கண் விழியினைக் காட்டிவிட்டால்**
**சாதலும் ஏற்பா் எளிதில் மலையும் தகா்ப்பரென்றே**
**ஓதலும் உண்மை உயா்பெரு வில்லும் சனகனுள**
**வேதனை யுமொடித் தானொரு வீரன் மிதிலையிலே” (க.மு.ப.13)**

என்னும் பாடலில் சுட்டிக்காட்டி காதலியின் கடைக்கண் வலிமைக்கு வலுச்சேர்க்கின்றார்.

**தலைவன் - தலைவியின் நலம் பாராட்டல்:-**

தலைவன் தலைவியைக் கூடும் முன்னும் கூடிய பின்னும் தலைவியின் நலம் பாராட்டுவதுண்டு.

‘ஒரு நாளைக்கு ஒரு சிலை வடிக்கும் ஆற்றல் மிகுந்த சிற்பி பல திங்கள் சிந்தித்து ஆய்ந்து தாள், இடை, மாா்பம், முகம், விழி, தோள் ஒவ்வொன்றையும் பல நாளாகத் தொன்முறையில் வழுவாமல் படைத்துத்தந்த வாளை வென்ற விழியழகுச் சிலையே, உன் வாய் மலர ஏன் சிரித்தாய்?’ என்று வீரகாவியத் தலைவன் வேழன், வேல்விழியின் நலம் பாராட்டுகிறான். (வீ.கா.27:105)

இயற்கைப் புணா்ச்சிக்குப் பின் தலைவியின் அழகைப் பாராட்டும் தலைவன்

**"முகிலிடையே மலர்முல்லை கண்ட தில்லை**
**மொய்குழலில் அம்முல்லை மலரக் கண்டேன்;**
**துகிலுடைய மாங்கனியைக் கண்ட தில்லை**
**தோள்தொட்ட பின்னரதைக் கண்டு கொண்டேன்;**
**நகையுடைய முல்லைக்கு வரிசை யில்லை**
**நானின்றவ் வரிசைதனை நின்வாய்க் கண்டேன்;**
**புகலரிய இனிமைக்கு வடிவமில்லை**
**பூமகளே நின்னுருவில் அதனைக் கண்டேன்" (வீ.கா.41:173)**

என்று பலவாறு பாராட்டி மகிழ்கிறான். தலைவிக்கு தலைவனின் புகழ்மொழி தரும் மயக்கம், புணர்ச்சியால் வரும் மயக்கை விஞ்சியதாகக் குறிப்பிடும் கவிஞர்,

**"புகழ்மொழிகள் தந்நலத்தை வெறுத்து விட்ட**
**பொதுநலத்துத் தொண்டரையும் மயக்கு மென்றால்**
**வகிர்வடுவின் விழிமகளிர் நெஞ்சை மட்டும்**
**வாட்டாமல் வளைக்காமல் விட்டா போகும்?"**

**(வீ.கா.41:176)**

புகழ்மொழிக்கு பொதுநலத் தொண்டரே மயங்கும் போது மகளிர் மயங்காதிருப்பாரோ? என்று உலகியலின் வழி உணர்த்துகிறார்.

'ஆவி கலந்த அழகி' என்னும் தலைப்பிலான பாடலில் தன்னுயிரில் கலந்த தலைவியின் அழகிற்கு உவமை கூற முயன்று, தடுமாறி நிகரேதும் இலையோ என்று தலைவன் தலைவியின் நலம் பாராட்டுகிறான். (கா.பா.ப.53)

**தலைவி - தலைவனின் நலம் பாராட்டல்:-**

தலைவியின் செய்கையிலும், தோற்றத்திலும் மாற்றம் உணர்ந்து வினவிய தோழியிடம் தலைவி தான் காதலுற்றதைக் கூறுகிறாள். 'தலைவன் யார்' என தோழி வினவத் தலைவி,

**"தன்மானங் கொண்டோர், தமிழ்வீரர், நாட்டுமக்கள்**
**நன்மானங் காக்க நயந்து தொண்டு செய்கின்றார்,**
**அண்ணா துரைபோல் அழகாகப் பேசுகின்றார்**
**பெண்ணாப் பிறந்தார் பெறுமிழிவு நீக்குகின்றார்" (முடி.க.ப.76)**

என்று தலைவனின் குணநலன்களைப் பாராட்டுகிறாள். பேச்சின் சிறப்பிற்கு அறிஞர் அண்ணாவை உவமையாக்கியிருப்பது காதலுணர்விலும் தான் சார்ந்திருக்கும் திராவிட இயக்க உணர்வை கவிஞர் மறவாதிருப்பதைக் காட்டுகிறது.

'அழகிய மணவாளன்' என்னும் பாடலில் தலைவனின் அழகைப் பாராட்டும் தலைவி 'கவர்கின்ற மொழி பேசும் சொல்லழகன், காலமெல்லாம் தன்மீது அன்பு பொழியும் அன்பழகன், உறவாடி மகிழ்வூட்டும் குணத்தழகன், மனத்தில் கொள்கை உரமேறி நிற்கின்ற மனத்தழகன், பொன்னிறமான உடலுடைய வனப்பழகன், சான்றோர் நெறிப்படி நடக்கின்ற நடையழகன், வெண்ணிற உடைகளை அணியும் உடையழகன், மொழியால் போராடும் படையழகன், விவாதத்தில் பகைவர் முகம் நாண உரையாடும் விடையழகன்' (பா.கு. ப.234) என்று பாராட்டுகிறாள். உடலழகை மட்டுமின்றி, தலைவனது பண்பு நலன்களைத் தலைவி வாயிலாகக் கவிஞர் வரிசைப்படுத்தியுள்ளார்.

'கவிதை எழுதிய காகிதம்' என்னும் பாடலில் தலைவனின் கவிதையைச் சுவைத்ததும் தான் கவிதை எழுதிய காகிதமானதாகக் குறிப்பிடும் தலைவி 'புவியோர் போற்றும் புலமையில் உயர்ந்தவர், ஒவ்வொரு சொல்லிலும் உள்ளத்தினைக் கொடுப்பவர், செவ்விய அடி தொடை சீர் எழில் தொடுப்பவர், செந்தமிழ்ப் பாட்டின் செழுந்தேன் குடிப்பவர்' (பா.கு.ப.213) என்று தலைவனைப் பாராட்டுகிறாள்.

**குறியிடம்:-**

தலைவனுடன் சந்திக்க வேண்டிய இடங்களைத் தலைவியே சுட்டியுரைப்பாள். இதனை,

> **"அவள் வரம்பு இறத்தல் அறம் தனக்கு இன்மையின்**
> **களம் சுட்டுக் கிளவி கிழவியதாகும்**
> **தான் செலற்கு உரிய வழி ஆகலான"**[42]

என்று தொல்காப்பியம் உரைக்கும். பகலில் சந்திக்கும் இடம் பகற்குறியென்றும், இரவில் சந்திக்கும் இடம் இரவுக்குறியென்றும் அழைக்கப்படும்.

**பகற்குறி:-**

'இனிப் பொறுக்க முடியாது' என்னும் பாடலில் தலைவி தன் வீட்டில் வேற்று வரைவிற்கு முற்படுவதைத் தலைவனிடம் தெரிவிக்க விரும்பி, "என்தாய் தந்தையோடு கலந்து பேசி உறவுமுறையில் மாப்பிள்ளை தேடுகிறாள். இனியும் காலந்தாழ்த்த முடியாது மணமுடிக்கும்நாளைக் கூற மடல்சேரும் தாழை மரச் சோலைக்கு வாருங்கள்" (க.பா.ப.46) என்று பகற்குறிக்கு அழைப்பு விடுக்கிறாள்.

பூங்கொடி காப்பியம் நெல்லூா் என்னும் ஊரில் உழவா் குடிப்பிறந்த 'பொன்னியும் கொல்லுலைத் தொழில்புரியும்' வில்லவன் என்பானும் குறியிட மொன்றில் ஒரு நாள் கூடி மகிழ்ந்ததைக் குறிப்பிடும் (பூ.கொ.13:5-11)

**இரவுக்குறி:-**

இரவுக் குறி வீட்டின் அகப்பாட்டெல்லைக்குள்ளும், மனையகத்துள்ளோர் பேசும் சொற்கள் கேட்கும் புற எல்லைக்குள்ளும் அமைய வேண்டும்[44] என்பா் தொல்காப்பியா். 'ஏன் வரவில்லை?' என்னும் பாடலில் பகற்பொழுது அகலும் நேரம் பார்த்து வருவேன் என்றுரைத்த தலைவி ஏன் வரவில்லை? இகழ்ச்சி செய்து ஏமாற்றுகிறாளோ? சொன்னதை மறந்து போனாளோ? ஏன் வரவேயில்லை' யென்று பிறைநிலவிடம் தலைவன் வினவுவதாகக் கவிஞா் பாடுகிறாா். (முடி.க.ப.73)

'துயில்' என்னும் பாடலில் தன் காதலி கத்துகுரல் புள்ளொடுங்க வருவேன் என்றாள். கடையாமம் வந்தும் அவள் வரவில்லையே.. புத்தகம் படிக்க விரித்த போதும், புதுக்கவிதைகள் எழுதிட எண்ணும் போதும், புத்தம் புதுப்படங் காணச் சென்றபோதும் தொல்லை தந்த துயில் இத்தனை பொழுதாகியும் வராமல் காதல் முன் ஓடி மறைந்ததாகக் காதலன் பாடுகிறான். (மு.க.ப.155)

இரவுக்குறியுரைத்த தலைவி குறியிடம் செல்ல முடியாமல் போனதற்கு நாயின் குரைப்பொலியால் பெற்றோர் விழித்து விட்டதே காரணமென்று குறிப்பிடும் கவிஞா்

‘தலைவனைச் சந்திக்கும் எண்ணம் வீணாய்ப் போயிற்றே, தூக்கம் வந்தால் கனவிலாவது அவரைத் தழுவிடுவேன். அவரும் நானும் புதுவுலகம் சென்றிடுவோம், நீ வாராயோ?’ என்று துயிலை அழைத்துப் பாடுகிறாள் (முடி.க.ப.155)

**அம்பல்:**

ஊரார் பேசும் அம்பலும் பழிதூற்றும் அலரும் களவை வெளிப்படுத்தும். அதற்குக் காரணம் தலைவனின் போக்குவரவேயாகும்[45] என்பர் தொல்காப்பியர்.

**“சிலரும் பலருங் கடைக்க ணோக்கி**
**மூக்கி னுச்சிச் சுட்டுவிரல் சேர்த்தி**
**மறுகிற் பெண்டி ரம்ப லூற்ற”[46]**

என்னும் பாடலில் அம்பல் பற்றிய குறிப்பைக் காண முடிகிறது.

பூங்கொடி காப்பியத்தில், “பொன்னி வில்லவன் காதலிப்பதை அவ்வழியே சென்ற நெடுமகன் ஒருவன் அண்டையர் மறைசெயல் அறிவதும் தீமை; அதனைப் பலர்க்கும் அறைவதும் தீமை என்பதை உணராது எதிர்ப்படுவோர்க்கெல்லாம் புதுமை கண்டவன் போலதை விளம்பியமை” (பூ.கொ.13:12-17) அம்பலுக்குப் பொருந்தும்.

**அலர்:**

‘அலர் என்பது இன்னானோடு இன்னாளிடை இது போலும் பட்டதென விளங்கச் சொல்லி நிற்பது’[47] என்று அலருக்கு விளக்கம் உரைக்கிறது இறையனார் அகப்பொருள். அம்பலின் வளர்ச்சி நிலையே அலர். சிலரறிந்து பலரறியும் நிலைபெற்றால் அலர். பொன்னி, வில்லவன் காதலை நெடுமகன் எதிர்ப்படுவோரிடம் கூற ‘மனைதொறும் அம்மறை வாயிடம் பெற்றது நினையா வகையில் பனையாய் வளர்ந்தது’ (பூ.கொ.13:18-19) என்று நினைத்துப் பார்க்காதவாறு பனையளவாய் மறை மக்களிடம் பரவியதை,

**“பாரோர் அறிய ஒருபொருள் பரப்ப**
**ஊரார் வாய்போல் ஒன்றிலை உலகில்**
**உற்றொரு மறையை மற்றவர்க் குரைக்க**
**முற்படும் மாந்தர் கற்பனை என்னே!” (பூ.கொ.13:20-23)**

எனப் பாடுவர். இதில் ஊரார் வாய்போல் ஒரு பொருளைப் பரப்ப உலகில் ஒன்றுமில்லை, கேட்ட மறையைக் கண் கால் வைத்து நாட்டிடையே நடமாட வைக்கும் கற்பனை என்னே! என்று அலரின் நிலையை எடுத்துரைப்பர்.

**இற்செறித்தல்:-**

அலர் பரவி பொன்னியின் தந்தை செவிகளுக்கு எட்ட கடுஞ்சினமுற்று பொன்னியை வீட்டினுள் அடைத்த நிகழ்வை,

**“பெற்றான் ஒருவன் உற்றான் என்றும்**
**சற்றே நினைந்திலை! சாற்றுதல் கேள், இனிப்**
**புறச்செல வொழிப்பாய்! போற்றுதி மானம்!**
**அறச்செயல் விடுத்துநீ அகலுவை யேல், என்**
**கதிர்அரி வாள்உன் கழுத்தினை அரியும்,**
**மதியொடு நடஎன் மானமே பெரிதென**
**இடிபடப் பேசி இற்செறித் தனனே” (பூ.கொ.13:36-42)**

என்று வெளியில் செல்லக் கூடாதென்றும் மீறிச் சென்றால் கொலை செய்துவிடுவதாகவும் பொன்னியின் தந்தை எச்சரித்து இற்செறிக்கின்றார்.

**தலைவியின் பிரிவுத் துயர்:-**

தலைவனைப் பிரிந்து வாடும் தலைவி, தலைவன் அருகில்லாது தனியளாய்த் தவிக்கும் நிலையில் பிரிவாற்றாமையால் புலம்பி, இரவுப் பொழுதையும் நிலவையும் பழித்துப் பேசுவாள்.

‘காதல் நெஞ்சம்’ என்னும் பாடலில் ‘தலைவனின் பிரிவுத் துயரைத் தாங்க இயலாமல் பஞ்சணையில் படுப்பாள், புரள்வாள், கண்ணீர் விடுப்பாள். எழுந்து இருந்து மீண்டும் படுக்கையில் விழுவாள். உயிரைத் துன்பத்திலிருந்து விடுவிக்க வழி தெரியாது தடுமாறுகிறாள். பிரிவுத்துயரோ ஓங்கி வளர்ந்து உயர்கிறது’ (முடி.க.ப.69) என்று தலைவியின் பிரிவுத்துயரைப் பாடும் கவிஞர் வீரகாவியத்தில், மாவேழனின் பிரிவுத் துயர் பொறாது துயருறும் வேல்விழி தன் மீது இரக்கம் கொள்ளாத கதிரவனையும் தென்றலையும் வாடையையும் பாவிகளெனப் பழிப்பதாகப் பாடுகிறார்.

**“கொடுமிரவுக் கெத்துணைதான் வலிய நெஞ்சம்;**

**கொல்வதெனக் கொண்டதுவோ கொடிய வஞ்சம்;**
**விடிவதற்கு மனமின்றி நிலைத்து நிற்கும்;**
**வெண்ணிலவின் துணைகொண்டு கனலைக் கக்கும்;**
**சுடுகதிரோற் கென்னகுறை செய்து விட்டேன்!**
**துங்கமுகங் காட்டாமல் தூங்கு கின்றான்;**
**கடுகிவரும் நினைவிலனோ? கருணை யில்லான்;**
**கடமையினை மறந்தனனோ? வெய்யோன் என்றாள்"** (வீ.கா.24:93)

என்று இரவுப் பொழுது நீண்ட பொழுதாய் நீண்டு செல்வதாகவும், தண்ணிலவு கனலைக் கக்குவதாகவும் கதிரவன் எழுந்து வராமல் தூங்குவதாகவும் தலைவி புலம்புகிறாள்.

'காதல் இலக்கணம்' என்னும் பாடலில் உடலிலும், உள்ளத்திலும் உண்டான மாற்றங்களைத் தோழியிடம் உரைக்கும் தலைவி எது செய்தாலும் தன்னையேதான் மறப்பதாகவும் ஏதும் புரியாமல் தனியே விழிப்பதாகவும் குறிப்பிடுகிறாள்.

**"புனலாட மனமில்லை துயிலாட வழியில்லை**
**புலந்தாட அவரில்லை புகுந்தாட மகிழ்வில்லை"**

என்று எதிர்மறையாகவும்

**"கனலாடும் நிலவுண்டு கனவாடும் இரவுண்டு**
**கடுகேனும் உணவுண்ணக் கருதாத வயிறுண்டு**
**பிரிவாலே துயருண்டு பிறழ்கின்ற உடலுண்டு**
**பேணாத குழலுண்டு சூடாத மலருண்டு**
**வருவாரோ என எண்ணி மயலாடும் மனமுண்டு**
**மணவாளன் தனைக்காணத் தணவாத உயிருண்டு" (பா.கு.ப.233)**

என்று நேர்மறையாகவும் பிரிவுத் துயருற்ற பெண்ணின் நிலையை அமைத்திருப்பது குறிப்பிடத்தக்கது.

**தலைவனின் பிரிவுத் துயர்:-**

தலைவி தன்னுடன் இருந்த போது நலன் தந்தவையெல்லாம் அவள் தன்னருகே யில்லாதபோது பகையாய்த் தெரிகின்றன 'இன்பமில்லை' என்னும் பாடலில்

**"....... முழுநிலவு கார்கிழித்துச்**
**சிறிதாகச் சாளரத்துள் கதிர்வீ சிற்றே**

**அனநடையாள் என்னருகே இன்மை யாலே!**

**அதன்பாலும் அழகில்லை இன்பம் இல்லை'' (முடி.க.ப.70)**

என்று தலைவி தன்னருகேயில்லாதபோது முழுநிலவிலும் அழகில்லை. இன்பமும் இல்லை என்ற தலைவனின் நிலையைப் புலப்படுத்துவர்.

வேல்விழியின் மீது காதல் வயப்பட்ட மாவேழன் குறித்து, 'இரவுப் பொழுதில் தனிமைத்துயர் வருத்தியது. வெண்ணிலவு வெம்மை உறுத்தியது. தென்றல் காற்று மெய்வருடிப் புண்படுத்தியது. நாவல நாட்டை ஆட்சி செய்யும் மன்னன், மாவேழன் என்னும் தன் பெயர் கேட்டால் உள்ளம் கலங்கி, நடுநடுங்கி வியர்த்து வீரம் ஒடுங்கி நிற்பான். ஆனால் இன்று நாவலநாட்டு இளவரசியின் கடைவிழிப் பார்வையில் சிக்கி காதல் வயப்பட்டபின் அந்நாட்டுத் தென்றல் இளங்காற்றுக்குக் கூடத் தோற்றுச் சாய்ந்து விட்டான். விந்தையிலும் விந்தை தான் இது. குளிர் நிலவும், இளந்தென்றலும், மலரிதழும், பஞ்சணையும் பகையாய்ப் போனதோடு மாவேழனின் கண்ணிமைகளும் பகையாகிப் பொருந்தாது துயில் மறுத்து துயரூட்ட கட்டிலின் மேல் புரண்டு நெஞ்சம் புண்பட்டுக் கிடக்கிறான் (வீ.கா.16:58) என்று பிரிவுத்துயரை கவிஞர் உரைப்பர்.

**ஈருடல் ஓருணர்வு:-**

மாவேழனும் வேல்விழியும் சந்தித்துக் காதல்மொழி பேச நேரம் மிகவாயிற்றென்பதை வான்நிலவு வந்து முகம்காட்ட இருவரும் பிரிந்துசெல்லத் தினையளவும் மனமின்றி விலகிச் சென்றனர். இருவரும் தனித்தனியே பிரிந்து சென்றாலும் இருவரது பிரிவுத் துயரும் ஒன்றாகவேயிருந்ததனைக் கவிஞர்

**''நஞ்சுமிழும் முழுமதியை வானிற் கண்டார்;**
**நலிவுதரும் தென்றலெனும் காற்றைக் கண்டார்;**
**பஞ்சணையின் பெயராலே விரித்து வைத்த**
**பாழ்நெருஞ்சிப் பரப்பினையே அங்குக் கண்டார்;**
**விஞ்சுமணப் புகைபரவ வெய்து யிர்த்து**
**விடும்புகையாய் அதுபரவிச் சூழக் கண்டார்;**
**வெஞ்சரமாய்ப் பூச்சரங்கள் தெரியக் கண்டார்;**
**விழிகுவியாக் கனவுலகில் மிதந்து சென்றார்'' (வீ.கா.28:118)**

என்னும் பாடலில் காட்டுவர்.

**வேற்றுவரைவு:-**

தலைவியின் காதலை அறிந்த தலைவியின் வீட்டார் வேறொருவருக்குத் திருமணம் முடிக்க முயற்சிப்பதனை 'வேற்று வரைவு' என்பர்.

'புதுமைப் பெண்' என்னும் பாடலில் தலைவியின் உடல், உள மாறுபாடுகளைக் கண்டு ஐயுற்று வினவிய தோழியிடம் தலைவி தான் காதலுற்றதைத் தெரிவிக்கிறாள். அதற்குத் தோழி 'உன் காதலால் பொல்லாப்பு வந்துவிடும், தீது பல நேரும், தேசத்தார் தூற்றிடுவர். மணப்பதற்கு மாமன் மகனிருக்க வீணாகப் பிறரை விரும்பாதே மறந்து விடு' என்று எச்சரிக்கிறாள். 'காய்ச்சும் இரும்பு கவர்ந்திட்ட நீர் போல என் மனம் தலைவரிடத்தில் ஆயிற்று. நாட்டவர்கள், காதல் நலமறியாதவர்கள், வீட்டார்கள் சொல்லுகின்ற புல்லுரைக்கும், வெற்றுரைக்கும் நான் அஞ்சேன். உள்ளம் விரும்பிய ஒருவரை விட்டுவிட்டு வேறொருவரை மணம் செய்யும் கள்ளச் செயல்புரிய கற்பையறியா பெண்ணென்றோ எண்ணினாய்? கண்ணை இமை காப்பது போல் காக்கின்ற, என்னுள்ளத்தைத் தொட்டவர்க்கே மனைவியாய் வாழ்வதையன்றி வீட்டார்க்கும், நாட்டார்க்கும் அஞ்சி வேறுமணம் புரியமாட்டேன்' (முடி.க.ப.76) என்று சூளுரைத்து அதன் படி வேற்று மணம் புரியாமல், துணிச்சலுடன் எதிர்த்து நின்று காதலித்தவரையே கரம் பிடித்த புதுமைப் பெண்ணைக் கவிஞர் படைத்துள்ளார். 'அத்தை வீட்டில் பேய்' என்னும் சிறுகதையில் ஊர்மிளாவின் மாமன் மகன் தமிழாசிரியர். இருவருக்குமிடையே இருந்த காதலை ஊர்மிளாவின் தாய் ஏற்றுக்கொண்டாலும், அவளின் தந்தை 'தமிழ் வாத்தியாருக்குத் திருமணம் செய்துகொடுத்தால் கௌரவக் குறைச்சல்' என்று மறுத்து வேறொருவருக்கு மகளை நிச்சயித்து விடுதல் (எ.கா.ப.137) இதற்குச் சிறந்த சான்றாகும்.

**அறத்தொடு நிற்றல்:-**

அகப்பொருள் இலக்கணத்தில் 'அறத்தொடு நிற்றல்' என்பது முதன்மையான மரபாகும். தலைவன் தலைவியின் களவொழுக்கத்தினை அறவழியில் நிலைப்படுத்த கற்பு வாழ்வில் இணைக்க விரும்பும் தோழி, செவிலி முதலானோர் உரியவர்க்கு உரியவாறு எடுத்துரைப்பது

அறத்தொடு நிற்றல் ஆகும். களவைக் கற்பாக்கும் அறச் செயலை அறத்தொடு நிற்றலென்று கூற இயலும்.

**தலைவி - அறத்தொடு நிற்றல்:-**

தலைவி தனக்கும் தலைவனுக்கும் இடையிலான மறைமுகக் காதல் வாழ்வைத் தோழியிடம் வெளிப்படுத்தலை 'புதுமைப் பெண்' என்னும் பாடலில் தலைவியின் முகம் வெளிறிப் போயிருப்பதையும் உண்ணாது உறங்கா திருப்பதையும் கண்டு தோழி காரணம் வினவுகிறாள். அதற்குத் தலைவி 'நல்ல பசி இல்லை, நலமில்லை, வேறொன்றுமில்லை' என்று மழுப்புகிறாள். தலைவி சொல்வதில் உண்மையில்லை என்று தெரிந்த தோழி 'என் மீது அன்பில்லாததால்தான் பொய்யாய் ஏமாற்றுச் சொற்கள் இயம்புகிறாய், போய் வருகிறேன்' என்று கோபித்துக் கொள்ள, தலைவி தன் களவொழுக்கத்தை,

> **"நில்லடி என் தோழி நேர்ந்ததையே சொல்லுகிறேன்**
> **பல்லை விரித்துப் பரிகாசம் பண்ணாதே**
> **நெஞ்சை ஒளித்ததொரு வஞ்சகம் இல்லை என்பார்**
> **நெஞ்சம் நீயன்றோ நேரிழையே! தாயறியாச்**
> **சூலுண்டோ? உண்மையை நான் சொல்லி விடுகின்றேன்**
> **மாலுண்டேன் காதல் மதுவால் மனந்தளர்ந்தேன்" (முடி.க.ப.75)**

என்று வெளிப்படுத்துகிறாள்.

**தோழி அறத்தொடு நிற்றல்:-**

தலைவியின் களவொழுக்கத்தினைப் பற்றி செவிலி தோழியிடம் ஐயப்பாட்டை எழுப்பி வினவியபோது தோழி அறத்தொடு நிற்பாள். இது செவிலித்தாய் தலைவியின் உடல் தோற்றத்திலும் செயல்பாடுகளிலும் தற்போது நிகழ்ந்துள்ள வேற்றுமைகளுக்கு காரணம் யாது? எனக் கேட்கின்ற பொழுதும் தலைவியின் உடல், உள மாறுபாட்டிற்கான காரணமறிய வேலனை அழைத்து வந்து வெறியாட்டு நிகழ்வைச் செவிலி மேற்கொள்ளும் பொழுதும் நிகழும்.

இதில் முதல் கூறுபாட்டினை முடியரசனாரது படைப்புகளில் இரண்டிடங்களில் காணமுடிகின்றது. 'நடந்தது என்ன?' என்னும் பாடலில் அன்னம் போலத் தளர்ந்து நடந்தவள் இன்று ஆடி நடக்கிறாள்; கன்னமும், கண்களும் சிவந்திருக்கிறது, சூதும் வாதுமறியாதவள் இன்று முகத்தில் ஏக்கம் படரச்சொக்கி நடக்கிறாள். என்ன நடந்தது என்று செவிலித்தாய் தோழியிடம் வினவுகிறாள். சோலையில் மாலை நேரத்தில் நடந்து செல்லும் போது வீரனொருவனிடம் காதல் கொண்டாள். அவன் கட்டியணைத்து முத்தம் கொடுத்திடக் கன்னம் சிவந்தது. இடைதொட்டுப் பயின்றதன் அடையாளமாய் தலைவி விழி செக்கச் சிவந்தனள். காதல் மலர்ந்ததால் நாணம் பிறந்தது. யாவையும் கண்டு தெளிந்தவள் முகத்தில் துயரம் மிகுந்தது. தலைவன் மாலை அணிவித்து மணமுடித்தால் தலைவியின் துயர் தீரும்' என்று கூறி தோழி செவிலியிடம் அறத்தொடு நின்றாள். (கா.பா.பக்.54-55)

இதே போன்று 'போது விரிந்தது' என்னும் பாடலில் செவிலி தோழியிடம் 'துள்ளும் மான் போல் நடையுடையவள்; இன்று புள்ளிமயில் போல் நடக்கிறாள். கள்ளமிலாதவள் இன்று வெள்கும் முகமுடையாளாய் இருக்கிறாள். ஆடை அணிகளில் நாட்டமின்றி ஆடி ஓடித் திரிபவள் இன்று கூந்தலை முடித்துப் பூந்துணர் சேர்த்தமைத்து, புதுச் சாந்துகள் மேற்பூசுகிறாள். கண்ணில் மை பூசுகிறாள் கடைக் கண்களில் பேசுகிறாள்; இதழில் புன்னகை வீசுகிறாள்; மொழி என்னென்னவோ பேசுகிறாள்; செந்தளிர் போன்ற உடலில் நறுஞ்சந்தனம் நீவுகிறாள். மின்னல் இடை தளர, சடைப் பின்னல் கிடந்தசைய மட அன்னம்போல் நடை நடந்து கொடி போல் படர்ந்தாள். செப்புச்சிலை போல் ஒப்பனை செய்ய எப்படிக்கற்றாள்? சொல்லடி பெண்மகளே' என்று தோழியிடம் வினவுகிறாள். அதற்குத் தோழி பதில் மொழியாக,

**"மாது திரிந் ததனால் - ஒரு**
**ஏதம் நிகழ்ந் ததிலை - இளங்**
**காதல் மலர்ந் ததம்மா - மணப்**
**போது விரிந் ததம்மா" (பா.கு.ப.142)**

என்று தலைவி மீது குற்றமில்லை. தலைவிக்கு காதல் மலர்ந்ததால் ஏற்பட்ட மாற்றங்கள் தான் அவை என்றுரைத்து அறத்தொடு நிற்கிறாள்.

வீரகாவியத்தில் வயத்தரசனிடம் தோழி ‘வேல்விழி மன்றலுக்கு மனமொப்பிவிட்டாள். அவளுக்கேற்ற துணையைத் தேடிக் கலங்கும் நிலையை ஏற்படுத்தாமல் அவளே உற்ற துணை வீரனை விரும்புகிறாள்’ என்று வேல்விழியின் காதலையுரைத்து மன்னனிடம் அறத்தொடு நிற்கின்றாள். (வீ.கா.32:132-133)

**உடன்போக்கு:-**

தலைவியின் பெற்றோர் தலைவனுக்கு மணமுடிக்க எதிர்ப்புத் தெரிவித் தால் தலைவியைத் தோழியின் துணையுடன் தலைவன், தன் மனைக்கு அழைத்துச் செல்லுதலை ‘உடன்போக்கு’ என்பர்.

பொன்னியின் தந்தை வில்லவன், பொன்னியை மணமுடிக்க எதிர்ப்புத் தெரிவித்ததால் வில்லவன் உடன்போக்கில் செல்லப் பொன்னியை அழைக்கிறான். பொன்னி மறுப்பேதும் கூறாமல் ‘மீன் புனலில் வாழ வெறுக்குமா? தலைவன் தாள் நிழலே தனக்குப் பேரின்பம் என்றுரைத்து விரைந்து செல்வோம்’ என்று உடன்போக்கில் செல்ல பொன்னி உடன்படுகிறாள். (பூ.கொ.13:80-85)

**வரைவு:-**

களவொழுக்கத்தில் காதலுற்றுக் களித்திருந்த தலை மக்கள் திருமணம் செய்து கற்பொழுக்கம் பேணுதல் ‘வரைவு’ எனப்படும். வெளிப்பட வரைதல், படாமை வரைதல் என்று வரைதலை இருவகையாகக் குறிப்பிடுவர் தொல்காப்பியர்.[48]

**வெளிப்பட வரைதல்:**

வீரகாவியத்தில் களவொழுக்கத்தில் ஈடுபட்ட தலைவன், தலைவி இருவரது காதலையும் தோழி தலைவியின் தந்தைக்குத் தெரிவித்து மணம் செய்விக்க முற்பட்டாள். தந்தை முதலில் மறுத்து, பின்பு ஏற்றுக்கொள்கிறான்.

வேல்விழியின் தந்தை மாநகரம் முழுமைக்கும் மணமுரசறைவித்து மணச் செய்தியை அறிவித்தான்.

**“குறித்த மண நாள்வரலும் கொற்ற வன்றன்**
**கோயிலெலாம் தெருவெல்லாம் மக்கள் கூடிச்**
**சிரித்தமுகங் கொண்டங்கு நிறைந்து நின்றார்**
**சேர்ந்தவருள் மன்னரென்றும் மக்கள் என்றும்**
**பிரித்தறிய முடியாமல் கலந்து நின்றார்;**
**பெரும்புலவர் தம்வாயால் வாழ்த்தி நின்றார்;**
**விரித்த இதழ் மலர்மாலை சூட்டி வேழன்**
**வேல்விழியைக் கைப்பிடித்தான் துணையாக் கொண்டான்”**

**(வீ.கா.39:162)**

மன்னனது அரண்மனையிலும், தெருவிலும் மக்கள் நிறைந்து மன்னரென்றும் மக்களென்றும் பிரித்தறிய முடியாதவாறு சரிநிகர் சமமாய்க் கலந்து நின்று பல்லோர் முன்னிலையில் மன்றல் நிகழ்ந்ததாக மன்னரையும் மக்களையும் ஒரு நிலையாக்கிக் காட்சிப்படுத்துகிறார் கவிஞர்.

**படாமை வரைதல்:**

தலைவனும் தலைவியும் சந்திக்குமிடத்தில் பிறரறியாது மணம் செய்து கொள்ளுதலை ‘படாமை வரைதல்’ என்பர். ‘சீரழிந்து போகாதே’ என்னும் பாடலில் தன் மகளிடம் தாய்

**“சோலை புகும் வண்டாகிச்**
**சூழந்து வரும் ஓர் பாவி**
**ஆலை பிழி கரும்பாக**
**ஆக்கி எனை ஓட்டிவிட்டான்” (நெ.பூ.ப.272)**

என்று தன்னை யாரும் அறியாமல் வரைந்து ஏமாற்றியவனைப் பற்றிக் கூறி ‘என்ன துன்பம் வந்தாலும் ஏய்த்து வரும் ஆடவரை நம்பிச் சீரழிந்து போகாதே!’ என்று அறிவுரைக்கிறாள். (நெ.பூ.ப.272)

‘எக்கோவின் காதல்’ என்னும் சிறுகதையில் எக்கோவும் மல்லிகாவும் வீட்டிற்குத் தெரியாமல் மணந்துகொண்டமை (எ.கா.ப.117) வெளிப்படாமல் வரைதல் எனும் அடிப்படையில் அமைந்துளது.

**காதலின்பம்:-**

தலைவனும் தலைவியும் கூடி இன்பம் திளைத்து மகிழ்தலை ‘காதற் காவியம்’ என்னும் பாடலில் “ஒவ்வொரு பக்கமும் ஒவ்வொரு கதையாகும். ஒன்றையொன்று விஞ்சிய சுவையாகும். காதற்காவியத்தைப் படிக்க எவ்வகைத் தடையும் இடுபவர் இல்லை. எடுத்ததை இரவெல்லாம் படித்திடும் கலையாகும். படித்திடப் படித்திடப் புதியன கிடைக்கும். பலமுறை படிப்பினும் விருப்பத்தைக் கொடுக்கும். படித்தபின் நினைத்தாலும் இனிக்கும். படித்ததன் பயனாய் இலக்கியப் பரிசில் (மக்கட்பேறு) கிடைக்கும்” (பா.கு.ப.182) என்று நயம்பட உரைப்பர்.

காதலின்பம் துய்க்க, தலைவியைத் தலைவன் உடன்படுத்தமுயல தலைவி மறுத்து ஒதுங்குகிறாள். ‘நெஞ்சமெனும் சிறையிலிட்டு நேயத்தால் என்னைக் கட்டிய பின்னும் திரையென்னும் மறைவெதற்கு?’ என்று வினவுகிறான். அதற்குப் பதிலுரைக்கும் தலைவி ‘குறைபட்டுப் போகாத கூச்சமெனும் குணமெனக்கு. கண்ணெனவே தமிழ்மரபு காப்பதுதான் பெண்மரபு’ என்று கூறித் தமிழ் மரபைப் போற்றி நிற்கின்றாள். (நெ.பூ.ப.261)

‘மாவேழனும், வேல்விழியும் மணங்கண்டு மாளிகையிற் கூடும்போது மெய்யொன்றும் பொழுதில் மேனாளில் கண்டறியா இன்பம் கண்டு அறியாமாந்தர் இவ்வுலக வாழ்வைப் பொய்யென்றார்; புதுமையிது புதுமையிது என்று மகிழ்ந்து கூடி இன்புற்றனர்’ (வீ.கா.40:168) என்று திருமணத்திற்குப்பின் நிகழும் கற்பு வாழ்வைக் காட்சிப்படுத்துவர்.

**கணவன் பிரிவால் வாடும் மனைவி:-**

மணமான பின் தலைவன் தலைவியை விட்டுப் பிரியும் பிரிவுகளை இறையனார் களவியல்,

**“ஓதல் காவல் பகைதனி வினையே**
**வேந்தர்க் குற்றுழி பொருட்பணி பரத்தையொன்று**
**ஆங்க ஆறே அவ்வயிற் பிரிவே”[49]**

என ஆறு வகையாகப் பகுக்கின்றது.

‘முகில்விடுதூது’ என்னும் கவிதையில் தலைவி பொருள் தேடிச் சென்ற தன் கணவனிடம் முகிலைத் தூதாக அனுப்புகிறாள். “தன் கணவன் இன்றுவரை அஞ்சல் அனுப்பவில்லை. வாடகை தருவதற்கும் பிள்ளைகளுக்குக் கல்விக் கட்டணம் கட்டுவதற்கும் கையில் பொருளில்லை. கம்பளத்தை விற்றுக் கடன் கழித்தேன். என்னவரைக் கண்டால் காசனுப்பக் கூறிடு’ என்று வறுமைத்துயருரைக்கும் தலைவி ‘அவர் நெஞ்சுணர்ந்து பேசு; பிழையாகப் பேசி வருத்தாதே’ என்று கூறுவதில் தலைவியின் உளவியல் நுட்பம் சிறந்திருப்பதைக் காண முடிகின்றது. மேலும் காதல் முகத்தைக் கண்டு பலநாட்கள் ஆதலை அவரறிவார். ஆசைக் கணவரைக் கண்டு மகிழ்வுபெறக் கண் துடிக்கும் செய்தியையும் அவரிடம் சொல்லி விரைந்து திரும்பு’’ (முடி.க.ப.96) என்று முகிலைத் தூதனுப்புகிறாள்.

வீரகாவியத்தில் மாவேழன் நாட்டைக் காக்கப் பிரிந்து செல்ல வேல்விழி பிரிவாற்றாது வருந்துகிறாள். ‘காதலரைக் கூடி மகிழும் போது கிடைக்கும் இன்பம் கடல் போலப் பெரிதாகும். அவரே பிரிந்துவிட்டால் வேதனை கடலைவிடப் பெரிதாய்த் தோன்றும். தலைவன் உடனிருக்கும் போது மகிழ்வில் கண்கள் துயிலவில்லை. இன்று அவர்பிரிந்த துன்பத்தில் கண்கள் உறங்கவில்லை. அருகிருந்த போது விரைந்து சென்ற இரவு, அவர் பிரிந்திருக்கும் இன்று வேரெல்லாம் விழுந்ததுபோல் நிலையாக நின்று விடியாமல் நெடுநேரம் தங்கிக் கொல்கிறது. பிரிவுத்துயர்தந்த கண்களை எள்ளி வெறுக்க நினைவு தோன்றும். துயின்றாலாவது கனவில் வரும் கணவரிடம் துயரைச் சொல்லலாம். துயிலும் வரவில்லை, சிலபோது குறுங்கனவாய் வந்து துயர் சொல்லும் முன் மறைந்து போவான். நனவுடைய கனவில் என் தோளில் உறைந்திருப்பான். விழித்துப் பார்த்தால் புலனறிய முடியாமல் நெஞ்சினுள் புகுந்து மறைகிறான்.

**“தென்றலுனக் கென்ன பிழை செய்து விட்டேன்?**
**தீயாக வீசுகின்றாய்; கொழுநர் ஓர்நாள்**
**முன்றிலிடத் தருகிருந்து காதல் கொண்டேன்**
**முகத்தெழிலைப் புகழுங்கால் நிற்ப ழித்தார்**
**என்றதற்கோ முழுநிலவோ நெருப்பே போல**
**எரிகின்றாய் சொரிகின்றாய் அனலை அள்ளி;**
**கொன்றொழித்தாற் குற்றமிலை கொல்லா தென்னைக்**
**குற்றுயிராக் கிடத்திடவோ விரைந்து வந்தாய்?” (வீ.கா.48:217)**

என்று மிகுகின்ற துயருக்கு மரணமே மேலென்று தலைவியின் பிரிவாற்றாமையைப் பாடுகின்றார்.

தலைவியின் துயரைக் கண்டு வருந்தும் தோழி தலைவனைப் பழிக்கின்றாள். தலைவனைத் தான் பழித்தால் பரவாயில்லை. உற்ற தோழியே ஆயினும் வேறொருத்தி பழிப்பதை விரும்பாத தலைவி பழித்துப்பேசும் தோழியைத் தடுத்து, தலைவனைப் புகழ்கின்றாள்.

‘கருக்கொண்ட பொழுதில் அழுது, உணவு மறுத்து, துயில் வெறுத்தல் அழகா? பிரிவுத் துயரைத் தாங்கித் தொழுதிருத்தல் தானே மங்கையார்க்குக் கடன். சிறுபிள்ளையா நீ? மணத்திலிருக்கும் பளுவகற்றி கருவிலிருக்கும் உன் பாலகனை எண்ணி, பரிதவிப்பை விடு’ என்று பக்குவமாய்த் தேற்றுகிறாள்.

‘கலங்குகின்ற என்னைக் குறை சொல்கிறாய்? காதலியைக் கைவிட்டுப் பிரிந்து சென்று என்னைக் கலங்கும்படி செய்தானே, அவனை நீ கடுகளவும் குறைசொல்லிப் பழித்தாயில்லை. பரிவுடன் ஒரு சொல் சொல்லித் தூதனுப்பிவைத்தால் வஞ்சகனுக்கு வாயென்ன நொந்தா போகும்? தண்ணளியில்லாத தறுகணானை குறை சொல்வதற்கிங்கு எவருமில்லை, கடிந்துரைக்க நானொருத்தி தான் கிடைத்தேன். என் தீவினையை நோவதல்லாமல் நான் எவரிடம் போய் முறையிடுவேன்’ என்று தலைவி அரற்றுகிறாள். (வீ.கா.49:221)

தலைவியைத் தேற்ற நினைத்த தோழி, தலைவனை “இரக்கமில்லாதவன், போர் வெறியன், காதலுக்குத் தகுதியற்றவன், சிந்தையில் மென்மைக்கு இடம் தராதவன், கனவிலும்

தலைவியின் துயர் அறியாது கடுந்துயரக் கடலினுள் தள்ளிவிட்டவன். மனமொன்று இல்லாத பொய்யன்'' என்றெல்லாம் பொய்யாகப் பழிக்கின்றாள். **(வீ.கா.50:222-223)**

தோழி தலைவனைப் பழிப்பதைப் பொறாத தலைவி 'என்மீது நீ கொண்டிருக்கும் அன்பால் என் தலைவனை இகழாதே தோழி! வீணாக இனியவனைக் கருணையில்லாதவன், வஞ்சமுடையான் என்றெல்லாம் பழிக்காதே. பிரிவைத் தாங்கும் ஆற்றலை வளர்த்துக் கொள்ளாதது என் குற்றமே. வலியனேயாயினும் சேர்ந்திருக்கும் போதெல்லாம் அன்பாலே தலையளி புரிந்ததெல்லாம் நீ அறிவாயோ? அவனென்ன செய்வான்? எனக்கும், தாய் நாட்டிற்கும் நெஞ்சினுள் சரிசமமாக இடம் தந்தான். தாய்நாடு துயருறும்போது தரியானாகி முனைந்தெழுந்து களஞ்சேர்தலே முறைமை. தலைவனைப் பிரிந்திருக்க இயலாது; நான் பிணற்றுகின்ற நிலைக்கு இரக்கம் கொண்டு அவனைப் பழித்தாய். நான் இனி அப்பிரிவைப் பொறுப்பேன்' (வீ.கா.50:225) என்று உறுதிஉரைப்பது சங்க இலக்கியத்திற்கு நிகரான இலக்கியச் சுவை தருகிறது.

'இன்னும் வரக் காணேன்' என்னும் பாடலில் காலையில் எழுந்து சென்ற கணவன் ஒன்பது மணியாகியும் காணவில்லையே. செய்துவைத்த இடியாப்பம் சில்லிட்டுப் போகுதே.. வரும் வழியில் எவரேனும் வாய்கிளறிவிட்டாரோ? அரசாங்கப் பேச்சைப் பேசி வம்பு வளர்த்தாரோ? தமிழென்றால் உயிராயிற்றே.. தாய்மொழி நிலையை உரையாடி நின்றாரோ?' என்று சிறிது நேரப் பிரிவிற்கு வருந்தும் தலைவியைப் படைத்துள்ளார். (கா.பா.ப.49)

பூங்கொடி காப்பியத்தில் ஓதற்பிரிவால் சண்டிலியைப் பிரிந்து சென்று திரும்பிய துருவனைக் கண்டு சண்டிலி மகிழ்ந்தமையை,

> **''ஓதும் பொருட்பாற் காதலற் பிரிந்த**
> **மாதும் கொழுநன் வரவால் தழைத்த**
> **நெஞ்சினள்'' (பூ.கொ.22: 14-15)**

என்னும் அடிகள் விளக்கும்.

**கணவன் வரவால் மகிழும் மனைவி:-**

பிரிந்து சென்ற கணவன் திரும்பி வரும்போது தலைவி அடையும் மகிழ்விற்கு எல்லையேயில்லை. பொருள் தேடி மரக்கலத்தில் ஏறி அயலகம் சென்ற கூத்தன் புயலில் சிக்கி உயிர் துறந்தான் என்ற செய்தி கேட்டு, கூத்தன் மனைவி எழிலி உயிரும் உடலும் நலிந்து மெலிந்தாள். கூத்தன் உயிரோடிருக்கிறான் என்ற வானொலிச் செய்தி கேட்டு மகிழ்ந்து தலைவன் வரவை எதிர்நோக்கிக் காத்திருக்கிறாள். பல இடர்ப்பாடுகளைக் கடந்து கூத்தன் தாயகம் மீண்டு, எழிலியைச் சந்திக்கின்றான்.

**“வேயனை தோளி மீளுறுங் காதலற்**
**காணலும் நீள்துயர் களைந்தனள் ஆங்கே;**
**பேணிய கூத்தும் பெரும்பே ரிசையும்**
**நீணில மாந்தர் நெஞ்சங் களிகொள**
**மீண்டும் மலர்ந்தே யாண்டும் பரவின;**
**எழிலிதன் வாழ்வில் எழிலி ஆயினள்” (பூ.கொ.16:189-193)**

என்பதில் கணவனைக் கண்ணுற்றதும் எழிலி தன் நீள்துயர் களைந்தமை நன்கு பாடப்பெற்றுளது.

மனைவியிடம் விடைபெற்றுத் தோணி மீதேறி, கடலுள் நெடுந்தொலைவு மீன் பிடிக்கச் சென்ற தன் கணவன் கடும்புயலையும் சுறாக் கூட்டத்தையும் கடந்து தப்பி மீள்வாரோ? மீளாரோ? எனத் தளர்ந்து இருந்தவள் தலைவன் மீண்டு வந்ததைக் கண்டு அகத்துள் பொங்கும் மகிழ்ச்சிவெளிப்படுதலை ‘எழில்’ என்னும் கவிதை (முடி.க.ப.44) விளக்குகின்றது.

**மனைவி-தெய்வம்:**

பெற்று வளர்த்த தாய் தந்தையரையும் உடன் பிறந்தோரையும் உற்றார் உறவினரையும் விட்டுப் பிரிந்து மணந்த நாள் முதல் கணவன் குடும்பத்தையே தன் குடும்பமாய் ஏற்று, கணவனின் சுகதுக்கங்களில் துணைநின்று, துயருற்றபோது தேற்றி குடும்பவிளக்காய்க் குடும்பத்தைத் திறம்பட நிருவகித்து, பிள்ளைகளைப் பேணி வளர்க்கும் மனைவி மனிதப் பிறவியாயினும் அவரைத் தெய்வமாகக் கருதி மதிக்க வேண்டும்.இதனை முடியரசனார் முழுவதுமாக உணர்ந்திருந்தார்.

‘சிற்றூர்ச் செலவு’ என்னும் கவிதையில் தான் பிறந்து வாழ்ந்த கிராமத்திற்குப் பட்டணத்தில் பிறந்து வாழ்ந்த மனைவியை அழைக்கின்றார். முதலில் பட்டிக்காடென மறுத்து, பிறகு கணவன் சொல்லுக்கு உடன்படுகிறாள். வயல்வரப்பில் நடந்து ஊருக்குச் செல்லும்போது மனைவியின் காலில் முள் தைத்து ‘ஐயோ’ என்றழுதாள். பதறிப்போனார் கவிஞர். மனைவியின் மென்காலில் முள் தைத்தது கவிஞரின் நெஞ்சில் வேல் குத்திக் கிழித்தாய் துடிக்கின்றார். மன்னிப்பு வேண்டுகிறார்.கணவன் பதறித் துடிப்பதைக் கண்டு பொறுக்கமுடியாமல் வலியை மறைத்து, கணவனிருக்குமிடமே ‘இன்பப் பூங்கா’ என்கிறார். மனைவி இருவர்க்குமிடையேயான அன்புறவு அழகாய்ச் சுட்டப்பெறுகிறது. (மு.க.ப.85)

‘பொங்கல் விழா’ என்னும் பாடலில் தைத்திருநாளில் கவிஞரின் மனைவி மகனை நீராட்டி அணிகள் பூட்டி, கவிஞரின் காலில் விழுந்து வணங்கச் சொல்கிறார். பகுத்தறிவுவாதியான கவிஞர் ‘மூடப்பழக்கமான இப்பழமை எதற்கு?’ என்று வினவுகிறார். ‘உம்மையன்றி எனக்கெனவோர் தெய்வமில்லை அத்தான்’ என்று பதிலுரைக்கிறார் மனைவி. ‘நான் உனக்குத் தெய்வமென்றால் நீயே எனக்குத் தெய்வம் என்று சொல்வதல்லாமல் வேறு உரைக்கக் காணேன்’ என்று உள்ளம் நெகிழ்கிறார்.

**“செந்தமிழிற் சுவை கூட்டும் மொழிகள் பேசும்**
**தீங்குயிலே நானுனக்குத் தெய்வ மென்றால்**
**சிந்தையினை ஆண்டுகொண்ட நீயே எற்குத்**
**தெய்வமெனச் சொல்வதலால் வேறு காணேன்;**
**இந்தவகை அன்பதனால் பிணைந்து நின்றால்**
**இல்லறந்தான் பேரின்பம்; இதனைவிட்டு**
**நொந்துழன்று திரிகின்றார் உலக மாந்தர்;**
**நுண்மதியே! என்னுயிரே! வாழ்க என்றேன்”**

**(பு.வி.செ.ப.159)**

என்று இல்லறத்தை நல்லறமாக நடத்துதற்கு வழியுரைக்கின்றார்.

சிறுகுழந்தையாக இருந்த மகன் பெரியவனாகிவிட்டான். மனைவிக்கு ஐம்பதாண்டு அகவை கடந்து விட்டது. முதுமைப் பருவத்தில் இருவரும் இருப்பினும் கவிஞருக்கு

மனைவியின் மீதான காதல் வளர்பிறை போன்று வளர்ந்திருக்கிற தேயன்றிக் கொஞ்சமும் குறையவில்லை என்பதை ‘இரண்டு குழந்தை’ கவிதை எடுத்துக்காட்டுகிறது (நெ.பூ.ப.263).

தன் அறுபத்துமூன்று வயது முதுமையிலும் மனைவியைப் பொன்னுருக் குழந்தை, என்னுயிர்த் தெய்வம் என்று போற்றிப் பாடுவதில் கவிஞரின் காதலுள்ளத்தைக் காண முடிகின்றது. (நெ.பூ.ப.268)

**கைக்கிளை:**

‘கைக்கிளை என்ற தொடருக்குச் சிறிய உறவு என்பது பொருள். சிறிய என்றால் இழிந்த என்னும் பொருளன்று. அவ்வுறவு நிற்கும் காலம் சிறியது’[50] என்பர் வ.சு.ப.மாணிக்கனார்.

கைக்கிளையை ஒருதலைக்காமம் எனச் சுட்டுவர் இலக்கண நூலார். கைக்கிளை ஆண்பாற் கைக்கிளை, பெண்பாற் கைக்கிளை என இருவகைப்படும். முடியரசனாரின் படைப்புகளில் ஆண்பாற்கைக்கிளையைப் பெரிதும் காண முடிகின்றது.

‘எக்கோவின் காதல்’ என்னும் சிறுகதையில் மட்டும் பெண்பாற் கைக்கிளையை அமைத்துள்ளார். மல்லிகாவின் தங்கை மஞ்சுளா தன் தமக்கையின் கணவன் எக்கோவின் மீது காதல் கொண்ட நிலையை அவள் கடிதத்தின் வழிக் காட்டுகின்றார். (எ.கா.ப.122)

‘கிருஷ்ணார்ச்சுண யுத்தம்’ என்னும் சிறுகதையில் கிருஷ்ணன் மதுரத்தைக் காதலிப்பதையும் (எ.கா.ப.179), ‘அணைந்த விளக்கு’ என்னும் சிறுகதையில் கமலத்தின் மீதான இராஜனின் காதலும் (எ.கா.ப.190) ஆண்பாற்கைக்கிளை ஆகும்.

பூங்கொடி காப்பியத்தில் கோமகன் பூங்கொடியின் மீது காதல் கொள்ளுதல் கைக்கிளையாகும். பூங்கொடியின் தோழி அல்லியிடம் தன்னுளக் குறிப்பைத் தெரிவித்து உடன்படுத்த வேண்டுகிறான். அதற்கு அல்லி,

**“விருப்பிலா மகளிரை விழைவது முறையோ?**
**கருத்தொரு மித்தால் காதல் சிறக்கும்**

**ஒருபால் அன்பால் உறுபயன் ஒன்றிலை;**
**சிறுவர் கூடிச் சிற்றில் இழைத்து**
**மறுகணம் சிதைத்து மகிழ்வுறுதல் போலத்**
**திருமணம் செய்து திரிவது பேதைமை" (பூ.கொ.4:106-111)**

என்று அறிவுரைக்கின்றாள்.

'காமம் மிகுந்து என் கருத்தினை விடுத்தால் உன் பெயர் கெடும்; நல்லறம் தேயும், தீமை பற்பல சேர்வது உறுதி. மாதர் உளப்பாங்கையறிந்து காதல் மேற்கொள்ளுதலே கடமையாகும்' என்றுரைக்கும் அல்லியின் சொற்களுக்குச் செவிசாய்க்காமல், காமங் கதுவிய கருத்தினனாய்,

**"நகைமுக நங்காய்! என் நலிவினைக் காணுதி!**
**இளையள் என்னை ஏற்றருள் வாள்கொலோ?**
**உளையும் எனக்குயிர் உவந்தளிப் பாள் கொலோ?"**

**(பூ.கொ.5:16-18)**

என்றுரைத்து மீண்டும் மீண்டும் தன்னை விரும்பாத பூங்கொடியை அடைவதிலேயே குறிக்கோளாய் இருந்தான்.

வீரகாவியத்தில் வேல்விழி மாவேழனிடம் கொண்டுள்ள காதலைக் தோழியிடம் தூதுரைத்து அனுப்புகிறாள், திரும்பி வந்த தோழி, உன் கருத்தை அவனிடம் சொல்லும் வாய்ப்பை அவன் தரவில்லை என்று கூறியதைத் தவறாகப் பொருள் கொண்ட வேல்விழி 'தீவினையேன் காதலுங் கைக்கிளையோ?' என்று கூறி தன் காதல் கைக்கிளையாகிவிட்டதோ என்று புலம்புகிறாள். (வீ.கா.22:84) அதே போன்று வேல்விழியின் தந்தையிடம் தோழி 'வேல்விழி மாவேழனை விரும்புகிறாள்' என்றுரைத்து மணமுடிக்குமாறு கூற, வயத்தரசன் வேல்விழி மட்டும் விரும்புகிறாளோ? என்றெண்ணி 'பூவையிவள் மனத்தெழுந்த ஆர்வமெல்லாம் தன்னளவிற் கைக்கிளையாய் விடுமோ?' என்று தயங்குகிறான்.

**"இளவரசி பெறுங்காதல் இரண்டு நெஞ்சம்**
**ஒன்றுபடும் ஐந்திணையாய் விளங்கிற் றைய!" (வீ.கா.35:148)**

என்று வேல்விழியின் காதல் ஒருதலைக்காமமாகிய கைக்கிளை யன்று; ஈருள்ளமும் ஒன்றுபடும் ஐந்திணைக்காதல் என்று தோழி தெளிவுறுத்துகிறாள்.

**பொருந்தாக் காமம்:-**

பெருந்திணை என்பதை, 'பொருந்தாக் காமம்' என்பர் இலக்கண நூலார்.

பூங்கொடி காப்பியத்தில் பூங்கொடியின் மீதான ஒருதலைக் காதல் சொலற்கரும் காமமாய்க் கோமகனுக்கு சுடர்விட்டெரிய, நிறையும் பண்பும் இருகரையாக செறிபுனல் நிகர்க்கும் நெறிபடு காமம் உறுகரை கடந்தது. முறைமையும் இழந்தது. பூங்கொடியை அடைய நள்ளிரவில் ஓர் அறையில் புகுந்தான். அங்கு உறங்கிக் கொண்டிருந்த சண்டிலி,

**"பொருந்தாக் காமம் பொருந்தா தென்று**
**திருந்தா வுனக்குச் செப்பிய வெல்லாம்**
**மறந்தாய் கொல்லோ? மதர்த்தனை கொல்லோ"**

**(பூ.கொ.22:172-174)**

என்று சினமுறுகிறாள். 'மிகுந்த பசியுடையவன் உணவிடம் அனுமதி கேட்பதுண்டா? பெரும் பசிகொண்டேன். உண்டி அருகிலிருப்பது கண்டேன். உண்பது தடுப்பார் ஒருவரும் ஈங்கிலை' என்று கோமகன் இழிமொழி பேசினான். கைக்கிளை பொருந்தாக் காமமாய் மாறியதன் விளைவு அது.

'சந்தேக முடிவு' என்னும் சிறுகதையில் ஐம்பத்து மூன்று வயது கோடீசுவரர் கோபாலனுக்கு, நான்காவது மனைவியாய்த் திருமணம் செய்து கொடுக்கப்பட்ட பதின்மூன்று வயது மங்களத்தின் மீதான காதல் பொருந்தாக் காமத்திற்குரியதாய் அமைகின்றது. (எ.கா.ப.149)

**காதல் தோல்வி:**

முடியரசனார் தனிப்பட்ட வாழ்வில் விதவையொருத்தியை மணந்துகொள்ள விரும்பினார். ஆனால் பெற்றோரின் பெருந்தடையால் நிறைவேறாமல் போனது. தம் கொள்கைக்கு ஏற்றவாறு சாதி மறுப்புத் திருமணத்தைப் பல தடைகளுக்கிடையே பெற்றோரைச் சம்மதிக்கவைத்துத் திருமணம் செய்து கொண்டார்.

‘பெண்ணுரிமை வழங்குவதென்றால் முதலில் மறுமணம்தான் கவனிக்கப்பட வேண்டும்’ (எ.கா.ப.143) என்பதில் உறுதியாக இருந்த அவருக்கு விதவையின் மீதான காதலை மறக்கமுடியவில்லை.

தன்னால் இயலாமல் போன மறுமணத்தை எக்கோவின் காதல், கண்மூடி வழக்கம், கடைமுழுக்கு, அணைந்த விளக்கு, அவமானச் சின்னம் போன்ற சிறுகதைகளில் படைப்புகளாய்ப் படைத்துக் காட்டித் தன் உள்ளத்தைத் தேற்றிக் கொண்டுள்ளார் என்பதை உணரமுடிகின்றது.

‘ஏன் மறந்தாள்?’ என்னும் கவிதையில் ‘மன்னரே! உம்மையன்றி வேறொருவரை மணக்கமாட்டேன், கன்னலே! நீர்தான் நான் காணும் உலகம், முன்னரே நமது நெஞ்சம் முழுமையாய்க் கலந்தது’ என்றெல்லாம் சொன்னவள் சொன்னதைக் காற்றில் பறக்கவிட்டு ஏன் மறந்துபோனாள்? காதல் மடல்கள் நூறெழுதியவள் எப்படிக் காதலைத் துறந்தாள்? என்று புலம்புகிறான் ஒரு காதலன் (முடி.க.ப.102)

‘இசை மாறிய வீணை’ என்னும் கவிதையில் ‘காதலெனும் வீணையைக் கையிலெடுத்துக் கல்யாணி கேட்குமென மீட்டுகிறார். ஆனால் வேறு இசை கேட்கிறது. ஒரு நரம்பில் கையமைத்து யாழை இசைக்க வேறிடத்தில் கையை யார் மாற்றி வைத்தார்?’ என்று நிறைவேறாக் காதலையெண்ணி நெஞ்சம் உருகுகிறார் கவிஞர். (நெ.பூ.ப.260)

காதல் வார்த்தைகள் பேசி பெண்ணலம் துய்த்துத் சுதமதியை ஏமாற்றிய மாருதவேகனைப் பற்றி ‘சுதமதி’ கவிதையிலும் (முடி.க.ப.32) பூங்கொடி காப்பியத்தில் அல்லியை ஏமாற்றிய வெருகனையும் (பூ.கொ.5:46:52), ‘இரண்டு தந்தி’ என்னும் சிறுகதையில் பொன்னம்மாவை ஏமாற்றிய அரங்கசாமியையும் (எ.கா.ப.214) படைத்து, பெண்களை ஏமாற்றிய ஆடவர் செயலைக் கண்டித்துப் பேசுகிறார்.

**காதல் போயின் சாதல்:**

காதலுக்கு இக்கட்டு நேர்ந்து நிறைவேறாத நிலை தோன்றும் போது வாழ விரும்பாது தலைவனும் தலைவியும் சாகத் துணிவதுண்டு.

கவிஞரின் வாழ்வில் நிகழ்ந்த உண்மை நிகழ்ச்சியை அடிப்படையாகக் கொண்டு உருப்பெற்ற பாடல்களில் 'காதல் நெஞ்சம்' என்னும் பாடலும் ஒன்றாகும்.

தலைவனுடனான காதல் நிறைவேறாது போய்விடுமோ என்ற அச்சத்தில் தலைவி சாக முற்படுகிறாள். தான் இறந்துவிட்டால் தன் காதலன் பைத்தியமாகி விடுவானே யென்று சாகும் முடிவைத்தள்ளி வைக்கிறாள். (முடி.க.ப.69)

'உன்னுருவே தோன்றுதடி' என்னும் பாடலில் காதலன் காதலியை மறக்க முடியாமல் நஞ்சுண்ண முயல்கிறான். ஆனால் அந்த நஞ்சிலும் தன் காதலியின் உருவமே தென்படுகிறது என்று கலங்குகிறான் அக்காதலன்.

வீரகாவியத்தில் மாவேழனிடம் தூது சென்ற தோழி தலைவியிடம் 'உன் கருத்தை அவன்முன் எடுத்துரைக்கும் வாய்ப்பு எனக்கு அவன் தரவில்லை' என்றுரைக்க, தோழி கூறியதன் பொருளை முழுவதுமாய் உணராமல் காதல் வேகத்தில் பதறித் துடிக்கிறாள் வேல் விழி.

**"தீவினையேன் காதலுங்கைக் கிளையோ? அந்தக்**
**கேள்பற்றி வாழ்வதுதான் வாழ்வே யன்றிக்**
**கெடுவாழ்வு யான் வேண்டேன் மாய்வேன் என்றாள்" (வீ.கா.22:84)**

மாவேழன் வேல்விழி காதலை வயத்தரசனிடம் உரைக்கும் தோழி தாயில்லாக் குறையே தோன்றாவண்ணம் இது நாள் வரை வளர்த்த நீங்கள் வேல்விழி விரும்பியவரை விட்டுவிட்டு வேறொருவர்க்கு மணமுடிக்க நினைத்தால் மணமேடைக்கு அவள் உயிரற்ற உடல்தான் வந்து சேரும், மணமுரசு கேட்காது. இரங்கலொலிதான் கேட்கும். தெய்வீகத் தன்மை வாய்ந்த காதலை மறுத்து நின்றால் சாதலிலே போய் முடியும். உன்குல மகளுக்கு சாக்காடு தர நினைத்தால் அது உன்பாடு' என்று எச்சரித்து வேல்விழியின் காதல் வலிமையை உணர்த்தி மன்றலுக்கு இசைவிக்கின்றாள். (வீ.கா.33:137-139)

'பூங்கொடி' காப்பியத்தில் வில்லவன் பொன்னி காதலுக்கு எதிர்ப்புத் தோன்ற வில்லவனிடம் பொன்னி 'உன்னை அடையா விட்டால் தூக்குக் கயிறே துணையெனக்

கொள்வேன்' என்று கூற, வில்லவன் 'நாம் ஏன் சாக வேண்டும்? வீணரை எதிர்த்து வென்றுலகாள்வோம்' என்று நம்பிக்கை உரைக்கிறான். (பூ.கொ.13:67-73)

'காதற்சிலை' என்னும் கவிதையில் இளவரசி மயிலியை அடைய முடியாத கோபத்தில் மயிலியின் காதலன் சிற்பியிடம் கிழவியொருத்தியை அனுப்பி மயிலி இறந்துவிட்டாள் என்று கூற வைத்தான். அதை நம்பிய சிற்பி மனந்துடித்து குன்றிலேறி குதித்து இறந்தான். காதலன் இறந்த செய்தி கேட்ட மயிலி பெருந்துயருற்று அவனைப் போன்றே குன்றிலேறிக் குதித்து விழுந்து உயிர்துறந்தாள் என்று காதலர் இருவரும் உயிர்துறந்து காதலை வாழ்வித்ததை உருக்கமாகப் பாடியுள்ளார் கவிஞர். (முடி.க.ப.28)

**காதலியர் பல வகை:**

முடியரசனாரது படைப்புகள் மனிதர்களைக் காதலர்களாக்கியதோடு மட்டுமல்லாமல் மொழியை, கற்பனையை, கவிதையை, செல்வத்தை, வீரத்தை, புகழைக் காதலியராய்க் காட்டியுள்ளன.

'என்றும் நானோர் இளைஞன்' என்னும் கவிதையில் கற்பனையைக் காதலியாக உருவகித்துள்ளார் கவிஞர். (பா.கு.ப.153)

'இழந்த காதல்' (முடி.க.ப.97) 'கவிதைப் பெண்' (முடி.க.பக்.100-101), 'என்னுயிர்க் காதலி' (நெ.பூ.பக்.203-204) 'கவிதைக் காதலி' (பா.கு.பக்.161-162) என்பன போன்ற கவிதைகளில் கவிதையைக் காதலியாக்கிப் பாடுகின்றார்.

'இழந்தகாதல்' என்னும் கவிதையில் புகழ், கவிதை, செல்வம், வீரம் ஆகியனவற்றைக் காதலியராக்கிப் பாடியுள்ளார். (முடி.க.பக்.97-99)

**தமிழ்க் காதலி:-**

கவிஞர் தமிழ்மொழியின் மீது அளப்பரிய பற்று கொண்டிருந்தார். ஐம்பத்தாறு அகவையிலும் தமிழ் மீதான காதல் மாறாமல் 'தமிழுக்கு என்னைத் தருவேன்' (பா.கு.ப.166) என்று பாடினார் கவிஞர்.

‘தமிழ்க்காதலி’ (முடி.க.ப.128), ‘பைந்தமிழ்க் காதலி’ (நெ.பூ.ப.205), ‘அவள்தான் பாடவைத்தாள்’ (நெ.பூ.ப.254), ‘தமிழ்-என் காதலி’ (கா.பா.பக்.29-30), ‘ஆடவாராய்’ (கா.பா.ப.58), ‘என்காதலி’ (பா.கு.ப.195), ‘அவளொரு காவியம்’ (பா.கு.ப.196) ‘தானே வருவாள்’ (பா.கு.ப.201) ஆகிய பாடல்களில் தமிழைக் காதலியாக்கிப் பாடியுள்ளார்.

‘தமிழ்-என்காதலி’ என்னும் தலைப்பிலான பாடலில் ‘ஆசையென்னும் மனத்திரையில் எண்ணம் அத்தனையுங் கலந்து பாசமுடன் எழுதி, எழுத்துருவைப் பார்த்து மகிழ்ந்திருப்பேன். பேச மனமில்லையேல் உயிரைப் பிய்த்து என்னைக் கொன்றுவிடு மோசம் புரிந்து ஏமாற்றுவதென்றால் என் மூச்சை நிறுத்திவிடு’ என்று தமிழ்க்காதலியிடம் கவிஞர் வேண்டுகிறார்.

**“உன்னைப் பெறு வதற்கே - இங்கு நான்**
**ஓடித் திரி வதெல்லாம்**
**என்னைப் புறக் கணித்தால் - உயிரை**
**எப்படி நான் சுமப்பேன்**
**உன்னெழிற் காதலன்றோ - என்னை**
**உன்மத் தனாக் குதடி**
**கன்னற் சுவை மொழியே - என்னைக்**
**கட்டி யணைத் திடடி” (கா.பா.ப.29)**

என்பதில் தமிழைப் பெறுவதற்கே தான் உயிர்வாழ்வதாகக் கவிஞர் பாடுகிறார். ‘என் காதலி’ என்னும் கவிதையில் ‘எழுத்தென்னும்’ மலர் தொடுத்து எழிலாகத் ‘தொடை’ முடித்து, கழுத்தில் ‘அசை’ பட நடப்பாள், கால் ‘அடி’யில் ‘சீர்’ படைப்பாள். ‘தளை’ யுண்டு தவங்கிடப்பாள். ‘பா’ என்னும் ஆடை அணிந்திருப்பாள் என்று பாவின் உறுப்புகளான எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை ஆகியன கொண்டு தன் காதலியாகிய கவிதையைப் படைத்துள்ளமை சுட்டுதற்குரியது.

இதே போன்று ‘அவளொரு காவியம்’ என்னும் கவிதையிலும் நகை, அவலம், வெகுளி, மருட்கை, அச்சம் முதலிய காப்பியச் சுவைகளைச் சுட்டிப் பாடல் அமைத்துள்ளார் (பா.கு.ப.196)

**காதலால் ஒன்றுபட்டோர்:**

காதலுக்கு சாதி-மதம்-இனம் போன்ற வேறுபாடுகள் கிடையாது; ‘கருத்தொருமித்தலே காதல் சிறக்க வழி’ என்பதைக் கவிஞர் தம் படைப்புகளில் பரவலாகச் சுட்டிக் காட்டியுள்ளார்.

‘காதற்சிலை’ என்னும் கவிதையில் சிலை செதுக்கும் சிற்பியையும் நாட்டின் இளவரசியையும் காதலராக்கியுள்ளார். வீர காவியத்தில் மாவேழன் என்னும் படைத்தலைவனும் அரசனின் மகளும் காதலால் ஒன்று சேர்ந்தனர்.

‘பூங்கொடி’ காப்பியத்தில் ஆடல் வல்லவனான கூத்தனும் பாடலில் வல்ல எழிலியும் காதலிக்கின்றனர். அதே போன்று உழவர் குடியில் பிறந்த பொன்னியும், கொல்லுலைத் தொழில் புரியும் வில்லவனும் காதல் இன்பம் காண்கின்றனர்.

அந்தணர் குலத்தைச் சார்ந்த வரதாச்சாரி மகள் லட்சுமிக்கும் நகைத்தொழில் செய்யும் ராமு ஆசாரிக்கும் இடையேயான காதலுறவை ‘அவமானச் சின்னம்’ என்னும் சிறுகதை புலப்படுத்தும். (எ.கோ.ப.191)

பொதுவாழ்வில் ஈடுபடும் அர்ச்சுனனுக்கும், மதுரத்திற்கும் இடையேயான காதலை ‘கிருஷ்ணார்ச்சுன யுத்தம்’ என்னும சிறுகதை உணர்த்துகிறது. அக்கதையில் மதுரத்தின் மாமன் மகன் கிருஷ்ணன் மதுரத்தை விரும்பினான். ஆனால் அவனை விட அழகில் குறைந்திருந்தாலும் குணம்மிக்க அர்ச்சுனனையே மதுரம் விரும்பினாள். ‘உண்மைக் காதலுக்கு சாதி வேற்றுமை; ஏழை பணக்காரன் என்ற தன்மை, இவையெல்லாம் கிடையாதென்றால் அழகு மட்டும் என்ன தள்ளுபடியா? அழகையும் அந்தப் பட்டியலிலே சேர்த்துவிட்டாள் மதுரம்’ (எ.கா.ப.179) என்று கவிஞர் சாதி பொருளாதாரம், அழகு கடந்த காதலைப் போற்றுகிறார்.

‘அகத்திணையின்பத்திற்குப் பொருள் வளம் அடிப்படையன்று; ஒன்றிய மனவளமே அடிப்படையாகும். மனவளம் இருப்பின் பாலின்பம் சிறக்கும். ஆதலின் செல்வர் ஏழை என்று வேறுபாடு அகத்திணைக்குப் பொருளில்லை காண்’52 என்பர் மூதறிஞர் செம்மல் வ.சுப.மாணிக்கனார்.

வ.சுப.மா. அவர்கள் குறிப்பிடுவது போன்றே சாதி, தொழில், குலம், இனம், நிறம் வேறுபாடு கடந்த காதலரைப் படைத்துச் சமத்துவம் காணவே முடியரசனார் விரும்புகிறார்.

**குமுகாயம்**

கூட்டமாக மக்கள் கூடி வாழும் அமைப்பைக் குமுகாயம் என்ற தனித்தமிழ்ச் சொல்லால் பெயரிட்டழைப்பர் மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர். “குமுகம் + ஆயம் = குமுகாயம் என்று மரூஉப்புணர்ச்சியாயிற்று. கும்முதல் என்பதற்கு கூடுதல் என்பது பொருள். ஆயம் என்றால் பெருங்கூட்டம். பெருங்கூட்டமாகக் கூடிவாழும் மக்கள் கூட்டத்தினைக் குமுகாயம் என்று குறிப்பிடுவதே சரியென்று குறிப்பிடுவர்.”[53]

முடியரசனாரும் தம் படைப்புகளில் பலவிடங்களில் ‘குமுகாயம்’என்னும் சொல்லாட்சியையே பயன்படுத்தியுள்ளார். ‘புறமும் அகமும்’ என்னும் கவிதையில்,

**“சிந்தனையில் ஓர் தெளிவு சேர்ந்து தளிர்விட்டு**
**முந்தி வரும் கூட்டுணர்வு மூண்டு வளர்ந்துவரக்**
**கூடி மகிழ்ந்து குழுவாக வாழ்நெறியை**
**நாடிக் குமுகாய நாட்டத்தைப் பெற்றிருந்தான்” (நெ.பூ, ப.224)**

என்று மனிதன் கூடி வாழ முற்பட்டதைக் குறிக்க, குமுகாயம் என்னும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**“கோதுக்குட் போகாமல் குமுகாயம்**
**மேலோங்கும் குறிக்கோள் கொண்டு” (நெ.பொ.ப.88)**
**“தாழுங் குமுகாயம் சாதிச் சழக்ககற்றி**
**வாழும் நாள் எந்நாள் வரும்” (ம.தே.ப.125)**

என்பனவற்றில் குமுகாயம் என்னும் சொல்லாட்சி அமைந்துளது.

**“குமுகாயம் வருந்தினுமோர் கவலையில்லை” (ஞா.தி.ப.119)**

**“அனைத்துலக மாந்தரெனும் குமுகா யத்துள்” (ஞா.தி.ப.130)**

என்று அனைத்துலக மாந்தர் வாழும் அமைப்பையும் ‘குமுகாயம்’ என்ற சொல்லாலேயே கவிஞர் குறிக்கின்றார்.

‘பாவேந்தர் பாடல் கெட்டபோரிடும் உலகத்தை வேரொடு சாய்க்கவும் புதிய குமுகாயத்தை உருவாக்கவும் பயன்படுகிறது.’ (எ.வ.த.ப.68)

‘தமிழ்க் குமுகாயத்தின் விடுதலைக்குப் பாடுபடும் எவரும் புரட்சித் தொண்டுதான் செய்தாதல் வேண்டும்.’ (எ.வ.த.ப.70)

‘எப்படி வளரும் தமிழ்?’ என்னும் கட்டுரை நூலில் பலவிடங்களில் குமுகாயம் என்னும் சொல்லைப் பயன்படுத்துகிறார். (எ.வ.த.பக்.3-10)

குமுகாயச் சீர்கேட்டை அடிப்படையாக வைத்து எழுதப்பட்டதே ‘இளம்பெருவழுதி’ நாடகக் காப்பியம். முடியரசனாரின் படைப்புகளில் குடும்ப நலம், சாதி மறுப்பு, சமய வெறுப்பு, கல்வி, பெண்ணுரிமை, தொழிலாளர் நலன், பொதுவுடைமை, குமுகாயச்சீர்திருத்தம் என்னும் நிலைகளில் குமுகாயம் குறித்த சிந்தனைகள் இடம்பெற்றுள.

**குடும்ப நலம்:**

பல குடும்பங்கள் ஒன்றிணைந்து வாழும் குழு அமைப்பே குமுகாயம் ஆகும். குமுகாயம் சிறக்க வீடு சிறந்திருத்தல் வேண்டும். முடியரசனார் வாழ்ந்த காலத்தில் குடும்பக் கட்டுப்பாடு குறித்த விழிப்புணர்வு மிகவும் தேவையாயிருந்தது. பிள்ளைகளை அதிகமாய்ப் பெற்றுவிட்டு வறுமைத் துயரில் அல்லலுற்றுப் பரிதவிக்கும் மக்களைக் கண்கூடாகப் பார்த்த கவிஞர் ‘அளவான குடும்பம்’ குறித்த விழிப்புணர்வை மக்களிடையே உண்டாக்க முனைந்துள்ளார்.

பண்பாடு அருகுவதற்கு மக்களின் எண்ணிக்கை பெருகுவதே காரணம் என்பதை உணர்ந்த கவிஞர் ‘மனிதனைத் தேடுகிறேன்’ என்னும் நூலின் முன்னுரையில் ‘பண்பாட்டு நிலை குலைவிற்குப் பலப்பல கரணியங்கள் இருப்பினும் நாம் சிறிதுங் கவலை கொள்ளாது மக்களைப் பெருக்கி வருவதும் ஒரு தலையாய கரணியமாகும். மக்கட் பெருக்கமே பண்பாடு

குன்றுவதற்கு அடிப்படைக் கரணியமாகும் என்பது என் எண்ணம். பண்பாடு பற்றிக் கவலைப்படாமல், நாடோறும் மக்களைப் பெருக்கிக் கொண்டேயிருக்கும் குமுகாயம், கண்ணை மூடிக்கொண்டுதான் பயணம் செய்து கொண்டிருக்கிறது. பயணஞ் செய்யும் வழியில் ஆழங்காண இயலாத பெரும்பள்ளம் இருப்பதை உணர்ந்தோர் சிவப்பு விளக்கைக் காட்டிக் கொண்டுதான் இருக்கிறார்கள், எனினும் விழித்துப் பார்க்காமல் வேகமாக நடைபோட்டுக் கொண்டுதான் செல்கிறது குமுகாயம்' (ம.தே.பக்.99-100) என்று குமுகாயம் மேம்பட மக்கள் தொகை கட்டுப்படுத்தப்படவேண்டும் என்கிறார்.

'வாயுறை வாழ்த்து' என்னும் பாடலில் தம் நண்பர் தமிழண்ணல் அவர்களை மணஞ்செய்யும் மணமகளுக்கு,

**"ஒருவர்பிழை பொறுத்திடுதல் இருவர் நட்பாம்;**
**உயர்நூல்கள் பயின்றாலும் வாழ்க்கை ஏட்டில்**
**ஒருவருளம் பிறர்பயில வேண்டும்; வேண்டின்**
**உண்மைநிலை இன்பநிலை காணல் வாய்க்கும்" (முடி.க.ப.149)**

என்று அறிவுரை கூறுகிறார். இதில் பிழை பொறுத்தலை விட உள்ளம் பயிலுதலே இல்லறத்தின் இன்பநிலை காண்பதற்கான வழியென்றுரைக்கிறார் கவிஞர்.

'மணமகனுக்கு' என்னும் கவிதையில் மணமகனைப் 'பெண்மைக்கு உயர்வு பேணுக; உடல் நலம் காத்துக் குழந்தைகள் கணக்கொடு பெறுக; துன்பம் நேரின் துணையுடன் எதிர்க்க; அன்பைப் பாய்ச்சி இன்முகம் காட்டி வாழும்முறை தெரிந்து வாழ்க' (முடி.க.ப.176) என்று வாழ்த்துகிறார்.

மேலும் 'ஒன்றிரண்டு பிள்ளைகளைப் பெற்றால் மகிழ்ச்சி பொங்கும், உள்ளமெல்லாம் அன்பு ஊற்றெடுக்கும். பிள்ளைகளைக் கண்ணே முத்தேயென்று கொஞ்சி மகிழ்ந்து இன்பம் காண்போம், ஆனால் எட்டென்றும் பத்தென்றும் பிள்ளைகளைப் பெற்றுவிட்டால் இன்பமும் கனிவும் அன்பும் அங்கு ஏது? வீட்டிற்குள் வரும்போதே எரிந்து விழுவோம், முப்பொழுதும் கடுகடுப்பே முகத்தில் வாழும்' என்று அளவுக்கதிமான பிள்ளைகளைப் பெறுவதால் துன்பம் தான் விளையும் என்று தெளிவுறுத்துகிறார். (ம.தே.ப.133)

‘குடும்பத் திட்டம் எக்காலும் தமது நலத் திட்டமென்றே எல்லாரும் நினைந்தொழுகுகின்ற நாடு வாழும்’ என்பது கவிஞர் குமுகாயத்திற்கு உரைக்கும் நல்லுரையாகும்.

முன்னறிவிப்பு, இருண்ட வீடு, துன்புறவோ பெற்றாள்? புதுவிதி செய்வோம், விடிவு தோன்றும், போலிக் குடும்பம் ஆகிய கவிதைகள் குடும்பநலத்திட்டம் பற்றிய விழிப்புணர்வு ஊட்டுவனவாகும்.

**சாதி மறுப்பும் சமய வெறுப்பும்:**

சாதி சமயங்களால் மக்களிடையே ஒற்றுமை குறைந்து வேற்றுமை வளர்வதையும் மனித நேயம் தளர்வதையும் காணும் கவிஞர் குமுகாயம் மேம்பட சாதி சமயமற்ற ஒரு குமுகாயம் உருவாக வேண்டும் என்று கருதுகிறார்.

கவிஞர் சுயமரியாதை இயக்கத்தவர் என்பதால் இயல்பாகவே சாதி, சமய மறுப்புக் கொள்கைக்கு உடன்பாடுடையவராயிருந்தார். சாதியொழிய வேண்டுமென்று பிறரிடத்தில் பேசுபவர்கள் தன் சொந்த வாழ்வில் சாதிப் பற்றோடு இருப்பதைக் கண்டு உள்ளம் நோகும் கவிஞர் ‘சொல்லும் செயலும்’ என்னும் பாடலில் வீதியில் எங்கனும் பேசி முழக்கி வீட்டினுள் வந்ததும் பூசி வளர்க்கும் புன்மையைப் பழிக்கிறார். (கா.பா.ப.85)

‘கொலைக்களம்’ என்னும் கவிதையில் சாதியைக் கொலைக்களமாகவும், சாதிகளை வளர்க்கும் மதவாதிகளை இடுகுழிகளாகவும் உருவகப்படுத்துகிறார். (பா.கு.ப.145)

சாதிகளையும், சாத்திர மடமைகளையும் மோதித் தகர்த்தல் தீமையே இல்லை; அவற்றை எதிர்த்து மூண்டெழாமலிருப்பவர்கள் ஊமைகளே என்பர். (பா.கு.ப.221)

‘இடையில் புகுந்தவை சாதிகள். சங்கத்தமிழ் மாந்தரிடையே சாதிப் பிணக்கெல்லாம் தோன்றவில்லை’ (க.மு.ப.76) என்பதை எடுத்துரைக்கும் கவிஞர் ஆதியில் இல்லாத பழக்கத்தைச் சாத்திரம், வேதம் என்று சொல்லிச் சாதியினால் தாழ்வுயர்வு பேசியதன் விளைவாலேயே அடிமையுற்று மிடிமைப்பட்டோம் என்று உரைப்பது ஆழ்ந்து சிந்திக்கத்தக்கதாகும். குமுகாய அடிமைத்தனத்திற்கு சாதி அமைப்பே அடிப்படை என்பது

இதன் மூலம் புலனாகிறது. சாதிகள் ஒழிய வேண்டு மென்று போராடிய சான்றோர்களின் பேச்சு எடுபடாமல் போய்விட்டதே என்ற வேதனை கவிஞருக்கு உள்ளத்தை வருத்திக்கொண்டேயிருந்தது என்பதை அவர்தம் கவிதைகள் நன்கு புலப்படுத்துகின்றன.

'சாதிகள் இல்லையடி பாப்பா, நம்முள் தாழ்வுயர்வு சொல்லுதல் பாவம்' என்றோதிய பாரதி செத்துவிட்டான். உட்புகுந்த சாதிகளோ சாகவில்லை. 'வேதியர்கள் தாம் வாழ வகுத்து வைத்த வேதநெறி திராவிடத்தில் தூள்தூள்' என்று மோதினான் நம் பாவேந்தன். வீதி தோறும் சாதிகள் முளைத்துக் கொண்டே இருப்பதால் இங்கே தூளாகவில்லை. சாதியும் மதமும் ஒழியவேண்டு மென்று ஆறறிவுப் போர் தொடுத்த பெரியார் மாண்டபின்னும் அழிவு அகலவில்லை. 'சாதி, சமயமென முளைத்து வந்த சழக்குகளை விட்டுவிட்டேன்' என்ற வள்ளலாரின் அருட்பாவை ஓதும் தொண்டருக்குப் பஞ்சமில்லை. ஆனால் அவர்களுக்கு சழக்குகளை ஒழிக்கத்தான் நெஞ்சமில்லை' என்று உள்ளம் வெதும்புகிறார். (நெ.பொ.பக்.11-12)

பாவேந்தர் பாரதிதாசன் நூற்றாண்டு விழாவில் பாட்டுப் பரம்பரையில் தன் தந்தையாகக் கருதும் பாவேந்தனுக்கு நூற்றாண்டு விழா காணுகின்ற மகிழ்ச்சி துளியும் கவிஞருக்கில்லை. காரணம் பாவேந்தரின் கொள்கைகளைக் கடைப்பிடிக்காமல் புறந்தள்ளிவிட்டு, பெயருக்கு விழாவெடுப்பதில் சிறிதும் கவிஞருக்கு உடன்பாடில்லை. எனவேதான் பாவேந்தர் நூற்றாண்டு விழாக் கவியரங்கில் பாடும் பொழுது,

**"எவன் விட்டான் சாதியினை? எவன் செய்தான்**
**கலப்பு மணம்? எவனோ எங்கோ**
**தவறிவிட்டான் செய்துவிட்டான் தவிக்கின்றான்**
**மற்றவனோ சாதி தன்னைச்**
**சுவர்வைத்துக் காக்கின்றான் சொல்வீரங்**
**காட்டுகிறான் துணிய வில்லை;**
**இவன்கெட்ட கேட்டுக்கு நூற்றாண்டு**
**விழாவெடுக்க எழுந்தும் விட்டான்" (பு.வி.செ.ப.173)**

'வாய்ச்சொல்லில் வீரர்களாய் சாதியொழிப்பிற்கு ஓங்கிக் குரல் கொடுப்பவர்கள் தன்வாழ்வில் செயல்படுத்துவதில்லை. பாவேந்தருக்கு நூற்றாண்டு விழாவெடுக்க இவர்களுக்கு என்ன

தகுதியிருக்கிறது?' என்று சினமுறுகிறார். சாதியொழிப்பிற்கு கலப்பு மணம் ஒரு வழி என்பதை இப்பாடலில் சுட்டிக்காட்டியுள்ளார்.

'பாரதி-வீரன்' என்னும் பாடலில் பாரதி தோற்றுவிட்டதாகக் கவிஞர் பாடுகிறார். 'பொல்லாத கொடுமைகளை விளைவிக்கும் பொய்ம்மைகளை அழித்தொழிக்கின்ற சாதிப் போரில் ஓர்குலமாய் வாழ்கவென்றும், எல்லாரும் சமமென்பது உறுதியென்றும் வெற்றிச் சங்கினை ஊதிய பாரதி தோல்வி கண்டான். தோற்ற வீரன் ஓயமாட்டான்; மீண்டும் போர்தொடுப்பான். அதே போன்று ஆணினத்தை நம்பி சாதிப்போரில் தோற்ற பாரதி பாப்பா பாட்டு மூலம் குழந்தைகளிடத்தில் சாதியொழிக்க வேண்டுகிறான். வளர்ந்து வரும் பரம்பரைக்கு வீரமூட்டினால் நாளை சாதிப் போரில் வெற்றி கிடைக்குமென்று நம்பிக்கையோடு களம் கண்டான். பிறவியினால் உயர்வு தாழ்வைக் கருதி நாம் வாழ்ந்தால் பாரதி மீண்டும் தோற்பான். சாதி தோற்றால் பாரதி வெல்வான்' (க.மு.பக்.89-90) என்று பாரதி வெல்லவேண்டுமென்றால் சாதி தோற்க வேண்டும். சாதியை நாம் தோற்கடிக்க வேண்டும் என்று கவிஞர் வழியுரைக்கின்றார்.

'நாலாயிரம் சாதி நமக்குள் வைத்தோம். பகைவர் புகுந்துவிட ஓட்டைகளை அமைத்துவிட்டோம். உட்புகுந்த பகைவர் வென்றாள வழி சமைத்துவிட்டு வெறுங் கூச்சல் போடுகிறோம். ஒன்றாக நாம் இணைந்து இனவுணர்வைப் போற்றினால் பகைமை நம்மை என்ன செய்யும்? தமிழர் சாதியினை ஒன்றிணைந்து எரித்தே விட்டார்.தமிழினம்தான் இனியுண்டு. தலை நிமிர்ந்து இனி வாழ்வர் எனச் சொல்பவர் யார்?' (பு.வி.செ.பக்.165-166) என்று சாதியொழிப்பு நாளிற்காய் ஏங்குகிறார் கவிஞர்.

சாதிகளை ஒழிக்க வேண்டுமென்று பாடியதோடு நில்லாமல், 'சாதி நீக்கத்திற்குத் தமிழ்ப்பெயர்கள் வைப்பதும் ஒரு வழியாகும். தமிழண்ணல், கதிரவன், அருளாளன், அன்பழகன், பாரி முதலிய பெயர்களுடன் சாதிப் பெயர்களை ஒட்டிப்பார். ஒட்டவே ஒட்டாது' (முடி.கடி.ப.73) என்று சாதியொழிக்க வழியும் கூறுகின்றார்.

தமிழ்ப்பெயர் மட்டும் வைத்துக் கொண்டால் சாதி ஒழியுமா? சாதியொழிக்க அதுவே வழியன்று. அதுவும் ஒரு வழி என்பர். சாதிமறுப்புத் திருமணத்தாலும் சாதியை ஒழிக்க முடியும் என்று உறுதியாக நம்பினார் கவிஞர். எனவேதான் தான் மட்டுமல்லாது தன் மக்கள் அறுவர்க்கும் சாதி மறுப்புத் திருமணம் செய்வித்தார்.

கவிஞர் தன் வரலாற்று நூலில் சாதியை நாட்டில் ஒழிக்க முடியாத ஏக்கத்தையும் தன் வீட்டளவில் ஒழிக்க முடிந்த மகிழ்ச்சியையும் வெளிப்படுத்தி உள்ளார். ‘எப்படியோ என் மக்கள் மூவருக்கு என் கொள்கைப்படி கலப்பு மணம் செய்து வைத்துவிட்டேன் எஞ்சிய மூவருக்கும் (குமணன், செல்வம், அல்லி) அவ்வாறே செய்து விடின் என் இல்லத்தில் ஆறு சாதிகளைச் சார்ந்தோர் இருப்பர். அவர் யாவருங் கேளிர் ஆகிவிடுவர். சாதியை நாட்டில் ஒழிக்க முடியவில்லையே என்ற ஏக்கம் இருப்பினும் என் வீட்டிலாவது சாதி ஒழிந்ததே என்ற பொந்திகை (திருப்தி)யுடன் இருப்பேன்’ (பா.ப.வா.ப.ப.124) என்று குமுகாயத்திற்குத் தன் வாழ்க்கையை முன் மாதிரியாக வாழ்ந்துகாட்டி வழிகாட்டுகின்றார்.

‘சாதி ஒழிய வேண்டும் எனக் கவிதையிலும் மேடையிலும் முழங்கிய கவிஞர்களுள் அவற்றைத்தன் வாழ்வில் கடைப்பிடித்தவர் கவிஞர் முடியரசனார் தவிர வேறு யாராவது இருக்கிறார்களா?’[53] என்ற தவத்திரு குன்றக்குடி அடிகளாரின் கூற்று இங்கு சுட்டுதற்குரியது.

**சமய வெறுப்பு:**

கவிஞர் ஆசிரியப் பணியிலிருந்து ஓய்வுபெற்றபின் மாணவர்கள் நடத்திய மணிவிழாவில் பங்கேற்ற குன்றக்குடி அடிகளார் வாழ்த்திப் பேசும்போது முடியரசனாரை நாத்திகன் என்று குறிப்பால் கூறினார். ஏற்புரையாற்றும் போது கவிஞர் ‘வணக்கத்திற்குரிய அடிகளார் அவர்களே! என்னை நாத்திகன் என்று குறிப்பால் உணர்த்தினீர்கள், என்ன அளவுகோல் கொண்டு நாத்திகன் என மதிப்பிடுகீறீர்கள்? கடவுள் இல்லையென்று பாடியிருக்கிறேனா? பேசியிருக்கிறேனோ? நீங்கள் முருகனைச் சிவனைக் கடவுள் என்கிறீர்கள். நான் தமிழைக் கடவுள் என்கிறேன். நான் எப்படி நாத்திகனாக முடியும்? எல்லாம் கடவுள் என்று முன்னோர் பாடவில்லையா? ‘மூவா முதலே முழுமைபெறுஞ் செம்பொருளே சாவா

வரமெனக்குத்தா' எனத் தமிழன்னையை வேண்டிப் பாடியிருக்கிறேன். 'வரம்' யாரிடம் கேட்பது? கடவுளிடம் தானே கேட்க முடியும்? தமிழன்னையை மூவா முதலே எனவும் முழுமை பெறும் செம்பொருளே எனவும் குறிப்பிடுஞ் தொடர்கள் கடவுட்டன்மையைச் சுட்ட வில்லையா?' (பா.ப.வா.ப.ப.141) என்றுரைப்பர்.

கவிஞரின் தாய் வழிப் பாட்டனார் வைணவக் கோட்பாடுடையவர். கவிஞரை வளர்த்த தாய்மாமன் முருக பக்தி நிரம்பியவர். எனவே கவிஞர் சிறுவயதில் வீட்டுச் சூழலால் திருநீறணிந்து, முருகனுக்குப் பாடல்கள் பாடி, நாடோறும் கோவிலுக்குச் சென்று வந்தார். கார்த்திகை தோறும் மேலைச்சிவபுரியிலிருந்து குன்றக்குடிக்கு நடந்து சென்று முருகனை வழிபடும் அளவிற்கு கடவுட்பற்று உடையவராயிருந்தார். இருப்பினும் சீலை திருடியது. வெண்ணெய் திருடியது, இந்திரன் பழிதீர்த்தது, மாபாதகம் தீர்த்தது போன்ற புராண நிகழ்ச்சிகள் பிற கடவுளர் மீது அருவருப்பையும், வள்ளியைக்கலப்பு மணம் செய்து கொண்டதால் முருகனின் மீது ஈர்ப்பையும் தந்ததாகவும் தன் வரலாற்று நூலில் குறிப்பிட்டுள்ளார். (பா.ப.வா.ப, ப.35)

'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்ற கருத்திற்குக் கவிஞர் முரண்பட்டவர் அல்லர். ஆனால் சமயத்தின் பேரால் குமுகாயம் பிளவுற்று, ஏற்றத் தாழ்வுகளால் சிதறுண்டு, மூடநம்பிக்கைகளில் மூழ்கிக்கிடப்பதை அறவே வெறுக்கின்றார்.

**"ஓரிறையைப் பலபெயரால் வாழ்த்துகின்ற**
**உண்மைநிலை உணராமல் ஒன்றைத் தாழ்த்தி**
**ஊரறிய வாய்மதத்தால் ஏசி வந்தால்**
**ஒப்புவனோ அவ்விறைவன் பக்தி என்று?**
**வேரரிந்து போட்டுவிட்டுச் செடியை நட்டு**
**விடுகின்ற தண்ணீரால் பயனே இல்லை;**
**ஆறறிவு படைத்துள நாம் கடவுள் என்னும்**
**அன்புருவை நன்குணர்ந்து பேணல் வேண்டும்"** **(ம.தே.**ப.161)

என்று ஓரிறைவன் கொள்கைக்கு உடன்படுகிறார்.

தன்னலமோடிருப்பதும் கையூட்டுத் தருவதும் காசு பணவெறியும் பொய்யூட்டும் வாணிகத்தைக் கோவிலுக்குள் புகுத்தி ஏய்ப்பதும் பக்தியன்று; முற்றி நலம் பழுத்திருக்கும் அன்பும் பற்றியெழும் அன்பால் உளமுருக்கிப் பண்படுத்திக் கொள்வதும் தான் காணும் நல்லின்பமெல்லாம் வையம் பெற்றுக் களித்திட வேண்டுமென்று எண்ணுகிற பொதுநலமுமே பக்தியாகும் என்று கவிஞர் கருதுகிறார்.

திருநீறு, சிலுவை, குல்லா போன்ற மதச்சின்னங்களை அணிந்து கொள்வதால் வேற்றுமை மனப்பாங்கே வளரும். மக்கட்பண்பை நீக்கும் மதம்படுசின்னம் விட்டு, கனிவுறும் அன்பும் பண்பும் கசடறு நெஞ்சமும் வாய்க்கும் தனியொரு வழியைக் கண்டு தளர்விலாது தான் ஒழுகியதாகவும் மனத்தினில் மாசோடு மறைபல ஓதி ஆத்திகன் ஆவதை விடுத்து நல்லவனாகி நாத்திகன் என்றொரு சொல்லினைப் பெறத் தான் சூளுரைப்பதாகவும் கவிஞர் பாடுகிறார். (நெ.பூ.பக்.210-211)

பிறப்பினாலும், பொருளினாலும் உயர்வு தாழ்வு பாகுபடுத்தி கடவுளையும் விதியையும் காரணங்காட்டுபவர்களைக் கண்டு சீறுகிற கவிஞர், மக்களிடையே நிலவும் ஏற்றத் தாழ்வுகள் நீங்கி சமத்துவம் பிறக்கச் சாத்திரம், விதி, கடவுள் போன்றவற்றை நொறுக்கினால் தவிர நோய்கள் நீங்காது. மக்களை மூடத்தனத்தனத்தில் வீழ்த்தி ஏய்ப்பதற்கும் சாய்ப்பதற்கும் அறியாமையுள் மாய்ப்பதற்கும் உடந்தையாயிருந்தால் அவற்றைக் கடலினுள் வீசிவிட்டு வாழும் வழி காணல் வேண்டும் என்று வெகுண்டெழுகிறார். (நெ.பொ.பக்.79-80)

**'எல்லாரும் ஓரினமென் றெண்ணி நடக்கவெனச்**
**சொல்லாத ஏடில்லை, சொல்லாத் தலைவரிலை!**
**இன்னும் மதவெறியை எள்ளளவும் போக்கவிலை**
**என்னும் படியிங்கே எங்கும் மதச்சண்டை' (த.மு.ப.223)**

என்று தலைவர்கள் பலர் சொல்லியும் திருந்தாத குமுகாயத்தைக் கண்டு உள்ளம் நோகும் கவிஞர் அதற்குக் காரணமான கோவில்களையும் கடவுளரையும் வெறுக்கின்றார். கோவில் திருடர்களும் கயவர்களும் மறைந்து கொள்ளத் தேர்ந்தெடுத்த குகையாகவும் மாக்களைப்

போல அறநெறியை மறந்து வெறி கொண்டலைதலை மதம் என்றும் கவிஞர் குறிப்பிடுகிறார். (ம.தே.ப.105)

“ஒரு கடவுள் ஒரு சாதி என்ற பாங்கில் ஓரினமாய் வாழ்வதே தமிழ் வாழ்வு, கடவுளரைப் பெருக்கிக் கொண்டு உயர்வு தாழ்வு பேசும் குறுமனமும் பேதமையும் அடிமைப்பண்பும் தமிழவாழ்வு அன்று; கொடுமை வாழ்வு” (க.மு.ப.5) என்று கவிஞர் பழந்தமிழரின் வாழ்வியலை மீட்டெடுக்க வலியுறுத்துகிறார்.

உடையவரும் எளியவரும் இருப்பதுதான் உலகின் விதியென்றும் கடையவர் உயரியர் பிறப்பால் இருப்பது கடவுளின் செயலென்றும் மூடர்கள் உரைப்பர். இம் மூடத்தனத்தை ஒழிக்கப் பகுத்தறிவு வேண்டும் என்பதனை,

**“கடவுளை விதியினை மறுப்போம் - தூய**
**கடமையை உரிமையை மதிப்போம்**
**மடமையை அடிமையை வெறுப்போம் - நல்ல**
**மதியினை உணர்வினை வளர்ப்போம்” (பா.கு.ப.121)**

என்று பாடுவர். கவிஞர் ‘அவர் தான் இறைவன்’ என்னும் பாடலில்

**“தனக்கென முயலான் பிறர்க்கென முயல்வான்**
**தன்னையும் பொன்னையும் அவர்க்கெனத் தருவான்**
**மனத்துயர் சூழும் பொழுதினும் அயரான்**
**மதியான் தன்னலம் அவன்தான் இறைவன்” (பா.கு.ப.189)**

என்று பொதுநலத்தோடு வாழ்ந்து மனத்துயரை வெல்பவனே இறைவனெனப் பாடுகிறார்.

**கல்வி:**

குமுகாய வளர்ச்சிக்கு கல்வியறிவே அடிப்படையாகும். அறியாமையை நீக்கி நல்லறிவு ஊட்டுகின்ற ஆசிரியப்பணியை ஆற்றியவர் கவிஞர். அவரது அன்றாட வாழ்வில் ஒன்றியைந்த கல்விப்பணியைப் பற்றியும் ஆசிரியர், மாணவர்களிடத்திலுள்ள நுட்பமான குறைபாடுகளையும் சுட்டிக்காட்டி கல்வி சிறக்க நல்வழியும் காட்டுகிறார். ‘கல்வித் தொண்டே கடவுள் தொண்டு’ (பூ.கொ.12:23) என்றுரைத்து கல்வியை மேன்மைப்படுத்துகிறார்.

**தாய்மொழிவழிக்கல்வி:**

நாடெங்கும் ஆங்கில வழிக் கல்வி நிலையங்களின் எண்ணிக்கை புற்றீசலாய் அதிகரித்துவிட்டது. பிறமொழிமோகத்தால் தமிழ்வழிக்கல்வியைக் புறக்கணிக்கும் மக்கள் எண்ணிக்கை பெருகிவிட்டது. இன்றைய சூழலில் அரசுப் பள்ளிகளிலும் ஆங்கில வழிக் கல்வி துவக்கிவிட்டதால் அரசுப்பள்ளிகளில் தங்கள் பிள்ளைகளைச் சேர்க்கும் பெற்றோர்களின் முதல் தெரிவாக ஆங்கிலவழிக்கல்வியே இருக்கிறது.

தாய்மொழி வழிக்கல்வியே சிறந்தது. சிந்தனையைத் தூண்டவல்லது. மொழி, இனம், நாடு செழிக்க அடித்தளமானது. காந்தியடிகள் தாய்மொழிக்கல்வியின் மீது மிகுந்த நம்பிக்கையுடைவர். எனவே கவிஞர் காந்தியடிகளின் கூற்றைத் தம் கடிதவிலக்கியத்தில் எடுத்துக்காட்டுகிறார்.

‘தாய்மொழியின் வழிப் பிள்ளைகட்குக் கல்வி பயிற்றல் மிக முக்கியமானது, தாய்மொழியை அவமதிப்பது தேசியத் தற்கொலையாகும் என்று காந்தியடிகள் கூறியருளியிருக்கிறார். நாம் பிறமொழிகளைப் பயிலவேண்டா என்றா கூறுகிறோம்? எந்தமொழி கற்றாலும் எத்தனை மொழிபயின்றாலும் தாய்மொழியை, மறந்து விடாதீர்கள் என்று தானே எடுத்துச் சொல்கிறோம்’ (முடி.க.ப.62) என்று தாய் மொழியைப் புறக்கணித்து பிற மொழிகள் பயிலுவதைத் தவிர்த்து, தாய்மொழிக்கு ஆக்கம் தேடப் பிறமொழிகளைப் பயிலவேண்டும் என்றுரைக்கின்றார்.

‘தமிழ் இலக்கிய வளஞ்செறிந்த மொழிதான். ஆனால் ஆங்கிலத்தைப் போல் அறிவியற்கலைகள் தமிழில் இல்லையே என்பவர்கள் நம் தாய்மொழியும் அறிவியற்கலைகளைப் பெற்று விளங்க முயற்சியல்லவா மேற்கொள்ள வேண்டும். அதை விடுத்து ஆங்கிலத்தில் தான் கற்க வேண்டும், ஆங்கிலத்தில் தான் கற்பிக்க வேண்டுமென்று அடம்பிடித்தால் நாம் விடுதலை பெற்றுவிட்டதாகச் சொல்லிக் கொள்வதிற் பொருளில்லை’ (முடி.கடி.ப.133) என்று அடிமைத்தளையிலிருந்து நம் மனம் அகலவில்லை என்பதைத் தாய்மொழி அடிமைப்பட்டிருப்பதன் வழி சுட்டிக் காட்டுகின்றார்.

‘தமிழ் வாழ்வு’ என்னும் பாடலில் எவையெல்லாம் தமிழ்வாழ்வு என்று அடுக்கிக் காட்டும் கவிஞர் தொழிலகங்களில், திருமணத்தில், கோவில்களில் இசையரங்குகளில், கல்விக் கூடங்களில் என அனைத்திடங்களிலும் மாட்சிபெறுவதே தமிழ் உயர்வுக்கு ஒரே வழி என்பர் மேலும் பள்ளிக்கல்வி மட்டுமல்லாது கல்லூரிக் கல்வியும் தாய்மொழியிலேயே பயிற்று விக்க வேண்டும் கலைச்சொற்கள் தமிழ்மொழியில் ஆக்கல் வேண்டும்’ (க.மு.ப.25) என்று பாடுகின்றார்.

விடுதலை பெற்று ஆண்டுகள் பலவாகியும் தாய்மொழி வழிக் கல்வியைக் கட்டாயமாக்க முடியவில்லையென்றால் வெறுமனே மேடைகளில் முழங்கித் திரிவதெதற்கு? என்று வெகுள்கின்றார் கவிஞர் (த.மு.ப.211)

தாய்மொழிக்கும் பிறமொழிக்கும் நுட்பமான வேறுபாடுரைக்கும் கவிஞர் ‘தாய்மொழி ஆடை போன்றது; அயல்மொழி அணிகலன் போன்றது. அணிகலனின்றி மனிதன் வெளிவரலாம்; ஆடையின்றி வெளிவர இயலாது. வெளிவந்தால் பித்தன் என்றுதான் உலகம் பேசும். தாய்மொழியை மறந்த நாட்டின் நிலையும் அப்படித்தான். ஆங்கிலம் போன்ற அயல்மொழிகளைக் கற்பது நல்லது தான். ஆனால், மொழியென்ற அளவிற் கற்கவேண்டுமே தவிர, கலைகளையும் பாடங்களையும் அம் மொழியிற்றான் கற்பிக்க வேண்டுமென்பது கருத்துடைய செயலாகாது’ (முடி.கடி.ப.134) என்று கவிஞர் கூறுவது சிந்திக்கத்தக்கது.

மாணவக்குமுகாயம் நினைத்தால் நாட்டில் நல்ல மாற்றத்தைக் கொண்டுவர முடியுமென்பதில் கவிஞர் உறுதியோடிருந்தார். சரியான வழியில் செல்லும்போது பாராட்டுவதும் தவறான வழியில் செல்ல முற்படும்போது கண்டித்துத் திருத்துவதுமாக ஒரு தந்தையின் மனப்பாங்கில் கவிஞர் மாணவர்களிடம் நடந்து கொள்வதை அவரது படைப்புகளின் வழி அறியமுடிகின்றது.

மாணவனை நல்வழிப்படுத்த ஆசிரியர்களைப் போலவே, பெற்றோருக்கும் பொறுப்பிருக்கிறது. ‘பெற்றோர் ஒவ்வொருவரும் வீட்டில் ஆசிரியராதல் வேண்டும், அப்பொழுது தான் நல்லதொரு சமுதாயத்தை உருவாக்க முடியும். பிள்ளைகள் நல்லவர்களாக வளர

வேண்டுமானால் அகச் சூழலும், புறச் சூழலும் அத்துறையில் அக்கறை காட்டுதல் வேண்டும் என்பது கருத்து. அதனாற்றான் உன்னை நல்லவனாக உருவாக்க ஆசிரியரிடம் மட்டும் பொறுப்பை ஒப்படைத்து விடாமல் நானும் எனது கடமையைச் செய்கிறேன்' (முடி.கடி.ப.4) என்று மகனுக்குத் தந்தை எழுதும் கடிதத்தில் குறிப்பிடுகின்றார்.

படிப்பிற்கும் வாழ்விற்கும் தொடர்பில்லாமல் படித்ததை, படிப்பு கற்றுத்தந்த மாண்புகளை, பண்புகளை மறந்து வஞ்சனை புரிவோரைக் கண்டு உள்ளம் வருந்தும் கவிஞர்,

**"பள்ளியில் எல்லாம் படித்துவிட்டாய் - ஆனால்**
**படித்ததை அங்கே முடித்துவிட்டாய்**
**தெள்ளிய அறிவைக் கெடுத்துவிட்டாய் அதனைத்**
**தீமைக் கெனவே கொடுத்துவிட்டாய்" (கா.பா.ப.106)**

என்று படிப்பறிவைப் பாழ்படுத்தும் பாதகர்களைச் சாடுகின்றார்.

வார்த்தை வேறு; வாழ்க்கை வேறு என்று இரட்டைவேடம் பூணுகின்ற கற்றோரைக் காணும் போது,

**"உரைத்த குறிக்கோள் நடத்தும் வாழ்க்கை**
**இணைத்து நோக்கின் இரண்டும் தனித்தனி;**
**நினைதொறும் நினைதொறும் நெட்டுயிர்ப் புயிர்த்து**
**நனிபட ரெய்தி நலிவுறும் மனனே" (நெ.பொ.ப.69)**

என்று வள்ளுவர் சொன்னபடி கசடறக்கற்கும் நாம் கற்றபடி நிற்கின்றோமா? என்று வினவுகின்றார். மேலும் கற்ற கல்வி, குற்றத்தை மறைப்பதற்கே பயன்படுகிறதென்றும் குற்றம் செய்யாதிருக்கவோ, குற்றத்தைத் திருத்திக் கொள்ளவோ பயன்படா திருப்பதைக் கண்டு உள்ளம் வருந்துகிறார். (ம.தே.ப.167)

மற்றவர்களின் துன்பம் காணும்போது மனமுருகி விரைந்தணுகி அதனை நீக்கக் கற்றவனே கற்றவனாவான். உதவும் பண்பைக் கல்லாதவன் முற்றிய மரம் போல்வான் என்று வேறுபாடுரைக்கும் கவிஞர்,

**"மற்றவர்க்கே உரியதனைக் கவர்வ தற்கு**
**மனத்தாலே நினைத்தாலும் கவர்ந்த தைப்போல்**
**குற்றமெனக் கருதுகின்ற உணர்வு வேண்டும்;**

**குறைவறியா அறநூல்கள் உரைத்த வற்றைக்**
**கற்றபடி கடைப்பிடித்து நடத்தல் வேண்டும்" (ம.தே.ப.106)**

என்று கற்றபடி கடைப்பிடித்து ஒழுக வலியுறுத்துகிறார்.

'பெற்றோர் புலம்பல்' என்னும் பாடலில் படிக்க அனுப்பிய தங்கள் பிள்ளைகள் பள்ளிக்குச் செல்லாமல் ஏமாற்றிவிட்டு ஆடையில் மாற்றங்களையும் அரசியல் ஈடுபாடும்கொண்டு பொழுது கழிப்பதைக்கண்டு புலம்பி யாழிசை கேட்குமெனக் காத்திருந்து ஆந்தையின் கூக்குரலாய் பிள்ளைகள் நிலை மாறிப்போனது கண்டு புலம்புவதாகப் பாடுகிறார். (பா.கு.ப.149)

சாதிச் சண்டை, கட்சிப் பூசல்களில் ஈடுபட்டு மதுவிற்கு அடிமையாகி பாழ்பட்டுத் திரியும் மாணவர்களைக் கண்டு மனம் பதைக்கும் கவிஞர் 'சுற்றிட அரசு நல்கும் காசையெல்லாம் பாழாக்கிப் பெற்றவர் பட்ட பாட்டைப் பேணிய கனவையெல்லாம் வீணாக்கித்திரியும் மாணவரைத் தடுத்திடவில்லையென்றால் நாடு தறிகெட்டுப் போகும். படிக்கின்ற பருவத்தை வீணடித்தால் காலம் மீண்டும் வந்திடுமா? விளையும் நேரத்தில் விட்டில் விழுந்து பயிர்களைத் தின்றால் களஞ்சியம் நிரம்புமா? என்று வினாக்களை எழுப்பிப் பருவத்தே பயில மாணவர்களை நல்வழிப்படுத்துகிறார்.

ஆசான், பெற்றோர், சான்றோர் சொல் கேளாத மாணவர் போக்கு, அவர்களது வாழ்வை அழிக்கும் ஆபத்தான தீங்கு என்று கருதுகிறார். (நெ.பொ.ப.18)

'நெஞ்சு பொறுக்கவில்லையே' என்னும் நூலின் பெரும்பகுதி மாணவர்களுக்காகவே எழுதப்பட்டுள்ளது. 'வகுப்பறையும் மாணவரும்' என்னும் பாடலில் 'ஆசானை விளையாட்டுச் சிறுபொம்மையாகவும் வகுப்பறையைக் களவியலின் ஒத்திகைக் கூடமாகவும் எண்ணுகின்ற மாணவர்களின் எண்ணப் போக்கைச் சாடுகிறார். (நெ.பொ.ப.20)

'நூலகமும் மாணவரும்' என்னும் பாடலில் மாணவர்கள் நூல்படித்து அறிவை மேம்படுத்தி வாழ்வில் உயர வழியுரைக்கின்றார். (நெ.பொ.ப.21)

‘ஒப்பனையும் மாணவரும்’ என்னும் தலைப்பிலான பாடலில் நாகரிகம் என்ற பெயரில் அலங்கோலமாய் ஆடை உடுத்தித்திரியும் இருபாலரையும் அகக்கோலத்தில் நலக்கோலம் காண வலியுறுத்துகிறார். (நெ.பொ.ப.23)

‘அரசியலும் மாணவரும்’ என்னும் பாடலில் ‘புரையறு நூல் அறிவு வளம் பெற்ற பின்னர் அரசியலில் புகுவார்க்கே வெற்றி வாய்க்கும். அரைகுறையாய்க் கல்வியினை விட்டு மேடை அரசியலிற் புகுவதனால் பயனேயில்லை. முறைமையுமன்று. அரசியலைப் படிப்பதுதான் மாணவப் பருவத்து வேலையே தவிர அரசியல் துறையைப் பிடிப்பதல்ல’ என்று நயமாய் அறிவுறுத்துகிறார். (நெ.பொ.ப.25)

‘இதழ்களும் மாணவரும்’ என்னும் பாடலில் ‘பகுத்தறிவைப் பாழடிக்கின்ற, பாலுணர்வை வீணடிக்கின்ற, அல்வழியில் மனம்செலுத்துகின்ற பத்திரிகைகளால் கல்வி சருகாகிக் காற்றில் பறக்கும். காளையர்தம் பிஞ்சுள்ளம் வெம்பி வீழும்’ என்று எச்சரிக்கின்றார். (நெ.பொ.ப.27)

‘திரைப்படமும் மாணவரும்’ என்னும் பாடலில் தமிழ்ப்பண்பாட்டுச் சீர்குலைவிற்கு முதற்களமாய் இருக்கும் திரைப்பட மோகத்தில் மாணாக்கர் வீழ்ந்து விடாதிருக்க அறிவுரை பகர்கின்றார். (நெ.பொ.ப.29)

‘பெற்றவர் தூங்கினால்’ என்னும் தலைப்பிலமைந்த பாடலில் பிள்ளைகள் கல்வியிலும் ஒழுக்கத்திலும் சிறந்திருக்கிறார்களா? என்பதை அடிக்கடி விழிப்புடன் கண்காணிக்க வேண்டுமென்றுரைக்கிறார். (நெ.பொ.ப.31)

‘இன்றைய மாணவர்களே நாளைய தலைவர்கள்’ என்பதை ஓர் ஆசிரியராய் நன்குணர்ந்திருந்தார் கவிஞர். அதனால் தீமையை எதிர்த்து நல்லவை போற்றி மொழி, நாடு காத்து தன் வேதனையை நீக்கிடுமாறு வேண்டுகோள் விடுக்கின்றார். (நெ.பொ.ப.10)

**சமூகத்தில் ஆசிரியர்களின் பங்கு:**

கவிஞர் 31 ஆண்டுகளாகப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணியாற்றி நல்லாசிரியர் விருது பெற்றவர். கற்றுக் கொடுத்த ஆசிரியர்களைத் தெய்வமெனப் போற்றிப் புகழ்ந்தவர். ஆசிரியப் பணியைச் சிறப்பாக ஆற்றி நீதியரசர் சொக்கலிங்கம், சட்டமன்ற உறுப்பினர்

பழ.கருப்பையா, பேரா.சுப.வீரபாண்டியன், பேரா.இரா.மோகன், திரைப்பட இயக்குநர்கள் எஸ்.பி.முத்துராமன், இராம.நாராயணன் போன்ற பல மாணவர்களை உருவாக்கியவர்'[54]

'ஓடம் பழுதானால்..?' என்னும் பாடலில்,

**"அறிவொளி பெருக்கிக் காட்டி**
**அகவிருள் நீக்கும் ஆசான்**
**செறிதரும் இளைஞர் நெஞ்சிற்**
**செம்மையைப் புகட்டும் ஆசான்**
**நெறிதனைச் சுட்டிக் காட்டி**
**நேர்மையிற் செலுத்தும் ஆசான்**
**தெரிதரும் கடவுள் என்பேன்**
**தெய்வம்வே றில்லை என்பேன்" (நெ.பொ.ப.32)**

என்பதில் அகவிருள் நீக்கி, நெஞ்சில் செம்மை புகட்டும் ஆசிரியரே கண்கண்ட கடவுளென்று புகழ்ந்துரைக்கின்றார்.ஆசிரியர்கள் தங்களிடம் பாடம் கற்கும் குழந்தைகள் நாளைய நாட்டின் தலைவர்களென்பதை உணர்ந்து பாடங்கற்பிக்க வேண்டும் என்பதை,

**"நாளைக்கு மாணவரே நாட்டை ஆள்வோர்**
**நம்கையில் எதிர்காலம் உளதே என்று**
**நாளுக்கு நாளுணர்ந்து கடமை ஆற்றும்**
**நல்லுணர்வே ஆசாற்கு வேண்டும் எண்ணம்" (க.மு.ப.24)**

என்றுரைப்பர்.

கவிஞர் தன் ஆசிரியர் பணியைப் பற்றிய நினைவைப் பகிரும்போது 'மாணவர்கள் அனைவரும் என் பிள்ளைகள் என்று கருதி சரிசமமாக நடத்துவேன். அவ்வுலகம் ஒரு தனி உலகம்; இன்பமயமானவுலகம். பள்ளிக்குள் நுழைந்துவிட்டாற் புத்துணர்வு பெறுவேன். ஆசிரியர் மாணவர் என்ற இருநிலைதான் என் மனத்தில் நிற்கும்' (பா.ப.பொ.ப.ப.91) என்று கவிஞர் குறிப்பிடுவதிலிருந்து தன்ஆசிரியப் பணியின் மீது அவர் கொண்டிருந்த மதிப்பைப் புலப்படுத்தும். பணி நிறைவு பெற்றதன் பின் கவிஞர் தான் பணியாற்றிய மீ.சு.உயர்நிலைப்பள்ளியின் பவள விழாவிற்கு வாழ்த்துப் பாடும் பொழுது தம்பழைய நினைவுகளை மீட்டி,

**“வாயிலுக்குட் புகுந்ததுமென் வாழ்வுதனை மறந்துவிட்டுக்**
**கோயிலுக்குள் அரசனெனக் கோலோச்சி நானிருப்பேன்!**
**தாயினுக்கு நிகராகத் தமிழூட்டி மாணவரைச்**
**சேயெனவே நான்புரந்த செயலெல்லாம் நினைக்கின்றேன்”**

**(நெ.பூ.ப.216)**

என்று வாழ்த்துகின்றார்.

தலைமையாசிரியர் சக மாணவரைத் திட்டிவிட்டதற்காய் மாணவர்கள் ஒன்றுகூடி மறியல் செய்தபோது, யாருக்கும் கட்டுக்கடங்காத மாணவர் கூட்டம் கவிஞரின் அன்புக் கட்டளைக்குக் கட்டுப்பட்டு வகுப்பறைக்குச் சென்றதை தன் வரலாற்று நூலில் கவிஞர் நினைவு கூர்ந்துள்ளார். (பா.ப.வா.ப.பக்.91-92)

தமது ஆசிரியப்பணியின் வாயிலாகக் குமுகாயத்திற்கு நல் மாணக்கரை உருவாக்கிய சிறப்பு கவிஞருக்குண்டு.

**தொழிலாளர் நலன்:**

தொழிலாளர் நலன் மீது மிகுந்த அக்கறை கொண்டிருந்த கவிஞர் உழைப்பிற்கேற்ற ஊதியம், தொழிலாளர் நலவாழ்வு, உரிமை வாழ்வு ஆகியன குறித்துத் தம் படைப்புகளில் பலவிடங்களில் சுட்டிக்காட்டியுள்ளார்.

‘முடியரசன் கவிதைகள்’ என்னும் கவிஞரின் முதல் கவிதைத் தொகுப்பில் காவிய உலகம், இயற்கை உலகம், காதல் உலகம், சான்றோர் உலகம் என்று பகுத்துத் தலைப்பிட்டது போன்று தொழிலாளர்களைப் பற்றிய பாடல்களைத் தொகுத்து ‘தொழில் உலகம்’ என்னும் தலைப்பின் கீழ் தந்துள்ளார்.

உழவர்கள், நெசவாளிகள், மீனவர், சுரங்கத் தொழிலாளர், கட்டிடத் தொழிலாளர், சலவைத்தொழிலாளர், முடிதிருத்தும் தொழிலாளர், செருப்புத் தைப்பவர்கள், விறகுவெட்டுவோர், கூலித்தொழிலாளர் எனப்பல்வேறு தொழில் புரிபவர்களைப் பற்றியும் கவிஞர் பாடியுள்ளார்.

‘தொழிலாளி’ என்னும் கவிதையில் ‘மூச்சடக்கிக் கடலில் முத்தெடுக்கும் தொழிலாளிக்கு தன் வாழ்வில் மூச்சோடிருக்க வேண்டிய வசதி இல்லை. பூமிக்குள் அஞ்சாது

நுழைந்து தங்கம் தோண்டி எடுப்பவனின் அங்கத்தில் துளி தங்கமில்லை, ஆலையிலே ஊருக்கெல்லாம் ஆடை நெய்து கொடுக்கும் நெசவுத்தொழிலாளி உடுக்க ஆடையில்லை. ஓய்வின்றி உழைத்துத் தன் முதலாளியின் நெற்களஞ்சியத்தை நிரப்பும் விவசாயத்தொழிலாளியின் பசிக்கு உணவில்லை. பிறர் ஆடையிலே அழுக்ககற்றித் தூய்மையாக்கி அழகு செய்து தரும் சலவைத்தொழிலாளி, தாடையில் வளரும் முடியை வழித்தெறிந்து தளிர்க்கின்ற முடிவெட்டி அழகு செய்யும் முடிதிருத்தும் தொழிலாளி, பிறர் கால்களைக் கோடையிலும் முள்ளிலும் வருத்தாமல் பாதுகாக்கச் செருப்பு செய்து தரும் தொழிலாளி இவர்களெல்லோரும் தொடக்கூடாத சாதி என்றால் தொலைக வையம்' (முடி.க.ப.104) என்று வெகுண்டுரைக்கிறார்.

வெளிநாடுகளுக்குப் பொருள் தேடிக் கூலிகளாய்ச் சென்று அடிமைத் தொழில்புரியும் நம் இனத்தவரின் அடிமைத்தனமொழிக்க வேண்டியது நம் அனைவரின் கடமையென்றுரைக்கிறார்.

நம் நாட்டிலேயே தொழிலாளரின் வறுமையொழித்து வளமான வாழ்வை அவர்களுக்கு அமைத்துக் கொடுக்க வேண்டுமென்று அழைப்புவிடுக்கின்றார். (முடி.க.ப.104)

'வாழிய தமிழரசு' என்னும் பாடலில் கைரிக்ஷா முறையை ஒழித்து தொழிலாளிகளின் வாழ்வை மேம்படுத்திய தமிழக அரசைப் போற்றுகின்றார். (ம.க.கொ.ப.259) தொழிலாளிகளின் உரிமையைப் பாடும் கவிஞர் உழைப்பைச் சுரண்டிவாழும் கொடுமையை எதிர்க்கும் உரிமை வேண்டுமென்று உரிமைக்குரல் எழுப்புகின்றார். (ம.தே.ப.121)

'உலகை உயர்த்துவதற்கே உழைப்பவர் தாழ்ந்தோர் ஆனார். பலருடைய உழைப்பையுண்டு பருத்தவர்கள் உயர்ந்தோர் ஆனார். உழைப்பைச் சுரண்டி நலமெல்லாம் தனியுடைமையாய்த் தனதாக்கித் தொழிலாளரை முதலாளிகள் ஏய்க்கும் நாள்கள் இனிமேலில்லை. தாழ்ந்தோரெல்லாம் நிமிர்ந்தனர்.' (நெ.பொ.ப.81) என்று உரிமைக்குரல் எழுப்புகின்றார்.

'கிருஷ்ணார்ச்சுன யுத்தம்' என்னும் சிறுகதையில் பஞ்சுமில் தொழிலாளர்களை ஒன்றிணைத்து நிறுவியிருந்த தொழிலாளர்கழகத்தில் அர்ச்சுனன் என்னும் பாத்திரம் 'நாம்

வெற்றிபெற வேண்டுமானால், நமது உரிமையைப் பெற வேண்டுமானால், நாம் மனிதனாக வாழவேண்டுமானால் நமது முயற்சியில் ஊக்கத்தில் உழைப்பில் ஒற்றுமையில் நம்பிக்கை வைக்க வேண்டும். முதலாளித்துவம் நமது இரத்தத்தை உறிஞ்சிவிட்டு இரத்தினத்திற்கு விலை கேட்கிறது. இது ஏன்? என்று கேட்டால் உலகம் 'விதி' என்று விடை தருகிறது. இந்த விதியைச் 'சுயநலமிகளின் சதி' என்று முதலில் உணர வேண்டும். அதை முறியடித்தால்தான் நமது முன்னேற்றத்தைக் காண முடியும்' (எ.கா.ப.178) என்று ஒன்று கூடிப் போராடி உரிமையை மீட்டெடுக்க வேண்டுமென்று தொழிலாளர்க்கு அழைப்பு விடுக்கின்றார்.

தொழிலாளர்களின் நியாயமான கோரிக்கைகளுக்குச் செவிமடுக்காமல் மேலும் மேலும் உழைப்பைச் சுரண்டி ஏய்த்து வாழும் முதலாளிகளுக்கு எச்சரிக்கை விடுக்கும் கவிஞர் தொழிலாளர் மீது பரிவு கொண்டு அவர்களுக்கு நலம் தராவிட்டால் கெடுவாழ்வடையும் நாள் தொலைவில் இல்லை என்று எச்சரிக்கிறார். **(நெ.பொ.ப.61)**

**பொதுவுடைமை:**

கவிஞர் திராவிட இயக்கத்தைச் சாந்தவராயிருப்பினும் பொதுவுடைமைச் சித்தாந்தத்தில் ஆழ்ந்த பற்றும் நம்பிக்கையும் உடையவர். தன்னுடைய படைப்புகளில் பொதுவுடைமைச் சிந்தனைகளைப் பரவலாகப் பாடியுள்ளார.

இதனை, "மாற்ற முடியாத சமூக நீதியான பொதுவுடைமை என்கின்ற இலட்சியத்துக்கு முரணாக முடியரசனுடைய பேனா ஒரு வாக்கியத்தைக் கூட நானறிந்த வரையில் அவருடைய கவிதைத் தொகுப்புகளில் எழுதியிருக்கவில்லை"[55] என்னும் சின்னப்பபாரதியின் கூற்று நன்கு விளக்கும்.

'நானொருபாடும் பறவை' என்னும் பாடலில் தன் உளப்பாங்கை,

**"பாடிடு வேன்புது வுலகை - அங்கே**
**படைத்திடு வேன்பொது வுடைமை**
**சாடிடு வேன்வரும் படையைத் - தாக்கிச்**
**சமர்புரி வேன்அது கடமை" (பா.கு.ப.128)**

என்று வெளிப்படுத்தும் கவிஞர் மேலும்,

**“பொதுமையின் அறநெறி விரிப்போம்” (பா.கு.ப.122)**

**“பொதுவான உலகொன்று வேண்டுமாம்” (பா.கு.ப.184)**

**“அஞ்செனும் பூதமும் ஆருயிர்ப் பொதுமை” (பா.கு.ப.205)**

**“மாற்றமெ லாமொரு புதுமை-செல்வம்**

**மாந்தர்கள் யாவர்க்கும் பொதுமை” (பா.கு.ப.230)**

என்பன போன்ற ‘பாடுங்குயில்’ நூலின் பாடல்வரிகள் கவிஞர் ‘பொதுமை விரும்பி’ என்பதனைப் பறைசாற்றுகின்றன.

ஏழை, செல்வரென்ற வேறுபாடு பிறக்கும் போதும் இறக்கும் போதும் இருப்பதில்லை இடையில் வந்த வேறுபாடு இனியும் நின்றால் கேடுதான் வளரும். உடையும் உணவும் உடைமை யாவும் உலக மாந்தர் அனைவர்க்கும் பொதுமையாகும். துயரம் நீங்க மனிதர் அனைவரும் தோழராய் ஒன்று சேர்ந்தால் இன்பம் சேரும்’ (கா.பா.ப.88) என்று இன்பம் நிலைக்கப் பொதுவுடைமையே வழியென்று உரைக்கிறார். உலகம் சரிநிகர் சமமாய் உயர ஒவ்வொரு மனிதனும் திருந்த வேண்டும் என்பதனை,

**“தனிமனி தன்மனந் திருந்திவிட்டால் - உலகம்**

**சரிநிகர் சமமாய் உயருமடா” (கா.பா.ப.107)**

என்று பாடுகின்றார்.

அடித்தட்டு மக்களின் வாழ்வியலை, உரிமைகளைத் தம் படைப்புகளின் வழி உரத்த குரலெழுப்பும் கவிஞர். குமுகாயத்தில் திருட்டுக் குற்றங்கள் பெருக பொதுவுடைமையின்மையே காரணமென்று சுட்டுகிறார். (க.மு.ப.27)

தனியுடைமைக் குமுகாயத்திற்கு எதிராகக் குரலெழுப்பும் கவிஞர் ‘உடலையும், உயிரையும் ஒரு பொருட்டாகக் கருதாது உலகை உருவாக்க முயன்ற தோள்கள் கொடுமைகளையும் மிடிமைகளையும் வறுமை தந்த கோணல்களையும் எத்தனைநாள் சுமக்கும்? அடிமையெனப் படிகளென ஆக்கிவைத்தால் அத்தனையும் எத்தனைநாள் உள்ளம் பொறுக்கும்? பொறுத்துப் பொறுத்து ஒரு நாள் அவர்கள் உள்ளம் இடியென முழங்காதோ? என்றாவது கூனியிருந்த தோள்கள் நிமிராதா? வறுமையெனும் உலைக்களத்தில் அடுக்கிவைத்த மதம், சாதி, பட்டினி, நோய், மூடத்தனம் ஆகிய கரிகளிலே உணர்ச்சியை

மூட்ட, பெரும்புரட்சி வீசும் காற்றாக மாற, அங்கே உரிமையெனும் போராட்டச் செந்தீ பற்றும். பிறர் உழைப்பை உறிஞ்சும் இரும்புபோலும் மனமுடையோரை அதனில் காய்ச்சி, சரிவுபடாத் பொதுவுடைமைச் சம்மட்டியாலடித்தால் நல்லுருவமாகும்' (பு.வி.செ.ப.113) என்று முதலாளித்துவமெனும் இரும்பைப் பொதுவுடைமை என்னும் சம்மட்டியால் ஓங்கி அடிக்க வேண்டுமென்று கனன்றெழுகின்றார்.

'வறுமையால் வலிமைகெட்டு வறியவர்கள் வாடும்போது, வலிய முதலாளிகள் மட்டும் வளமையுற்று வளர்வதென்ன நீதி?' என்று வினவும் கவிஞர் வறுமை போய் வளமை சேர வழி வளரும் நம் நாடு பொதுமையாக வேண்டும்' என்று பதிலிறுக்கின்றார். (பு.வி.செ.ப.118)

மனிதனின் அடிப்படைத் தேவைகளான உணவும், உடையும் பாரில் அனைவர்க்கும் பொதுவானவையாகும், ஏழைக்கு உணவும், உடையும் இல்லாதது அவர்கள் செய்த முன் வினைப் பயன் என்று விதியைக் காரணம் காட்டும் சதிச் செயல் மூடத்தனமாகும் என்பதை 'யாவும் பொதுமையடா' என்னும் பாடலில்

**"தேவை யளவறிந்து யாவும் அடைந்தபினும்**
**தேடி முடக்குவது குற்றமடா**
**யாவும் பொதுமையென நீயும் உணர்ந்துநட**
**யாரும் நமதருமைச் சுற்றமடா"** (பு.வி.செ.ப.121)

என்று பாடுவர்.

பழந்தமிழகம் மன்னராட்சிக் காலத்தில் பொதுமையின்றித் தனியுடைமையாய் இருந்தது. ஆனால் இன்று விடுதலை பெற்ற பின்னும் எளியர், வலியரெனும் ஏற்றத்தாழ்வு நிலவுகிறதே என்று வருந்தும் கவிஞர், தமிழக அரசு இவ்விழிநிலையை மாற்றிப் பொதுவுடைமையைப் பூக்கச் செய்யுமென்று நம்பிக்கையுரைகின்றார் (பு.வி.செ.ப.147)

அரசாங்க அதிகாரத்தில் மட்டுமே பொதுவுடைமைக் குமுகாயம் சாத்தியமென்பதை உணர்ந்திருந்த கவிஞர் 'ஒரு சில கொழுத்த பணக்காரர்களைத் தவிர மற்றைய யாவரும் வெவ்வேறு வகையான பிச்சை வாழ்வுதான் நடத்துகிறார்கள். இவ்வளவு பேரையும்

அரசாங்கம் எப்படிக் கவனிக்க முடியும்? நமக்குள்ளே பொருளாதார சமத்துவம் ஏற்பட்டால் ஒழிய இந்தச் சிக்கல் தீராது. அந்தச் சமத்துவத்தைப் படைப்பதற்கும் உரமுள்ள தீவிரக் கருத்துள்ள ஓர் அரசாங்கந்தான் வேண்டியிருக்கிறது' (எ.கோ.ப.207) என்று 'இரண்டு தந்தி' என்னும் சிறுகதையில் உரைப்பர்.

**பெண்ணுரிமை:**

'பெண்கள் அடிமைத்தனத்திலிருந்து மீண்டு உரிமை பெற்றுப் புதுவாழ்வை வாழ வேண்டும். ஆணுக்கு நிகராகச் சரிநிகர் சமத்துவத்தோடு செம்மாந்த வாழ்வில் பெண்கள் உயர வேண்டும்' என்று பாரதி, பாரதிதாசன், நாமக்கல் கவிஞர் போன்ற கவிஞர்களும், பெரியார், திரு.வி.க. போன்ற தலைவர்களும் தொடர்ந்து குரலெழுப்பினர்.

"இனம், மொழி, மதம், சாதி என்ற அடிப்படைகளில் ஏற்றத்தாழ்வுகள், சிறுபான்மையோர் பிரச்சனைகள், அவர்களில் வலியோர், எளியோர் என்ற நிலை ஆகியன இருக்கின்றன. ஆனால் இனம், மொழி, மதம், சாதி அனைத்தும் கடந்து, நலிந்த இனமாகப் பெண்கள் இருக்கின்றார்கள்"[56] என்பர் முனைவர் வா.செ.குழந்தைசாமி.

குமுகாயத்தில் நிலவுகின்ற அடிமைத்தனங்களிலேயே பெரிய அடிமைத்தனமாக பெண்ணடிமைத்தனம் தான் இருக்கிறது என்பது அவர்தம் கருத்து

முடியரசனார் பெண்களுக்கு சமஉரிமை வழங்கவேண்டும். ஆண்கள் பெண்களை மதிக்க வேண்டும். சமத்துவம் தந்து போற்றிப் பாதுகாக்க வேண்டும் என்று தம் படைப்புகளின் பலவிடங்களில் பெண்ணுரிமைக்கு ஆதரவாகக் குரலெழுப்பியுள்ளார்.

**பெண்ணின் பெருமை:**

ஆணும் பெண்ணும் சேர்ந்த கூட்டுறவே உலகம். ஆண்மையின்றிப் பெண்மையில்லை, பெண்மையின்றி ஆண்மையில்லை. இவற்றுள் மேல்கீழென்று பாகுபடுத்திப் பார்ப்பது தவறு. உலகத்தின் இருவிழிகளாய் ஆணும் பெண்ணும் கருதப்பட வேண்டும் என்னும் கொள்கையில் கவிஞர் உறுதியோடிருந்தார். 'பெண்ணின் பெருமை' என்னும் பாடலில் பெண்மையின் இலக்கணத்தைக் கவிஞர்,

**“அடக்கத்தின் மறுபெயரே பெண்மை; தூய**

**அழகியலின் மறுமதிப்பே பெண்மை; அன்புத்**

**தொடக்கத்தின் பிறப்பிடமே பெண்மை; உண்மைத்**

**தொண்டுக்கோர் இருப்பிடமே பெண்மை; மற்றோர்**

**இடர்க்கிரங்கும் அருமைத்தே பெண்மை; வந்த**

**இன்னல்கொளும் பொறுமைத்தே பெண்மை; செல்வ**

**முடக்கத்தும் ஒப்புரவுப் பண்பே பெண்மை;**

**மொழிந்தவற்றின் கூட்டணியே பெண்மை யாகும்”(ம.தே.ப.181)**

என்று போற்றுவர்.

கணவனுக்கு அடிமையாய் வாழ்வதற்கும் பிள்ளைகளைப் பெற்று துயரில் உழல்வதற்கும் விருப்பமில்லை என்று கற்றறிந்த மகளிர் திருமணத்தை வெறுப்பதையும் சமைப்பதற்கு மறுப்பதையும் முன்னேற்றம் என்று சொல்லி முழங்கும் மாதர், அலங்கோல ஒப்பனையும் குறையாடை மெல்லாடை உடுத்தி உடலழகை ஊருக்கு வெளிச்சமிட்டுக் காட்டுவதிலும் கவிஞருக்குத் துளியும் உடன்பாடில்லை, நன்மைகளை எல்லாம் பிற்போக்கென்று எடுத்தெறிந்தா முற்போக்கு காணல் வேண்டும் என்று பெண்குலத்திற்கு வினா தொடுக்கின்றார். (ம.தே.பக்.184-185)

ஆணுக்கும் பெண்ணுக்கும் உரிமை ஒன்றே; புன்மையை விட்டொழித்து யார் முன்னால், யார் பின்னால் என்ற கேள்வி எழாமல் சமமாய் நின்று புத்துலகப் பயணம் தொடங்க வேண்டுமென்று பாடுகிறார். (ம.தே.ப.185)

தாய்மொழியை வளர்க்கவும் காக்கவும் தாய்க்குலத்தால் தான் முடியுமென்னும் கருத்தினை ‘இளம்பெருவழுதி’ என்னும் காப்பியத்தில்,

**“தாய்க்குலம் விழித்தெழின் தாயகஞ் செழிக்கும்**
**தாய்மொழி ஆல்போல் தழைக்கும் கொழிக்கும்**
**உயர்மொழி தனிமொழி செம்மொழி நம்மொழி**
**அம்மொழி வளர்க்க அரிவையர் முந்துறின்**
**எம்மிற் சிறந்தோர் எவருளர் அம்ம” (இ.வ.ப.189)**

என்று பாடுவர். இங்ஙனம் எழுதியதோடு மட்டுமன்றி ‘திருமணம் ஆன ஆண்டிலேயே (1949) தம் துணைவியாருடன் இந்தி எதிர்ப்புப் போரில் பங்கேற்றார். துணைவியாரையும் சமூக மீட்சிப் பணிக்கு ஆட்படுத்தினார்.’[57] சொல்வேறு செயல்வேறு என்றில்லாமல் சொல்லும் செயலும் ஒன்றாய் வாழ்ந்தவர் கவிஞர் முடியரசன்.

**பெண் முன்னேற்றம்:**

‘பெண்கள் முன்னேற்றம் என்பது அவர்கள் வாழ்க்கைத் தரத்திலும், அறிவு மேம்பாட்டிலும் உயர்ந்திருக்க வேண்டும்’ என்று விரும்பிய கவிஞர்,

**“நாட்டை உருவாக்கும் நல்லகுலம் நீங்களம்மா**
**பாட்டால் குறைசொன்ன பான்மைக்குச் சீறாதீர்;**
**கல்வியிலும் ஆட்சியிலும் காட்டுந் திறமையிலும்**
**பல்வகையாம் நுண்கலையின் பாங்கினிலும் ஓர்நிகராய்**
**முன்னேற்றங் கொண்டுயர்க; மொய்குழலீர் நாடுயரும்”**

**(ம.தே.ப.179)**

என்று கல்வி, ஆட்சி, திறமை, நுண்கலை என அனைத்திலும் சரிநகராய் முன்னேற்றம் கண்டு தம்மையும் உயர்த்தி, நாட்டையும் உயர்த்திடப் பெண்களுக்கு வேண்டுகோள் விடுக்கின்றார்.

‘பெண்ணுக்கு முன்னேற்றம் தரா நாட்டில் உரிமையும், உயர்வும் சேராது’ என்னும் கருத்தில் நம்பிக்கை கொண்ட கவிஞர் துறைதோறும் பெண்கள் முட்டி மோதி முன்னேறி வருவதைக் கண்டு உள்ளம் பூரிக்க வரவேற்கின்றார். ‘பாரதி கண்ட பெண்ணுரிமை’ என்னும் தலைப்பிலான கவிதையில், பெண்கள் இனித்தாழ்வுற மாட்டார் என நம்பிக்கை தருகிறார். **(ம.தே.ப.177)**

தன்னைக் காத்துத் தன் கணவனையும் தன்தகைசான்ற சொல்லையும் பேணிக்காத்து, சோர்வகற்றி கற்க வேண்டிய நூல்களைக் கற்றுக் கணவனின் நெஞ்சக் கருத்துணர்ந்து, கனிகின்ற அன்புகாட்டி இல்லறம் பேணுதலே பெண்களுக்கு உரிய உரிமையாகும். இகழ்வாகப் பிறர்பேச ஊரைச் சுற்றி, பல்காட்டி, உடல் மினுக்கிப் பண்பு கெட்டுப் பகட்டுவதை

பெண்ணுரிமை என்று யாரும் சொல்லார் (க.மு.ப.113) என்று பெண்ணுரிமைக்கு விளக்கம் தருகிறார்.

**பெண்மைக்கு இழுக்குத் தருவன:**

'நல் இல்லறத்தில் ஏற்றும் திருவிளக்கு ஏற்றிழையார்' என்று முன்னோர் உரைப்பர். தூற்றும் தெருவிளக்காய் வீட்டை மறந்து, மாதர் சங்கமென்று ஒப்பனைப் பொடி பூசி மெய்யின் எழில்காட்டி வீதி எல்லாம் சுற்றுவதை, நாகரிகப் பேரால் கடைச்சரக்கைப் பேணுவதைக் கவிஞர் கடிந்துரைக்கிறார். (நெ.பொ.ப.90)

பெண்கள் தங்கள் உரிமைகளைப் பெற்றுவிட்ட நினைவில் ஆடவரைத் தாழ்வாக நினைத்தல் கூடாது. பண்டைக்காலம் முதல் பின்பற்றி வந்த ஒழுக்கம், உடைமுறைகளில் தேவையில்லாத மாற்றம் விரும்புதல் கூடாது என்றும் கவிஞர் கருதுகிறார்.

'பெண்மையின் கொலைக்களம் திரைப்படம்' (பாகு.ப.145) என்று திரைப்படத்துறையைப் பழிக்கும் கவிஞர் காசுக்காக மானம் விற்கும் நடிகையரைக் கடிந்துரைக்கிறார்.

**"திரைப்படம் என்றொரு தொழிலாம் - மாதர்**
**மறைப்பிடம் என்பதங் கிலையாம்!**
**உருப்படு மாஎனிற் கலையாம்! - ஐயோ**
**உரைத்திடின் மானமும் விலையாம்" (பா.கு.ப.177)**

என்று மானத்தை விலையாக்கும் மங்கையரைச் சாடுகின்றார்.

திரைப்பட நடிகையர் பாடுவதாக 'உலகம் எங்கள் கையிலே!' என்னும் பாடலில்,

**"குலுக்கி குலுக்கி ஆட்டுவோம் - உடலைக்**
**குனிந்து நிமிர்ந்து காட்டுவோம்**
**துலக்கி ஆசை ஊட்டுவோம் - எம்மைத்**
**தொடருங் காசைக் கூட்டுவோம்...**
**பெண்மை நாணம் பேசினால் - எங்கள்**
**பேரும் புகழும் வீசுமோ?**
**உண்மை கண்டு கூசுவோம் - எங்கள்**
**உலகம் யாவும் வேசமே" (பா.கு.ப.179)**

என்று காசுக்கும் பேருக்கும் புகழுக்கும் ஆசைப்பட்டு பெண்மை நாணத்தைப் புறம் தள்ளும் நடிகையரின் நிலையைக் குறிப்பிடுகின்றார்.

**மணக்கொடை:**

பொருள்களைச் சந்தையில் விற்பதைப்போல் மகன்களைப் பெற்ற பெற்றோர் தங்கள் பிள்ளைகளுக்குச் செய்த செலவுகளை வட்டியும் முதலுமாய்ப் பெண்வீட்டாரிடம் வசூல் செய்யும் திருமணச் சந்தையைக் காணும் கவிஞர் கொதித்தெழுகின்றார்.

பிணியணுகாமல் பெருந்தொகை செலவு செய்ததையும் துணிகள் வாங்கியதற்கு, கல்விக்காய் செலவிட்டதற்கு, பணியில் அமர்த்துவதற்குப் பணம் செலவழித்ததை மணமகள் வீட்டாரிடம் சொல்லிக்காட்டி, மணமகன் வேண்டுமென்றால் செலவழித்த பணம் வேண்டுமென்று பேரம் பேசுவது எவ்விதத்தில் நியாயம்? பெற்றவன் மகனுக்காகப் பெருந்தொகை செலவு செய்தல் கடமையாகும். மற்றவர் தலையில் கைவைக்க நினைத்தால் பெண்ணைப் பெற்றவன் என்ன செய்வான்? என்று ‘திருமணச்சந்தை’ என்னும் தலைப்பிலான பாடலில் வினா எழுப்புகின்றார். அழகு, கல்வி, குணம், பண்பு எதையும் நோக்காமல் காசொன்றே இலக்காய்த் திரிபவர்களால் எத்தனை பெண்கள் சாவை ஏற்றார்! எத்தனைப் பெண்கள் வாழ்வில் இடறி வீழ்ந்துழலுகின்றார்! இத்தனைகொடுமை கண்டும் இவர்களுக்கு இரக்கமே தோன்றவில்லையே? என்று வியப்புறுகின்றார். (நெ.பொ.ப.71)

மணக்கொடை கொடுமையால் மகளிர் வாழ்வு அழியாதிருக்க இளைஞர் விழித்தெழ வேண்டும் என்பதை,

**“அழுகையில் மகளிர் வாழ்க்கை**
**ஆழ்ந்தினிப் போகா வண்ணம்**
**பழிபடக் குமுகா யத்தைப்**
**பாழ்ங்குழி தள்ளா வண்ணம்**
**எழில்பெறச் செய்ய வேண்டின்**
**இரக்கமே யில்லா மாக்கள்**
**இழிவினை அகற்ற வேண்டும்**
**இளைஞரும் விழித்தல் வேண்டும்” (நெ.பொ.ப.73)**

என்று பாடுவர். இதில் மணக்கொடை மறுத்து மனப்பொருத்தம் காண இளைஞர்களுக்கு வேண்டுகோள் விடுக்கின்றார்.

**தேவதாசி முறை:**

ஆண்டவனுக்குச் செய்யக்கூடிய புண்ணியத் தொண்டு என்றுகூறி தேவதாசி முறை வேண்டுமென்று கூறும் ஆரியவழிப்பட்ட பிராமணர்களுக்கு கவிஞர் 'தேவதாசி' என்னும் கவிதையில் சாட்டையடி கொடுக்கின்றார். கடவுளுக்குச் செய்யும் புண்ணியமென்று தேவதாசி முறையை வேண்டுபவர்கள் தங்கள் இனத்தில் ஆடல்வல்ல, அழகு நிறைந்த பெண்களுக்கு பொட்டுக்கட்டி புண்ணியத்தைக் கட்டிக் கொள்ளட்டும் என்கிறார். **(நெ.பொ.ப.84)**

**விதவை மறுமணம்:**

மனைவி இறந்துவிட்டால் ஆண்மகனுக்கு உடனே மறுமணம் செய்விப்பதில் முனைப்புக் காட்டும் குமுகாயம் கணவனை இழந்த பெண்களைக் காலம் முழுக்க விதவையாகவே வாழ வைத்து, பார்க்கும் போதெல்லாம் அபசகுனம் என்று குத்திக் காட்டிப் பேசுவதைக் கண்டு கவிஞர் உள்ளம் குமுறுகிறார். இதனை,

**"கொண்டவர் மாண்டனர் என்பதால் மங்கையர்**
**கோலமெ லாமழித் தோம்-எதிர்**
**கண்டவர் ஏசிடக் கைம்பெண்டிர் என்றபேர்**
**கண்ணீ ருடன்கொடுத் தோம்**
**கொண்டவள் போனபின் நின்றிடும் ஆண்மகன்**
**கூடிக்கு லாவிடு வான்-எனில்**
**கண்டுநிகர் மொழிப் பெண்டிரை மட்டிலும்**
**காதல் மறுத்திடல் ஏன்?" (த.மு.ப.211)**

என்னும் பாடல் விளக்கும்.

தன்சிறுகதைத் தொகுப்பில் பலவிடங்களில் 'விதவை மறுமணம்' குறித்த சிந்தனைகளை எழுதியுள்ளார். 'கண்மூடி வழக்கம்' என்னும் சிறுகதையில் 'பெண்ணுரிமை வழங்குவதென்றால் முதலில் மறுமணம்தான் கவனிக்கப்பட வேண்டும்' (எ.கா.ப.143) என்று

முழங்குகிறார்.‘கடைமுழுக்கு’ ‘அணைந்த விளக்கு’ ‘அவமானச் சின்னம்’, ‘எக்கோவின் காதல்’ ஆகிய சிறுகதைகளில் விதவை மறுமணத்திற்கு ஆதரவாகக் குரலெழுப்புகின்றார்.

**புரட்சிப் பெண்கள்:**

மொழிப் போராட்டக் காவியமான பூங்கொடியில் மொழிப் போரைத் தலைமையேற்று வழிநடத்தும் புரட்சிப் பெண்ணாகப் பூங்கொடி கதாபாத்திரத்தைப் படைத்துள்ளார். ‘புதுமைப் பெண்’ என்னும் தலைப்பிலான கவிதையில்,

> **“தொட்டார்க் குரியளாய்த் தோள்தோய்ந்து வாழலன்றிக்**
> **கட்டாயக் கல்யாணங் கண்டிப்பாய் நான் வேண்டேன்**
> **அஞ்சி அஞ்சி வாழ்ந்த அரிவையர்கள் இந்நாளில்**
> **மிஞ்சிவிட்ட செய்கையினை மேல்நடத்திக் காட்டுகிறேன்” (முடி.க.ப.76)**

என்று ‘வீட்டாரும் நாட்டாரும் எதிர்த்தாலும் காதலித்தவனையே கரம்பிடிப்பேன்’ எனச் சூளுரைத்துச் சொன்னவாறே காதலனைப் பல எதிர்ப்புகளையும் மீறி மணந்து கொண்ட புரட்சிப் பெண்ணைப் பாட்டுடைத் தலைவியாக்கியுள்ளார். ‘வீரகாவியம்’ நூலில் முறு வலனை எதிர்த்துப் போரிட்ட வெண்ணகரத்துப் பெண் மானத்தியைப் போர்க்கலை அறிந்த வீராங்கனையாய்ப் படைத்துள்ளார். முடியரசனார் கவிதைகளைக் காட்டிலும் சிறுகதைகளில் பல புரட்சிப் பெண்களை உலவ விட்டுள்ளார். ‘எக்கோவின் காதல்’ என்னும் சிறு கதையில் குமுகாயம் உரிமை பெற்று விளங்க கணவன் எக்கோவுடன் இணைந்துபோராடும் மல்லிகா, ‘அத்தை வீட்டில் பேய்’ என்னும் கதையில் மூடப்பழக்க வழக்கங்களைச் சாடும் ஊர்மிளா, ‘கண்மூடி வழக்கம்’ என்னும் கதையில் சுயநலக் குமுகாயத்தை எதிர்த்து வெற்றிகண்ட புனிதம், ‘கடைமுழுக்கு’ என்னும் கதையில் சீர்திருத்தத் திருமணம் செய்து கொண்ட கடவுள் மறுப்புக் கொள்கையுடைய தாசிப் பெண், காக்கையின் கடிதங்கள் என்னும் சிறுகதையில் மொழிப் போராட்டத்தில் பங்கேற்ற காக்கைப்பாடினி, ‘கிருஷ்ணார்ச்சுன யுத்தம்’ என்னும் கதையில் மாதர்கழகச் செயலாளர் மதுரம் ஆகியோரைப் புரட்சிப் பெண்களாகப் படைத்துள்ளார்.

காலங்காலமாகப் பெண்களும் குமுகாயமும் தாலியைப் புனிதச் சின்னமாகக் கற்பித்த பழம்போக்கை ‘எக்கோவின் காதல்’ என்னும் சிறுகதையில் எக்கோவின் கூற்று வாயிலாகக் கட்டுடைப்புச் செய்கிறார். தாலியைக் காரணம் காட்டிப் பெண்களை விதவைகளாகவும் அடிமைகளாகவும் காணும் குமுகாயத்தில் ‘தாலி ஓர் அடிமைக்கயிறு’ என்று விமர்சிக்கிறார். (எ.கா.ப.120)

**குமுகாயச் சீர்த்திருத்தம்:**

தனிமனித வாழ்வு வளமும் நலமும் நேர்மையும் சீர்மையும் பெற்றுத் திகழ்ந்தால் குமுகாயமும் சிறக்கும். தனிமனித ஒழுக்கப் பற்றாக்குறையே குமுகாயச் சீர்கேட்டிற்கான அடிப்படைக் கரணியமாகும்.

பண்பாட்டுச் செழுமை மிக்க தமிழர் வாழ்வியல் பாழ்ங்குழியில் தள்ளப்பட்டது போன்று புரையோடிப் புண்பட்டு மண்ணில் வீழ்ந்து மடிவதைக் கண்டு நெஞ்சு பொறுக்காமல் ‘நெஞ்சுபொறுக்கவில்லையே’ நூல் படைத்ததாக அந்நூலின் முன்னுரையில் குறிப்பிடும் கவிஞர் ‘அடிமை அகன்று மக்களாட்சி மலர்ந்த விடுதலை நாட்டில் வாழும் மக்கள் எனத்தக்க வகையில் தகுதி பெற்றுள்ளோமா? பண்பாட்டில், ஒழுக்க நெறியில், பொதுவாழ்வில் வளர்ச்சி பெற்றுள்ளோமோ? சாதிச் சழக்குகள் ஒழிந்தனவா? சமயப் பூசல்கள் ஓய்ந்தனவா? ஒருவரையொருவர் சுட்டுக்கொல்லும் அளவிற்குத்தானே முன்னேறியிருக்கிறோம்! விடுதலைபெறுவதற்காகச் சிந்திய குருதியைவிடப் பெற்ற பின் சிந்தும் குருதிதான் மிகுதியாக ஓடுகிறது. மக்கள் மாக்களாயிருக்கிறோம்! அடிமைகளாகவே வாழ வேண்டியவர்களுக்கு விடுதலை ஏன்? என்று சலித்துக்கொள்ளும் வகையிற்றானே நாடு நடந்து கொண்டிருக்கிறது!’ என்று உள்ளம் குமுறுகிறார்.

‘எங்கெங்கு நோக்கினும் அங்கே நேர்மை நெளிந்து கிடக்கிறது. நாணயம் நலிந்து கிடக்கிறது; ஒழுங்கு மழுங்கிக் கிடக்கிறது; தூய்மை துவண்டு கிடக்கிறது; சுருங்கக் கூறின் மனச்சான்றே மறைந்து கிடக்கிறது. நாட்டைச் சுற்றிக் குற்றங்களும் குறைபாடுகளும் முற்றுகையிட்டுக் கிடப்பதைக் காணுகிறேன். அவை கடியப்பட வேண்டுமென்பதற்காகக்

கண்டிக்கிறேன்.அக்கண்டனத்தில் என் நண்பர்களும் சிக்கலாம்; அதற்கென் செய்வது? கண்டனத்துக்குள்ளானோர் வருந்துவர் என்பதையும் அறிவேன். மாணவன் வருந்துவானே என்பதற்காக ஆசானும் மகன் வருந்துவானே என்பதற்காக அன்னையும் கண்டிக்காமல் இருந்துவிடின் நிலைமை என்னாவது? கண்டனத்தால் அவர்தாம் வருந்துவது உண்மையானால் அவர்தம் செயலால் உலகம் வருந்துகிறதே அதற்கென் செய்வது?' (நெ.பொ.பக்.4-5) என்று குறிப்பிட்டிருப்பதில் கவிஞரின் குமுகாய அக்கறையும் நடுவுநிலைமை மனப்பாங்கும் நேர்மைக் குணமும் புலப்படுகிறது.

இதனைப் போன்றே 'மனிதனைத் தேடுகிறேன்' நூலின் முன்னுரையிலும் 'இன்றைய உலகில் அரசியலாயினும் சரி, ஆலயம் ஆயினும் சரி, கல்வி நிலையமாயினும் சரி, கடைத்தெருவாயினும் சரி எதனை நோக்கினும் துறை தோறும் துறைதோறும் பண்பாடு குறைந்து வருகிறது. நல்லவர் உள்ளம் எலாம் நலிந்துருகும் வண்ணம் தீமைகள் மலிந்துவிட்டன, பண்பாட்டுக் குறைவு ஒரு நாகரிகமாகவே மாறி வருகிறது. ஆடவராயினும் மகளிராயினும் சிறியராயினும் பெரியராயினும் கற்றாராயினும் கல்லாராயினும் எவராயினும் விதிவிலக்கின்றி எவர்மாட்டும் இக்குறைபாடு இரண்டறக் கலந்து பரவி நிற்கிறது. 'நெஞ்சு பொறுக்குதில்லையே இந்த நிலை கெட்ட மாந்தரை நினைந்துவிட்டால்' என்று புலம்ப வேண்டிய நிலை ஏற்பட்டு விட்டது' (ம.தே.ப.99) என்ற கவிஞரின் புலம்பலில் பாழ்பட்ட குமுகாயத்தை எப்பாடுபட்டேனும் மீட்டெடுக்க வேண்டுமென்ற கவிஞரின் உறுதிப்பாடு தெரிகிறது.

**போலிகளின் பெருக்கம்:**

ஏட்டில் படித்த இலக்கணப் போலிகளைப் போல் நாட்டில் போலிகள் பெருகிவிட்ட நிலையைக் கண்டு வருந்தும் கவிஞர் போலிகளின் தோலுரித்துக் காட்டுகிறார்.

போலி எழுத்தாளர்களைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது 'எழுத்தாளர் எனச் சொல்லிக் கொண்டு ஒவ்வொரு நாளும் குழப்பும் பாங்கில் முழுத்தாளில் அச்சடித்து விற்போரெல்லாம் முதன்மையான எழுத்தாளர் போல் நின்று கொழுத்தார்கள். மொழியையும் நாட்டையும்

பழித்துப் பிழைத்தார்கள்' (ம.தே.ப.111) என்று வயிறு வளர்க்கவும் புகழ் சேர்க்கவும் தாய்மொழியையும் தாய்நாட்டையும் பழித்துப் பேசத் துணிந்த போலி எழுத்தாளர் நிலையைக் குறிப்பிடுகிறார். இளையோர் உள்ளத்தைப் பாழ்படுத்தும் ஆபாச எழுத்தாளர்களைச் சாடும் கவிஞர்,

**"எழுத்தாளர் கைகளிலே இருப்பதெல்லாம்**
**எழுதுங்கோல் என்று கூறேன்**
**பழுத்தோர்கள் வளர்ந்துவிடும் பண்பாட்டுப்**
**பயிர்களெலாம் பாழாய்ப் போகக்**
**கழுத்தறுக்க வைத்திருக்கும் கருக்கரிவாள்**
**என்றுரைப்பேன்; காமத் தீயில்**
**பழுக்காது காய்ச்சியிளம் பிஞ்சுள்ளத்தில்**
**பாய்ச்சுகிற சூட்டுக் கோலாம்" (நெ.பொ.ப.63)**

என்று போலி எழுத்தாளர்களின் எழுதுகோல்களைக் கருக்கரிவாளாகவும் சூட்டுக் கோலாகவும் உருவகிக்கின்றார்.

கவிதை எழுதுவதற்குக் கவிஞர்கள் பெருகிவிட்டார்கள். ஆனால் நல்ல கவிதைகள் தான் குறைந்து விட்டன. தனக்குத்தானே 'கவிஞர்' பட்டம் சூட்டிக் கொள்ளும் போலிக் கவிஞர்கள் பெருகிவிட்டார்கள். யாரெல்லாம் கவிஞர்? கவிஞன் அல்லாதவன் யார்? என்பதைப் பகுத்துணர, வேறுபாடு உரைக்கும் கவிஞர் 'மாசற்ற கொள்கைக்கு மாறாய் நெஞ்சை மறைத்துவிட்டுப் பாடுபவனும் தேசத்தை, தன்னினத்தைத் தாழ்த்திப் பொருள் தேடப் பாடுபவனும் மீசைக்கும் கூழுக்கும் ஆசைப்பட்டு மேல் விழுந்து பாடுபவனும் கவிஞனாகான்' (க.மு.பக்.85-86) என்று தெளிவுறுத்துகிறார். எழுத்தாளர்க்கு இலக்கணம் கூறும் கவிஞர்,

**"புதுமைமிகும் இலக்கியத்தேன் சேர்த்தல் ஒன்றே**
**பொறுப்புள்ள எழுத்தாளர் கடமை யாகும்;**
**இதழ்சுவைத்து மதுவருந்தித் திரிவோ ரெல்லாம்**
**எழுத்தாளர் அல்லரெனும் உண்மை கண்டேன்" (ம.தே.ப.111)**

என்பதில் மது, மாது மயக்கத்தில் மயங்கித் திரிவோரெல்லாம் எழுத்தாளரேயல்லர் என்று அறிவுறுத்துகிறார். திரைப்படப் பாடல்களில் அநாகரிகப் பாடலெழுதுவோர் புகழ்பெறும் நிலைகண்டு கொதித்தெழும் கவிஞர்,

**'விலைப்பாட்டுக் கவிஞரெலாம் எழுதும் பாட்டை**
**விலைமாதும் கேட்பதற்குக் கூசி நிற்பாள்' (ம.தே.ப.157)**

என்று கொச்சைப்பாடல்களைப் பாடும் அநாகரிகப் போக்கிற்குக் கண்டனம் தெரிவிக்கிறார். பாடும் மரபறியாமல், பாட்டின் திறமும் உணராமல், இலக்கணத்தைக் கெடுத்து, பாவென்ற பேராலே பாடித் தொகுத்து, ஏட்டில் எழுதி, கவிஞரெனும் பேர் தாங்கி ஏறு நடை போடுவதைக் காணும் கவிஞர் போலிப்புலவர்களைத் தண்டிக்கக் குட்டுதற்கும் வெட்டுதற்கும் அவர் சொல்லைத் தட்டுதற்கும் ஆளில்லை என்ற தருக்காலே பாட்டுலகைப் பாழ்படுத்திப் பாடித் திரிகின்றார்' (ம.தே.ப.173) என்று உள்ளம் வெதும்புகிறார்.

கேட்டாரைப் பிணிக்க வல்லதாய், கேளாரையும் கேட்பதற்கு ஏங்க வைக்கும் தன்மையது பேச்சிற்குரிய பெருமையாகும். பேச்சாற்றல் வல்லவர்களால் பிறருடன் நெருங்கிப் பழக முடியும். விரைந்து நண்பர்களாக முடியும். பிறருள்ளத்தைக் கவரமுடியும். மேடையில் பேசும் பேச்சாளருக்குத் தகுதியும் திறமையும் வேண்டும். இன்றைக்குப் போலிப் பேச்சாளர் பெருகுவதைக் கண்ட கவிஞர்,

**"இலக்கியங்கள் பயிலாமல், இலக்க ணத்தின்**
**இயல்பொன்றும் அறியாமல், நுனிப்புல் மேய்ந்து**
**சொலக்கருதும் ஒருபொருளைச் சிந்தித் தாய்ந்து**
**சொலுமுறையாற் சொல்லாமல், முழக்க மிட்டுக்**
**கலக்கிவரும் பேச்சாளர் இற்றை நாளில்**
**கணக்கிலராய்ப் பெருகிவரல் காணு கின்றோம்;**
**இலக்கவர்க்குப் பொருள்வருவாய் ஒன்றே யன்றி**
**இலக்கியத்தின் வளர்ச்சியன்று; யாது செய்வோம்?" (ஊ.கோ.8:1)**

என்று இலக்கிய, இலக்கணம் அறியாமல் நுனிப்புல் மேய்ந்து, சொல்லக் கருதிய பொருளைச் சிந்தித்தாய்ந்து, சொல்லக்கூடிய முறையில் சொல்லத் தெரியாத போலிப் பேச்சாளர் கூட்டம் பெருகிவிட்டதைச் சாடுகின்றார்.

‘அவையில் தகாமொழியும் அருவருப்பைத் தருமொழியும் சுடுமொழியும் இழிமொழியும் நகை மொழியும் பேசும் போலிப் பேச்சாளரால் நன்மையுண்டோ? அவர்களின் பேச்சைக் கேட்பதைத் தவிர்த்திட்டால் பேச எழுவாரோ? நன்கொடை தராமல் எள்ளிவிட்டால் அவர்களுக்கு ஏது மேடை?’ (நெ.பொ.ப.53) என போலிப் பேச்சாளர் பெருகாது தடுத்திட வழியுரைக்கின்றார்.

‘கடைமுழுக்கு’ என்னும் சிறுகதையில் போலிச்சாமியாரின் கண்களைப் பாராட்டிய ஒருவனிடம் மற்றொருவன் ‘அந்த ஆசாடபூதியின் கண்ணிலே கருணையா பொழிகிறது! காதலை அல்லவா கக்குகின்றன அந்தக் கண்கள். அதோ அவள் அழகிலே ஈடுபட்டு அப்படியே சொக்கிப் பிள்ளையார்போல் உட்கார்ந்திருக்கும் இவரைப் பார்த்து இப்படியெல்லாம் உளறுகிறானே’ (எ.கா.ப.158) என்று போலிச்சாமியாரின் துறவு வாழ்வை, இரட்டை வேடம் புனைந்து ஊரை ஏமாற்றுவதை வெளிக்காட்டுகிறார்.

அரசியலிலும் போலிகள் உலவுவதைச் சுட்டுகின்ற கவிஞர் ‘அரசியல் அறிஞன்’ என்னும் பாடலில் ‘கல்விச் சிறப்பும், பேச்சில் ஈர்ப்பும் இருக்கும். ஆனால் அரசியலில் ஆளும் பொறுப்பேற்கும் போது அத்தனையும் போயொழியும்; வேண்டியவர் வேண்டாதவரென்ற வேறுபாடு பார்த்திருப்பர். வல்லவராய் வருவதால் ஏது பயன்? நல்லவராய் நாட்டுநலம் விழைபவரால்தான் மக்களுக்குப் பயன் கிட்டும். குடியென்றால் கள்ளையும் அரசென்றால் அரசமரத்தையும் நினைக்கின்ற ஆட்சியாளர் அரசுசெலுத்துதற்கு ஆகார்’ (க.மு.ப.70) என்று ‘அரசியல் போலிகள்’ என்னும் தலைப்பில் அரசியல் போலிகள் ஆட்சிக்கு வந்தால் குடிமக்களுக்கு வரும் பேராபத்தைச் சுட்டுகின்றார்.

‘மானுடத்தை உறக்கத்தினின்று எழுப்பி முன்னேற்றத் திசையில் உசுப்பிவிடுவனவே மறுமலர்ச்சி இலக்கியங்கள்’[58] என்னும் குன்றக்குடி அடிகளாரின் கூற்றிற்கு முடியரசனாரின் படைப்புகள் முற்றிலும் பொருந்துகின்றன.

**கலப்படம்:**

பொருளொன்றே குறிக்கோளாய்க் கொண்டு பொருள்களில் கலப்படம் செய்து ஏமாற்றிப் பிழைக்கும் எத்தர்களைத் தண்டிக்க வேண்டும் என்பதைத் தம் படைப்புகளின் வழி உரைக்கிறார்.

'எல்லாம் கலப்படம்' என்னும் தலைப்பிலான பாடலில் 'உண்பொருளிலும் பேசும் உண்மையிலும் கண்படும் யாவிலும் கலப்படமாய் இருந்தால் இங்கே கண்ணியம் எங்கே உருப்படும்?' என்று வினவுகின்ற கவிஞர் நெய்திடும் நூலிலும் நெய்தரும் பாலிலும் செய்தொழில் யாவிலும் கலப்படமிருப்பதைக் கண்டு வருந்துகிறார்.

**"நோய்மருந் தெல்லாங் கலப்படம் - வந்த**
**நோய்களும் எங்கே சரிப்படும்?**
**காய்கனி கூடக் கலப்படம் - காவல்**
**காத்திடுஞ் சட்டங் கலப்படம்**
**தாயகப் பேரைக் கெடுத்திடின் - மீளாத்**
**தண்டனை தந்தால் சரிப்படும்" (பா.கு.ப.176)**

என்று உயிர்காக்கும் மருந்திலும் உண்ணும் காய்கனியிலும் கலப்படம் ஆனதைக் கண்டிக்க வேண்டிய சட்டமும் கலப்படமாய் விட்டது. கலப்படத்தால் நாட்டிற்கு அவமானம் தரும் கயவர்களைத் திரும்பிவரமுடியாத அளவிற்கு மீளாச் சிறைத் தண்டனைக்கு உள்ளாக்க வேண்டும் என்று வழிகூறுகிறார்.

**பதுக்கல்:**

உலகிலுள்ள பொருள்கள் யாவையும் அனைவருக்கும் பொதுவானவை. பேராசையால் பொருள்கள் பிறருக்குக் கிடைக்கவிடாமல் தடுத்தும் பதுக்கி வைக்கும் கயமைத்தனம் ஒழியவேண்டுமென்று பாடியவர் முடியரசனார். விலைவாசியேற்றத்திற்கு பதுக்கலே வழிகாட்டி என்பதனை,

**"மின்வெட்டும் போழ்தத்து மேவாச் செயல்செய்து**
**கண்கட்டு வித்தையெனக் கள்ளத் தனம்புரிந்து**
**பண்டங்கள் யாவும் பதுக்கி மறைக்கின்ற**
**முண்டங்கள், தாங்க முடியா விலைச்சுமையே**

**நந்தலையில் ஏற்றுகின்றார்" (த.மு.ப.179)**

என்று கள்ளத்தனமாய் பொருட்களை மறைத்துவைத்து தாங்க முடியா விலைச்சுமைக்கு அடித்தட்டு மக்களைப் பலியாக்கும் கொடுமையைக் கடிந்துரைக்கிறார். நெல்லைப் பதுக்கி வைத்து வீணாக்கிய அவலத்தை நினைவுகூறும் கவிஞர் 'நெல்லின் கதை' என்னும் பாடலில்,

**"நாணயத்தைச் சேர்ப்பதற்கு நாணயத்தை விற்றுவரும்**
**வாணிகத்தார் என்றன் வளர்புகழைக் கொல்கின்றார்;**
**ஊறவைத்து நாறவைத்து-ஊரெல்லாம் எற்பழித்துக்**
**கூறவைத்த அந்தக் கொடுமைக்கோர் எல்லையுண்டா?**
**நாட்டில் நடக்கவிட நாடாமல் எங்கெங்கோ**
**போட்டுப் பதுக்குகின்றார் போலிக் கயவரெனைக்**
**கண்டகண்ட திக்கிற் கடத்திக் கொடுபோகும்**
**தொண்டர்களைக் காணுங்கால் தூவென் றுமிழீரோ?"(த.மு.ப.192)**

என்று நெல்லைப் பதுக்கிவைத்தும் கடத்தியும் கொடுமை நடத்தும் அநீதிக்கு ஓர் எல்லையுண்டா? என்று வினவுகிறார்.

**கையூட்டு:-**

காவல் நிலையத்தில், நீதிமன்றத்தில், அரசுசார் அலுவல் மன்றத்தில், அருங்கலை வளர்க்கும் சாலையில், கோவிலில் என்று கையூட்டு இல்லாத இடமேயில்லை என்னும் அளவிற்குக் கையூட்டு குமுகாயத்தில் புரையோடிக் கிடக்கின்றது.

'கையூட்டுலகம்' என்னும் பாடலில் கையூட்டால் முடியாதது எதுவுமில்லை என்று கையூட்டுக் குமுகாயம் பார்த்து எள்ளி நகையாடுகின்றார் (நெ.பொ.ப.48).

**அலுவல்களில் முறைகேடு:**

அரசு அலுவலகங்களில் பணிபுரியும் அதிகாரிகளும் ஆட்சி செய்யும் ஆட்சியாளர்களும் இணைந்து செயல்பட்டால்தான் குமுகாயம் செழிக்கும். மாறாக, இவர்களில் எவர் பிழை செய்தாலும் குமுகாயம் வளர்ச்சியின்றித் தேக்க நிலையே அடையும்.

'களவும் கற்பும்' என்னும் கவிதையில் திருட்டுப் பொருட்களில் பங்கு கேட்டும் பாவையரைக் கற்பழித்துக் கொலை செய்யும் செயல்களைச் செய்கின்ற காவல்துறையினரின்

நெறிதவறிய செயல்களை இடித்துரைத்து இந்நிலை தொடர்ந்தால் மக்கள் கூட்டம் எரிமலையாய் வெடிக்குமென்று எச்சரிக்கின்றார். (நெ.பொ.ப.40)

'மருத்துவமனையா? வருத்தும்மனையா?' என்னும் கவிதையில் 'அரசு மருத்துவமனைக்கு மருத்துவம் பார்க்கச் செல்லும் ஏழை எளியோரிடம் தேள் கொட்டுவதுபோல் வெடுக்கெனப் பேசி எரிந்து விழுவோரும் கொடுப்பதைச் சுருட்டுவோரும் படுக்கையில் கிடக்கும் நோயாளிகளைப் பாடுபடுத்துவோரும் துயர்தந்தால் ஏழைகள் எங்கு செல்வர்? விலையுயர் மருந்துகளெல்லாம் வேறெங்கோ போகும். இலைகறி காயெல்லாம் எங்கெங்கோ சமையலாகும். மருத்துவர்க்கும் தாதிமார்க்கும் கொடுப்பதைக் கொடுத்து கவனித்தால்தான் பிணிகளைத் தீர்த்துவைப்பர். அரசிடம் ஊதியமும் பெற்று, தனியாக மருந்தரில்லமும் அமைத்து மருத்துவர்கள் பணம் சேர்ப்பதிலேயே கவனம் செலுத்தி இருமுகம் காட்டினால் துவண்டவர்கள் பொதுமருத்துவமனைக்குச் செல்வதன்றி புகலிடம் வேறேது?' (நெ.பொ.ப.43) என்றெல்லாம் அரசு மருத்துவமனைகளின் அவலங்களை எடுத்துரைத்து மதுவுண்ணும் மதியர் போல் மருத்துவர் மயங்காமல் எது சரியென நினைந்தே ஏற்றதோர் பணியைச் செய்க' என்று வேண்டுகோள் விடுக்கின்றார்.

'நியாய விலைக்கடை' என்னும் கவிதையில் 'நியாயத்தைக் கடையில் விற்று, கொடுக்கின்ற பொருள்களில் அளவைக் குறைத்து மக்களை ஏய்த்து, வாங்காதோர் பெயர்களெல்லாம் வாங்கியதாய்ப் பதிந்து கள்ளத்தனமாய் விற்று ஏழைகளின் வயிற்றிலடிக்கும் நிலை மாறாதா? இழிவு நிலை தீராதா?' (நெ.பொ.பக்.44-46) என்று நியாயவிலைக்கடை அநியாயங்களை அடுக்கிக் காட்டி மக்களிடையே பெரும்புரட்சி தோன்றின் இத்துயர் பறந்து போகும் என்று மக்களுக்கு விழிப்புணர்வும் அநியாயத்தைத் தட்டிக் கேட்கும் பொறுப்புணர்வும் வேண்டுமென்றுரைக்கின்றார்.

'எது நாட்டுப் பற்று?' என்னும் கவிதையில் நாட்டுப்பற்றிற்கு விளக்கம் கூறும் கவிஞர் 'உழைத்து நாட்டை உயர்த்த முயலும் உணர்வுதான் நாட்டுப்பற்று. உரிமையைக் கற்றவர், கடமையை உதறிவிட்டால் வருபயன் ஒன்றுமில்லை, நாட்டின் வளர்ச்சியும் வற்றிப்போகும்.

உரிமையும், கடமையும் சமமாய் நின்றால்தான் நாட்டிற்கு ஏற்றம் உண்டாகும். அரசு அலுவலர்கள் இருக்கையில் இருக்கும் நேரம் குறைவு. அதிலும் பலவகை இதழ்களைப் படித்தும், அரட்டை அடித்தும் நேரத்தைப் போக்கி, இடைவேளை நேரத்திலும் சுற்றிக் கொண்டு தாமதமாய் இருக்கை வந்தும் நேரக் கொலை செய்கின்றனர். அவர்கள் தினைத்துணையேனும் நேர்மையைச் சிந்திக்க வேண்டும் பனைத்துணையளவு உயர்ந்த கோப்புகளில் படிந்துள்ள தூசியைப் பார்க்கவேண்டும். இவற்றை நினைத்து இனித் திருந்தினால் நாட்டுப்பற்று வளர்ந்திடும்' என்று அறிவுரை பகர்கின்றார். (நெ.பொ.ப.58)

வேலையைச் செய்யாமல் ஏய்ப்பவர்கள் பெருகிவிட்டால் எப்படி நாடு வாழும்? என்று வருந்துகின்ற கவிஞர்,

**“கோப்புகள் பார்க்குங் கண்கள்**
**கொழுவிய பைகள் பார்க்கும்**
**தீர்ப்புகள் எழுதுங் கைகள்**
**தினவினைச் சொறிந்து காட்டும்**
**காப்புயர் நிலையம் இங்கே**
**களவுகட் குடந்தை யாகும்**
**ஏய்ப்பவர் மிஞ்சி விட்டால்**
**எப்படி நாடு வாழும்?” (நெ.பொ.ப.59)**

என்று அரசு அலுவலகங்களில் நடக்கும் முறைகேடுகளைக் கடிந்து பாடுகின்றார்.

**திரைப்பட மோகம்:**

மக்களை வெகுவாகச் சென்றடைந்து அவர்கள் மனதில் தாக்கத்தை ஏற்படுத்துவதில் பத்திரிகைகளைப் போலத் திரைப்படத்திற்கும் பெரும்பங்கு உண்டு. கலைகளை வளர்த்து, நல்வழிப்படுத்த வேண்டிய திரைத்துறை மக்களின் சிந்தனைகளை அல்வழியில் தேய்ப்பதைக் கண்டு சீறுகிற கவிஞர் ‘கண்ணாடி மாளிகை’ என்னும் திரைப்படத்திற்குப் பாட்டெழுதிய காலத்தில் திரைத்துறையில் நடக்கும் கொடுமைகளைக் கண்டு மனம் வெறுத்து, திரைத்துறை வாய்ப்புகளை மறுத்து விட்டார்.

‘நெஞ்சத் துடிப்பு’ என்னும் பாடலில் திரைத்துறை சீரழிவை, ‘கற்போர் நெஞ்சைக் கெடுப்பதையன்றி கடுகளவு நன்மையும் தராத திரைப்படத்தின் மீது மோகம் கொள்ளத்

தேவையில்லை' (நெ.பொ.ப.14) என்று இளையோர்க்கு அறிவுரை வழங்குகிறார். படிப்புக்கு மதிப்பளிக்கும் காலமே நல்ல பண்புக்கு மதிப்பளிக்கும் காலம், நடிப்புக்கு மதிப்பளிக்கும் காலமோ இந்த நாட்டுக்கே தீங்கிழைக்கும் காலம்' (நெ.பொ.ப.29) என்று 'திரைப்படமும் மாணவரும்' என்னும் கவிதையில் நல்லறிவூட்டுகின்றார்.

'திரையரங்க வீரம்' என்னும் கவிதையில் (நெ.பொ.ப.92) திரையரங்கில் முட்டி மோதும் இளையோரின் போர்க்குணத்தைக் கண்டு உள்ளம் நொந்த கவிஞர் 'திரையுலகக் கற்பு' என்னும் கவிதையில் அகப்பொருளைப் புறப்பொருளாய் வெளிச்சமிட்டுக் காட்டி, கற்பு நெறியைக் கடைச்சரக்காக்கும் கயமையைப் பழித்துரைக்கின்றார். (நெ.பொ.ப.92)

'கலையாம்! தொழிலாம்!' என்னும் பாடலில் கலைப்பெயர் சொல்லி கெட்ட புலைத் தொழில் புரியும் மடத்தனத்தைச் சாடுகிறார். (நெ.பொ.ப.177)

'உலகம் எங்கள் கையிலே' என்னும் பாடலில் திரைத்துறை நடிகரின் கீழ்மைப் போக்கை, பெண்மைக்கு இழுக்காய் விளங்கும் சீர்கேட்டைப்பாடுகின்றார். (பா.கு.ப.179)

'மண்குதிரை' என்னும் கவிதையில் 'திரைப்படமா உன் வழிகாட்டி?' என்று வினவும் கவிஞர்

**"உருப்படி மாற்ற வழிகாட்டும் - வேண்டா**
**ஒப்பனை செய்ய வழிகாட்டும்**
**உருப்பட வாநல் வழிகாட்டும்? - பண்பை**
**ஒழித்திட வன்றோ வழிகாட்டும்!" (பா.கு.ப.181)**

என்று திரைப்படத்தை மண்குதிரையாக உருவகித்துள்ளார். மண்குதிரையை நம்பி வாழ்க்கையாற்றில் பயணிக்க முடியாது திரைப்படத்தின் மீது மோகம் கொண்டு பித்தாய்த் திரியாமல் நல்வழியில் வாழ வேண்டுமென்று அறிவுறுத்துகின்றார்.

'குமுகாயச் சீர்திருத்தத்திற்குப் பின் அரசியல் சீர்திருத்தம் வேண்டும்' (எ.கா.ப.165) என்பதில் உறுதியான நிலைப்பாடு கொண்டிருந்தார்.

அரசியலுக்கு அறிவுடையோர் அவசியம் என்பதை வலியுறுத்த ‘அரசியல் அறிஞன்’ என்னும் கவிதையில், என்று அரசியலில் மாண்புடன் ஆளுகின்ற அறிஞர் தலைமையேற்க வேண்டுமென்று வலியுறுத்துகின்றார். (க.மு.ப.69)

தேர்தலுக்கு முன்பு ஒருகட்சி, தேர்தலில் வென்றபின் வேறு கட்சி என்று கொள்கைக்காக மாறாமல் கொள்ளையடிக்கக் கட்சிமாறும், காசுக்குத் தம்மை விற்கும் கயவரால் சட்டமன்றம் மாசுக்கு உட்படுமேயன்றி மாட்சியுறாது. கொள்ளை, கொலை செய்வோரின் கூடாரமாய், தகாமொழி பேசித் தாக்குதல் நடத்தி, சிலம்பமாடி, செருப்புகள் வீசும் கூத்தரங்கமாய் விளங்குவதற்கா சட்டமன்றம்? தேர்தலில் அரசு செலவழிக்கும் பணமெல்லாம் மக்களின் வரிப்பணமன்றோ? நீதியை மதியாமல் தெருவில்விளையாடும் சிறுவர் போல நேர்மையை நினையாது தேர் விளையாடும் ஆட்சியாளரைத் தேர்ந்தெடுத்த மக்கள் வீணர்க்கு வாக்களித்ததற்காய் வெம்பும் நிலை காணுகின்றோம்’ (நெ.பொ.பக்.50-51) என்று அரசியல் அவலத்தைச்சாடுகின்றார்.

பணத்தைக் குறிக்கோளாக்கி, குணத்தைக் கொன்று வீழ்த்தி பழிகள் செய்வதென்றால் ‘வாழிய மக்களாட்சி’ என்று உள்ளம் வேதனையுற்றுக் கூறுவதில் கவிஞரின் வருத்த மிகுதி வெளிப்படுகிறது. ‘அந்தோ அரசியலே!’ என்னும் பாடலில் ‘காலையிலே ஒன்றுரைத்து, மாலையில் கட்சி கொள்கையை மாற்றி நிற்பர். ஓலையில் விழுந்த புனல் போல அங்கும் ஒட்டாமல் ஓடி, விடிந்தபின் காலையில் சொன்னதுதான் உண்மையென்று மாறி மாறிப் பேசுவர். காசுக்குப் பாய்விரிக்கும் விபச்சாரி போலவும், அரசியலில் நோய்க்கிருமி போலவும் இருப்பர். அரசியலில் வஞ்சனைகள் விளைத்து, நாட்டுணர்வு இன்றி, நன்றும் தீதும் தாம் செய்யும் செயல் நாட்டையே சாருமென்பதை நினையாமல் தின்றலையும் வாழ்விற்கே அடிமையானார் பிழைக்கும் தொழிலாகத் தொண்டின் போர்வையில் அரசியல் செய்கின்றார்’ (ம.தே.பக்.107-108) என்று அரசியல் வஞ்சகர்களைக் கடிந்துரைக்கின்றார்.

யார் போலி? யார் நல்லவர்? என்பதை மக்கள் தான் ஆய்ந்துணர வேண்டும். ‘தொண்டெனும் போர்வையில் தோன்றுவோர் பலராய் மண்டித் திரிதலின் மக்களும் மயங்கினர்’

(ம.தே.ப.109) மக்களைப் பலிகொடுக்கும் ஏமாளிக்கூட்டமாய் நினைத்துப் பாவையென ஆட்டுகின்றனா் பகட்டுக்காரா்களான சில அரசியல்வாதிகள் (ம.தே.ப.107) மக்கள் தான் விழிப்படைய வேண்டும் என்று அறிவுறுத்துகிறாா்.

மரக்கிளையில் நிறம் மாறும் ஓந்தி கண்டதும் அப்பாவி மக்களிடையே மாறி மாறி அரசியலில் நிறம் மாறும் அரசியலாரின் செய்கை (ம.தே.ப.111) நினைவுக்கு வருவதாய்க் கவிஞா் குறிப்பிடுகிறாா்.

சாதியை ஒழிப்பதாக மேடைகளில் முழங்கி மக்களை ஏமாற்றிச் சாதி அரசியலைத் தூக்கிப் பிடிக்கும் அரசில்வாதிகள் நிலையை 'நாடு உருப்படுமா?' என்னும் தலைப்பிலான கவிதையில்,

**"ஏழையா்தம் வாழ்வுக்கே இப்பிறவி கொண்டதுபோல்**
**வேளையெல்லாம் பொய்சொல்லி வேட்டை புரிபவா்கள்,**
**சாதி ஒழிப்பதெனச் சாற்றிவிட்டுத் தோ்தலுக்குத்**
**தேதி வரும்போது சாதிக்குக் காப்பளிப்போா்**
**கூடி அரசியலைக் கொண்டு நடத்துவரேல்**
**நாடிங் குருப்படுமோ நன்கு?" (ம.தே.ப.113)**

என்று இரட்டை வேடமிடும் அரசியல்வாதிகளின் உண்மை முகத்தைத் தோலுரித்துக் காட்டுகின்றாா்.

'தோ்தல் திருவிழா' என்னும் தலைப்பிலான கவிதையில் தோ்தலைத் திருவிழாவாகவும் சந்தையாகவும் உருவகிக்கும் கவிஞா் 'பழந்தமிழகத்திலிருந்த குடவோலைமுறை உரைத்த சட்டத்தை இன்றெடுத்து நோக்கினால் தோ்தலில் வேட்பாளா்கள் பலருக்குப் போட்டியிடவே தகுதியில்லை தொண்டு அறியாமல், ஆட்சிமுறையும் அறியாமல், தன் கருத்தைப் பிறா்க்குத் தெளிவாய் சொல்லவும் தெரியாமல் வேட்பாளராகி மக்களை அணுகி மாயங்கள் செய்வதெல்லாம் நகைப்பிற்கு உள்ளாக்கும். மேனி வளைந்து குழைந்து வணங்கித் துவளும். வென்றபின் நிமிரும் நடக்காதகால்கள் சேரிகளுக்கு நடந்துவரும். ஒன்றும் கொடுக்காத கைகள் கொடுத்து வரும். தோ்தலிலே வாக்காளா்கள் எல்லோருமே வேட்பாளா்க்கு வானுறையும் தெய்வங்களாவா். பாா்க்காத பேரெல்லாம் பாா்த்துக் கும்பிடுவா். வெற்றி கிடைத்ததும்

வேட்பாளர் வாக்காளப் படிக்கல்லை எத்திவிட்டு மேலுயர்வர். இப்படி விந்தைமிகும் வேடிக்கை பல தேர்தலெனும் சந்தையிலே காணும், சதிகள் விளையாடும்' (ம.தே.ப.115) என்றுரைப்பர்.

யாருக்கு வாக்களிக்க வேண்டுமென்ற முடிவு வாக்காளர் கையில் தான் இருக்கிறது. நாட்டின் எதிர்காலத்தைத் தீர்மானிக்கும் ஆற்றல் வாக்காளர்க்கே உள்ளதென்பதை உணர்ந்து நல்லோர்க்கு வாக்களிக்க வேண்டும் என்பதனை,

**"காசு பணங்காட்டிக் கைநீட்டிக் கேட்பவரை**
**வீசி எறிந்திடுக! விற்காதீர் தன்மானம்!**
**நாளைக் கொருகொள்கை பேசும் நயவஞ்சர்**
**தாளைப் பிடிப்பார்கள் தந்து கெடுக்காதீர்!**
**நாட்டைத் திருத்திடுவேன் என்று நமையேய்ப்பர்**
**வீட்டைப் புதுக்கலன்றி வேறொன்றும் தாமறியார்**
**ஆங்கவர்க்கும் வாக்கை யளிக்காதீர்! சாதிஎனும்**
**நீங்காப் பெருநோயை நேர்நிறுத்திக் கேட்பவர்க்கும்**
**கண்ணோட்டங் காட்டாதீர்! காட்டிவிடின் தன்தலைமேல்**
**மண்வாரிப் பேரிடும் மதயானை போலாவீர்" (ம.தே.ப.117)**

என்றுரைப்பர்.

50 ஆண்டுகளுக்கு முன்பு கவிஞர் உரைத்த நிலை இன்றும் மாறவில்லை நாடு இப்படி இருக்கின்றது என்று கூறுவது மட்டுமின்றி, எப்படி இருக்க வேண்டும் என்றும் கவிஞர் கூறுதல் அவர்தம் குமுகாய அக்கறையைப் புலப்படுகின்றது.

**தொகுப்புரை:**

- காலந்தோறும் இலக்கிய வகைமையில் யாப்பு வடிவம் வேறுபடுவதைப் போல உள்ளடக்கமும் மாறுபடுகின்றது. உள்ளடக்க மாறுபாட்டிற்குப் படைப்பாளர் வாழுகின்ற சமூக, அரசியல் பொருளாதாரக் காரணிகள் அடித்தளமாக அமைகின்றன.
- முடியரசனார் படைப்புகளில் இயற்கை, காதல் ஆகிய மரபுப்பாடு பொருள்களும், தமிழ்ப்பற்று, குமுகாய மேம்பாடு, தொழிலாளர் நலன், சாதி சமய வெறுப்பு, கடவுள் மறுப்பு, கல்வி போன்ற தற்காலப் பாடுபொருள்களும் தனிமனித உணர்வுகளும் சமுதாயப் பிரச்சினைகளும் பாடுபொருளாக அமைந்துள.
- முடியரசனார் வானம், ஞாயிறு, திங்கள், விண்மீன், மின்னல், மேகம், மழை, அருவி, குளம், கடல், மலை, காற்று, சோலை, வண்டு, பறவை, விலங்கு என இயற்கைக்காட்சிகள் அனைத்தையும் தம் கவிதையில் வடித்துள்ளார்.
- ஞாயிற்றைச் சான்றோர்க்கு அதிகம் ஒப்புமைப்படுத்திப் பாடியுள்ளார்.
- முடியரசனார் இயற்கையைப் பாடுமிடத்தும் அவரது குமுகாய உணர்வும் மொழிப்பற்றுமே விஞ்சி நிற்கின்றன.
- இயற்கையைத் தாயாக, கடவுளாக, அரசியாக, ஆசானாகப் பாடுவதிலிருந்து கவிஞர் இயற்கையிடத்தில் கொண்டிருந்த பற்று புலனாகிறது.
- முடியரசனாரின் படைப்புகளில் தமிழ் குறித்த உள்ளடக்கம் தனித்த இடத்தைப் பெறுகின்றது. மொழி என்னும் தளத்தில் மொழித் தொன்மை, மொழித் தூய்மை, மொழிப்பற்று, மொழி வளர்ச்சி என்னும் பகுப்புகளிலும் இனம் என்னும் தளத்தில் இனமாட்சி, இனக்காட்சி, இன மீட்சி ஆகிய பகுப்புகளிலும் நாடு என்னும் தளத்தில் நாட்டுப்பற்று, தமிழ் தேசியம் ஆகிய பகுப்புகளில் அவர்தம் படைப்புகள் அமைந்துள.
- முடியரசனாரின் கவிதை, கட்டுரை, கடிதம், சிறுகதை போன்ற படைப்புகள் அனைத்தும் பிறமொழிக் கலப்பின்றி மொழித்தூய்மையை நிலைநாட்டுவனாய் அமைந்துள.
- பிறமொழிச் சொற்களைக் கையாளும்போது தமிழ்ஒலி மரபிற்கேற்பக் கையாளுதல் வேண்டும்; இலக்கணத்தோடுதான் கவிதை எழுதப்பெறவேண்டும் போன்றவை முடியரசனாரின் கொள்கையாகும்.
- இனம் மீள மொழி வாழ வேண்டுமென்பதில் நிலைப்பாடுடைய கவிஞர் தமிழினத்தின் நாகரிகம், பண்பாடு, மானம், வீரம், செம்மாந்த வாழ்வு ஆகியவற்றை மீட்டெடுக்க வலியுறுத்துகிறார்.
- முடியரசனார் சார்ந்திருந்த திராவிட இயக்கம் தனித்தமிழ்நாடு கோரிக்கையைக் கைவிட்டபோதும் முடியரசனார் தமிழ்த் தேசியக் கொள்கையிலிருந்து பின்வாங்கவேயில்லை.

- பாரதி, பாரதிதாசனாரின் கவிதை மரபில் வந்தவரான முடியரசனார் தேசியக் கொள்கையில் முன்னிருவரிடமிருந்து மாறுபடுகிறார். பாரதியார் இந்தியத் தேசியத்தையும் பாரதிதாசன் திராவிடத் தேசியத்தையும் முடியரசன் தமிழ்த் தேசியத்தையும் வலியுறுத்தினர்.
- தலைவன்-தலைவியிடையேயுள்ள உளக் கருத்தொற்றுமையே காதலின் அடிநாதம் என்பதை வலியுறுத்தும் கவிஞர் தொல்காப்பியம் உரைக்கும் காதலின் படிநிலைகளான காட்சி, ஐயம், தெளிவு, தேறல், குறிப்பறிதல், உறுப்பு நலனுரைத்தல், நலம் பாராட்டல், குறியிடம், அம்பல், அலர், இற்செறித்தல், உடன்போக்கு, வேற்றுவரைவு, அறத்தொடுநிற்றல், வெளிப்பட வரைதல், படாமை வரைதல் போன்ற அகமரபுகளின் வழிக் கவிதைகளைப் படைத்துள்ளார்.
- ஈகம் நிறைந்த வாழ்வினளான மனைவியைத் தெய்வமாகக் கருதி மதிக்க வேண்டுமென்றும் ஆண்டுகள் கூடக்கூட மனைவியின் மீதான காதலும் வளர்பிறைபோல் வளர்ந்திட வேண்டுமென்றும் அறிவுறுத்துகிறார்.
- கவிஞரின் படைப்புகள் குமுகாயச் சீர்திருத்தத்தை முன்னிறுத்துகின்றன.
- கவிஞர் வாழ்ந்த காலத்தில் குடும்பக்கட்டுப்பாடு குறித்த விழிப்புணர்வு மிகவும் அவசியமாயிருந்தது. எனவே ‘அளவான குடும்பம்’ குறித்த விழிப்புணர்வைத் தம் படைப்புகளின் வழி வலியுறுத்துகின்றார்.
- சாதி-சமய வேற்றுமைகளால் மக்களிடையே ஒற்றுமை தளர்ந்து, வேற்றுமை வளர்வதைக் காணும் கவிஞர் குமுகாயம் மேம்பட, சாதிசமயமற்ற குமுகாயம் உருவாக வேண்டுமென்று கருதுகிறார்.
- மாணவர்கள் சரியான வழியிற் செல்லும்போது பாராட்டுவதும் தவறானவழியில் செல்ல முற்படும்போது கண்டித்துத் திருத்துவதுமாக ஒரு தந்தையின் மனப்பாங்கில் கவிஞர் தம் படைப்புகளின் வழி மாணவர்களை நெறிப்படுத்துகிறார்.
- தொழிலாளர்களுக்கு உழைப்பிற்கேற்ற ஊதியம், உரிமைவாழ்வு வேண்டுமென முழக்கமிடுகிறார்.
- ஆணும், பெண்ணும் இருவிழிகளாய்க் கருதப்பட வேண்டுமென்னும் பாலின சமத்துவக் கொள்கையில் முடியரசனார் உறுதியோடிருந்தார்.
- பெண்ணுரிமை, பெண்கல்வியை வலியுறுத்தும் கவிஞர் விதவைமறுமணத்திற்கு ஆதரவுக்குரலெழுப்புகின்றார். காப்பியம், சிறுகதைகளில் பல புரட்சிப் பெண்களைப் படைத்துள்ளார்.
- குமுகாயச் சீர்கேட்டிற்கு தனிமனித ஒழுக்கப் பற்றாக்குறையே அடிப்படைக் காரணியென்று குறிப்பிடும் கவிஞர் குமுகாயத்தில் புரையோடிக்கிடக்கும் கையூட்டும்

முறைகேடுகளும் ஒழிய மக்களுக்கு விழிப்புணர்வும், பொறுப்புணர்வும் வேண்டுமென்றுரைக்கிறார்.

- குமுகாயச் சீர்திருத்தத்திற்குப்பின் அரசியல் சீர்திருத்தம் வேண்டுமென்பது கவிஞர் பாடுபொருளின் படிநிலையாக உள்ளது.

**சான்றெண்விளக்கம்**


1. பேரா.ச.அகத்தியலிங்கம், கருத்தரங்கச் சிறப்புரை, தொல்காப்பிய இலக்கியக் கோட்பாடுகள், ப. xiii
2. க.ப.அறவாணன், தமிழ் இலக்கியச் சமூகவியல், ப.286
3. மு.வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை பெறும் இடம், ப.21
4. நற்றிணை, 62
5. புலவர் தி.குலோத்துங்கன், தித்திக்கும் தீந்தமிழ் மரபுப் பாடல், ப.85
6. மு.வரதராசன், பழந்தமிழ்இலக்கியத்தில் இயற்கை, ப.234
7. குறுந்தொகை, 351
8. மு.வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப.213
9. புறநானூறு, 272
10. அகநானூறு, 275
11. குறுந்தொகை, 162
12. பாரிமுடியரசன், கவிதைக்குப் பிறந்த மகன் கவியரசர் முடியரசன், ப.32
13. வ.சுப.மாணிக்கம், இலக்கிய விளக்கம், ப.85
14. மு.வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப.314
15. வ.சுப.மாணிக்கம், இலக்கிய விளக்கம், ப.53
16. Dr.Prema Nandhakumar, The Life & World of the tamils: past and present II, Ps. 430-431(Unfortunately many of the poets prefferred to repeat rather than move forward giving wings to their own individuality of the few who did manage to make a mark on their own.. Mention may be made of poets Like Mudiyarasan. A high seriousness and world & play mark his traditional style... As with the others.. of poets, Mudiyarasan has written plentiful Lyrics also extolling the tamil language in a variety of ways. There is almost a religious frenzy about his love of Mudiyarasan for the Language, which is set up as an icon)
17. பாரிமுடியரசன், முடியரசன் கவிதை முத்துக்கள், ப.247
18. முனைவர் சே.செந்தமிழ்ப்பாவை, சங்கப்பாடலில் மரபு மாற்றங்கள், ப.9
19. முனைவர் எல்.இராமமூர்த்தி, பாவேந்தரின் மொழிக்கருத்தியல்கள், ப.27
20. (பா.கு.ப.155; ப.216, க.மு.ப.11; ப.27; ப.63, த.மு.ப.158; ப.159, ம.தே.ப.154, தா.கா.ப.35, ஞா.தி.ப.16, ம.தே.ப.108; ப.156, ஊ.கோ.1:9, பூ.கொ.3:94, பூ.கொ.4:18, வீ.கா12:38; 83:367)
21. தொல்காப்பியம், நூற்பா 884
22. பாரிமுடியரசன், கவியரசர் முடியரசன் கவிதைகள், ப.13

23. பாரிமுடியரசன், என் தந்தை முடியரசன், ப.150
24. பாரிமுடியரசன், கவிதைக்குப் பிறந்த மகன் கவியரசன் முடியரசன், ப.78
25. பாரிமுடியரசன், முடியரசன் கவிதை முத்துக்கள், ப.150
26. பாரதியார், பாரதியார் கவிதைகள், ப.50
27. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள், ப.91
28. மேலது, ப.95
29. Sumathi Ramaswamy, Passion of Tamil Tongue: Language Devotion in Tamil India, 1891 - 1970 studies on the History of society and culture, P.11 (The 'Tamilian' - an entity whose subjectivity merges into the imagined self of Tamil)
30. பாரிமுடியரசன், கவியரசர் முடியரசன் கவிதைகள், ப.20
31. புறநானூறு, 186
32. புறநானூறு, 182
33. குறுந்தொகை, 135
34. பாரிமுடியரசன், கவிதைக்குப் பிறந்த மகன் கவியரசர் முடியரசன், ப.37
35. மேலது, ப.38
36. தொல்காப்பியம், பாயிரம்
37. இரா.மோகன், இந்திய இலக்கியச் சிற்பிகள்-முடியரசன், பக்.54-55
38. சுழல், டிசம்பர் 2013, ப.3
39. பேரா.இரா.மணிமேகலை, சங்கத்தமிழ்க்காதல், பக்.10-11
40. ந.சுப்புரெட்டியார், காலமும் கவிஞர்களும், பக்.8-9
41. பாரதியார் கவிதைகள், ப.229
42. பாரதிதாசன் கவிதைகள், ப.20
43. தொல்காப்பியம், 1066
44. மேலது, 1077
45. மேலது, 1085
46. நற்றிணை, 149
47. இறையனார் அகப்பொருள், 22
48. தொல்காப்பியம், 1086
49. இறையனார் களவியல், 35
50. வ.சுப.மாணிக்கனார், தமிழ்க்காதல், ப.182
51. மேலது, ப.244
52. பதிவுகள்-இணையத்தமிழ்இதழ் ISBN 1481-2991, (பாவாணர் மடல்கள் அறிமுகமும் ஆய்வும், தமிழநம்பி 20, மே-2011 19:01)

53. பாரி முடியரசன், முடியரசன் கவிதை முத்துக்கள், ப.246

54. பாரி முடியரசன், என் தந்தை முடியரசன், ப.155

55. தாமரை, தை 1964, ப.64

56. டாக்டர் வா.செ.குழந்தைசாமி, சமுதாயச் சிந்தனைகள், ப.164.

57. கல்லாடன், எண்ணங்களின் வண்ணங்கள், ப.208

58. குன்றக்குடி அடிகளார், சமுதாய மறுமலர்ச்சி இலக்கியங்கள், ப.11

## முடியரசனாரின் இலக்கிய உத்திகள்

படைப்பாளன் தன் படைப்பினை வாசகர்கள் உளங்கொள்ளும் வகையில் சுவைபட வெளிப்படுத்துவதற்கும் தனக்கும் வாசகனுக்குமான இலக்கியத் தொடர்பை வலுப்படுத்துவதற்கும் சில உத்திகளைக் கையாளுகின்றான். படிப்போன் இன்புறுவதற்காக மட்டுமன்றித் தன் படைப்பாக்கத்திறனை வெளிப்படுத்தவும் படைப்பின் உருவம் மற்றும் உள்ளடக்கத்தைப் பிணைக்கின்ற பாலமாகவும் உத்தியைப் பயன்படுத்துகிறான். படைப்பாளன் தன் உள்ளத்தில் எழுந்த உணர்வுகளைக் கருத்துகளாக மாற்ற உதவக்கூடிய கூறுகள் உத்திகளாக அமைகின்றன. அவ்வகையில் முடியரசனாரின் படைப்புகளில் இடம் பெற்றுள்ள இலக்கிய உத்திகளைக் காண்பது இவ்வியலின் நோக்கமாகும்.

**உத்தி - சொல்லும் பொருளும்:**

தமிழ்ச்சொல் அகராதி உத்தி என்பதற்கு, “நுட்பம், கலை பாணி, கலை நுணுக்கத் திறம், கலை நுணுக்கக்கூறு, இயல் நுட்பக்கூறு, தொழில்துறைநுட்பம், தனிச்செய்முறைத் திறம்”[1] எனும் பொருள்களைக் கூறுகிறது. இதன் வழி ஒருவர் ஒரு செயலைச் செய்கையில் பயன்படுத்துகின்ற கலைநுட்பக் கூறுகளே உத்தி என்று அறிய இயலும். தொல்காப்பியர் மரபியலில் நூலுக்குரிய 32 உத்திகளைப் பற்றி “ஒத்த காட்சி உத்திவகை விரிப்பின்”[2] என்னும் நூற்பாவில் தொகுத்துரைக்கின்றார்.

“பொதுவாக உத்தி என்பது படைப்பாளன் தான் கூறவந்த உள்ளடக்கத்தை (செய்தியை) வெளிப்படுத்தும் முறையைக் குறிப்பிடுவதாகும்.”[3]

“ஒரு கலைஞன், தன் துறையின் செவ்விய வெளியீட்டிற்குப் பயன் கொள்ளும் ஆற்றலும் ஆக்கமுறையும் உத்தியாகும்”[4] என்பர் ச.வே.சுப்பிரமணியன். “இலக்கிய ஆக்கத்தைப் புனைதற்குக் கவிஞன் கொண்ட பல நோக்குமுறைகளும் மறைந்தும் வெளிப்பட்டும் சிறுகூறிலும் முழுமையிலும் சொல்லாகவும் கருத்தாகவும் பலவாறாகப் பொருந்தி அமைவது உத்தி”[5] என்று மேலும் விளக்கம் உரைப்பர்.

உள்ளடக்கத்தைவிட உத்தியும் உருவமுமே படைப்பாளனது கவனத்தில் முதன்மையானதாக இருக்க வேண்டும் என்பதனை “ஒரு கலைஞன் தான் எச்செய்தியினை அளிக்கிறான் என்பதை விட அச்செய்தியை எவ்வாறு அளிக்கின்றான் என்பதிலேயே முதன்மையாக ஆர்வங்காட்ட வேண்டும். அவனது படைப்பாக்க உத்திகளிலும் அவன் படைக்கும் உருவத்திலுமே அவன் ஆழ்ந்த கவனம் செலுத்த வேண்டும்”[6] என்பர் இரா.தண்டாயுதம்.

“கவிதைப் படைப்புகளில் அமையும் உத்திகளைப் பொருள் நிலையில் அமைவன. புறவடிவத்தில் அமைவன என இரண்டாகப் பகுக்கலாம். இவற்றுள் புறநிலையில் அமையும் உத்திகள், கலைநுட்பம் தவழும் புறவடிவத்தினைக் கலைப் படைப்புகளுக்கு அமைத்துத்தர கவிஞனுக்குத் துணை செய்கின்றன. அது போன்றே பொருள்நிலையில் அமையும் உத்திகள் கூற விழைந்த பொருளை ஆற்றலுடன், கேட்போர் உள்ளங்களைப் பிணைக்கும் வண்ணம் வெளிக்காட்டத் துணை செய்கின்றன”[7] என்பர். சி.பாலசுப்பிரமணியம்.

மேலைச் செய்திகளின் வழி ஒரு படைப்பாளன் தன் படைப்பைக் கையாளும் முறையாக உத்தி அமைகின்றது என்பதும் படைப்பாளனின் தனித்தன்மையை, அவன் பயன்படுத்துகின்ற உத்திகள் மூலம் அறிந்து கொள்ளலாம் என்பதும் புலனாகும். இதனடிப்படையில் முடியரசனார் தம் கருத்தை வெளிப்படுத்தக் கையாண்டுள்ள உத்திகளை நடை, உவமை, உருவகம், அணி, கற்பனை, வருணனை, குறியீடு, தொன்மம், அங்கதம், பன்னூல் புலமை, மேற்கோள் காட்டுதல் போன்ற நிலைகளில் பகுத்துக்காண இயலும்.

**நடை:**

ஒரு படைப்பாளனின் தனித்தன்மையை மற்றையோரிடமிருந்து வேறுபடுத்திக் காட்டுவது ‘நடை’ ஆகும். நடையை “ஆடை உடுத்தி வந்த கருத்து, படைப்பாளனின் பண்பு நலன்களை, அறிவின் விசாலத்தை, ஆழ்ந்த சிந்தனையைப் புலப்படுத்தும் ஓர் அடையாளம்”[8] என்று உரைப்பர் ந.பிச்சமுத்து.

முடியரசனாரின் படைப்புகளில் காணலாகும் நடை நலத்தைச் செய்யுள் நடை, உரை நடை, கடித நடை, சிறுகதை நடை எனப் பகுத்துக் காண இயலும்.

**செய்யுள் நடை:**

முடியரசனாரின் செய்யுள்நடை சங்க இலக்கிய நடையை ஒத்தது. எதுகை, மோனை, இயைபு, முரண், ஒலிக்குறிப்பு, வினா-விடை, உரையாடல், இலக்கணச் சொற்கள், அடுக்குவினா, எளிய சொற்கள், அடுக்குத்தொடர் போன்ற எழில் நலங்களால் சிறந்தமைந்திருப்பது.

**எதுகை:**

முடியரசனாரின் பாடல்கள் முழுவதும் எதுகை நயம் கொண்டவையாக உள்ளன. 'அழகின் சிரிப்பு' என்னும் தலைப்பிலமைந்த பாடலில்

**"முழுந்தாளிற் கையூன்றிக் குனிந்து நின்ற**
**முன்தானை எடுத்திடையில் இறுகக் கட்டிச்**
**சுழன்றாடும் குழல்மாதர் கால்வ யிற்றுச்**
**சோற்றுக்கு நாற்றுநடும் போது தன்னால்**
**எழுந்தாடும் கையசைவில், வீட்டுக் காரன்**
**ஏர்பிடித்துக் களைத்திருப்பான் என்று சொல்லி**
**விழுந்தோடி உணவுகொண்டு வந்த பாவை**
**விளையாடி உணவூட்டும் காட்சி தன்னில்" (முடி.க.ப.37)**

**"பணிவோர்க்குக் காப்பளித்துப் பணியாரை**
**வேரறுப்பர் பண்டை எங்கள்**
**அணிசேர்க்கும் முடியரசர்; பெருவளியும்**
**அடிக்குங்கால் ஆற்றின் நாணற்**
**பணிவேற்றுக் கொண்டங்குத் தலைநிமிர்ந்த**
**பனைதென்னை மரங்கள் யாவும்**
**அணிவேரற் றடிவீழச் செய்திடுமால்;**
**ஆருக்கும் பணிதல் நன்றாம்" (முடி.க.ப.50)**

என்னும் கவிதைகளில் எதுகை நயம் நிறைந்துள்ளது.

**மோனை:**

முதலெழுத்து ஒன்றிவரத் தொடுப்பது 'மோனை' ஆகும். முடியரசனார் பல பாடல்களில் மோனை நயம் அமையப் பாடியுள்ளார்.

**“சமணரென்றும் கிறித்துமுக மதிய ரென்றும்**

**சச்சரவேன்? இறைஒன்றை உணர்க என்றார்**

**தமரென்றும் பிறரென்றும் காணார்; நல்ல**

**தமிழ்நாடும் திராவிடமும் இந்தி யாவும்**

**நமதென்பார்; உலகம்நம தென்றும் சொல்வார்;**

**நாகாக்கும் நாகரிகம் அமையப் பெற்றார்” (முடி.க.ப.138)**

என்பதில் மோனைநயம் சிறப்புற அமைந்துள்ளது.

**“தமிழெழுதிச் சோறுண்டு வாழ்ந்தி ருப்போர்**

**தனிமொழியைத் தாய்மொழியை இகழ்ந்து பேசித்**

**தமிழகத்தில் தமிழில் எழுத் தாளர் ஆவர்;**

**துப்பின்றிக் கலப்பின்றி எழுதும் முன்னோர்**

**தமிழெல்லாம் பழித்துரைக்கும் கயமை யிங்கு**

**தழைப்பதுவோ உரிமை? அது மடமை; எங்கள்**

**தமிழிகழ்வோர் நாவடக்கக் கொதித்துப் பாயும்**

**தன்மானம் உடமையன்றோ உரிமை யாகும்”**

**(க.மு.ப.115)**

என்பதில் அடிதோறும் மோனை அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

**இயைபு:**

முடியரசனாரின் பாடல்களில் ஓசைநயமிக்க இயைபுச் சொற்களை இசையோடு பாடி மகிழ்வதற்கேற்றவாறு பாடலடியின் முதல், இடை, கடைப் பகுதிகளில் அமைத்துள்ளார். ‘அரசியலும் மாணவரும்’ என்னும் தலைப்பிலான கவிதையில்,

**“அரசியலில் நூலறிவைக் கற்றுக் கொள்க**

**அதனாலே வரும்பயனைப் பெற்றுக் கொள்க**

**அரசியலில் போர்நுழைவை விட்டுச் செல்க**

**ஆன்றோரின் அறிவுரையைப் பற்றிச் செல்க**

**அரசியலைப் படிப்பதுதான் இந்த வேளை**

**அத்துறையைப் பிடிப்பதுவா உங்கள் வேலை?**

**அரசியலை உரமாக்கி வளர்தல் வேண்டும்**

**அரசியலார்க் குரமாகி அழிதல் வேண்டா” (நெ.பொ.ப.26)**

என்று அடிதோறும் முதற்சீரில் கவிஞர் அரசியல் என்னும் சொல்லை இயைபாக்கிப் பாடியுள்ளார்.

பாடலின் நடுவில் காவல் என்னும் இயைபுச்சொல்லை அமைத்து ‘அழகின் சிரிப்பில் கலைஞர்’ என்னும் தலைப்பிலான கவிதையில்,

**“பாருக்குக் கடல் காவல்; பைந்த மிழ்ப்பண்**
**பாட்டுக்கு நீகாவல்; ஆழ்ந்த ஆணி**
**வேருக்கு மண்காவல்; தமிழர் நாட்டு**
**வேலிக்கு நீகாவல்; பெருகி ஓடும்**
**நீருக்குக் கரைகாவல்; இந்த தோழர்**
**நெஞ்சுக்கு நீகாவல்; இந்த நாட்டில்**
**யாருக்கு யார்காவல் என்று மக்கள்**
**அஞ்சிவரும் இந்நாளில் நீதான் காவல்” (ம.க.கொ.ப.248)**

எனப்பாடுவர்.

**“பொறுமைஎனும் உயர்பண்பு கொண்ட வுள்ளம்**
**பொறாமைதனை எள்ளளவும் காணா வுள்ளம்**
**வறுமையினைக் காணுங்கால் இரங்கும் உள்ளம்**
**வளர்தமிழின் வாழ்வுக்கே வாழ்ந்த வுள்ளம்**
**சிறுமையினைக் காணுங்கால் சீறும் உள்ளம்**
**சினமென்னுஞ் சுடுநெருப்பைச் சேரா வுள்ளம்**
**வருபவரைக் கைகொடுத்து வளர்க்கும் உள்ளம்**
**வாழ்வெல்லாம் நலஞ் செய்தே வளர்ந்த வுள்ளம்”**

**(ஞா.தி.பக்.191-192)**

என்பதில் ஈற்றில் ‘உள்ளம்’ என்னும் சொல்லை இயைபாக்கிப் பாடியுள்ளார்.

‘பூங்கொடி’ நூலில் அளபெடைச் சொற்களை ஈற்றுச் சொற்களில் இயைபாக்கி,

**“விளிவுறுங் கோமகன் நளியிருட் புக்கதூஉம்**
**ஒளிவுடன் செலலால் ஐயம் உற்றதூஉம்**
**..............................................................................**
**கலைமகள் அவட்கொரு களங்கம் இலாததூஉம்”**

**(பூ.கொ.24:144-152)**

என்னும் பாடலடிகளில் ஈற்றில் அளபெடையை இயைபு நடையாகப் பாடியுள்ளார்.

**முரண்நடை:**

முரண் சொற்களைக் கவிஞர் தம் பாடல்கள் பலவற்றில் அமைத்துப் பாடியுள்ளார். ‘மொழியுணர்ச்சி’ என்னும் தலைப்பிலான பாடலில்,

**“தமிழ்காக்கப் போர்செய்ய உணர்வு வேண்டும்**
**தமிழ்கொன்று வாழ்கின்ற கயமை வேண்டாம்**
**தமிழ்காக்கப் போர்செய்யப் புலிகள் வேண்டும்**
**தடுமாறி ஓடிவிடும் எலிகள் வேண்டாம்**
**தமிழ்காக்கப் போர்செய்ய சிங்கம் வேண்டும்**
**தாளமிடும் ஓலிமிடும் நரிகள் வேண்டாம்**
**தமிழ்காக்கப் போர்செய்ய மானம் வேண்டும்**
**தாலமுத்து நடராசன் துணிவு வேண்டும்” (முடி.க.ப.121)**

என்று ‘வேண்டும், வேண்டாம்’ என்னும் முரண் சொற்களை அமைத்துப் பாடியுள்ளார்.

‘பாரதி - வீரன்’ என்னும் தலைப்பிலமைந்த கவிதையில்,

**“பொலிவுற்ற வீட்டுமொழி கல்லார் தம்மைப்**
**பொய்ம்மொழிகள் உரைப்பவரைப் போபோ என்று**
**புலியேற்றைப் போல்மொழிந்து வீரங் காட்டிப்**
**புத்துலகை வாவாஎன் றழைக்கும் வேந்தன்” (க.மு.ப.87)**

என்னும் பாடலடிகளில் போபோ, வாவாவென்னும் முரண் அடுக்குச் சொற்றொடர்களை அமைத்துப் பாடியுள்ளார்.

**ஒலிக்குறிப்புச் சொற்கள்**:

முடியரசனாரின் பாடல்கள் பலவற்றில் ஒலிக்குறிப்புச் சொற்களைப் பரவலாகக் காணமுடிகின்றது. ‘பாவேந்தர் வழங்கிய கொடை’ என்னும் தலைப்பிலான பாடலில் வேற்றுமொழிப் பாடல்களைக் கொண்டாடி தமிழ்மொழிப் பாடல்களைப் புறம்தள்ளும் தமிழர் நிலையைக் கூறுமிடத்து,

**“தமிழ்நாட்டு மாந்தரெனும் நாமும் சேர்ந்து**
**ததிங்கிணத்தோம் போடுகின்றோம் மானம் கெட்டு” (த.மு.ப.210)**

என்று தாளமிட்டு வரவேற்பதை ‘ததிங்கிணத்தோம்’ என்னும் ஒலிக்குறிப்புச் சொல் கொண்டு விளக்குகின்றார்.

‘பாரதிபொழிந்த மழை’ என்னும் பாடலில் ‘தீந்திமிதீம் என முழங்கிப் பெய்தான்’ (த.மு.ப.213) எனப் பாரதியின் கவிதை மழையை ‘தீந்திமிதீம்’ என்னும் ஒலிக்குறிப்பில் சுட்டுகின்றார்.

மேலும், ‘ஓ!ஓ! (பா.கு.ப.202), ஐயாவோ! (முடி.க.ப.97), அப்பப்பா (பு.வி.செ.ப.111), அடஓ (பூ.கொ.5:3), அடடாஓ! (க.மு.ப.63), ஐயாவோ (முடி.க.ப.97), ஐயஓ (ஞா.தி.ப.162), தோம்தோம், (தா.கா.ப.42), அம்மஓ, (இ.வ.ப.303), அச்சச்சோ (முடி.க.ப.71), அம்மாவோ (ம.க.கொ.ப.257), அப்பப்ப (பு.வி.செ.ப.111), தடபுடா (பு.விசெ.ப.191), அடடா (தா.கா.ப.89)’ என்பன போன்ற ஒலிக்குறிப்புச் சொற்களைத் தம் பாடல்கள் பலவற்றில் கையாண்டுள்ளார்.

**வினா-விடை நடை:**

வினா தொடுத்து விடைபகரும் நடையைக் கவிஞர் தம் பாடல்களில் அமைத்துள்ளார். ‘தமிழ் வாழ்வு’ என்னும் தலைப்பிலமைந்த கவிதையில்,

**“உயிர் பெரிதா? உன் மானம் பெரிதா? என்றால்**
**உயிர்சிறிது மானந்தான் பெரிதே என்பான்**
**வயிறுவளர்க் குந்தொழிலால் உயிரைப் பேணி**
**வாழ்வதுவா தமிழ்வாழ்வு? மனுவின் வாழ்வு**
**தன்னினத்தை மாற்றார்க்குக் காட்டிக் காலைத்**
**தாங்குவதோ தமிழ்வாழ்வு? ஈன வாழ்வு” (க.மு.ப.4)**

என்று வினா-விடை நடையில் பாடலமைத்துள்ளார்.

அடுக்கு வினா அமைப்பில் ‘வாழ்வுப் பாதையில் பக்தி’ என்னும் தலைப்பில் அமைந்த பாடலில்,

**“கையூட்டுத் தருவதுவா கடவுள் பக்தி?**
**காசுபணம் தந்ததனால் பங்குக் காக**
**நெய்யூற்றும் விளக்கொன்று தரலா பக்தி?**
**நினைந்தழுங்கும் காசுபண வெறியா பக்தி?**
**பையூட்டம் பெறுவதற்குக் கடவுள் முன்னே**
**பத்துலட்சம் பத்துலட்சம் எனலா பக்தி?**
**பொய்யூட்டும் வாணிகத்தைக் கோவி லுக்குள்**

**புகுத்துவதும் ஏய்ப்பதுமா நல்ல பக்தி?" (ம.தே.ப.160)**

என்று அடுக்கடுக்காய் வினாத் தொடுக்கின்றார்.

**உரையாடல் நடை:**

கவிஞரின் பாடல்களில் நாடகப் பாங்கிலான உரையாடல் நடையும் அமையப் பெற்றுள்ளது. 'காதல் நெஞ்சம்' என்னும் தலைப்பிலமைந்த கவிதையில் தலைவன் தலைவி உரையாடலும் (முடி.க.ப.69) 'புதுமைப்பெண்' கவிதையில் தலைவி தோழி உரையாடலும் (முடி.க.ப.75) அமைந்துள்ளன.

**இலக்கணச் சொற்கள்:**

கவிஞர் தமிழாசிரியர் என்பதால் ஆங்காங்கே இலக்கணச் சொற்களைப் பாடலுள் பொதிந்து நயமுடன் இயற்றியுள்ளார். 'வான்மழையே வா!' என்னும் பாடலில்,

**"நெடிலடியால் நீநடக்க வேண்டு கில்லோம்**
**நிலஞ்சிரிக்க அளவடியால் நடந்தாற் போதும்;**
**அடிகுறையுஞ் சிந்தடியால் கால்கு றைந்த**
**குறளடியால் அடிபிறழ ஊர்ந்து வந்தால்**

**.................................................................................................**

**ஏருழவன் பாட்டுக்குப் பொழிப்பு மோனை**
**இணைமோனை யாகி அணி கூட்டி நிற்பாய்!**
**பாருழல முரண்டொடையாய் மாறி நின்றாய்!**
**பயன்முழுதும் செந்தொடையாய் மாறிற் றம்மா!**
**காருனது மனத்தியைபுத் தொடைபொ ருந்தக்**
**கருணைமழை பொழிந்தருள்வாய் உலகம் உய்ய!**
**மயங்கிசையும் தாழிசையும் கேளா வண்ணம்**
**மழையோசை கேட்கட்டும்; செய்யுள் எல்லாம்**
**பயன்கெழுமி வளங்கொழிக்கத் துள்ளல் ஓசை**
**பரவட்டும் வனப்புமிகும் இல்ல மெல்லாம்**
**வயங்கிழையார் வளையோசை பொங்கப் பொங்கல்**
**வழங்கட்டும்; புறநடையில் மாந்தர் செல்லா**
**தியங்கட்டும்; ஒழுகிசைவான் வழங்க எங்கும்**
**இன்பமெலாம் பொங்கட்டும், மழையே வாவா"**

**(நெ.பூ.பக்.242-243)**

என்னும் பாடலடிகளில் யாப்பிலக்கணச் சொற்களைப் பொருள் நயத்துடன் கவிஞர் அமைத்துப் பாடியுள்ளார்.

'என் காதலி' என்னும் தலைப்பிலான கவிதையை

**"எழுத்தென்னும் மலரெடுப்பாள்**
**எழிலாகத் தொடைமுடிப்பாள்**
**கழுத்தில்அசை படநடப்பாள்**
**காலடியில் சீர்படைப்பாள்**
**தலைமயங்கச் சுவை கொடுப்பாள்**
**தளையுண்டு தவங்கிடப்பாள்" (பா.கு.ப.195)**

என்று யாப்பின் உறுப்புகளான எழுத்து, அசை, சீர், தளை என்னும் இலக்கணச் சொற்களைக் கொண்டு பாடுவர்.

நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை ஆகிய தொல்காப்பியம் குறிப்பிடும் எண்வகை மெய்ப்பாடுகளை 'அவளொரு காவியம்' (பா.கு.ப.196) 'போலிக்குடும்பம்' (ம.தே.ப.52) 'சுவையோசுவை' என்பன போன்ற (வ.கோ.ப.35) பாடல்களில் அடுக்கிப் பாடியுள்ளார்.

'வள்ளுவர் இன்று வந்தால்..?' என்னும் தலைப்பிலான பாடலில் உயர்திணை, அ∴றிணை, முற்று, எச்சம், வேற்றுமை, பண்புத்தொகை, அன்மொழித்தொகை, வெண்பா, அகவல், வஞ்சி, கலி முதலான சொற்களை அடுக்கிப் பாடல் இயற்றியுள்ளார். (வ.கோ.ப.59)

**பேச்சு வழக்கு:**

முடியரசனார் மரபுக்கவிதை படைத்த போதிலும் பாமரமக்கள் பேசும் சொற்களை

அஞ்சாறு (நெ.பூ.ப.252), புத்து (முடி.க.ப.172), நாதி (பு.வி.செ.ப.122), துட்டு (முடி.க.ப.113), குந்தும் (பா.கு.ப.123), சும்மா (ம.க.கொ.ப.215), பைய (ஊ.கோ.17:13), காக்கைபிடித்து (முடி.க.ப.120), கோட்டைவிட்டான் (தா.கா.ப.65), மோப்பம் பிடிப்போர் (ஞா.தி.ப.162), நாலுபக்கம் (பு.வி.செ.ப.122), நாலுவகை (பு.வி.செ.ப.131) சூடுசுரணை (பு.வி.செ.ப.184) என்று எளிமை கருதி தம் கவிதைகளில் எடுத்தாண்டுள்ளார்.

**அடுக்குத்தொடர்:**

முடியரசனார் பாடல்களில் பலவிடங்களில் அடுக்குத்தொடர்நடையைக் காணமுடிகின்றது.

**“எழுக எழுக’என் றெழுச்சிகள் கூறித்**

**தொழுக தொழுக தூய்தமிழ் அணங்கை**

**நாளைய உலகை நடத்தும் பொறுப்பு**

**காளையர் நமது கடமை என்று ரைத்துத்**

**தட்டித் தட்டி எழுப்பிய தலைவர்**

**சுட்டிச் சுட்டிச் சொன்னவை பலப்பல” (பு.வி.செ.ப.189)**

என்னும் பாடலடிகளில் எழுக எழுக, தொழுக தொழுக, தட்டித் தட்டி, சுட்டிச் சுட்டி, பலப்பல என்னும்அடுக்குத் தொடர்களை அடுக்கிப் பாடியுள்ளார்

**“தீயுமடா! தீயுமடா! தீப்பகைவர் தற்செருக்கு;**

**நீயுமெழு! நீயுமெழு! நேர்நின்று போர்தொடுப்பாய்” (க.மு.ப.122)**

என்னும் பாடலடிகளில் அடுக்குத் தொடர்கள் பயின்று வந்துள்ளன. இவ் அடுக்குத் தொடர்கள் தலைவர்கள் மற்றும் பாரதி பற்றிப் பாடிய பாடல்களில் பெரிதும் இடம்பெற்றுள்ளன.

**உரை நடைத்திறம்:**

கவிஞரின் உரைநடை நூல்களிலும் கவித்திறம் வெளிப்படும் வகையில் உரைநடை அமைந்துள்ளது. ‘எப்படி வளரும் தமிழ்?’ என்னும் தலைப்பிலான கட்டுரையில் ‘எஞ்சியோரே தமிழைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள்; அவருட் பலர் கல்லாதார்; பலர் தமிழ் தமக்கு உரியதென எண்ணாதார்; கற்றறிந்த பல்கலைக்கழகப் பேராசிரியர் சிலர், தமிழிற் பிறமொழி கலந்துதான் பேசுதல் வேண்டும், எழுதுதல் வேண்டும் என வரிந்துகட்டிக்கொண்டு நிற்கும் நண்ணாதார்’ (எ.வ.த.ப.10) என்றுபதில் கல்லாதார், எண்ணாதார், நண்ணாதார் என்று உரை நடையிலும் கவிநயத்துடன் எழுதியுள்ளார்.

‘கவிதை பிறந்த கதை’ என்னும் கட்டுரையில் ‘வேதனைப்படவைத்துப் பிறந்த கவிதைக்குழந்தைகள் மிகச் சிலவே, எளிதிற் பிறந்த குழந்தைகள் பலவாம். எனினும் ‘இடுப்புவலி’ இல்லாமலா போகும்’ (எ.வ.த.ப.32) என்று தன் கவிதைகளுக்குப் பின்புலத்திலிருக்கும் துயரை ‘இடுப்புவலி’ என்னும் குறியீட்டைக் கொண்டு நயமுடன் விளக்குகிறார்.

**சிறுகதை நடை:**

முடியரசனார் எழுதியுள்ள சிறுகதை நூல் ‘எக்கோவின் காதல்’ என்பதாகும். இந்நூல் பதினொரு சிறுகதைகளை உள்ளடக்கியது. கவிஞர் முதன் முதலாய் எழுதி ‘அழகு’ மாத இதழில் வெளிவந்த ‘அணைந்த விளக்கு’ என்னும் சிறுகதையும் ‘அழிந்து விடுமோ’ என்னும் சிறுகதையும் தற்கூற்று அமைப்பில் அமைந்துள.

‘எக்கோவின் காதல்’ ‘காக்கையின் கடிதங்கள்’ ஆகிய சிறுகதைகளில் கதையை நகர்த்திச் செல்லும் பாத்திரமாகக் கடிதங்கள் உள்ளன.

கவிஞரின் சிறுகதையில் கவிநயம் மிளிர்கின்ற இடங்களும் ஆங்காங்கே உண்டு. ‘எக்கோவின் காதல்’ என்னும் சிறுகதையில் எழுத்தாளர் எக்கோவின் எழுத்தாற்றலைப் பாராட்டும் மல்லிகா ‘உங்கள் பேனாவிலிருந்து வரும் ஒவ்வொரு மைத்துளியும் உண்டாக்கும் எழுத்து ஒவ்வொன்றும் முதலாளித்துவத்தைச் சிதறடிக்கும் அணுகுண்டு! உங்கள் பேனாமுனை வைதீகத்தின் மார்பைப் பிளந்தெறியும் கூரிய ஈட்டிமுனை’ (எ.கா.ப.112) என்றும்,

‘எக்கோவின் மனம் இளகிவிட்டது. தலையைச் சிறிது அசைத்தான். ‘ம்ம், சரி’ என்று பெருமூச்சு விட்டான். அந்தமூச்சு அவளை ஏற்றுக்கொண்டது. அருகில் சென்றாள். கொடி, கொழுகொம்பில் தாவிப் படர்ந்தது. கற்பனைக் குளத்தில் காதற்கொடியிலே பூத்து மலர்ந்து இரண்டு பூக்கள் ஆனார்கள். மல்லிகை மணக்கத் தொடங்கி விட்டாள்’ (எ.கா.ப.227) என்றும் கவிநயத்துடன் உரைநடையை அமைத்துள்ளார்.

**முடியரசனார் படைப்புகளில் உவமை:**

கவிஞர் கூறக்கருதிய பொருளைப் புலப்படுத்துவதற்கு முதன்மையாகப் பயன்படுவது உவமையாகும். பண்டைக்கால இலக்கியம் முதல் தற்கால இலக்கியம் வரை பொருளின் நயமுணர்த்துவது உவமையேயாகும்.

“இயல்பாயமைந்த கவிஞனது ஒப்புணர்வின் சீரார்ந்த தன்மையே உவமை”[9] என்பர் வை.பாலசுப்பிரமணியன். “உவமை ஒரு மொழியின் பல்வேறு கூறுகளில் ஒன்றாயினும் மொழியின் அமைப்பிற்கே அடிப்படையாய் விளங்குகிறது. எனவே, மொழி தோன்றிய காலத்திலேயே உவமையும் தோன்றிவிட்டது”[10] என்பர் அர.சிங்காரவடிவேலன்.

தொல்காப்பியர் ‘உவமையியல்’ என்ற தலைப்பில் உவமை குறித்து ஓரியல் அமைத்திருப்பது இலக்கியத்தில் உவமை பெறும் இடத்தைப் புலப்படுத்தும். மரபு போற்றும் கொள்கையுடைய முடியரசனார், அவர்தம் படைப்புகளில் கையாண்டுள்ள உவமைகளைத் தொல்காப்பிய நெறியில் ஆராய இயலும்.

**வினையுவமை:**

கவிஞர்களது கவித்திறன் அவர்கள் கையாளும் உவமைகளால் உயர்வு பெறுகிறது. முடியரசனார் தம் படைப்புகளில் மிக அரிய, புதிய பல வினை உவமைகளை 309 இடங்களில் கையாண்டுள்ளார்.[11]

மலர்தோறும் சென்று தேனை உறிஞ்சிச் செல்லும் தும்பிக்குக் கடன்பட்டவர்களிடம் வட்டி கேட்பதற்கு கடைதோறும் புகுந்துவரும் கணக்கனை உவமையாகக் காட்டுகிறார் (முடி.க.ப.44). கடன் கொடுத்த கடைகள் தோறும் வட்டி வசூலிக்கின்ற கணக்கரிடம் நடுத்தெருவில் அவமானத்தில் கூனிக்குறுகிக் கெஞ்சுகின்ற கடனாளிகளின் நிலை கவிஞரின் மனதில் ஆழப்பதிந்துள்ளது. எனவே தான் இயற்கையை வருணித்துப் பாடுமிடத்தில் கூட தும்பிக்குக் கணக்கரை உவமையாகச் சுட்டுகின்றார்.

மைசூர் பிருந்தாவனத்தின் நீரூற்றைக் கண்ட கவிஞர் ஒரு புறம் தண்ணீர்த் தொட்டியில் தண்ணீர் தேங்கிக் கிடந்ததைக் குற்றம் செய்தோர் கொடுஞ்சிறைக்குள் இருத்தல் போலச் சிறைபட்டுக்கிடக்கிறது என்று உவமை காண்கிறார். மற்றொருபுறம் இருபுறத்திலிருந்து வருநீர் கூடுவது, பிரிந்தவர் கூடுகின்ற தன்மையைப் போலவும் அணி அணியாக எதிரெதிர் நின்று நீரூற்று மோதுவது இருபுலப் பகைவர் எதிரெதிர் நின்று போரிட்டு வீழும் தன்மையைப் போலவும் வேறொரு இடத்தில் பெரிய நீரூற்றைச் சுற்றிச் சிறிய நீரூற்றுகள் சுற்றி நின்று பொழிவது ஐம்பெருங்குழுவும் எண்பேராயமும் புடைசூழத் தனி வீற்றிருக்கும் மன்னன் போலவும் இருப்பதாகவும் (முடி.க.ப.65) உவமிப்பர். இவ்உவமைகள் மனக்கண் முன் அக்காட்சிகளை அழகுறக் காட்டுகின்றன.

மேகங்கள் சூழ்ந்து நிலவு அழகிழந்து இருப்பதை ஆரியத்தால் தன் புகழ் இழந்த தமிழரோடும் மேகத்தைப் பிளந்து எழுகின்ற நிலவை ‘வேற்றினத்தார் நாடாள வீணன்

அல்லேன்; வேலெடுத்துப் போர் தொடுப்பேன்; வெற்றி காண்பேன்; சீரழிப்பேன்’ எனக் கிளம்பும் வீரன் போலவும் காட்சியளிப்பதாகக் கவிஞர் கூறும் உவமைகள் (முடி.க.ப.67) இயற்கையின்பம் காணும் வேளையிலும் கவிஞரின் உள்ளத்தில் மொழியுணர்ச்சி மேலோங்கியுள்ளதை உணர்த்தும்.

நன்றியுணர்விருந்தும் எச்சிலுணவு பெறத் தன்னினத்தைப் பகைக்கும் நாயைப் போல பதவியுயர்வு பெறுவதற்காகத் தன்னினத்தைக் கொன்றொழிக்கும் கீழ்மைக் குணம் வேண்டாம் (க.மு.ப.23) என அறிவுறுத்துகிறார். திரைப்படக் காதல் காட்சியை ‘மற்போர்கள் செய்வதுபோல் காதற் காட்சி’ (நெ.பொ.ப.14) என்றும் அரசியலில் கொள்கைப் பிடிப்பு இல்லாதவர்களைச் சுட்டுமிடத்து ‘ஓலையில் விழுந்த புனல்போல அங்கும் ஒட்டாமல் ஓடிடுவார், அரசியல் கேடு செய்ய நோய் நுண்மம் (நோய்க்கிருமி) படர்ந்ததுபோல் படர்ந்துவிட்டார்’ (ம.தே.ப.107) எனவும் உவமைகளின் மூலம் பகடி செய்கின்றார்.

‘மூத்தோர் சொல்லும் முதுநெல்லிக்கனியும் முதலில் கசக்கும்; பிறகு இனிக்கும்’ என்பது கிராமத்துப் பழமொழி. அறியாமைப் பிணி அகற்றுவதற்காகப் பெரியோர் நல்லுரை கூறுதல் கேட்டு சிறியோர் மருளுவர் சீறுவர்.இத்தன்மையைக் கவிஞர்,

**“பிணியுறு குழவியின் பெருந்துயர் கண்டு**
**தணிவறு காதல் தாய்மனம் உருகிப்**
**பிணியற மருந்துகள் பெட்புடன் ஈய**
**அறியாக் குழவி அலறுதல் போல” (பூ.கொ.12:80-83)**

என்று உரைப்பர். சிறியோர் சீறுவர் என்பதற்காக பெரியோர் நல்வழிப்படுத்தாமல் ஒதுங்கி விடுவது தவறு, ‘சேய்நலங் கருதிய தாய் மருந்துணல் போல்’ (பூ.கொ.12:89). உலகம் நலம் பெறுவதற்கு உறுதுயர் வரினும் விலகாது, அதனைப் பெரியோர் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று வேண்டுகோள் விடுப்பர்.

**பயன் உவமை:**

முடியரசனார் படைப்புகளில் 123 இடங்களில் பயனுவமைகள் பயின்று வந்துள்ளன.[12] ஆறு என்னும் தலைப்பிலான கவிதையில்,

**“கலைமானே! மறைவதன் முன் மக்கள் வாழ்வைக்**

**காக்கின்ற ஆற்றைப்போல் கடமை செய்க!" (முடி.க.ப.55)**

எனப்பாடுவர். இதில் மன்னுயிர்க்கு வளம் சுரந்து பயனளிக்கும் ஆற்றைப்போல் கடமைசெய்ய வேண்டுமென்று அறிவுறுத்துகிறார்.

தன் காதலியைப் பற்றி 'என்றன் வாழ்வுக் கச்சாணி அனையவளே!' (முடி.க.ப.74) 'கண்ணின் இமைபோலக் காப்பவளே' (முடி.க.ப.76) என்றும் பயனுவமைகளைக் கையாண்டுள்ளார்.

மேகம் போல் வரையாது வழங்கும் வள்ளலென்று கூறுவது மரபு. ஆனால் கவிஞர் வள்ளலைப் போன்று வானம் பொழிகின்றது என்கிறார்.

**"வான வெளியரசே! வள்ளல் பெருமனம் போல்**
**தானம் பொழிகின்ற தண்முகில்" (முடி.க.ப.95)**
**"பழத்தின் சுவை போல் கவிதை" (நெ.பூ.ப.265)**

என்னும் பயன்உவமைகள் தொல்காப்பியர் குறிப்பிடும் "பொருளே உவமம் செய்தனர் மொழியினும் மருளறு சிறப்பின் அஃது உவமமாகும்"[13] என்னும் இலக்கணப்படி அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

கவிஞர் உறவினர்களை வரவேற்று விருந்து உபசரித்த நிகழ்வை 'உறவினர்' என்னும் தலைப்பிலமைந்த பாடலில்,

**"முப்பொழுதும் திருமணத்துக் காலம் போல**
**மொய்த்திருந்து விருந்துண்பார் ஒலியே கேட்கும்;**
**ஒப்புரவு பண்புணர்ந்தேன் உவந்து நிற்பேன்;**
**உறவினர்க்கு நப்போல நானிருந்தேன்" (க.மு.ப.104)**

என்று உவமைப்படுத்துவர்.

நாட்டில் வாழும் தலைவர்களை,

**"வெம்மை மிகும் பாலையைப் போல் தலைவ ருண்டு**
**விளைவறியா நெய்தலைப்போல் தலைவ ருண்டு**
**செம்மறிமேய் முல்லையைப் போல் தலைவ ருண்டு**
**சேர்விலங்கு குறிஞ்சியைப் போல் தலைவ ருண்டு**
**கொம்மையுறும் உழுபடையால் பிளந்த போதும்**

**கொடுமைகண்டு கலங்காமல் பயனே நல்கும்**
**நன்மருத நிலம்போல் உணர்வு தந்து**
**நமைஎல்லாம் காக்கின்ற தலைவர் ஐயா" (ஞா.தி.ப.127)**

என்று அவர்தம் பண்புகளுக்கேற்ப உவமிப்பர்.

'பாரதியார்' என்னும் தலைப்பிலமைந்த கவிதையில் இலை, காய், கனி, பூ, பட்டை, தண்டு, கிழங்கு எனத் தனது அனைத்து உறுப்புகளாலும் பயன் நல்கும் வாழை மரம் போன்று பாரதியின் பாடல்கள் அனைத்தும் பயன் நல்குமென்று பாரதியின் பாடலை வாழைமரத்தோடு உவமிக்கின்றார். (க.மு.ப.121)

பண்டிதமணி கதிரேசனார் நடத்திய விழாவின் பெருமையைக் கவிஞர் குறிப்பிடும் பொழுது 'வளர் பயிர்க்கு மழை போல' (ஊ.கோ.3:25) என்றும் பண்டிதமணி பணியாற்ற சபை கிடைத்ததற்கு 'உழவனுக்கு வயலொன்று வாய்த்ததைப் போல்' (ஊ.கோ.3:21) என்றும் உவமை கூறுகின்றார்.

**மெய் உவமை:**

முடியரசனார் தம் படைப்புகளில் 169 இடங்களில் மெய் உவமைகளைக் கையாண்டுள்ளார்.[14]

**"கால் முளைத்த தாமரையின் மொக்குள் போலக்**
**காட்சிதரும் குஞ்சுகள்தம் வாயில் கோழி**
**வேல்மூக்கால் அன்புகலந் திரையை ஊட்டும்" (முடி.க.ப.38)**

என்று கோழிக்குஞ்சுகளின் தோற்றத்தை தாமரைக்குக் கால் முளைத்தது போல் காட்சி தருவதாகக் குறிப்பிடுகிறார்.

பிறை நிலாவை அகத்தியின் குவிபூத்தோற்றத்திற்கும் (முடி.க.ப.73) இடியாப்பத்தைச் சிக்கலான நூலுக்கும் (கா.பா.ப.49) வள்ளல் சுப்பிரமணியனார் பொன்னாடை போர்த்தியிருப்பதை மேகங்கள் போர்த்த பசுமையான மலைக்கும் (க.மு.ப.72) உவமிக்கின்றார்.

தாமரை மலரின் தோற்றத்தை,

**"வாய் திறந்த கிண்ணமென**
**எண்ணும் படிவிரிந் தேந்தியுள தாமரை" (தி.மு.ப.167)**

என்றும் உவமிப்பர்.

'தேர்தல் திருவிழா' என்னும் கவிதையில் ஊன் உப்புக்கண்டத்திற்கு இந்தியெழுத்தை உவமிக்கின்றார். (ம.தே.ப.116)

விண்மீன்கூட்டத்தை, 'வானப் பள்ளியில் மாணவக் குழுவெனவும்' (பூ.கொ.22:41) தென்றல் காற்றில் அசையும் திரைச் சீலையை 'சேலிருக்கும் புனலலைகள் நெளிதல் போல' (வீ.கா.40:166) என்றும் உவமை கூறுகின்றார்.

**உருஉவமை**:

முடியரசனார் 23 இடங்களில் உருஉவமைகளைக் கையாண்டுள்ளார்.[15] 'சுதமதி' என்னும் குறுங்காப்பியத்தில் மாலை நேர வானத்தைப் பொன்னின் நிறத்தோடு உவமிக்கிறார். (முடி.க.ப.33)

'ஆறு' என்னும் கவிதையில் ஆற்றங்கரையில் யானைப்பாகன் யானையைக் குளிப்பாட்டும் காட்சியை, **'கருமுகில்வந் தமர்ந்ததுபோற் கிடந்த யானை' (முடி.க.ப.56)** என்று யானையின் நிறத்திற்கு கருமுகிலின் நிறத்தை உவமைப்படுத்துகின்றார். வானிற்கு மட்டுமன்றிக் கடலின் நீலநிறத்திற்கு,

**"நீலநிறப் பட்டாடை விரிப்பைப் போலும்**
**நெடுங்கடலாம் எழிற்பாயல்" (வீ.கா.14:49)**

என்று உவமித்துப் பாடுகின்றார்.

**அடுக்கு உவமை:**

ஒரே பாடலில் அடுத்தடுத்துத் தொடர்ச்சியாக உவமைகள் அடுக்கி வருவதை 'அடுக்குவமை' என்றழைப்பர். 'இறப்பே வா' என்னும் தலைப்பிலான கவிதையில் பொன், புழு, நோய், பாம்பு, போன்ற உவமைகளை அடுக்கிப் பாடியுள்ளார். (முடி.க.ப.169)

தன் மனைவியிடம் திரைப்படம் காணச் செல்லலாமென்று கவிஞருரைக்க அவர் விரைந்து வந்த காட்சியை,

**"சொல்லிமுடிக்குமுனம் துள்ளிக் குதித்தெழுந்த**
**அல்லிக்கொடிபோல் அசைந்தாடி உட்புகுந்து**
**செப்புச்சிலைபோல் ஒப்பனைகள் செய்துவந்தாள்" (நெ.பூ.ப.253)**

என்று அல்லிக்கொடி, செப்புச்சிலை என அடுக்குவமைகளைக் கையாளுகின்றார். ‘புத்துலகச் சிற்பி’ என்னும் கவிதையில் ஆரியர் வருகைக்குப் பின்னர் தமிழ்நாடு அடைந்த வீழ்ச்சியை,

**“புகைபடிந்த ஓவியம் போல் சுவர்க ளெல்லாம்**
**புழுதியடை மாளிகைபோல் கருமை கொண்ட**
**முகில்படர்ந்த முழுமதிபோல் அழுக்க டர்ந்து**
**மூடியழூர் பளிங்கினைப்போல் மண்ணுக் குள்ளே**
**புகவிழுந்த பொற்சிலைபோல் பனிப டிந்த**
**பொன்மலர்ப்பூஞ் சோலையைப்போல் தமிழர் நாடு**
**தகவிழந்து பொலிவுதரும் அழகி ழந்து**
**தகதகக்கும் ஒளியிழந்து நின்ற தந்தோ!” (ஞா.தி.ப.123)**

என்று அடுக்கி உவமிப்பர்.

**உருவகம்:-**

“அழகுகளில் அழகு உருவகத்தை நயமாக ஆள்வதே. அது பயிற்சியால் வருவதன்று, மேதையின் அடையாளங்களுள் ஒன்று அது”[16] என்றார் அரிஸ்டாட்டில். “தன் கருத்துக்கு விளக்கம் தேடிக் கவிஞன் செய்த முயற்சிகளின் பயனே உருவகம்”[17] என்பர் பேரா. அ.ச.ஞானசம்பந்தன்.

**“உவமையும் பொருளும் வேற்றுமை யொழிவித்து**
**ஒன்றென மாட்டின.·. துருவக மாகும்”[18]**

என்று உருவகத்திற்கு விளக்கம் கூறுகிறது தண்டியலங்காரம்.

முடியரசனார் படைப்புகளில் காணலாகும் உருவகங்களைத் தொகையுருவகம், விரியுருவகம், இயைபு உருவகம், முற்று உருவகம் என வகைப்படுத்திக் காண இயலும்.

**தொகை உருவகம்:**

உவமை, பொருள் ஆகியவற்றிற்கிடையேயுள்ள ஒற்றுமையை விளக்குவதாக அமைந்து ஆகிய, ஆக, என்னும் என்பன போன்றவை மறைந்து நிற்பது தொகையுருவகமாகும்.

‘சுதமதி’ என்னும் தலைப்பிலமைந்த பாடலில் மாருதவேகன் சுதமதியைக் காணுமிடத்து

**“கைம்மலர் பற்றிக் கனியிதழ் கொய்தான்” (முடி.க.ப.30)**
**“காற்றுடல் வருடக் கண்மலர் அவிழ்ந்தாள்” (முடி.க.ப.33)**
**“உவகைத்தேன் பெருக்கெடுக்கத் தையல் கண்டாள்” (முடி.க.ப.170)**

**“வழியற்று வறுமை அம்பு பாய்ந்திருக்கும்” (முடி.க.ப.171)**

என்று தொகை உருவகங்களைக் கையாண்டுள்ளார்.

சிற்றறிவுடையவர்கள் திருக்குறளுக்குப் புத்துரைகள் எழுதுகிறோமென்று பிழைகளோடு உரையெழுதுவதைக்கண்டு உளம் வருந்துபவர் புலமை எனும் நீச்சலறியாதவர்கள் குறள்கடலில் முங்க வேண்டாமென்று எச்சரிப்பதில் திருக்குறளைக் கடலாக உருவகப்படுத்துகிறார். (க.மு.ப.95)

**“காளைக்குச் சோற்றினில் ஏக்கமோ? -மொழி**
**வாழையைக் காப்பதில் தூக்கமோ?**
**தோளுக்குள் ளேஉரம் ஏற்றுவாய்- மனச்**
**சூளைக்குள் ளேஎரி மூட்டுவாய்” (தா.கா.ப.46)**

என்பதில் மொழியை வாழையாகவும் மனதைச் சூளையாகவும் உருவகித்து மொழியுணர்ச்சி ஊட்டுகின்றார்.

**விரியுருவகம்:**

ஆகிய, ஆக என்னும் என்பன போன்ற சொற்கள் வெளிப்பட்டு நிற்பது விரியுருவகமாகும். முடியரசனார் சிற்சில விடங்களில் மட்டும் விரியுருவகத்தைப் பயன்படுத்தியுள்ளார்.

**“மொழியாம் ஆற்றில் படிந்தெழுந்தால்” (முடி.க.ப.53)**
**“கரும்பான தமிழ்விடுத்துக் கற்றவித்தை காட்டிவிட்டார்” (முடி.க.ப.166)**
**“வாழ்க்கை என்ற ஏட்டிலே..” (கா.பா.ப.87)**
**“காலம் என்னும் கோல மருத்துவன்” (பூ.கொ.21:29)**
**“நான் கதவாக நன்கனம் காத்தும்” (இ.வ.ப.219)**

என்னும் விரியுருவகங்களைப் படைத்துள்ளார்.

‘யாழ் உடைந்தது’ என்னும் தலைப்பிலான கவிதையில் செந்தமிழ்க்கும் புலவர்க்கும் விடிவுகாலம் வருமென்று எண்ணி மகிழ்ச்சிக் கடலுக்குள் விரைந்து சென்று, கற்பனைப் படகில் ஏறிச் சென்றதாகப் பாடுவர் (ஞா.தி.ப.185). இதில் மகிழ்ச்சி கடலாகவும் கற்பனை படகாகவும் உருவகிக்கப்பட்டுள்ளன.

‘உருவகத்தை அதன் முழு அளவிற்குக் கையாள வல்ல இலக்கியக் கலை வித்தகராக விளங்குவது மிக அரிய செயல்’[19] என்பர் அரிஸ்டாட்டில்.

முடியரசனாரின் உருவகங்கள் அவரைக் கலைவித்தகராகக் காட்டுகின்றன.

**இயைபு உருவகம்:**

ஒன்றற்கொன்று தொடர்புடைய பொருள்கள் ஒரு தொடரிலே உருவகமாக வருவது இயைபு உருவகமாகும். ‘காதல் நெஞ்சம்’ என்னும் பாடலில் தலைவன், தலைவியிடம் காதலுரைக்குமிடத்துக் கவிஞர்,

**“உள்ளப் பெருநிலத்தில்**
**ஓங்கிப் படர்கையில்**
**அள்ளித் தெளித்துவிட்டாய்**
**அன்பு விதை” (முடி.க.ப.68)**

என்று உள்ளத்தைப் பெருநிலத்திற்கும் அன்பை விதைக்கும் உருவகித்துள்ளார்.

‘குறள் நெறிக் கொற்றம்’ என்னும் தலைப்பிலமைந்த கவிதையில் முடியரசனார், தம் ஆட்சியில் பூங்கொடி காப்பியம் கோட்டையாக விளங்க, கற்பனை என்னும் அரியணையில் காவியப்பாவை பட்டத்தரசியாய் அமர்ந்திருக்க, எட்டுத்தொகை என்னும் பேராயமும் ஐம்பெருங்காப்பியம் என்னும் ஐம்பெருங்குழுவும் சூழ்ந்து நிற்க, நாற்பாக்களும் நாற்படையாய், பாவினங்கள் என்னும் போர்க்கருவிகளை ஏந்திடத் தான் ஆட்சி புரிவதாக உருவகிக்கிறார். (வ.கோ.ப.8)

நிழல் பரப்பும் பூஞ்சோலையாய் இருந்த திராவிடம் ஆரியத்தின் வரவால் புதர்க்காடாய் மாறிவிட்டதென உள்ளம் நோகும் கவிஞர் நால்வேதத்தை நரிக்கூட்டமாகவும் மூடநம்பிக்கைகளை விலங்குகளாகவும் பஞ்சாங்கத்தை முட்புதராகவும் தருப்பையை நெருஞ்சியாகவும் சமயம், சாதி ஆகியனவற்றைப் புழுதியாகவும் அறியாமையை இருளாகவும் ஆயிரமாயிரம் கடவுளரைப் பரல்களாகவும் மதச் சின்னங்களைக் கற்றாழையாகவும் தலையெழுத்து, மறுபிறப்பு, தீவினை என்பனவற்றை கள்ளி என்றும் பாடுவதன் வழி இயைபுருவத்தைச் சிறப்புறக் கையாண்டுள்ளார். (ஞா.தி.ப.122)

**முற்று உருவகம்**:

இளம்பெருவழுதியும் குழலியும் உரையாடுகையில்,

> **“உலக மென்ப தலகிலாப் பெருங்கடல்**
> **அலைகடல் மிதக்கும் கலமே வாழ்க்கை**
> **முயற்சி துடுப்பா முந்நீர் ஊர்வோன்**
> **அயர்ச்சியோ டளவிலா அவாக்கொளின் அவைதாம்**
> **பெருவலி யாகிப் பேதுறச் செய்யும்” (இ.வ.ப.233)**

என்று உலகத்தைப் பெருங்கடலாகவும் வாழ்க்கையைக் கலமாகவும் முயற்சியைத் துடுப்பாகவும் அயர்ச்சி, அவா ஆகியனற்றைப் புயற்காற்றாகவும் முதல், சினை என இரண்டையும் முற்று உருவகப்படுத்திப் பாடியுள்ளார்.

**அணி:**

கவிதைக்கு அழகு சேர்ப்பது அணி. புலவர்கள், தாம் பாடும் கவிதைகளில் அணிகளை அமைத்துப் பாடுவது இலக்கிய மரபு ஆகும். இலக்கியத்தைப் பொறுத்த வரையில் எந்தப் பொருளையும் உள்ளதை உள்ளவாறே கூறுவதில் சுவை தோன்றுவதில்லை. கற்பனை கலந்து, அணி கோர்த்து, சொல்லும் பொருளும் நயத்தோடு ஒன்று சேரும்போது செய்யுளின் அழகு கூடுகின்றது. முடியரசனார் தம் கவிதைகளில் பல்வேறு அணிநலன்களைக் கையாண்டுள்ளார்.

**எடுக்காட்டு உவமையணி :**

‘சேரிடம் அறிந்துசேர்’ என்னும் பாடலில் தமிழ் எழுத்தின் உருவத்தை விளக்க முற்படும் கவிஞர்,

> **“இருசுழிக் கொம்புடன் வருகுறிற் ககரம்**
> **பெருகிய ஒலியுடன் நெடிலெனப் பெயர்பெறும்;**
> **ஒருசுழிக் கொம்புடன் காவெனும் நெடிலுறின்**
> **குறைவுறு மொலியுடன் குறிலெனப் பெயர்பெறும்;**
> **நல்லவர்ச் சார்வோர் நல்லோ ராகுப;**
> **அல்லவர்ச் சார்வோர் அல்லரா குபவே” (நெ.பூ.ப.231)**

என்று பாடுவர். இதில் இருசுழிக் கொம்புடன் வருகின்ற குறில் ககரம் பெருகிய ஒலியுடன் (கே) நெடிலெனப் பெயர் பெறும். ஒரு சுழிக் கொம்புடன் கா என்னும் நெடில் சேரின்

குறைவுறும் ஒலியுடன் (கொ) குறிலெனப் பெயர் பெறும் என்பது உவமானத் தொடர்.

நல்லவர்களைச் சார்பவர் நல்லோராவர். தீயவர்களைச் சார்வோர் தீயோர் ஆவர் - என்பது உவமேயத் தொடர். இவ்விரண்டிற்கும் இடையே உவம உருபு மறைந்து வந்துள்ளது. எனவே இது எடுத்துக்காட்டு உவமையணியாய் விளங்குகிறது.

**இல்பொருளுவமையணி:**

உலகில் இல்லாத பொருளை இருப்பதுபோல் உவமிப்பது இல்பொருள் உவமையணி எனப்படும்.[20]

'வறுமைப் பிணி' என்னும் தலைப்பிலான கவிதையில்,

**"கல்லறைப் பிணமும் காசென்று சொன்னால்**
**கணத்தினில் பேசிடும் காரணம் என்னோ?" (கா.பா.ப.102)**

என்பதில் கல்லறைப் பிணமும் பேசும் என்று இல்லாத ஒன்றை உவமித்துப் பாடுகின்றார்.

**"முகிலிடையே மலர் முல்லை கண்ட தில்லை**
**மொய்குழலில் அம்முல்லை மலரக் கண்டேன்;**
**துகிலுடைய மாங்கனியைக் கண்ட தில்லை**
**தோள்தொட்ட பின்னரதைக் கண்டு கொண்டேன்;**
**நகையுடைய முல்லைக்கு வரிசை யில்லை**
**நானின்றவ் வரிசைதனை நின்வாய்க் கண்டேன்;**
**புகலரிய இனிமைக்கு வடிவ மில்லை**
**பூமகளே நின்னுருவில் அதனைக் கண்டேன்" (வீ.கா.41:173)**

என்று இல்பொருள்களை அடுக்கி உவமித்துள்ளார்.

**ஏகதேச உருவக அணி:**

செய்யுளில் ஒரு பொருளை மட்டும் உருவகம் செய்து விட்டு அதற்குத் தொடர்புடைய மற்றொரு பொருளை உருவகம் செய்யாமல் விட்டுவிடுவது ஏகதேச உருவக அணி எனப்படும்.[21]

'பாரதிதாசன் என் அரசன்' என்னும் பாடலில்,

**"பகுத்தறிவு நாணேற்றிச் சொல் தொடுப்பான்" (நெ.பூ.ப.215)**

என்றுரைப்பர். இதில் பகுத்தறிவை நாணாக உருவகப்படுத்தியவர் சொல்லை அம்பாக உருவகப்படுத்தாததால் இது ஏகதேச உருவக அணியாயிற்று.

**“உணர்வெனும் நெய்யில் ஊறிய யாப்பில்” (ம.தே.ப.103)**

என்னும் பாடலடியில் உணர்வை நெய்யாக உருவகப்படுத்திய கவிஞர் யாப்பைத் திரியாக உருவகப்படுத்தாததால் இது ஏகதேச உருவக அணியாய் அமைந்துள்ளது.

**சொல்பின் வருநிலையணி:**

செய்யுளில் முன்னர் வந்த சொல் மீண்டும் மீண்டும் வந்து வெவ்வேறு பொருள்களைத் தருமாயின் அது சொல்பின் வருநிலையணி எனப்படும்.[22] பூங்கொடி காப்பியத்தின் ஏடுபெற்ற காதையில் பூங்கொடி தன் வரலாறு கூறுமிடத்து

**“வெல்லத் தமிழ்மொழி வெல்லப் பணிபுரிந்த” (பூ.கொ.11:14)**

என்னும் பாடலடியில் முதலில் வந்துள்ள ‘வெல்ல’ என்னும் சொல் இனிப்பு வெல்லத்தையும், அடுத்து வந்துள்ள ‘வெல்ல’ என்னும் சொல் ‘வெற்றி பெற’ என்னும் பொருளையும் குறிக்கிறது. **‘இவளால் இசைத்தமிழ் இசையுறல் திண்ணம்’ (பூ.கொ. 17:23)** என்னும் பாடல் வரியில் இசை என்னும் சொல் முதலில் ‘பண்’ என்ற பொருளிலும், அடுத்து ‘புகழ்’ என்ற பொருளிலும் வந்துள்ளது.

**வேற்றுமையணி:**

செய்யுளில் முதலில் உவமான, உவமேயங்களை ஒன்றுபடக்கூறி பின் அவற்றுக்கிடையே வேற்றுமை தோன்றக் கூறுவது வேற்றுமை அணியாகும்.[23]

‘அணையா விளக்கு’ என்னும் தலைப்பிலான பாடலில் வள்ளல் அழகப்பரின் வண்மையைப் பாடுகையில்,

**“விண்ணில் தோன்றி விழிக்கொளி நல்கி**
**மண்ணிற் படுபொருள் கண்ணிற் படும்வணம்**
**அரைநாள் விளக்கி வரையறை செய்யும்**
**குறையுடைத் தாகும் கூர்கதிர் விளக்கே;**

**அகத்தினில் தோன்றும் அறிவெனும் விளக்கோ**

**மனத்தொளி நல்கும் மாண்பொருள் விளக்கும்" (ம.தே.ப.188)**

என்று விண்ணில் தோன்றி மண்ணிலுள்ள பொருள்களையெல்லாம் கண்ணிற்கு விளக்கமாய்க் காட்டும் கதிரவனின் ஒளி மாலை நேரமானதும் மங்கிக் குறைந்து காணாமல் போய் விடுகிறது. ஆனால் மனிதரின் அகத்தில் தோன்றும் அறிவெனும் விளக்கு நுண்பொருளை விளக்கிக் காட்டும்; மங்குவதில்லை என்பது இதன் பொருள். இப்பாடலில் பொருளை விளக்கிக் காட்டுவதில் கதிரவனுக்கும் அறிவிற்கும் உள்ள ஒப்புமையைக் கூறி கதிரவன் ஒளி இரவில் மங்கிவிடும். அறிவின் ஒளிமங்குவதில்லை என்று வேறுபடுத்தி கதிரவனைவிட அறிவே சிறந்தது என்று உயர்த்திப் பாடுகிறார் கவிஞர்.

இயல்பாக நிகழும் நிகழ்வொன்றில் புலவர் தன் குறிப்பினை ஏற்றிப் பாடுவது தற்குறிப்பேற்ற அணி எனப்படும்.[24]

கடல் பொங்குவதும் இரைச்சலிடுவதும் கரை நோக்கி வருவதும் இயல்பான நிகழ்வு. முடியரசனார் 'கடல்' என்னும் தலைப்பிலான கவிதையில் பெருமை மிகுந்த தமிழன் பிழைப்பிற்கு வழி தேடிக் கூலிகளாய் வேறு நாடுகளுக்குச் செல்லும் நிலை கண்டு பொங்குவதாய்ப் பாடுவது தற்குறிப்பேற்றமாகும். (முடி.க.ப.57)

காட்டிற்குள் தோகைமயில் வாழ்வதும் வயல்வரப்பில் அன்னங்கள் வாழ்வதும் இயல்பு. ஆனால் கவிஞர் கண்ணகியின் சாயலில் தோல்வி கண்டு நாணி மயில் காட்டிலும் நடையில் தோல்வி கண்டு அன்னம் வயலிலும் ஒதுங்கி மறைந்து வாழ்வதாகப் பாடுகிறார். (த.மு.ப.151).

கதிரவன் தோன்றுவதும் மறைவதும் உலக இயல்பு. புலவர் இதனைப் பூங்கொடி காப்பியத்தில் பூங்கொடி சிறைப்பட்டபோதும் (பூ.கொ.24:58-59) மாவேழன் போர்க்களத்தில் தோற்றபோதும் (வீ.கா.100:417) அத்துன்பத்தைப் பொறுக்கமாட்டாமல் கதிரவன் மறைந்தானென்றும் மாவேழனுக்கும் கோளரிக்கும் இடையே நிகழும் போரைக் காண்பதற்காகவும் (வீ.கா.85:377) மாவேழன் போர்த்திறத்தைக் காணும் ஆவலிலும் (வீ.கா.103:424) கதிரவன் தோன்றினானென்றும் தன் கருத்தை ஏற்றிப்பாடுகின்றார்.

**புகழாப் புகழ்ச்சி அணி:**

பழிக்கப்படுவதைப் போலப் புகழப்பட்டவர்க்கு இது புகழ்ச்சி, பழிப்பினைக் கேட்க நினைத்தவருக்கு நேரும் இகழ்ச்சி என ஒரே வேளையில் இருவர்க்கு இரு வேறு முரணான கருத்துகளைப் பதிக்கும் அணி இதுவாகும்.[25]

'அழகப்பர்' என்னும் தலைப்பிலமைந்த பாடலில் வள்ளல் அழகப்பரின் கொடைத்திறத்தைப் பாடும்பொழுது,

**"பொருள்கொடுத்தான் மிகக்கொடுத்தான்; அதனின் மேலாப்**
**புகழ்கொண்டான்; கொடைசிறிது, சிறிய ஒன்றால்**
**அருள்பழுத்தான் கொண்டதுதான் மிகுதி என்பேன்!**
**அதிலென்ன வியப்புளதோ? மேலும் அன்னான்**
**ஒருவகையில் கஞ்சனெனக் குறையும் சொல்வேன்;**
**உவந்தளித்தான் நிதியமெலாம், உண்மை; ஆனால்**
**வருபுகழில் சிறிதேனும் பிறர்க்கீந் தானோ?**
**வருகின்ற புகழெல்லாம் வைத்துக் கொண்டான்" (க.மு.ப.62)**

என்னும் பாடலில் கொடை சிறிது, கொடையால் கொண்டது மிகுதி, அவர் கொடையால் வரும் புகழையெல்லாம் தனக்கே வைத்துக் கொண்டதால் கஞ்சன், என்று பழிப்பது போலப் புகழ்ந்துரைக்கிறார்.

புதுக்கோட்டை வள்ளல் சுப்பிரமணியாரைக் குறிப்பிடுகையில் கவிஞர் 'இவர் நெஞ்சில் திருக்குறளையே நாடுகிறார். தமிழொன்றே போற்றுகின்றார். தமிழ் நெஞ்சம் கொண்டவர்க்கே கொடுக்கின்றார். குறைகண்டால் கடிந்துரைப்பார். கவிஞரைப் போன்றோர்க்கும் பணிந்து நிற்பார். மற்றவர்களுக்குக் கொடுக்கும் போது கணக்கறியாமல் கொடுப்பார் என்று அவரது நிறைகுணங்களை குறைகளாகக் கூறிப் பாடுகிறார். (க.மு.ப.82)

**வஞ்சப் புகழ்ச்சி அணி:**

ஒருவரை இகழ்வது உள்நோக்கமாக இருக்கும், வெளிப்படையாகப் புகழ்வதை போலப் பேசுவர். ஆனால், அதன் உட்பொருள் பழிப்பதாக இருக்கும். புகழ்வதைப்போல் பழிப்பிற்கு ஆளானவர்க்கு இது வஞ்சகம் ஆதலினால் புகழ்வதைப் போலப் பழிக்கும் வஞ்சப்புகழ்ச்சி அணியை மாறுபடுபுகழ்நிலை அணி என்றும் அழைப்பர்.[26]

**“பணத்தினால் வாக்கைப் பெற்றுப்**
**பதவியில் அமர்ந்த பின்னர்ப்**
**பணத்தினைக் குறிக்கோ ளாக்கிப்**
**பழிகள் தாம்செய்வ தென்றால்,**
**குணத்தினைக் கொன்று வீழ்த்தல்**
**குடியர சாட்சி யென்றால்**
**மணத்துடன் உலக மெங்கும்**
**வாழிய மக்களாட்சி” (நெ.பொ.ப.51)**

என்னும் பாடலில் அரசியலில் கேடுகள் பெருகி, நன்மை தேய்ந்ததைக் கண்டு உள்ளம் வெதும்பி மக்களாட்சியை வாழியவென்று புகழ்வதைப் போன்று பழித்துரைக்கின்றார்.

‘திரையரங்கத்தில் நுழைவுச்சீட்டு பெறுவதற்கு வியர்வையால் உடல் நனைய விலையுயர்ந்த உடைகிழிய வெயிலில் மற்றவர்களைத் தம் வீரமிகு தோள்களினால் விலக்கித் தள்ளி, சோர்வின்றி, கூட்டத்தின் வரிசையை உடைத்துப் புகுந்து வரும் ஆண்களின் செயலெல்லாம் வீரம்தான். அவ்வீரம் வாழ்க’ (நெ.பொ.ப.92) என்றும் ‘பெண்கள் திரை அரங்கிற்குள் உள்நுழைய சினத்தோடு முண்டியடித்துக்கொண்டு, மேலாடை உடலிலிருந்து நழுவி விழுதலைக் கூட அறியாமல் அரங்கத்திற்குள் வெற்றியுடன் நுழைந்த பிறகு பெண்கள் போரை விடுப்பர். பூவையரின் மறம் பொலிந்து வாழ்க’ (நெ.பொ.ப.93) என்றும் மக்கள்தம் திரையரங்க வீரத்தைப் புகழ்வதுபோலப் பழிக்கின்றார்.

**சிலேடையணி:**

செய்யுளில் ஒரே சொல் இருவேறு பொருள்களைத் தருவது சிலேடையணி ஆகும்.[27] ‘என் காதலி’ என்னும் கவிதையில் தமிழ்க்காதலியைப் பாடும் கவிஞர் ‘பாவாடை அணிந்திருப்பாள்’ (பா.கு.ப.195) எனுஞ் சொல் பிரிக்காமலிருக்கும்போது மகளிர் அணியும் இடை ஆடையையும், பிரித்து நோக்கினால் பா என்னும் ஆடையையும் குறிக்கும்.

**பிறிதுமொழிதலணி:**

செய்யுளில் உவமையைக் கூறிப் பொருளைப் பெற வைப்பது பிறிது மொழிதலணி ஆகும்.[28]

தாய்மொழியைப் பழித்துப் பிறமொழியை உயர்த்திப் பிடிக்கின்ற மடமை கூடாது என்பதை 'மனைவியைப் பிறரிடம் அடகு வைத்துத் துறவறம் மேற்கொள்ளலாமா? தாய் தவித்துத் துடித்திருக்க அறஞ்செய்ய முயலுதல் நன்றா? கறவையிடம் பால் கறந்து கன்றுக்கு இல்லாமல் செய்து கடவுளுக்குப் பாலால் முழுக்கு செய்வது நன்றா? (முடி.க.ப.120) என்பதில் தாய்மொழியைப் பழித்து பிறமொழியை உயர்த்திப்பிடிக்கிற மடமை கூடாது. என்னும் பொருளைக் கவிஞர் பெறவைப்பதனால் இது பிறிது மொழிதலணியின் பாற்படும்.

**உயர்வு நவிற்சி யணி:**

"ஆர்வம் பற்றி நிகழும் மொழி மிகத் தோன்றச் சொல்லுவது உயர்வு நவிற்சியணி ஆகும்."[29] இதற்கு ஆர்வமொழியணி என்னும் பெயருமுண்டு.

முறுவலனின் வீரதீரத்தை விளக்கக் கவிஞர்,

**"சாய்ந்தாடும் உளைப்பரிதான் இவனைச் சேர்ந்து**
**தன் விரைவை வெளிப்படுத்த ஓடுங்காலை**
**ஓய்ந்தாடும் கால்தளர்ந்தே உருண்டு வீழும்;**
**உறுகாற்றிற் கடிதேகி இவனே வெல்வான்" (வீ.கா.53:241)**

என்று பாடுவர். இதில் முறுவலன் விரைவிற்கு முன் பரியும், காற்றும் தோற்குமென்று முறுவலன் உடல் வலிமையை உயர்த்திப் பாடுகின்றார். இதே போன்று வேழனை அழைத்துவரத் தூது சென்ற வீரன் செல்லுகின்ற புரவி காற்றைவிட வேகமாய்ச் செல்லும் என்பர். (வீ.கா.75:334) மேற்சுட்டிய இரண்டும் உயர்வு நவிற்சியாக அமைந்திருத்தல் சுட்டத்தக்கது.

**வருணனை:**

'வருணனை என்பது தான் சொல்ல வந்த செய்திகளைக் கற்பனை கலந்த படிமங்களாக்கிக் கலைத் தன்மையோடு சொல்வது; இது கலைகளுக்கு இன்றியமையாதது'[30] என்பர் ந.பிச்சமுத்து.

முடியரசனின் கவிதைகளில் பல்வேறு திறப்பட்ட வருணனைகள் காணப்படுகின்றன. 'ஆறு' என்னும் தலைப்பிலான கவிதையில் ஆற்றை வருணிக்கும் கவிஞர் 'மேற்றிசையில்

செந்நிறத்தைக் கதிரோன் பாய்ச்சும் வேளையில் அவ்வொளியை ஆறு தன் மேல் ஏற்றுத் தன் மெய் வண்ணம் காட்டி, ஒவ்வோர் இடங்களிலே நெளிந்து ஓடி இடையைக் காட்டி, நாற்று நிறை வயல்களுக்குப் பிரிந்து சென்று வருவாய்க் கால்காட்டி, ஓடைமீது காற்று உரசும் போது சல சலவென்று ஓடும் பொழுது களிநடஞ்செய்யும் காற்சதங்கை ஒலியைக் காட்டும். ஆற்றங்கரையோரம் அலைக்கையில் வாரிவிட்ட கருமணலால் சுருள்கூந்தல் காட்டி, புனல்தள்ளும் நுரையில் சங்கினத்தின் நுண்சினையால் பல்காட்டி, ஓடி ஓடி, இரைதேடும் மீனால் கண்கள் காட்டி இறுமாந்து செல்லும்போது தன்னிடம் செந்தாமரையின்றி முகம் காட்ட முடியாமல் மாய்வதற்குக் கடல் நோக்கி ஓடுகின்றது' (முடி.க.ப.53) என்று ஆற்றைப் பெண்ணாக வருணிக்கின்றார். 'காற்று' என்னும் கவிதையில் 'பருவஎழில் மலர்ந்துள்ள பெண்ணொருத்தி தன் கணவனிடம் புலந்து கண்ணீர் பெருக உதிர்த்து அசையாமல் நிற்பதுபோல் பூஞ்செடிகள் எல்லாம் தன் முகத்தில் பனித்துளிகளைத் தாங்கி மணமின்றி நிற்கும். புலந்துநின்ற பெண்ணின் கணவன் அருகணைத்து அவளிதழை அசைக்கின்ற போது இதழ்விரித்து நகைகாட்டுவதைப் போல் தென்றல் செடிகளின் மீது மெதுவாக வருட பனித்துளிகளை தண்ணீரைப்போல் தேக்கி வைத்திருந்த பூவிதழ்கள் விரித்து அரும்புப் பல்காட்டும்' (முடி.க.ப.50) என்று பூஞ்செடியை அழகாய் வருணித்துப் பாடியுள்ளார்.

'யாரடியோ' என்னும்தலைப்பிலான பாடலில் மார்கழித்திங்களில் தெருவாயிலையும், வானத்தையும் காணும் கவிஞர் தான் காணும் காட்சியை,

**"கொள்ளைப் பனிபொழி மார்கழித் திங்களில்**
**கோலமி டத்தெரு வாயிலிலே**
**அள்ளிப் புனல்தெளித் தென்மகள் புள்ளிகள்**
**ஆயிரம் வைத்தனள் பாரடியோ!**
**வெள்ளை நிலா மகட் கன்னி உலாவரும்**
**வீதியில் எத்தனை கோலமடி!**
**வெள்ளி எனும்பெயர் கொண்டிடும் புள்ளிகள்**
**விந்தையில் வைத்தவள் யாரடியோ?" (பா.கு.ப.155)**

என்று வருணிக்கிறார். இதில் அதிகாலை வேளையில் பனியால் நனைந்த தெரு அழகுறக் காட்சிப்படுத்தப்பட்டுள்ளது.

வான் காட்சி கவிஞருக்கு கவிதை ஊற்றெடுக்க வைக்கும் ஊற்றுக் கண்ணாகத் திகழ்கிறது. 'விண்குடும்பம்' என்னும் கவிதையில் 'காக்குந் தலைவன் கதிரோன், ஆக்கும் தலைமகள் நிலமடந்தையை வானமெனும் பந்தலில், மழைத் தோரணங்களைத் தொங்கவிட்டு மின்னல் விளக்கேற்றி, முகில் கூட்டத்தைத் துகிலாக விரித்து மத்தளம்போல் இடி முழங்க எழுவண்ண வானவில்லை மாலையென கதிர்க்கையால் கொண்டுவந்து சேயோன் சூட்ட, வானவரும் மீனவரும் வாய்மலர்ந்து வாழ்த்தினர். திருமதி ஓரிரவில் காதல் களியாட்டில் நாணிநிற்க, செங்கதிரோன் மெய் தொட்டான். சற்றே சினந்த நிலவுப் பெண் கருமுகில் ஆடையெடுத்து முகம் மூடி மறைந்தாள். கதிரவன் துகிலிழுத்து நிலவில் வாய்புதைக்க நிலவு வாய்மலர்ந்து நகைத்தது, மின்னலெனத் தோன்றிற்று. நெற்றியில் பொட்டு நெடுங்கறை ஆகிவிட பற்றிய கையைப் பறித்துக்கொண்டு ஓடிவிட்டாள். பின்பற்றி ஓடியவன் பேதை துகில் தொட்டிழுக்க மேகலையின் முத்துகள் அத்தனையும் கொட்டிச்சிதறிக் குளிர்வானில் மேற்கிடந்து உடுக்கணமாய் முகிழ்த்தது' (த.மு.ப.181) என்ற கவிஞரது நீண்ட வருணனை விண் குடும்பத்தை கண்முன்னே காட்டி மகிழ்விக்கிறது.

**பொழுது வருணனை:**

கதிரவன் தோன்றும் அதிகாலைப் பொழுதைக் கவிஞர் வீரகாவியத்தில்,

> **"நீலநிறப் பட்டாடை விரிப்பைப் போலும்**
> **நெடுங்கடலாம் எழிற்பாயல் நீங்கி வெய்யோன்**
> **கோலமுகஞ் சிவந்தெழுந்தான்" (வீ.கா.14:49)**

என்று வருணிப்பர். இயற்கை என்னும் கன்னியின் அழகைக் கவிஞர் 'காலையில் கீழ்த்திசைக் கடலில் எழும் கதிர்தான் என் மனக்கன்னியின் முகமாகும். மாலையில் மேற்றிசையில் மினுக்கிடும் வானே மனம்கவர் எழில்கொள்ளும் அவள் மேனியாகும்' (பா.கு.ப.231) என்று இரு பொழுதுகளையும் வருணித்து இன்புறுகிறார்.

**இட வருணனை:**

'படைத்தோன் வாழ்க' என்னும் கவிதையில் மைசூரிலுள்ள பிருந்தாவனமெனும் பெயர்கொண்ட பூங்காவின் காட்சியில் உள்ளம் பறிகொடுத்த கவிஞர் 'எண்ண இயலா வண்ண மலர்கள், நிலமிசைப் படுபுல், நிமிர்தரு செடிகள், வலைநிகர் கொடிகள் என இருவிழி எதுவரை எட்டுமோ அதுவரை பரவிய எல்லையுடைய பூங்காவைக் கண்டால் இமையா நாட்டத்து இமையோர் ஆவார். விண்ணுலகென்னும் கற்பனை உலகைப் பூங்கா வடிவில் கண்ணெதிர் கண்டேன். ஊற்றுக் குழல் நீர் விரிகுடைபோலவும், வரிசிலைபோலவும் தோற்றம் காட்டும். பிரிந்தவர் கூடுவதைப்போல் இருபுறத்திருந்து வரும் நீர் ஒன்றாய்க் கூடும். இருபுலப் பகைவர் எதிரெதிர் நின்று பொருதி வீழ்வதைப்போல் வீழும். எண் பேராயமும் ஐம்பெருங்குழுவும் கூடி வீற்றிருக்கும் மன்னவன்போல மற்றவை சூழ மதர்த்து நிற்கும். நிரல்பட அரிவையர் நின்று நடம்புரியும் செயல்போல் ஆடி அசையும்' (முடி.க.பக்.64-66) என்று பிருந்தாவனத்தை வருணிக்கின்றார்.

'கண்குளிரும் குற்றாலம்' என்னும் கடிதத்தில் 'ஓங்கி உயர்ந்த மலைத் தொடர்கள், முகில்மூடிய மலையுச்சி, அருவியின் ஆரவாரம், சோலைகளில் புகுந்து சலசலப்பை உண்டாக்கி வரும் பூங்காற்றின் இரைச்சல், புள்ளினங்கள் எழுப்பும் பல்வகை ஒலி, அருவியில் நீராடுவோர் தம் ஆர்ப்பரிப்பு இவை எல்லாம் இன்பமயம்' (முடி.கடி.பக்.21-22) என்னும் வருணனை குற்றாலமலை வளத்தைக் கண்முன்னே காட்சியாய் விரிக்கிறது.

பண்டிதமணி கதிரேசனார் பிறந்த ஊரான பூங்குன்றத்தைக் கவிஞர் 'பயிலும் பள்ளி ஒன்று, போய்வரும் தெரு இரண்டு, வழங்கிடும் கடைகள் மூன்று, உருவினிற் சிறிய அவ்வூரை வளரிளங்காடு சூழ்ந்து வனப்பினில் பொலிந்து தோன்றும். அளறிடை (சேற்றிடை) விளைந்து நிற்கும் அணிவயல் அழகுகூட்டும். உழவர்கள் சென்று கடமை யாற்றி மீள்வர். குளமெலாம் மீன்கள் துள்ளிக் குதித்திடும்' (ஊ.கோ.1:7-9) என்று வருணிப்பர்.

**மனிதர்கள் வருணனை:**

முடியரசனார் படைப்புகளில் இயற்கை வருணனையைப் போன்றே மனிதர்களை வருணிக்கும் இடங்களும் பலவுண்டு 'புதருள் கனி' என்னும் தலைப்பிலான பாடலில் இளம் விதவைப் பெண்ணை,

**"உருத்தெழுந்த மார்பகத்தாள்**
**வில்லொடித்த புருவத்தாள்**
**உள்ளத்தே தைத்தோடிப்**
**பாய்கின்ற வேல்விழியாள்**
**கருத்தெழுந்த மேகத்தைப்**
**புறங்கண்ட கரிகுழலாள்**
**கன்னத்தில் அழகொளியாள்**
**அன்னத்தின் எழில்நடையாள்**
**சிரித்தெழுந்த செவ்விதழாள்**
**இன்மொழியாள் அழகெல்லாம்**
**சேர்த்தெழுந்த உடலுடையாள்" (முடி.க.ப.71)**

என்று வருணிப்பர். இதன் வழி இளம் பெண்ணின் வாழ்க்கை வீணாகி அழிவதைப் புலப்படுத்துகிறார். 'பிரிந்த கணவனை எதிர்பார்த்துக் காத்திருந்த தலைவி இடியிடித்து மின்வெட்டி குளிர்நடுக்க இருகையால் உடல்பொத்தி ஒடுங்கி, கணவன் வரவில்லையே என்று சோர்ந்து துவண்டிருந்தாள். துணைவனைக் கண்டதும் வறுமையில் வாடியவன் புதையலைக் கண்டதும் துள்ளித் தாவுவதைப் போன்று விழியில் 'கண்ணீர்' மெருகிட்டுத் ததும்பியது' (முடி.க.ப.170) என்று கண்ணீர் என்னும் தலைப்பிலான கவிதையில் தலைவியொருத்தியின் குளிர் நடுக்கத்தையும் பிரிவுத் துயரையும் வருணித்துப் பாடுகின்றார்.

'வீரகாவியம்' நூலில் மாவேழன் வயத்தரசன் அரண்மனைக்குள் புகும் காட்சியினை,

**"பாரகத்தை நடுங்குறுத்தும் மடங்கல் போன்றான்**
**பகரறிய பெருவீரன் வருகை கேட்ட**
**ஊரகத்து மாந்தரெலாம் குழுமி யாண்டும்**
**உவகையொடு வாழ்த்தொலிகள் எழுப்பி நின்றார்;**

**தாரடுத்த மார்பகத்தான் களிற்றின் மேலான்**

**தலைநிமிர்ந்த தோற்றத்தான் வலமாச் சுற்றிக்**

**காரடுத்த தலைவாயி லுட்பு குந்தான்" (வீ.கா.10:34)**

என்று வருணிப்பர்.

குழந்தையின் அழகை 'உயிர்ப் பொம்மை' என்னும் பாடலில் 'குறுகுறு நடை பயிலும் கோலச் சிறுதேர், பொருளொடு புணராப் புதுவகை மொழியை சிறுமலர் வாயால் சிந்திடும் பைங்கிளி, சுருள்படுசிறுமுடி, மருள்நிறை கருவிழி, எழில் தவழ் செவ்விதழ், தளிர் நிகர் சிறுவிரல், தங்கத் திருநிறம், குளிர்மொழி அனைத்தும் கொண்ட உயிர்ப்பொம்மை' (நெ.பூ.ப.244) என்று அழகுற வருணிப்பர்.

**கற்பனை:**

கவிஞர் தான் முன்பு கண்ட காட்சிகளைத் தன் மனக்கண் முன் நிறுத்தி, தன் விருப்பத்திற்கேற்ப அக்காட்சிகளை மாற்றிப் படைக்கும் இலக்கியத்திறன் கற்பனை ஆகும்.

கெபில் "கவிதையை அளவு கடந்த உணர்வு அல்லது முழுக்கற்பனை வெளியே செல்வதற்குரிய வழி"[31] என்பர்.

'உயர்ந்த உணர்வுகளுக்குரிய விழுமிய நிலைக் களங்களைக் கற்பனையின் துணை கொண்டு அறிவுறுத்துவதே கவிதை'[32] என்பர் ரஸ்கின்.

முடியரசன் தம் இயல்பு வாழ்க்கையிலும் பல நேரங்களில் கற்பனையில் உலவுதல் அவர்தம் இயல்பாக இருந்தது. இதனை அவரே,

**"மண்ணில் நடப்பது சிறுநேரம் நானோ**

**வானிற் பறப்பது நெடுநேரம்**

**நண்ணும் மகிழ்ச்சிகள் சிறுநேரம் - நெஞ்சம்**

**நையுந் தளர்ச்சிகள் நெடுநேரம்**

**வீட்டை நினைப்பது சிறுநேரம்-மனைவி**

**வேட்கை யிருப்பதுஞ் சிறுநேரம்**

**நாட்டை நினைப்பது நெடுநேரம்-கவிதை**

**நயந்து தொடுப்பதும் நெடுநேரம்" (பா.ப.வா.ப.பக்.110-111)**

என்று குறிப்பிடுவர்.

கற்பனை, “படைப்புக் கற்பனை, இயைபுக் கற்பனை, கருத்து விளக்கக் கற்பனை என மூன்று வகைகளில்”[33] வகைப்படுத்தப்படுகிறது.

**படைப்புக்கற்பனை:**

“படைப்பாளன் தான் நேரில் கண்ட காட்சிகளைத் தன் விருப்பத்திற்கேற்ப உருமாற்றிப் படைக்கும் செயல்திறனைப் படைப்புக் கற்பனை”[34] என்பர். இது ஆக்கக் கற்பனை என்றும் அழைக்கப்பெறும். முடியரசனார் படைப்புகளில் இக்கற்பனை நிறைந்து காணப்பெறுகிறது.

குறிஞ்சி, முல்லை, மருத நிலங்களைக் கடந்து ஆறு வரும்போது குறிஞ்சியாகிய அன்னையும் முல்லையாகிய சிற்றன்னையும் மருதமாகிய மாமனும் தங்களிடம் உள்ள வளங்களையெல்லாம் வாரி வாரிச் சீர்வரிசையாய் அனுப்ப, கடலாகிய துணைவன் அலைக்கையால் சீர்வரிசையைக் கொள்ளேன் என்று மணக்கொடை மறுத்து, ஆறு என்னும் நங்கையைத் தழுவிக் கொண்டதாகப் பாடுகிறார். (நெ.பூ.ப.241)

நீர் பேசுவதாய் அமைந்துள்ள ‘நீரின் பெருமை’ என்னும் கவிதையில்

**“கூன்விழுந்த மேனி குழிவிழுந்த கன்னங்கள்**
**ஏன் பிறந்தோம் என்றேங்கும் நெஞ்சம், இவையுடையார்**
**கண்களிலே தேங்கிக் கசிந்து துளியாகி**
**மண்ணிற் கொடுங்கோன்மை மாய்க்கும் படையாவேன்” (த.மு.ப.167)**

என்று ஏழை எளியோரின் கண்ணீர்த் துளிகளைப் படைக்கருவியாக்கிக் கற்பனை செய்கிறார்.

பெரியார் ஆரியத்தை ஒழித்துக்கட்ட, சூறாவளிப்பயணம் மேற்கொள்ளும்போது, அறியாமைப் பேரிருளில் மூழ்கிக் கிடந்தவர்கள் அவரை எதிர்த்து எறிந்த கற்களெல்லாம் திரண்டு பெரியார் சிலையாக கம்பீரமாக எழுந்து நிற்பதாகவும் ஆரியரின் கால்வருடும் அன்பர் கூட்டம் பெரியார்மேல் வீசி எறிந்த வீசைப் பொருள் எல்லாம் காசுபணமாக மாறியதாகவும் கற்பனை செய்கிறார். (ஞா.தி.ப.114)

**இயைபுக் கற்பனை:**

"கவிஞன் வெவ்வேறு இடங்களில் தான் கண்ட இருவேறு காட்சிகளை ஒன்றை மற்றொன்று விளக்கும் முறையில் இரண்டையும் இணைத்துப் புதிய ஒன்றைக் கூறுவதனை இயைபுக் கற்பனை" [35] என்பர்.

ஆறு குறிஞ்சி நிலத்தில் அருவியாகத் தோன்றியது முதல் முல்லை, மருதம், ஆகிய நிலங்களைக் கடந்து சென்று கடலில் கலக்கும் தன்மையை,

**"மலையகந்தான் ஆற்றுக்குப் பிறந்த வீடு;**
**வளமலிந்த கடற்பரப்பே புகுந்த வீடு**
**தொலைவறியா வளமுடைய முல்லைக் காடு**
**தூயவட்குச் சிற்றன்னை; அவட் கடுத்த**
**கலைமலிந்த காமலிந்த மருதம் அந்தக்**
**காரிகைக்குத் தாய்மாமன், மகிழ்ந்து பெற்ற**
**தலைமகளைப் புக்ககத்துக் கனுப்பும் போது**
**தாய்தந்த சீர்வரிசைக் களவே யில்லை" (நெ.பூ.ப.240)**

என்று மணப்பெண்ணுக்கு இயைபுபடுத்திக் கவிஞர் கற்பனை செய்கிறார்.

மாவேழன் போர் புரியும் போர்க்களத்தையும் பொம்மலாட்டக் காட்சியையும் இயைபுபடுத்தும் கவிஞர்,

**"ஆடரங்கம் போர்க்களமே அவனுக் காகும்**
**ஆர்த்துவரும் மறப்படைகள் பொம்மை யாகும்;**
**கூடரங்கில் வெட்டுண்ட பகைப்பு லத்தார்**
**குறையுடலம் எழுந்தெழுந்து குதிக்குங் காட்சி**
**நாடகங்கள் போலவற்கு மகிழ்ச்சி நல்கும்" (வீ.கா.2:10)**

என்று கற்பனை செய்கிறார்.

**கருத்து விளக்கக் கற்பனை:**

"கருத்து விளக்கக் கற்பனை என்பது தமிழில் வழங்கப் பெறும் தற்குறிப்பேற்ற அணியைப் போன்றது. இயல்பாக நடைபெறும் நிகழ்ச்சியின் மீது கவிஞன் தன் கருத்தை ஏற்றிக் கூறுவது" [36] ஆகும்.

பூங்கொடி சிறையிலிருந்து விடுதலையானபோது சிறைக்கதவில் இருந்து இயல்பாக வெளிப்பட்ட ஒலியினை,

**“நன்னர் வினையே நாடிப் புரிவோர்க்**
**கின்னல் வரினோர் இமைப்பினில் இரியும்**
**என்னும் உண்மை இசைத்தது போல**
**ஒலியிட் டாங்கண் ஓய்ந்ததக் கதவே” (பூ.கொ.ப.192)**

என்று கதவு உண்மையை உரைத்தது எனத் தன் கருத்தை ஏற்றிப் பாடுகிறார்.

வீரகாவியப் பாடல் (வீ.கா.ப48:214), இயற்கைத் தாய் (முடி.க.ப.47) போன்ற கவிதைகள் கவிஞரின் கருத்து விளக்கக் கற்பனைக்குச் சிறந்த சான்றுகளாகும்.

**குறியீடு:**

‘குறியீடு’ என்பது ஒரு பொருளை அடையாளமாகக் காட்டி அதன் மூலம் பிறிதொரு செய்தியை உணர்த்துவதாகும். ஒரு கருத்தைப் புரிந்துகொள்ள அடையாளமாகக் காட்டப்படும் பொருள் குறியீடாகும்.

“மனித உள்ளம் பல எண்ணங்களை நனவிலும் கனவிலும் உணர்ந்தும் உணராமலும் வெளியிடும்போது குறியீடுகளை உருவாக்குவதுண்டு. மறைந்தும் புதைந்தும் கிடக்கும் எண்ணங்கள் வேறு உருவம் கொண்டு எழுதலை உளவியலார் குறிப்பது இத்தன்மைத்து”[37] என்பர் முனைவர் ச.வே.சுப்பிரமணியனார்.

**“புளிப்பில் விருப்பம் பூத்தது வாழ்வில்**
**இனிப்பு மலர்ந்திட இன்பங் காய்த்தது**
**காதற் கனியைக் கண்டேன்” (முடி.க.ப.89)**

என்று ஒரு பெண் கருவுயிர்த்ததைக் குறியீட்டின்வழி வெளிப்படுத்துகிறார்.

சாதி, சாத்திர மடமைகளில் மூழ்கிக் கிடந்து, நன்மைகளை எதிர்ப்போரைக் கவிஞர் ‘சாத்திரக் குட்டையின் ஆமைகள்’ (பா.கு.ப.221) என்பர்.

**“உள்ளொன்றும் புறமொன்றும் பேசி நிற்கும்**
**உறவினரைப் படைக்கின்ற தெய்வம் ஆகி**
**வெள்ளைநிறம் கொண்டிங்கே உலகை ஆட்டி**

**விளையாடும் பணநாதன் கடைக்கண் நோக்கம்**
**துள்ளிவிளை யாடுவதால் என்மேற் குற்றம்**
**துணிந்துரையார்; பகைமாற்றி உறவை ஆக்கும்**
**வெள்ளையப்பன் புரிகின்ற விளையாட் டெல்லாம்**
**விரித்துரைப்பின் விந்தையினும் விந்தை யன்றோ!"**

**(க.மு.பக்.105-106)**

**"கொள்ளை யடிப்பதற்குக் கூசாப் பெருவாணிகர்**
**வெள்ளையப்பன் ஒன்றே விரும்பிக் குவிக்கின்றார்" (ம.தே.ப.130)**

என்னும் கவிதைகளில் வெள்ளையப்பன் என்பது பணத்தின் குறியீடாக உள்ளது. தெருவெல்லாம் தமிழ் முழங்க வேண்டும் என்று கூறிய பாரதியைக் கண்டு பலர் எள்ளி நகையாடச் சினங்கொண்டெழுந்த கவிஞர்,

**"சிரிப்பதற்கா உரிமைப் போர் தொடுத்து நின்றோம்?**
**செந்நீரும் கண்ணீரும் சிந்திக் காத்தோம்?**
**பறிப்பதற்கோ தென்னாட்டார் உரிமை எல்லாம்?**
**பாரதத்தின் பெயர்சொல்லி வடக்கு மட்டும்**
**பருப்பதற்கோ? செந்தமிழ்நற் றமிழர் வாழ்ந்து**
**பாரதமும் வாழ்கவென உணர்ந்தே சொன்னேன்**
**மறுத்துரைத்தால் ஈரோடும் காஞ்சி யுந்தாம்**
**வழிசொல்லும்; புதியதொரு விதியும் செய்யும்" (க.மு.ப.126)**

என்று பாரதி தன் நெஞ்சினுள்ளே உரைத்ததாகப் பாடுகிறார். இதில் ஈரோடு என்பது பெரியாரையும், காஞ்சி என்பது அண்ணாவையும் குறியீடாய் உணர்த்துகின்றன.

தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவி குழந்தையின் முகம் கண்டு பிரிவுத்துன்பத்தைத் தணிவித்து மகிழ்ந்திருப்பர். ஆனால் கண்ணகித்தாய் தன் கணவனாகிய கோவலனை, சடங்குகளில் எவ்விதக் குறையுமில்லாமல் மணஞ் செய்தாலும் காதலெனும் கடலில் மூழ்கினாலும் கடலில் முத்தொன்றும் கண்டாளல்லள். ஆதலால் பிரிவென்னும் கொடும்பாவி அவளுக்களித்த பெருந்துயரத்தைத் தணிவிக்கும் வழியறியாதவளாய் இரங்கி நெஞ்சை இடருக்கே அளித்துவிட்டாள். கோவலனுக்கு மாதவியைப் போல் தன் உள்ளக் குமுறல்களையெல்லாம் கொட்டிக் கடிதமாகவும் எழுதவில்லை. தீதறியாத அன்னையவளின்

பிரிவுத் துன்பத்தைச் சொல்வதற்கு முயன்றால் அது இயலாத ஒன்று (த.மு.ப.184) என்பதில் குழந்தைக்கு முத்தைக் குறியீடாக்கியுள்ளார்.

சிவப்பு நிறத்தைப் புரட்சி, வெற்றி ஆகியவற்றின் குறியீடாகக் குறிக்கின்றார் (நெ.பொ.பக்.78,81).

**தொன்மம்:**

தொன்மம் என்பதை ஆங்கிலத்தில் மித் (MYTH) என்று கூறுவர். பழங்கால இதிகாசங்களிலும் புராணங்களிலும் சொல்லப்பட்டுள்ள பாத்திரங்களைக் கவிதையில் எழுதி, அவற்றின் மூலம் தான் சொல்ல வந்த கருத்தைக் கூறுவது தொன்மம் ஆகும். கவிதை நயம்பெறவும் சிக்கல்களை விளக்கிடவும் தொன்மக் கூறுகள் கையாளப்பெறுகின்றன.

முடியரசனார் 'ஊரார்' என்னும் தலைப்பிலமைந்த கவிதையில் 'நாம் வளமையோடு வாழ்ந்தாலும் வறுமையோடு வாழ்ந்தாலும் ஊரார் சிலர் நம் செயல்களை, வாழ்க்கை நிலைமையை விமர்சிக்கவும் பழித்துப் பேசவும் செய்வார்கள். ஊரார் பேச்சைக் காதில் வாங்கிக் கொள்ளாமல் தன் குறிக்கோளிலிருந்து வழுவாமல் வாழவேண்டும். காதலனாம் கோவலனை மதுரை மன்னன் கொலைசெய்த செய்தி கேட்டுத் துன்புற்று மாதவியும் மாதவி மகளும் துறவறம் பூண்டனர். ஊரார் எவ்வளவோ பழித்துப் பேசியும் அவற்றைச் சிறிதும் பொருட்படுத்தாமல் உள்ளம் தூய்மையுடையவளாய்ப் பழியுரைகளைப் புறக்கணித்துத் தன் குறிக்கோளில் வெற்றி கண்டாள் மாதவி' (முடி.க.ப.79) என்று போற்றும் கவிஞர், 'ஊரார் பேச்சைக் கேட்டு, ஊரார்க்குமுன் சீதையின் கற்பை மெய்ப்பிக்க, கர்ப்பிணியான சீதையைக் கானகம் செல்ல வைத்தான் இராமன். அதனால் குடும்பத்தில் பிரிவு ஏற்பட்டது. ஊரார் கூறும் கருத்துக்குச் செவிசாய்த்தால் குடும்பத்தில் பிளவு வரும்' (முடி.க.ப.80) என்று ஒப்பிட்டுக் காண்கிறார். எனவே இராமனைப் போன்றிராமல் மாதவியைப் போல் வாழ வேண்டுமென்று மாதவி, மணிமேகலை, சீதை, இராமன் ஆகியோரைத் (முடி.க.ப.78-79) தொன்மமாக்கி உரைப்பர்.

கற்புநெறியில் தமிழவாழ்வே சிறந்ததென்பதை விளக்க வந்த கவிஞர்,

**“ஐவருக்குப் பத்தினியாய் இருந்துங் கூட**
**அயலான்மேல் ஆசையுள தென்று ரைத்த**
**மைவிளைக்கும் கண்ணுடையாள் கற்பின் போக்கு**
**மாண்புடைய தமிழ்வாழ்வா? வெட்கம் வெட்கம்!**
**கைவிளைத்த பொருளெல்லாம் பரத்தைக் காக்கிக்**
**கணவனவட் பிரிந்திருந்தும் தனது நெஞ்சில்**
**மொய்விளைக்கும் நிறைகாத்து வாழ்ந்த எங்கள்**
**முன்னையவள் கற்பன்றோ தமிழ வாழ்வு!**
**கொலையுண்டான் காதலன்தான் என்ற செய்தி**
**கூர்வேலாய்த் தைத்ததுமே செல்வ மெல்லாம்**
**நிலையுண்ட அறச்செயலுக் காக்கித் தூய**
**நெறிநின்றாள் மாதவித்தாய்! விஞ்சு காம**
**வலையுண்ட இந்திரனைத் தழுவி நின்ற**
**வடிவழகி அகலிகையும் மேன்மை பெற்றாள்,**
**துலைகொண்ட கோல்போல ஆய்ந்து காணின்**
**தூயதமிழ் வாழ்வுதனைத் தெரிந்து கொள்வீர்” (க.மு.ப.9)**

என்று மகாபாரத திரௌபதி, இராமாயண அகலிகை ஆகியோரைச் சிலப்பதிகாரக் கண்ணகி, மாதவியரோடு ஒப்பிட்டுரைக்கின்றார்.

**அங்கதம்:**

“அங்கதம் என்பது சமுதாயக் கேடுகளை நையாண்டி செய்து தாக்குவதன் மூலம் சீர்திருத்தும் ஒருவகை இலக்கிய உத்தி”[38] என்பர் ந.பிச்சமூர்த்தி. முடியரசனார் குமுகாய அவலங்களை அங்கதச் சுவையோடு பாடுவதில் தேர்ந்தவராகத் திகழ்கின்றார்.அத்தர் விற்பவன் குறித்து,

**“பூசுவது நம்முடலில் ஒன்று -சின்ன**
**போத்தலில் அடைத்துக் கொடுப்பது மற்றொன்று**
**காசுவரும் படிஒன்றே நோக்கம் - குழைந்து**
**கனியமிகப் பேசிடுவான் கண்டபலன் ஏக்கம்**

**தடவுவான் மற்றொன்றெ டுத்தே - என்ன**
**தடுத்தாலும் தாளிற்சு ருட்டிக் கொடுத்தே**
**தடவுவான் நம்தலையைப் பார்த்து-வேறு**
**தப்பவழி இல்லையென நாமிருப்போம் வேர்த்து**
**ஆரீவர் இப்பொருளைப் போலே-பூசும்**
**ஆடைமணக் கும்அடடா ஐந்தாறு நாளே**
**பாரீசுச் சரக்கொன்றி ருக்கு-நல்ல**
**பம்பாய்ச் சரக்கிங்கி லாந்துச் சரக்கு**
**என்று பல தேயத்தைச் சொல்வான்- நம்மை**
**எப்படியும் வாய்திறக்க ஒட்டாமல் வெல்வான்**
**ஒன்றேனும் உண்மையோ என்று பார்த்தால்**
**உள்ளூர்ச் சரக்கென்று தெரியுமே நன்று" (கா.பா.ப.101)**

என்று அழகாக அங்கதச் சுவையோடு பாடலாக்கித் தருகிறார் கவிஞர்.

சினிமாத் துறையில் நடிகையர் சதைகாட்டிச் சம்பாதிக்கும் இழிநிலையைக் கண்டு கொதிக்கும் கவிஞர் நடிகையரே கூறுவதுபோல் அங்கதமாகப் (பா.கு.ப.180) பாடுகிறார்.

'உரியதோர் கல்வி கற்றோர், உயரிய பதவி பெற்றோர், சிறிய பணியில் உள்ளார், சீரிய கல்வி இல்லார் அனைவரும் கையூட்டுச் சாமி முன்னர் சரி நிகராவர். கையூட்டுச் சாமியினால் முடியாத செயலென்று எதுவுமேயில்லை. எதனையும் அதுவே செய்யும்' (நெ.பொ.ப.48) என்று கவிஞர் கையூட்டுக் கொடுப்பவர்க்கும் பெறுபவர்க்கும் வாழைப்பழத்தில் ஊசியேற்றுவதைப் போன்று எள்ளலோடு சவுக்கடி தருகிறார்.

"இறைவனுக்கு ஓராயிரம் பெயர்கள் வைத்தோம். பாவம், துயர் கொடுத்தோம். தேரில் நிறுத்தித் திருமணங்கள் செய்து வைத்தோம். பூட்டாத மனக்கதவைப் பூட்டி விட்டுப் பூசை செய்தோம். நம்மிடம் மாட்டிக்கொண்டு கடவுள்தான் படாதபாடு பாடுகின்றார்" (மு.தே.ப.126) என்று இறையையும் அங்கதச் சுவையோடு பாடுவர்.

**பன்னூல் புலமை:**

முடியரசனார் பன்னூல் புலமை மிகுந்தவர் என்பதனை அவர்தம் படைப்புகளில் பலவிடங்களில் காணமுடிகிறது.

**"செம்புலத்துப் பெயல்நீர்போல் இருவர் நெஞ்சும்**

**சேர்ந்தமையால் இல்லறத்துப் பள்ளி புக்கோம்" (நெ.பூ.ப.256)**

**"தான்சமைத்த சுவையுணவை இனிதென் றுண்ணும்**
**தலைவனைக் கண்டுள மகிழ்ந்தாள் தலைவி என்று**
**நான்சுவைத்த குறுந்தொகைப் பாட்டுரைக்கும் அந்த**
**நலமேபோல் சுவை வாழ்வு வாழ்க தோழி!" (முடி.க.ப.148)**

என்பனவற்றில் குறுந்தொகைப் பாடல் கருத்து உரைக்கப்பெற்றுளது.

வளமையில் வாழ்வோர் வாழ்க்கையில் மகிழ்வோடிருக்கின்றனர் என்று எண்ணுவதும் வறுமையில் வாழ்வோர் துன்புறுகின்றனர் என்று எண்ணுவதும் பேதமையாகும். அவரவர் உள்ளத்தை அடிப்படையாகக் கொண்டதே மகிழ்வான வாழ்க்கை. வளமையிலிருப்போர் துன்புறுவதும் உண்டு. வறுமையிலிருப்போர் இன்புறுவதும் உண்டு என்னும் கருத்துடைய பெருங்கடுங்கோ பாடிய பாலைக்கலிப் பாடல்[39] வழிக் கவிஞர் குடும்பத்தில் வாழும் நெறிமுறையை எடுத்துக்காட்டுகிறார். இதனை,

**"ஒன்றன் கூறாடை உடுப்பவரே யானாலும்**
**ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை எனவுரைத்த**
**மூத்தோர் மொழிப்பொருளை முன்னிறுத்தி நாம்வாழின்**
**பூத்துக் குலுங்கும் பொலிவு" (வ.கோ.ப.81)**

என்னும் பாடல் விளக்கும். கவிதையின்பத்தைப் பற்றிக் கட்டுரை எழுதிய கவிஞர் சொல் நயத்தை விளக்கும் பொருட்டு,

**"காமர் கடும்புனல் கலந்தெம்மோடு ஆடுவாள்**
**தாமரைக்கண் புதைத்தஞ்சித்**
**தளர்ந்ததனோ டொழுகலான்"[40]**

என்னும் கலித்தொகைப் பாடலை எடுத்துக்காட்டி காமர், கடும்புனல், கலந்தெம்மோடு, ஆடுவாள் என்ற சொற்களில் குறிப்புப் பொருள்கள் இலைமறை காய் போல இருத்தலை விளக்கிக் காட்டுவர். (எ.வ.த.ப.63)

கணியன் பூங்குன்றனாரின் 'யாதும் ஊரே யாவருங் கேளிர்'[41] என்ற பாடல் வரியை முடியரசனார்,

**"---------------------- யாதும் மூர்**
**பிறரெல்லாம் கேளிர் என்ற**
**பற்றுடைய தமிழினத்தார் பரந்த மனப்**
**பான்மையெனப் பரந்து நிற்கும்" (முடி.க.ப.59 )**

**"யாதும் ஊரே யாவரும் கேளிர் என்**
**றோதி ஓதி உயர்ந்ததோடன்றி" (பூ.கொ.1:9-10)**

**"யாதும் நம் ஊரே யாகும்**
**யாவரும் கேளிர் என்னும்**
**கோதிலாக் கொள்கை முற்றுங்**
**குறித்திடும் பாட லொன்றை" (ஊ.கோ.ப.37)**

என்னும் பாடல்களில் தமிழரின் மனப்பான்மையை விளக்க எடுத்தாளுகின்றார்.

'யாண்டு பலவாயினும் நரையில வாகுதல் எவ்வாறு?' என்னும் வினாவிற்குப் புறநானூற்றுப் பாடல் பதில் கூறுகின்றது, 'என் இல்லாள் மனைக்குத் தக்க மாட்சிமையுடைவள். என் மக்கள் நிரம்பிய அறிவும், முடித்த கேள்வியும் உடையவர்கள். என் பணியாட்கள் நான் காண்பது போலவே என் உடைமையைக் காணும் இயல்பினர். என் நாட்டை ஆளும் வேந்தன் மக்கட்கு அல்லாத எச்செயலையும் செய்யான். நான் வாழும் ஊர் கொள்கைகளை வெளிப்படுத்தும் சான்றோர் நிரம்பியது. எனவே, நான் கவலை அறியாது மனம் மகிழ வாழ்கிறேன். எனவே நரையும், திரையும் என்னை அணுகவில்லை என்று புலவர் பிசிராந்தையார் பதில் கூறுகின்றார்.[42] கவிஞர் மக்கட் பண்பு வழுவாமல் வாழ வேண்டும் என்பதற்கும் செயற்கரிய நட்பிற்கும் (க.மு.ப.38) பிசிராந்தையார் வாழ்வு குறித்த பாடலை இயைபுபடுத்திக் காட்டுகின்றார்.

பதிப்புச் செம்மல் மெய்யப்பனாரை வாழ்த்தும் கவிஞர் 'வையை மணலினும் வாழினும் இனிதே' (ம.க.ப.223) என்று வாழ்த்துகின்றார். இவ்வாழ்த்துமுறை சங்க மரபின் அடிப்படையில் அமைந்துளது.

கவிஞர் ‘எப்படி வளரும் தமிழ்?’ என்னும் தன் கட்டுரை நூலில் மகார் நோன்பு விழாவைப் பற்றிக் குறிப்பிடுகையில் மதுரைக்காஞ்சி, பட்டினப்பாலை, பெரிய புராணம், பெரும்பாணாற்றுப்படை, புறநானூறு ஆகிய இலக்கியங்களில் விழாக்கள் பற்றிய குறிப்புகள் இடம் பெற்றிருப்பதை எடுத்துக் காட்டுகிறார். (எ.வ.த.ப.11)

சிறார் வில், வேல்பயிற்சியுடையவர் என்பதை விளக்க புறப்பொருள் வெண்பாமாலைப்பாடல் மூலம் சான்று காட்டுகிறார் (எ.வ.த.ப.17).

**திருக்குறள்:**

கவிஞர் திருக்குறள் மீது மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்ததை அவர் தம் படைப்புகளில் பலவிடங்களில் காண முடிகிறது. வள்ளுவத்தைப் போற்றும் பாங்கில் ‘வள்ளுவர் கோட்டம்’ என்ற நூலைப் படைத்ததோடு, அவரது கடிதவிலக்கியங்களான அன்புள்ள பாண்டியனுக்கு, அன்புள்ள இளவரசனுக்கு ஆகிய நூல்களில் திருக்குறளை மிகுதியாக எடுத்தாண்டுள்ளார். அதிலும் குறிப்பாக அன்புள்ள இளவரசனுக்கு நூலில் உள்ள கடிதங்கள் அனைத்திலும் கடிதத்தின் நிறைவில் அக்கடிதத்திற்குப் பொருத்தமான திருக்குறளைக் கூறி முடிக்கின்றார். இதனை,

**“அனிச்சத்தின் மலர் மோப்பக் குழையும் என்பர்” (முடி.க.ப.148)**
**“கொன்றன்ன இன்னா செய்யினும் நீ செய்**
**ஒன்றுநன் றுள்ளினேன்” (நெ.பூ.ப.230)**

என்பன போன்றவை நன்கு விளக்கும்.

மூலநூல் கருத்துகளை மட்டுமின்றி உரையாசிரியர்களின் உரைகளையும் பயின்றவர் கவிஞர் என்பதை ‘உயிருஞ் சிறந்தது, மானமுஞ் சிறந்தது, இவ்விரண்டில் ஒன்றை விட்டுவிட வேண்டிய நிலை வந்தால் விட்டுவிட வேண்டியது உயிரையா? மானத்தையா? என்னும் வினாவிற்கு உயிரை விடுத்து மானம் காப்பதே தமிழ் நூல்கள் தரும் விடை. ஆனால் ‘மானம் விடுத்து உயிரைக் காக்க’ என்பது வடநூல் தரும் விடை என்பதனை இறப்ப வருவழி, இளிவந்தன செய்தாயினும் உய்க’ என்று வடநூல் வழி பரிமேலழகர் உரைப்பதை கவிஞர் எடுத்தியம்புவதின் வழி அறிய இயலும். (முடி.க.ப.157)

**நாலடியார்:**

"பழியெனில் உலகுடன் பெறினுங் கொள்ளலா்"[43] என்னும் புறநானூற்று வரிக்கு ஒப்புமையாக,

**"வானகங் கையுறினும் வேண்டார் விழுமியோர்**
**மான மழுங்க வரின்"[44]**

**"இழித்தக்க செய்தொருவன் ஆர வுணலின்**
**பழித்தக்க செய்யான் பசித்தல் தவறோ?"[45]**

என்னும் நாலடியார் பாடல் அடிகளைக் கூறி மானத்தை மதித்து நடக்கும் பெற்றியரே நாலடியார் வினவும் வினாவிற்கு விடை பகரும் தகுதி வாய்ந்தவா் என்றுரைக்கின்றார். (முடி.க.ப.157)

மேலுலக இன்பம் சிறந்ததா? தமிழின்பம் சிறந்ததா? என்றால் தமிழின்பம்தான் சிறந்தது என்னும் தம் கருத்திற்கு அரண் சேர்க்க,

**"தவலருந் தொல்கேள்வித் தன்மை யுடையார்**
**இகலில ரெ∴குடையார் தம்முட் குழீஇ**
**நகலி னினிதாயிற் காண்பா மகல்வானத்(து)**
**உம்ப ருறைவார் பதி"[46]**

என்னும் நாலடியார் பாடலை மேற்கோள் காட்டுகிறார். **(எ.வ.த.ப.87)**

'அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக் குறுகத் தரித்த குறள்' என்று திருவள்ளுவமாலையில் ஔவையார் புகழ்வதைக் கவிஞர்,

**"அணுவெடுத்துத் துளையிட்டுக் கடல்கள் ஏழும்**
**அதனுள்ளே புகவிட்ட செய்கை போல" (க.மு.ப.94)**

என்று தம் பாடலில் உவமையாக்குகின்றார்.

**"ஆழ அமுக்கி முகக்கினும் ஆழ்கடல் நீா்**
**நாழி முகவாது நால் நாழி"[47]**

என்ற ஔவையின் பாடல் வரியை,

**"புலமைக்குக் கடலிவா்பால் மூழ்கி நின்றும்**
**புல்லறிவால் அப்புனலுட் சிறிதே ஏற்றேன்**

**அலைகடற்குள் நாழியினை அமுக்கி மொண்டால்**

**அதுநான்கு நாழிநீர் முகவா தன்றோ?" (ஊ.கோ.ப.93**)

என்று கவிஞர் மேற்கோள் சுட்டுகின்றார்.

தமிழிசை உலகெங்கும் இசைத்திட வேண்டுமென்பதில் தணியாத ஆர்வம் கொண்ட கவிஞர் சிலப்பதிகாரத்தில் இசை போற்றும் காதைகளை,

**"நெஞ்சினை யள்ளும் செஞ்சொற் சிலம்பில்**

**வேனிற் காதையும் வேட்டுவ வரியும்**

**ஆனினங் காக்கும் ஆய்ச்சியர் குரவையும்" (பூ.கொ.26:146-148)**

என்றுரைத்து பண்களெலாம் இசைத்துப் பாரில் புகழ்பரப்பப் பூங்கொடியை முனிவர் வாழ்த்துவதாகத் தெரிவிக்கின்றார்.

**மணிமேகலை:**

மணிமேகலையில் மலர்வனம் புக்க காதையின் 29 அடி முதல் 41 அடி வரை பாடப்பட்டுள்ள மணிமேகலையின் தோழி சுதமதி வரலாற்றை விரிவுபடுத்தி சுதமதி என்னும் தலைப்பில் வேதநெறியால் சமண நெறிக்கும், புத்த நெறிக்கும் நேர்ந்த விளைவுகளை விவரித்துப் பாடுகிறார் (முடி.க.பக்.29-30)

மாதவியை அனைவரும் இகழ்ந்துரைக்கக் கண்டு அதனைப் பொறாத கவிஞர் மாதவியின் பெருமையை ஆரிய இலக்கியக் கதை மாந்தரிலிருந்து உயர்வுபடுத்திப் பெருமைப்படுத்துகிறார் (முடி.க.ப.158). உணவின் உயர்வைச் சிறப்பிக்கச் சீத்தலைச் சாத்தனாரின்,

**"உண்டி முதற்றே உணவின் பிண்டமெனச்**

**சாத்தன் பகர்ந்ததற்பின் சான்றின்னும் வேண்டுவதோ?" (க.மு.பக்.27-28)**

என்று மேற்கோள் காட்டுகின்றார். மணிமேகலை காப்பியத்தின் தாக்கம் கவிஞர்தம் பூங்கொடி காப்பியமாக முகிழ்த்துள்ளது.

கனவில் கண்ட கம்ப நாட்டைப் போன்று நம் நாடும் திகழ வேண்டுமென்று விரும்புகிறார் கவிஞர் (த.மு.பக்.198-203). மேற்கூறிய இலக்கியங்கள் மட்டுமன்றி கலிங்கத்துப்பரணி (எ.வ.த.ப.87), திருவிளையாடற்புராணம் (முடி.கடி.ப.99), மதுரைக்கலம்பகம்

(முடி.கடி.ப.46), தேவாரம் (தா.கா.ப.81), திருவாசகம் (ஊ.கோ.5:12), மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் (முடி.கடி.ப.47), தமிழ்விடு தூது (எ.வ.த.ப.87), தனிப்பாடல் (எ.வ.த.ப.64) சங்கரசோழன் உலா (எ.வ.த.ப.87) போன்ற பல இலக்கியங்களையும் கற்றுத் தேர்ந்தவரென்பதை முடியரசனார் தம் படைப்புகளின் வழி அறிய முடிகிறது. கவிமணி, பாரதி, பாரதிதாசன் கவிதைகளின் தாக்கமும் முடியரசனாரின் கவிதைகளில் காணப் பெறுகின்றன.

**மேலைநாட்டு இலக்கியங்கள்:-**

கவிஞர் மேலை நாட்டு இலக்கியங்களையும் கற்றுத் தேர்ந்தவர் என்பதை அவர்தம் படைப்புகள் உணர்த்துகின்றன.

“உள்ளத்தில் உணர்ச்சி, கவிதை வெறி பொங்கிக் கொண்டே இருக்க வேண்டும். அவ்வுணர்ச்சியும் வெறியும் தான் கவிதைகளை உந்தி வெளிக் கொணரும் என்ற தம் கருத்திற்கு ‘உணர்ச்சி பொங்கி அடங்கிய பின் எற்படும் அமைதியில் திரும்ப அனுபவிக்கப்படும் ஓர் இன்பப் பெருக்கே கவிதை’ என்ற வேர்ட்சுவர்த்துவின் கூற்றையும் ‘மனிதனுடைய உள்ளத்திலே அடிக்கடி தோன்றும் உயரிய ஆவேசத்தை வாக்கில் நிரந்தரமாக்குவது கவிதை’ என்ற கவிஞர் செல்லியின் கூற்றையும் ‘வாழ்க்கையின் ஆராய்ச்சியே கவிதை’ என்ற மாத்யூ அர்னால்டு அவர்களின் கூற்றையும் மேற்கோள் காட்டுகின்றார். (முடி.க.பக்.83-84)

‘தாய்மொழி பேண்’ என்னும் கடிதத்தில் நம் தாய்மொழியின் பெருமையைக் காந்தியடிகளின் கூற்று வழி விவரிக்கும் கவிஞர் டாக்டர் வின்சுலோ என்ற மேலை நாட்டறிஞர் கருத்தையும் கோடிட்டுக் காட்டுகிறார். ‘டாக்டர் வின்சுலோவின் தமிழ் கிரேக்க மொழியை விட மென்மையும், திட்பமும் வாய்ந்தது. இலத்தீன் மொழியை விட வன்மை பெற்றது; ஆற்றலாலும், வளத்தாலும் ஆங்கிலத்தையும் செர்மன் மொழியையும் ஒத்திருக்கின்றது’ என்னும் கூற்றைத் தமிழின் உயர்வு காட்ட எடுத்துக்காட்டுகிறார் (முடி.கடி.ப.135). மாத்யூ அர்னால்டு என்பார் கவிதைவடிவில் எழுதிய பாரசீகக் கதையைத் தமிழ் மரபிற்கேற்ப ‘வீரகாவியம்’ என்னும் காப்பிய நூலாகப் படைத்தளித்துள்ளார்.

பாரசீகக் கவிஞர் நிசாமி இயற்றிய கோசுரு சிரீன் என்னும் பெருங்காப்பியத்தைத் தழுவி ‘காதற் சிலை’ என்னும் தலைப்பில் நெடும்பாட்டாக முடியரசனார் பாடியுள்ளார் (முடி.க.ப.18). ஹீட் என்னும் ஆங்கிலக்கவிஞர் இயற்றிய பாடலைத்தழுவி ‘அன்றும் இன்றும்’ என்னும் பாடலை எழுதியுள்ளார் (நெ.பூ.பக்.222-223)

**பழமொழிகள் (சொலவடைகள்) :**

முடியரசனார் தம் கவிதைகளைப் பாமரர்க்கும் புரியவைப்பதற்காக மக்கள் பேச்சுவழக்கில் கூறப்படும் கிராமத்துப் பழமொழிகளைப் பலவிடங்களில் பயன்படுத்தியுள்ளார்.

‘சூரியனைப் பார்த்து நாய் குரைத்தால் சூரியனுக்கா வாய் வலிக்கும்’ என்பது கிராமத்துப் பழமொழி. இதனைக் கவிஞர்,

**“......... பிறருரையைக் கேட்டு வாழ்வில்**
**கலங்கிமிகத் துயருழந்து சாக வேண்டா**
**குரைக்கின்ற ஒலிகேட்டுக் கதிரோன் வானில்**
**குறுகுவதற் கஞ்சுவனோ? அவன்போல் வாழ்வீர்” (முடி.க.ப.80)**

என்று மேற்கோள் காட்டி விளக்குகிறார்.

‘உலை வாயை மூட முடியும். ஊர்வாயை மூடமுடியுமா? என்னும் பழமொழியை,

**“உலைவாயை மூடவொரு மூடி யுண்டு**
**கூன்காணும் உள்ளத்தார் ஊரார் வாய்க்குக்**
**குவலயத்தில் மூடியில்லை ஆதலாலே**
**தேன்காணும் இசைபாடி என்றும் போலத்**
**திகழ்ந்திடுவோம் வாருங்கள் அத்தான் என்றாள்” (முடி.க.ப.83)**

என்று கவிஞர் தலைவி வாயிலாக எடுத்துரைக்கின்றார்.

‘காற்றுள்ள போதே தூற்றிக் கொள்’ என்னும் பழமொழியை,

**“நேற்றுனை வைதார் இன்றுனைப் புகழ்வார்**
**நிலைமையை எண்ணிப் பார்த்திடடா**
**காற்றுள போதே தூற்றிட வந்தார்**
**காரணம் இதுதான் கண்டிடடா” (கா.பா.ப.108)**

என்று செல்வமிருக்கக் கூடி வரும் புகழ்பாடிகளின் குணத்தைத் தோலுரிக்கப் பயன்படுத்துகிறார்.

‘கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவிபாடும்’ என்ற பழமொழியை,

**“விருத்தமெனும் ஒண்பாவால் புகழைப் பெற்றார்**
**வேறொருவர் ஈங்கில்லை; கம்பன் பெற்ற**
**பெருத்தபுகழ் பாரறியும்; வண்ண மெல்லாம்**
**பெருங்களிப்பால் கூத்தாடி நிற்கும் பாட்டுத்**
**திறத்தைஒரு பழமொழியே அளந்து கூறும்;**
**தென்மொழியான் கம்பன்றன் வீட்டில் கட்டும்**
**சிறுத்த ஒரு தறிகூடக் கவிதை யாகச்**
**செப்புமெனில் புகழ்சொல்ல வல்லார் யாரோ?” (த.மு.ப.156)**

என்று கவிதையில் மேற்கோளாக்கி உரைப்பர்.

நீரின் பெருமை பாடும் கவிஞர் ‘தாயைப் பிழைத்தாலும் தண்ணீரைப் பழிக்காதீர்’ என்ற பழமொழியை எடுத்துக் காட்டி நயம் உணர்த்துகிறார் (த.மு.ப.165)

‘உழுபவன் கணக்குப் பார்த்தால் உழக்குக் கூட மிஞ்சாது’ என்பது விவசாயியின் நிலையைக் காலங்காலமாய் சொல்லிவரும் பழமொழி இனியாவது உழவர்களின் வறுமையும் உழவர்களின் நிலையுணர்த்தும் பழமொழியும் மாற வேண்டும் என்று விரும்பும் கவிஞர்

**“உழுகின்ற காளைக்கு வைக்கோ லேனும்**
**ஒருசிறிது கிடைத்து விடும்; வாழ்நா ளெல்லாம்**
**உழுதொழிலில் கழிக்கின்றோன் கணக்குப் பார்த்தால்**
**உழக்கேனும் மிஞ்சாதென் றுலகஞ் சொல்லும்**
**பழமொழியைக் கேட்டதினிப் போதும் போதும்” (பு.வி.செ.ப.115)**

என்று பாடுகிறார்.

முள்மரத்தை முளையிலேயே கிள்ளி எறிய வேண்டும் என்ற பழமொழியை வஞ்சி நாடனையும், காழக மன்னனையும் ஒழித்துக் கட்டப் பாண்டியன் கடம்பனிடம் கூறும் கூற்றாகவும் (இ.வ.ப.203), பாண்டியன் கடம்பனிடம் காழக மன்னனையும் மலைக்கோனையும் வென்றொழிக்கக் கூறும் கூற்றாகவும் (இ.வ.ப.292) கவிஞர் அமைத்துள்ளார்.

**தொகுப்புரை**

- படைப்பாளன் தன் படைப்பின் உருவம் - உள்ளடக்கத்தைப் பிணைக்கின்ற பாலமாக உத்தியைப் பயன்படுத்துகிறான்.
- முடியரசனாரின் செய்யுள் நடை சங்க இலக்கிய நடையை ஒத்தது. எதுகை, மோனை, இயைபு, முரண், ஒலிக்குறிப்பு, அடுக்குத்தொடர், வினா-விடை, உரையாடல், இலக்கணச் சொற்கள், அடுக்குவினா, எளிய சொற்கள் போன்ற எழில் நலங்களால் சிறந்தமைந்துள்ளது.
- கவிஞரின் உரைநடை நூல்களிலும் கவித்திறம் வெளிப்படுவதாக அமைந்துள்ளது.
- ‘அன்புள்ள பாண்டியனுக்கு’ என்னும் கடிதவிலக்கிய நூலில் தலைப்புகள் அனைத்தையும் வியங்கோள் சொற்றொடர்களில் அமைத்துள்ளார். பதினைந்து கடிதங்களில் நிறைவிலும் கடிதப் பொருண்மையோடு தொடர்புடைய குறட்பாக்களைத் தந்துள்ளார்.
- ‘எக்கோவின் காதல்’ என்னும் சிறுகதை நூலில் கடிதங்கள் கதையை நகர்த்திச் செல்வதாய் அமைத்துள்ளார்.
- முடியரசனார் தன் படைப்புகளில் கையாண்டுள்ள உவமைகளை தொல்காப்பியர் நெறியில் ஆராய இயலும் முடியரசனாரின் படைப்புகளில் 85 இடங்களில் வினை உவமைகளும், 36 இடங்களில் பயனுவமைகளும், 44 இடங்களில் மெய்யுவமைகளும், 23 இடங்களில் உரு உவமைகளும் பயின்று வந்துள்ளன.
- முடியரசனார் படைப்புகளில் காணலாகும் உருவகங்களை தொகையுருவகம், விரியுருவகம், இயைபு உருவகம், முற்று உருவகம் என வகைப்படுத்தலாம்.
- முடியரசனார் தம் கவிதைகளில் உவமையணி, எடுத்துக்காட்டு உவமையணி, இல்பொருளுவமையணி, ஏகதேச உருவக அணி, சொல்பின்வரு நிலையணி, வேற்றுமையணி, தற்குறிப்பேற்ற அணி, புகழாப் புகழ்ச்சி அணி,
- மாறுபடு புகழ்நிலையணி, இரட்டுற மொழிதலணி, பிறிது மொழதலணி, உயர்வு நவிற்சியணி போன்ற அணிகளைப் பயன்படுத்தியுள்ளார்.
- பல்வேறு திறம்பட்ட வருணனைகளைத் தம் படைப்புகளில் இயற்கை வருணமை, இட வருணனை, பொழுது வருணனை, மனிதர்கள் வருணனை போன்ற பகுப்புகளிலும், கற்பனைகளை படைப்புக்கற்பனை, இயைபுக் கற்பனை, கருத்துவிளக்கக் கற்பனை ஆகிய பகுப்புகளில் பகுத்துக்காணப் பெற்றுள்ளது.
- குறியீடு, தொன்மம், அங்கதம் போன்ற உத்திகளைத் தம் படைப்புகளில் கையாண்டுள்ளார்.

- முடியரசனார் படைப்புகளின் பலவிடங்களில் அவரது பன்னூல் புலமை வெளிப்பட்டுள்ளது.

**சான்றெண்விளக்கம்**


1. AC Chettiar, English Tamil Dictonary, University of Madras, P.3408
2. தொல்காப்பியம், 656
3. ந.பிச்சமுத்து, திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கைகளும், ப.4
4. முனைவர் ச.வே.சுப்பிரமணியன், இளங்கோவின் இலக்கிய உத்திகள், ப.6
5. மேலது, ப.6
6. இரா. தண்டாயுதம், தற்காலத்தமிழ் இலக்கியம், ப.8
7. சி.பாலசுப்பிரமணியம், இலக்கிய அணிகள், ப.28
8. ந.பிச்சமுத்து, திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கைகளும், ப.101
9. வை. பாலசுப்பிரமணியம், பாரதிதாசன் உவமைகள், ப.7
10. முனைவர்.அர.சிங்கார வடிவேலன், சங்கஇலக்கிய உவமைகள், ப.11
11. பின்னிணைப்பு - ப.2
12. மேலது, ப.2
13. தொல்காப்பியம், 285
14. பின்னிணைப்பு - ப.2
15. மேலது, ப.2
16. பேரா.அ.ச.ஞானசம்பந்தன், இலக்கியக்கலை, ப.257
17. மேலது, ப.258
18. தண்டியலங்காரம், சூத்திரம், 34
19. டாக்டர். சு.பாலச்சந்திரன், இலக்கியத்திறனாய்வு, ப.111
20. முனைவர் பாக்கியமேரி, வெற்றிநோக்கில் இலக்கணம், இலக்கிய வரலாறு மொழித்திறன், ப.207
21. தண்டியலங்காரம், சூத்திரம், 35
22. மேலது, 41
23. ” 48
24. ” 55

25. ” 83

26. ” 82

27. ” 75

28. முனைவர் பாக்கியமேரி, வெற்றிநோக்கில் இலக்கணம், இலக்கியவரலாறு - மொழித்திறன், ப.204

29. தண்டியலங்காரம், சூத்திரம், 67

30. ந.பிச்சமுத்து, திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கைகளும், ப.94

31. W.H.Hudson, An Introduction to the study of literature, P.65 ( according to Keble, a vent for overcharged feeling or a full imagination)

32. மேலது, P.66 (Ruskin defines it as the suggestion, by the imagination, of noble grounds for the noble emotions)

33. தா.ஏ.ஞானமூர்த்தி, இலக்கியத் திறனாய்வியல், ப.140

34. ந.பிச்சமுத்து, திறனாய்வும், தமிழ் இலக்கியக் கொள்கைகளும், ப.95

35. மேலது, ப.96

36. ” ப.96

37. முனைவர் ச.வே.சுப்பிரமணியன், இளங்கோவின் இலக்கியஉத்திகள், ப.124

38. ந.பிச்சமூர்த்தி, திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கைகளும், ப.210

39. கலித்தொகை, பாலை, 18

40. கலித்தொகை, நெய்தல், 39

41. புறநானூறு, 192

42. மேலது, 191

43. ” 182

44. நாலடியார், 300

45. மேலது, 302

46. ” 137

47. மூதுரை, 19

## முடியரசனாரின் இலக்கிய மரபில் புதுமையும் மாற்றமும்

காலந்தோறும் தோன்றும் படைப்பிலக்கியங்கள் புதிய புதிய வடிவங்களைப் பெற்றாலும் முந்தைய இலக்கியங்களின் அடிப்படை மரபுகளையும் தொடர்புகளையும் விட்டுவிடுவதில்லை. புதிது புதிதாய் இலக்கியங்கள் தோன்றத் தோன்ற பழைய இலக்கிய மரபுகளின் செல்வாக்கு மெல்ல மெல்லக் குறைந்து வருமே தவிர, அடியோடு நீங்கிவிடுதல் இல்லை. எனவே, பழைய மரபுகள் ஓரளவு இருந்து வர புதிய இலக்கியங்கள் அந்த மரபுகளை ஒட்டியும் ஒட்டாமலும் காலத்திற்கேற்ப அமைந்து வருதல் உண்டு.

இலக்கியங்கள் காலத்திற்கும் சூழலுக்கும் தகுந்தவாறு தன்னைத் தகவமைத்துக் கொள்ளும். காலச் சூழலுக்கு ஒவ்வாத இலக்கிய மரபுகள் தேய்ந்து மறைவதும் தேவைக்கேற்பப் புதிய இலக்கிய மரபுகள் தோன்றி வளர்வதும் இலக்கியத் தளத்தில் இயல்பாக நிகழக்கூடியனவாகும். ஒரு படைப்பாளன் தான் படைக்கும் இலக்கியத்தில் பழைய இலக்கிய மரபுகளைப் போற்றுவதும் பழைய இலக்கிய மரபுகளை மறுத்துப் புதியனவற்றைப் புகுத்துவதும் அவர்களின் புதுமை எண்ணத்தைப் புலப்படுத்துவனவாய் அமையும். முடியரசனாரின் படைப்புகள் பெரிதும் மரபிலிருந்து மாறாச் சிறப்புடையன. இம்மரபு நிலையிலிருந்து அவர்படைக்கும் புதுமைகளையும் மாற்றங்களையும் காண்பது இவ்வியலின் நோக்கமாகும்.

**மரபு குறித்த அறிஞர்கள் சிந்தனைகள்:**

“பழமை பாராட்டுவதே மரபின் அடிப்படை. மரபு மட்டும் இல்லையானால் ஒருவர் ஆக்கிய கலையை, மற்றவர் அனுபவிக்க முடியாமல் போய்விடும். இலக்கியம் மரபுகளை ஒட்டி நிலைத்திருக்கும் ஒரு கலையாகும்”[1] என்பர் மு.வரதராசனார்.

காலத்திற்கேற்பப் புதிய வடிவங்களை இலக்கியங்கள் பெற்ற போதிலும் பழைய இலக்கியங்களின் தொடர்பையும், அடிப்படையையும் விட்டுவிடுவதில்லை, அவற்றையே இலக்கிய மரபு என்று கூறுதல் வழக்கம் ஆகும்.

“இலக்கியத்தில் மரபு என்பது துளியளவும் வேண்டப்படாதது என்றுரைப்பது மூடத்தனம். மரபை ஆக்கவும் அழிக்கவும் கவிஞனால் மட்டுமே முடியும்”[2] என்பர் பேரா.அ.ச.ஞானசம்பந்தம். படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழில்களில் மரபைப் படைக்கவும் காக்கவும்தான் கவிஞன் முயலவேண்டுமே தவிர அழித்திட முனையக்கூடாது.

“இலக்கிய வளர்ச்சிக்குத் தடையாய் இருப்பவை தாமே வலியழிந்துவிடும். மரபுகளுக்கு ஏற்ப இலக்கியம் செய்ய வேண்டும் என்பது பொருந்தாது என்றால், அவற்றை எதிர்த்துத்தள்ளிப் புறக்கணித்துத்தான் இலக்கியம் செய்ய வேண்டுமென வலிய முயலுவதும் பொருந்தாது”[3] என்பர் பேரா.அ.சிதம்பரநாதன்.

‘மரபு’ என்ற சொல்லாட்சி தொல்காப்பியர் காலத்திலேயே கையாளப் பட்டுள்ளது. தொல்காப்பியர் மரபு என்பதை இயல்களின் தலைப்புகளாக்கி நூல்மரபு, மொழி மரபு, தொகை மரபு, விளி மரபு, மரபியல் எனப் பெயரிட்டுள்ளார்.

**“மரபு நிலை திரிதல் செய்யுட் கில்லை**
**மரபு வழிப்பட்ட சொல்லி னான”[4]**
**“மரபுநிலை திரியிற் பிறிது பிறிதாகும்”[5]**

என்னும் மரபியல் நூற்பாக்கள் தொல்காப்பியர் மரபிற்கு அளித்திருந்த முக்கியத்துவத்தை எடுத்துரைப்பன. இதனைப் போன்றே மரபிலிருந்து மாறாத மரபு போற்றும் கொள்கையுடையவர் முடியரசனார். இதனை ‘எழுதுங்கள் புதுக்கவிதை’ என்னும் தலைப்பிலமைந்த,

**“மரபோடு வடிவங்கள் தடம் மாறினால்**
**மதியோடு மனமிங்குத் தடுமாறினால்**
**பிறவேறு மொழிகூடும் வெறியேறினால்**
**பிறழ்கின்ற உரையாவும் கவியாகுமோ?**
**மறையாத வடிவங்கள் பலவாக்குவோம்**
**மரபாக வருமாறு கலையாக்குவோம்**
**வண்ணங்கள் எண்ணங்கள் புதிதாகவே**
**வடிவங்கள் அமையுங்கள் மரபாகுமே**

**தனியான மரபுள்ள தமிழாகுமே**

**தரமான நெறிகொண்ட மொழியாகுமே" (பா.கு.235-236)**

என்னும் கவிதையில் புலப்படுத்துவர். இது மரபின் மீது கவிஞர் கொண்டுள்ள மதிப்பையும், மரபு மாறாத புதுமையில் கொண்டிருக்கும் விருப்பையும் ஒரு சேர எடுத்துக் காட்டும்.

**இலக்கிய மரபில் புதுமை:**

**"பழையன கழிதலும் புதியன புகுதலும்**

**வழுவல கால வகையி னான"[6]**

என்று நன்னூல் சூத்திரம் உரைப்பதுபோல் காலந்தோறும் புதுமைகள் இலக்கிய மரபில் தோன்றி வருகின்றன. முடியரசனார் பழைமை போற்றும் மரபுக்கவிஞராக இருப்பினும் தம் படைப்புகளில் சிற்சில புதுமைகளைப் புகுத்தியுள்ளார்.

'புதியனவாய்த் தோன்றுவனவெல்லாம் புதுமை அல்ல' என்னும் கருத்தினைக் கவிஞர் 'பூக்கட்டும் புதுமை' என்னும் தலைப்பிலமைந்த பாடலில்,

**"பூக்கின்ற மலர்களெல்லாம் பூக்கள் அல்ல**

**புதியனவாய் வருவவெல்லாம் புதுமை அல்ல**

**ஈர்க்கின்ற மணம்பரப்பும் மலர்க ளைத்தாம்**

**எல்லாரும் போற்றிடுவர்; நலம்ப ரப்பிக்**

**காக்கின்ற புதுமையைத்தான் ஏற்பர் சான்றோர்;**

**காகிதப்பூப் போல் விரியும் புதுமை எல்லாம்**

**போக்குதலே அறிவுடைமை; மயங்கி நின்று**

**புதுமைஎனும் பேராலே வீழ்தல் வேண்டா"**

**(பு.வி.செ.ப.119)**

என்று 'புதுமை' என்னும் சொல்லுக்குப் புதிய விளக்கம் தருகிறார்.

ஈர்க்கின்ற மணம்பரப்பும் மலர்களைப் போல், நலம் பரப்பிக் காக்கின்ற புதுமையையே சான்றோர் ஏற்பர். காகிதப்பூ போல் காட்சிக்கு மட்டும் அழகு தரும் புதுமையை விட்டொழித்தலே அறிவுடைமை. மயங்கி அதில் வீழ்தல் வேண்டாமென்று நலம் பயவாத புதுமைகளை விலக்கிட அறிவுறுத்துகிறார்.

இலக்கிய மரபில் முடியரசனார் படைத்துள்ள புதுமைகளை யாப்பு மரபில் புதுமை, இலக்கியக்கருத்து மரபில் புதுமை, செய்தி கூறும் முறையில் புதுமை, பழையனவற்றைப் புதுமையாக்கித்தருதல், உவமை கூறுவதில் புதுமை, வேறுபடுத்திக் காட்டுவதில் புதுமை ஆகிய தலைப்புகளில் பகுத்துக் காண இயலும்.

**யாப்பு மரபில் புதுமை:**

நாடக உரையாடலுக்கு ஆசிரிய விருத்த யாப்பினைக் கையாளுதலே இலக்கிய மரபு. ஆனால் கவிஞர் தலைவன்-தலைவி உரையாடுவதாக அமைந்த ‘காதல் நெஞ்சம்’ என்னும் தலைப்பிலமைந்த பாடலில்,

**அவன்:** **“கொல்லும் விழியுடையாய்!**
**கொவ்வைக் கனியிதழாய்!**
**அல்லும் பகலுமுன்**
**அன்புபெற - அல்லற்**
**படுமென்னை உள்ளத்தாற்**
**பாராயோ? ஆவி**
**சுடுதுயரைத் தீராயோ?**
**சொல்!**

**அவள்:** **படுப்பேன புரள்வேன் பின்**
**பஞ்சணையில் கண்ணீர்**
**விடுப்பேன் எழுந்திருந்து**
**வீழ்வேன் - தொடுக்குமுயிர்**
**தாங்க வழி யானறியேன்;**
**தையலெனைச் சார்துயரும்**
**ஓங்கிவளர் கின்ற**
**துயர்ந்து.**

**இருவரும்:** **காணச் சகியாரோ**
**காதலரை ஒன்றாக்கிப்**
**பேணத் தெரியாரோ**
**பேருலகில் - கோணற்**
**சிறுமதிகள் தீயாவோ**
**தீராத காதல்**
**நறவுண்டு நாம்மகிழ**

**நன்கு" (முடி.க.பக்.68-69)**

என்று நேரிசை வெண்பா யாப்பில் புதிய வடிவ அமைப்பில் சீர்வரிசை அடுக்கிப் பாடல் இயற்றியிருப்பது புதுமை.

புதருள்கனி என்னும் தலைப்பிலான பாடலின் எண்சீர் விருத்த யாப்பையும் புதியவடிவ அமைப்பில் கையாண்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

**"உருத்தெழுந்த மார்பகத்தாள்,**
**வில்லொடிந்த புருவத்தாள்**
**உள்ளத்தே தைத்தோடிப்**
**பாய்கின்ற வேல்விழியாள்**
**கருத்தெழுந்த மேகத்தைப்**
**புறங்கண்ட கரிகுழலாள்**
**கன்னத்தில் அழகொளியாள்**
**அன்னத்தின் எழில் நடையாள்**
**சிரித்தெழுந்த செவ்விதழாள்**
**இன்மொழியாள் அழகெல்லாம்**
**சேர்த்தெழுந்த உடலுடையாள்**
**அவளைக்கண் டென்மனத்தை**
**மறுத்தெழுந்த ஆர்வத்தால்**
**யாரென்றேன் விதவை என்றாள்;**
**மனமுடைந்தேன் மதியிழந்தேன்**
**உன்மத்த நிலையடைந்தேன்" (முடி.க.ப.71)**

'ஜனகணமன' என்னும் நாட்டுப்பண்ணைப் போன்று, 'சங்கராபரணம்' பண்ணிசையில் முடியரசனார்,

'நாட்டுப் பண்' என்னும் தலைப்பிலமைந்த,

**"உயிருடல் பொருள்திரு நாடெனும் நினைவே**
**ஓங்கிட வேண்டுவம் நாமே**
**துஞ்சாது நின்று குலையாலம லிந்நாட்டைத்**
**தோழமை கொண்டுல காள்வோம்**
**நெஞ்சு கெடாவகை உரமாய் நின்றால்**

**நிற்பவர் எதிரில் உளரோ?**
**படைபலம் நாமே பாரீர்!**
**தடைகளை நீக்கிட வாரீர்!**
**நாமே தமிழுல காள்வோம்!**

**புகழ்வளர் நம்முயர் தாயக நினைவே**
**போற்றுவம் போற்றுவம் நாமே**
**நலமே மிகவே பெறவே**
**பலபல நல மிகவே" (கா.பா.ப.44)**

தமிழகத்திற்கு நாட்டுப்பண் அமைத்துள்ளார்.

'ஆடவாராய்' என்னும் தலைப்பிலான இசைப்பாடலில் எடுப்பு, தொடுப்பிற்கு அடுத்து வரும் முடிப்புப் பாடல்கள் மூன்றினையும் வல்லின, மெல்லின, இடையின எழுத்துகளால் ஓசையின்பம் தோன்ற தனித்தனியே அமைந்திருப்பது இலக்கிய மரபில் புதுமையானதாகும்.

காவியப்பாவை என்னும் நூலில் அப்பாடலின் முதற்பகுதியில்,

**"கட்டுதுகிற் கச்சின்மிசை முத்துவடம் ஆடக்**
**கைத்தலங்கள் மொய்த்தவிரல் கற்றமுறை நாடப்**
**பட்டுடுத்தும் சிற்றிடையில் மேகலைகள் பாடப்**
**பற்றுகழற் கெச்சையொடு தெக்கணத்துக் கூத்து" (கா.பா.ப.58)**

என்று வல்லின எழுத்துகளை மிகுதியாக அமைத்தும் இரண்டாம் பகுதியில்,

**"அஞ்சனமைக் கண்ணிரண்டும் கஞ்சமலர் விஞ்ச**
**அம்பொனடிச் செஞ்சிலம்பு தஞ்சமெனக் கெஞ்ச**
**மஞ்சள்ஒளி தங்குமெழில் கொஞ்சுமுக வஞ்சி**
**வந்தெனது நொந்துழலும் வேதனைதீர் நெஞ்சில்"**

என்று மெல்லின எழுத்துகளை மிகுதியாய் அமைத்தும் மூன்றாம் பகுதியில்,

**"மெல்லியலே உள்ளமதை நல்விழிகள் சொல்ல**
**மெய்யுருகி என்மனமும் நின்மனமும் புல்லச்**
**சொல்லுதொறும் தாள்விரல்கள் தாளவழி செல்லத்**
**துள்ளிவரும் மான்பினைபோல் சூழ்ந்துவரும் வல்லி" (கா.பா.ப.58)**

என்று இடையின எழுத்துகளை மிகுதியாக அமைத்தும் ஒரே இசைப்பாடலில் வல்லின, மெல்லின, இடையின எழுத்துகளைக் கொண்டு வெவ்வேறு ஓசை நயமுடைய சரணப் பாடல்கள் அமைத்திருப்பது அவர்தம் புதுமை மரபிற்குச் சான்றாகும்.

**இலக்கியக் கருத்து மரபில் புதுமை:-**

'பிரிவில் கண்ணகி' என்னும் தலைப்பிலான பாடலில் காதலெனும் கடலில் மூழ்கிய கண்ணகி குழந்தைப்பேறு என்னும் முத்தைக் கண்டாளல்லள் என்பதைக் குறிப்பிடும் கவிஞர், பிள்ளைப்பேறு இல்லாத மலடி என்ற பழிச்சொல்லால் ஊரார் கண்ணகியை வருத்துவரோ என்ற அச்சம் உள்ளுக்குள் எழுகிறது. உடனே

**"நுடங்குகின்ற கொடியிடையாள் கண்ணகித்தாய் "**
**"தீதறியா அன்னையிவள் பிரிவுத் துன்பம்" (த.மு.ப.152)**
**"எரிதழலை மூட்டிவிடு தாயே வாழி" (த.மு.ப.153)**

என்று கண்ணகியைத் தாய் என விளித்து ஊரார் பழிச்சொற்களைத் தவிர்க்க முனைகிறார்.

சிலப்பதிகாரம் நூலின் பெயர்க்காரணத்தை 'சிலம்பினால் அதிகரித்த வரலாறு'[7] என்று குறிப்பிடுவது இலக்கிய மரபு. அம்மரபை ஏற்றுக் கொள்ளும் கவிஞர் சிலப்பதிகாரத்திற்கு கோப்பெருந்தேவியின் சிலம்பினாலா? அல்லது கண்ணகியின் சிலம்பினாலா? எந்தச் சிலம்பினால் அதிகரித்த வரலாறு என்னும் ஐய வினாவிற்கு,

**"முந்தை மொழிப் புலவன் முன்னேற்றப் பாவேந்தன்**
**எந்தைக்கு தந்தைஎனும் என்பாட்டன் பாரதிதான்**
**தந்தஒரு பாடல் தரும்விளக்கம் கண்டுணர்ந்தேன்;**
**தேருஞ் சிலப்பதி காரமென் றோர்மணி**
**ஆரம் படைத்ததமிழ் நாடென் றடிபடைத்தான்**
**அந்த மணிமொழியால் அன்னை மணிச்சிலம்பே**
**தந்தபெயர் ஈதென்று சிந்தை தெளிந்திருந்தேன்" (த.மு.ப.176)**

என்று பாடி விடையிறுக்கின்றார். இதில் கண்ணகித்தாய் அணிந்திருந்த மணிச்சிலம்பினால்தான் பெயர் பெற்றது என்று ஐயத்திற்கு முற்றுப்புள்ளி வைப்பதுபோல் விடையளித்திருப்பது இலக்கிய மரபில் கவிஞரின் புதுமை எண்ணத்தைக் காட்டுகிறது. மேலும்

சிலப்பதிகாரப் புகார்க்காண்டத்தின் முதல் காதையான மங்கல வாழ்த்துக் காதையில் திங்கள், ஞாயிறு, மாமழை, பூம்புகார் ஆகியனவற்றை இளங்கோவடிகள் போற்றிப் பாடியுள்ளார், ஞாயிறை முதலில் பாடாமல் திங்களை முதலில் பாடியமைக்குக் கவிஞர், 'மங்கல வாழ்த்தில் இளங்கோவடிகள் பெண்மையை முதன்மையாகப் போற்றுவதற்கே திங்களை முன் போற்றி, பிறகு ஞாயிறைப் போற்றுகின்றார்'[8] என்பர்.

கோவலனும் கண்ணகியும் மணஞ்செய்து ஒருங்கேயிருந்த காட்சியினைக் "கதிர் ஒருங்கு இருந்தது போல"[9] என்று இளங்கோவடிகள் கூறியிருப்பதால் கோவலனை ஞாயிறாகவும் கண்ணகியை நிலவாகவும் உருவகித்துள்ளார் என்பது தெளிவு. ஏனெனில் தமிழ் இலக்கிய மரபில் ஆடவர்க்கு ஞாயிறையும் பெண்டிர்க்கு நிலவையும் உவமித்தல் மரபு. அவ்வாறிருக்க காப்பியத்துள் தன்னேரிலாத் தலைமைப் பேற்றைக் கதைத் தலைவனுக்குக் கொடுப்பதை விட, கதைத் தலைவி கண்ணகிக்குக் கொடுப்பதே சிறந்ததென்பதால்தான் கண்ணகிக்கு முதன்மைச் சிறப்பளிக்க எண்ணி மங்கல வாழ்த்தில் திங்களை முன் போற்றுகிறாரென்பதனை,

**"தன்னே ரிலாத தலைமைபெறும் பேருரிமை**
**மின்னேர் இடையாட்கே மேவுவதும் நாமறிவோம்;**
**ஆதலினால் காவியத்தில் ஆட்சிசெயும் பெண்பாலாம்**
**மாதவட்கு முன்னே மதிப்பளிக்க எண்ணியவர்**
**திங்களைமுன் போற்றுகிறார் திங்களுமோர் பெண்பாலென்**
**றெங்கும் இலக்கியத்தே ஏத்துவதும் உண்டன்றே" (த.மு.ப.177)**

என்று பாடுவர்.

**"கற்றோன்றி மண் தோன்றாக் காலத்தே வாளொடு**
**முற்றோன்றி மூத்த குடி"[10]**

என்று புறப்பொருள் வெண்பா மாலை கூறுவதற்குக் கவிஞர் புதுமையான விளக்கம் தருகிறார். 'இவ்வுலகம் முழுவதும் தொன்மைக் காலத்தில் நீர் நிரம்பி வெள்ளம் பரவியதாய் இருந்திருக்க வேண்டும். நீர்குறைய முதலில் மலை தோன்றியிருக்க வேண்டும். அம்மலையில் தோன்றிய ஆதிமனிதன் சைகை மொழி பேசி, பிறகு குரலெழுப்பிப் பைய

நாவசைத்த மொழியே தமிழ்' என்று கவிஞர் நிலவியல் அமைப்பின் வழி விளக்கம் தருவது புதுமையானதாகும். (தா.கா.ப.8)

''தமிழ் நாட்டின் புவி வரைவியல் தமிழ்க்கவிதை மரபின் குறிப்பிட்ட பகுதிக்கு அடிப்படையாக அமைந்துள்ளது''[11] என்பர் தனிநாயகம் அடிகளார்.

''பண்டைத் தமிழர்கள் அவர்களால் உருவாக்கப்பட்ட புவியியலின் அடிப்படைக் காரணிகளான நிலம், பொழுது, கருப்பொருள்கள் மீது மிகவும் கவனமாக இருந்ததை நாம் அறிய முடிகிறது. இத்தகைய அடிப்படைக் காரணிகள்தான் மனித ஆன்மாவின் இருப்பிற்கு உரு கொடுத்தது. இதுபோன்ற தெளிந்த, தரம் பிரிக்கப்பட்ட புவியியல் அடிக்கட்டமைப்பை சமஸ்கிருதத்திலும் உலகில் வேறுஎந்த மொழியின் இலக்கியத்திலும் காணமுடியாது''[12] என்று நிலவியல் சார்ந்த தமிழிலக்கியக் கட்டமைப்பை வியந்து போற்றுவர் ந.சஞ்சீவி.

**செய்தி கூறும் முறையில் புதுமை:-**

காற்றை நான்கு வகைகளில் வகைப்படுத்துவது தமிழர் மரபு. கிழக்குத் திசையிலிருந்து வீசுவது கொண்டல்; மேற்குத் திசையிலிருந்து வீசுவது கோடை, வடக்குத் திசையிலிருந்து வீசுவது வாடை, தெற்கிலிருந்து வீசுவது தென்றல் என அழைக்கப்பெற்றது.

ஆற்றுக்குக் கரை எவ்வளவு அவசியமோ, அதே போன்று மொழி விளக்கக் கவிதை என்னும் ஆற்றுக்கும் இலக்கணம் கரையாகும் என்பதனை 'ஆறு' என்னும் கவிதையில் கவிஞர் உரைக்கின்றார். (முடி.க.ப.52)

**"வினையே ஆடவர்க்கு உயிரே"[13]**
**"களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே"[14]**

என்றெல்லாம். இலக்கியங்கள் ஆண்மைக்கு இலக்கணம் வகுக்கும் நிலையில் முடியரசனார் 'ஆடவர்' என்னும் தலைப்பிலமைந்த பாடலில்,

**"கலக்கமிலா உயர்நட்பு, பிறனில் வேண்டாக்**
**கண்ணியம், ஓர் உடன்வயிற்றுப் பிறந்தோர் தம்முள்**
**விலக்கமிலா துறுதுணையாய் நிற்றல், ஆள்வோர்**
**வினைபிழைத்தால் இடித்துரைத்தல், பகைவர் நாப்பண்**

**செலக்கருதின் அஞ்சாமல் பேசும் வன்மை,**

**செஞ்சோற்றுக் கடன்கழித்தல் முதலாம் ஆண்மை**

**இலக்கணத்தைக் கடவாதார் இருக்கும் நாடே**

**எழில்நாடாம்; கடப்பவர்கள் இருப்பின் காடாம்" (கடி.மு.ப.11)**

என்று உயர்நட்பு, பிறனில் விழையாக் கண்ணியம், உறுதுணையாய் நிற்றல், ஆள்வோர் தவறுசெய்தால் இடித்துரைத்தல், செஞ்சோற்றுக் கடன் கழித்தல் ஆகியனவே ஆண்மைத் தன்மை என்று ஆண்மைக்கு புது இலக்கணம் உரைக்கிறார்.

விடுதலைப் போராட்ட வீரர்களைப் பூச்செடிகளோடும் கொடிகளோடும் ஒப்புமைப்படுத்திக் காட்டும் புதுமையை 'அண்ணல் நடந்த அடிச்சுவடு' என்னும் கவிதையில்,

**"வெட்டவெட்டப் பூச்செடிகள் மீண்டும் செழித்துவரும்;**

**கொட்டிலுக்குள் வைத்த கொடிசெடிகள் சாளரத்துக்**

**கம்பிவழி புக்குக் கதிரோனை நோக்கி வரும்;**

**அம்புவியிற் காணும் அதுவே இயற்கை விதி;**

**நாட்டினை உய்விக்க நாடி எழும்வீரர்**

**கேட்டினைக் கண்டஞ்சார்; கேடெல்லாம் பூமாலை;**

**பூட்டுஞ் சிறைச்சாலை பூஞ்சோலை யாகிவிடும்;**

**தீட்டுங் கொலைக்கருவி தேன்மலரா மாறிவிடும்" (த.மு,பக்.220-221)**

என்று குறிப்பிடுவது புதுமையானதாகும். முடியரசனார் உரைநடையை ஆணுக்கும் கவிதையைப் பெண்ணுக்கும் ஒப்புமைப்படுத்துவது தமிழிலக்கிய மரபில் புதுமையானது.

'ஆணா? பெண்ணா?' என்னும் தலைப்பிலமைந்த பாடலில்,

**"உரைநடை என்பதோர் உரம்பெறும் ஆண்மகன்**

**கவிநடை என்பது கண்கவர் பெண்மகள்**

**கற்பனை என்னும் பொற்புறு சீலையால்**

**ஒப்பனை செயினும் உரைநடை என்னும்**

**ஆண்மகன் பெண்மகள் ஆதல் ஒல்லுமோ?" (தா.கா.ப.72)**

என்று கற்பனை அமைந்த உரைநடை கவிதையாகாது. உருவ அமைப்பும் உறுப்பெழில் வனப்பும் பெண்மையும் அமையாத ஆணைப் பெண்ணெனப் பேசுதலும் புதுமை என்றும் புரட்சி

என்றும் உருவிலும் வனப்பிலும் தன்மையிலும் கவிதையாகா உரைநடையைக் கவிதையெனல் இழிவினும் இழிவே என்னும் கவிஞரின் கூற்று அவர்தம் புதுமைச்சிந்தனைக்குச் சான்றாகும்.

மிகச்சிறிய அளவைக் குறிப்பிட எள், கடுகு, திணை போன்றவற்றைக் கூறுவது இலக்கிய மரபு. முடியரசனார் அவ்விலக்கிய மரபில் 'முள் நுனியளவும்' (பூ.கொ. 24:110) என்ற புதிய எடுத்துக்காட்டைப் புகுத்துகிறார். ஆய்ந்து நோக்கின் மேற்கூறிய எள்முனை, கடுகளவு, திணையளவு ஆகியனவற்றைக் காட்டிலும் மிகச் சிறிய அளவாக முள்நுனியைக் காணமுடிகின்றது.

குளத்திலும் ஆற்றிலும் கடலிலும் முங்கிக் குளித்தோம் என்று கூறுவது உலக இயல்பு. ஆனால் கவிஞரோ 'குற்றால மலையில் தென்றல் காற்றில் முங்கிக் குளித்தேன்' (முடி.கடி.ப.16) என்று பாடுவது புதுமையாகும்.

முடியரசனார் தான் எங்கெங்கெல்லாம் எழிலைக் கண்டு வியந்தாரோ அதனை,

**"கொடிதாங்கி உரிமைப்போர்க் களத்துச் சென்ற**
**குமரனவன் உயிர்நீங்க ஆள்வோர் தந்த**
**அடிதாங்கித் தலையிழிந்து கொட்டும் செந்நீர்,**
**அடிமைஎனும் சிறுமையினை அழிப்பான் வேண்டி**
**நெடிதோங்கும் பிறனாட்சி தொலைக்கும் போரில்**
**நின்றிருந்த பெரியோன்தன் அகன்ற மார்பு**
**வெடிதாங்கிச் சிந்துகின்ற குருதி யார்க்கும்**
**விளங்காத எழில்காட்டக் கண்டேன் கண்டேன்" (மு.க.ப.44)**

என்று பாடுவர். விடுதலைப் போரில் பங்கேற்ற வீரர்கள் தடியடியாலும் துப்பாக்கிச் சூட்டாலும் சிந்துகின்ற செங்குருதியில் எழிலைக் கண்டதாகப் பாடுவது புதுமையானதொன்றாகும். மேலும் அப்பாடலின் நிறைவில்,

**"நாட்டுக்குச் செய்தபெரும் தொண்டுக் காக**
**நரிக்குணத்தர் அவர்களித்த தூக்கு மேடை**
**காட்டுகின்ற சுருள்கயிற்றில் இறந்து பட்ட**
**காளையவன் சவக்குழியில் எலும்புக் கூட்டில்**
**நாட்டிற்காகச் செக்கிழுத்து மெலிந்த தோளில்**

**நல்லதமிழ் நாட்டெழுந்த இந்திப் போரில்**

**தேட்டாளர் முகங்களிலே அறுத்தெ றிந்த**

**திருத்தாலிக் கயிற்றில்நான் எழிலைக் கண்டேன்" (முடி.க.ப.45)**

என்னும் பாடலடிகளில் தாய் நாட்டுக்குச் செய்த தொண்டுக்காகத் தூக்கிலிடப்பட்டோரின் தூக்குக்கயிற்றில் அவர்களை அடக்கம் செய்த சவக்குழியில், எலும்புக் கூட்டில் சிறைச்சாலையில் செக்கிழுத்து மெலிந்த தோளில் இந்திப் போரில் எதிரிகளின் முகத்தில் அறுத்தெறிந்த திருத்தாலிக் கயிற்றில் அவலத்தைத் தாண்டி எழிலைக் காணும் கவிஞரின் புதிய கோணம் உயிரிழந்தோரின் ஈகத்திற்கு அவர் செலுத்துகின்ற நன்மதிப்பாகவே விளங்குகிறது.

**பழையனவற்றைப் புதுமையாக்கித் தருதல்:**

சிலப்பதிகாரத்தின் 'புறஞ்சேரி இறுத்த காதையில்' இளங்கோவடிகள்

**"வையை என்ற பொய்யாக் குலக்கொடி**
**தையற்கு உறுவது தான் அறிந்தனள் போல்**
**புண்ணிய நறுமலர் ஆடை போர்த்துக்**
**கண்நிறை நெடுநீர் கரந்தனள் அடக்கி"**[15]

என்னும் அடிகளில் 'கண்ணகிக்கு வரப்போகும் துயரை எண்ணி வையை என்னும் பொய்யாக்குலக்கொடி தன் மீது மலர்களை ஆடையாகப் போர்த்திக் கொண்டு மறைந்துகொண்டாள்' என்றுரைக்கின்றார் இளங்கோவடிகள். இந்நிகழ்வை மனதுள் கொண்ட கவிஞர் 'தமிழ் காப்போம்' என்னும் தலைப்பிலான கவிதையில்,

**"கண்ணகிக்கு வரப்போகும் இடர்நி னைந்து**
**கண்ணீரை நிறைத்துடலம் தோன்றா வண்ணம்**
**வண்ணமலர் பலகொண்டு மறைத்துச் சென்றாள்**
**வையையெனும் குலக்கொடிஎன் றிளங்கோ சொல்வர்;**
**அண்ணலெனும் இலக்குவனார்க் குற்ற துன்ப**
**அவலநிலை கண்டுள்ளம் நொந்து நொந்து**
**மண்மிசையே வரஅஞ்சி மணலுட் புக்கு**
**மறைந்துகொண்டாள் அவளென்று நான்பு கல்வேன்" (த.கா.ப.13)**

என்று பாடுவர்.

இதில் விருதுநகர் கல்லூரியில் பேரா.சி.இலக்குவனார் பணியாற்றியபோது மாணவர்களை மொழிப்போராட்டத்திற்குத் தூண்டுகிறாரென கல்லூரி நிர்வாகம் அவரைப் பணி நீக்கம் செய்தது. இச்செய்தியைச் சிலப்பதிகாரச் செய்தியோடு ஒப்பிட்டுக் காணும் முடியரசனார் வையை இலக்குவனார்க்கு உற்ற அவலநிலை கண்டு மண்மேல் வாராது மண்ணுக்குள்ளேயே ஒளிந்து கொண்டாள் என்று நீர் வற்றி மணல் பரப்பாய்க்காட்சி தரும் வையையாற்றைப் புதுமையாகக் காட்சிப்படுத்துகிறார்.

**"உடையார் முன் இல்லார்போல் ஏக்கற்றுங் கற்றார்**
**கடையரே கல்லா தவர்" (குறள்.395)**

என்னும் குறட்பாவிற்கு செல்வர் முன் வறியவர் நிற்பது போல், தாமும் ஆசிரியர் முன் ஏங்கித் தாழ்ந்து நின்று கல்விகற்றவரே உயர்ந்தவர். அங்ஙனம் தாழ்ந்து நிற்பதற்கு நாணி, கல்லாதவர் இழிந்தவராவர் என்று பொருள் கொள்வர். ஆனால் முடியரசனார் இக்குறட்பாவிற்குப் பொருள் கொள்ளும் முறை மொழிமாற்றுப் பொருள்கோள் வகைமையில் அமைந்துள்ளது.

'முன் இல்லார் போல் ஏக்கற்றுங் கற்றார் உடையார், கல்லாதவர் கடையரே' என்று சீர்களை இடம் மாற்றிப் பொருள் உரைக்கின்றார். முதலில் வறியவர் போல் ஆசிரியரிடம் பணிந்து பாடம் கேட்பவர், பின்னர் எல்லாம் உடைய பெரியோராகக் கருதப்படுவர். கீழ்ப்படியக் கூசுவோர் கடையராவர் (முடி.கடி.ப.13) என்று முடியரசனார் கூறும் குறட்பாவிளக்கம் புதுமையாகவும் பொருத்தமாகவும் தென்படுகிறது.

'மணிமேகலை' காப்பியத்தில் சாதுவன் கடல் வாணிகம் மேற்கொண்ட செய்தி குறிப்பிடப்படுகிறது. சாதுவன் வந்த மரக்கலம் பெரும்புயலில் சிதறுண்டு கடலுள் மூழ்கியது. உடைந்த மரத்துண்டைப் பற்றிக்கொண்டு நாகர்கள் வாழும் மலைப் பகுதியைச் சாதுவன் அடைகிறான். ஆடையின்றி, கல்வியின்றி நாகரிகம் அற்றவர்களாக, முரடர்களாக, மனிதர்களைக் கொன்று தின்னும் பழக்க முடையவர்களாக இருந்த நாகர்கள் சாதுவனைக் கண்டதும் தங்களுக்கு உணவு கிடைத்ததாக மகிழ்கிறார்கள். மயங்கிக் கிடந்த சாதுவன் எழுந்து, அவர்கள் குறிப்பை உணர்ந்து அவர்கள் மொழியில் பேசி தனக்கேற்பட்ட துயரை

எடுத்துச் சொன்னான். தங்கள் மொழியில் பேசிய சாதுவனிடம் இரக்கம் கொண்டு சாதுவனைக் கொல்லாமல் தம் தலைவனிடம் அழைத்துச் சென்றார்கள். சாதுவன் கூறிய செய்தியை முழுதும் கேட்டறிந்த நாகர் தலைவன் சாதுவனைச் சில நாள் தங்களுடன் தங்கச் செய்து, சாதுவன் கூறிய அறிவுரைகளைக் கேட்டு மனம் திருந்தி முன்னர்க் கொள்ளையடித்த செல்வங்களில் மிகுதியும் தந்து சாதுவனைக் காவிரிப் பூம்பட்டினத்திற்கு அனுப்பி வைத்தனன்.

மணிமேகலை உரைக்கும் இச்செய்தியன் வழி மொழியுணர்ச்சி இல்லாத தமிழ் மாந்தர்க்கு ஓர் அறிவுரை கூறுகின்றார் கவிஞர். ‘நாகரிகமற்ற நாகர்கள் சாதுவனைக் கொல்லாது விடுத்ததும் இரக்கம் காட்டியதும் சாதுவனுக்கு வேண்டிய பொருளை நாகர் தலைவன் கொடுத்து அனுப்பியதும் நாகர்கள் பேசும் மொழியில் சாதுவன் பேசினான் என்ற ஒரே காரணத்தினால்தான். இம்மொழிப்பற்று அவர்களுக்கு இயல்பாக அமைந்த ஒன்று. காட்டுமிராண்டிகளாக வாழ்ந்த அவர்களுக்கு இருந்த மொழிப்பற்று நமக்கில்லையே? தாய்மொழியை மறந்து, தமிழ் நாட்டில் கண்ட கண்ட மொழிகளுக்குக் கதவு திறந்துவிட்டு வரவேற்பும் கூறுகிறோம்’ (முடி.கடி.பக்.64-65) என்று மணிமேகலை காப்பியம் கூறும் கதையை இக்காலகட்டத்திற்கு ஏற்ற வகையில் புதுமையாக்கித் தருகின்றார்.

வாய்மையைச் சுட்டுவதற்கு உண்மை, மெய்ம்மை என்ற வேறு சொற்களையும் குறிப்பிடுவர். ஆனால் முடியரசனார் இவை மூன்றனுக்கு இடையேயுள்ள நுட்பமான வேறுபாடுகளைக் குறிப்பிடுகின்றார். ‘இம்மூன்று சொற்களும் பொதுவாக ஒரே பொருளைத் தந்தாலும் ஒவ்வொன்றிற்கும் சிறப்புப் பொருளுண்டு. உள்ளத்தாற் பொய்யா தொழுகுவது உண்மை. வாயாற் பொய்யா தொழுவது வாய்மை. மெய்யால் பொய்யாதொழுகுவது மெய்ம்மை. மனம், சொல், செயல் என மூன்றாலும் பொய்யா தொழுக வேண்டும்’ (முடி.கடி.ப.106) என்பது நுட்பமான, புதுமையான பொருள் விளக்கமாகும்.

**உவமை கூறுவதில் புதுமை:-**

அழகியலைப் பாடும் போதும் குமுகாய அவலங்களே கவிஞரின் கண்முன் நிற்கின்றன. அதனால் அவர் கூறும் உவமைகளும் புதுமையானதாக அமைகின்றன.

“கவிதைகள் வெறும் போதைப் பொருளாக மாறாமல் சமூகத்திற்குத் தெம்பும் திறமும் தேடித்தரும் வழியில் உருப்பெற வேண்டும். அப்போது தான் சமுதாயம் நோயற்று வாழ முடியும்”[16] என்பர் சிதம்பர ரகுநாதன். கவிஞரும் உவமைகளை அழகியல் சார்ந்த போதைப் பொருளாக மட்டும் கருதாமல் சமூகத்தின் பிரதிபலிப்புகளாக அமைத்திருக்கிறார்.

மலர்தோறும் தேடிச் சென்று தேனை உறிஞ்சிச் செல்லும் தும்பிக்கு, கடன்பட்ட மாந்தரிடம் வட்டி கேட்கக் கடைதோறும் புகுந்து வரும் கணக்கனை (முடி.க.ப.44) உவமைப்படுத்துகிறார்.

வானில் தோன்றும் நிலவினை ஏழை, பணக்காரர் வேறுபாடின்றி எல்லோர் மீதும் ஒளிவீசும் பொதுவுடைமை ஆட்சியாளராக (முடி.க.ப.46) உவமிக்கின்றார்.

குழந்தைகளும், சிறாரும், அவர்களது குறும்புச் செயல்களும் காண்போரைக் களிப்பில் ஆழ்த்துவன; கவிஞர்க்குப் பேரின்பம் தர வல்லன. குழந்தை மண்ணில் விளையாடும் போது கீறிய வளைவுகளைப் போல நண்டுகள் கடற்கரையில் கோலமிட்டதாகவும் (முடி.க.ப.59), சிறுவர்கள் சேர்ந்து மழை வெள்ளத்தில் ஓடச் செய்த காகிதக்கப்பல் போலப் பிறை நிலவு தோன்றுவதாகவும் (முடி.க.ப.73) உவமிக்கிறார்.

கவிஞர் பள்ளிக்கூட ஆசிரியர் என்பதால் பள்ளிச் சிறார் தம் இயல்பினை,

**“இந்நாள் விடுமுறை எனுஞ்சொற் செவியுறத்**
**துள்ளிக் குதிக்கும் பள்ளிச் சிறாரென**
**வெள்ளைக் கயல்கள் விடுபுனற் பொய்கையில்**
**தாவிக் குதிக்கும் ...” (பூ.கொ.4:30-32)**

என்று பாடுவர். இதில் விடுமுறை அறிவிப்பு கேட்டதும் பள்ளிச் சிறுவர் துள்ளிக்குதிப்பதை வெள்ளைநிற மீன்கள் பொய்கையில் தாவிக்குதிப்பதற்கு உவமித்துள்ளார்.

பள்ளியில் மணியொலி கேளா மாணவர் அணிஅணியாக ஆர்ப்பரிப்பது பசுமரந்தோறும் மாலை நேரத்தில் கூடடையும் பறவைகளின் இரைச்சலோடு உவமிக்கப்பட்டுள்ளது. (பூ.கொ.**5**:145-148)

**“அன்னைநற் றோளில் அணைக்குங் காலை**

**நில்லாக் கழுத்தொடு நிமிருங் குழவியின்**
**தலையென அம்மலர் தளர்ந்தசைந் தாடிக்**
**கலையெழில் காட்டும் .........” (இ.வ.ப.236)**

என்னும் பாடல் வரிகளில் கழுத்து நில்லாக் கைக்குழந்தையைப் போல் மலர், தென்றல் காற்றில் அசைந்தாடுவதாக கவிஞர் உவமிப்பது புதுமையான உவமையாகும். இதே போன்று ‘ஆடித்திரிந்த சிறாரை அன்னையர் பாடித் துயில்விக்க, தொட்டிலில் தூங்காமல் கையும் காலும் நீட்டியும் ஆட்டியும் நெளிகின்ற குழந்தையரைப் போல காட்டில் திரிந்து உணவு ஈட்டிய புள்ளினம் கூட்டுள் புகுந்து குறுகுறுத்திருக்கின்றன’ (இ.வ.ப.239) என்று உவமைப்படுத்தியுள்ளமை புதுமையானதாகும்.

முடியரசனார் தமிழாசிரியர் என்பதாலும், மரபு போற்றும் கவிஞர் என்பதாலும் இயல்பாகவே அவருக்கு இலக்கண அறிவு மிகுதி. இதனை உவமைகள் கூறுவதில் வெளிப்படுத்தியுள்ளார்.

‘பணியாள் வேண்டாம்’ என்னும் பாடலில் ‘இலக்கணமே மொழியைக் காக்கும் அடிவேராம். அதுபோல குடும்பத்திற்கும் அன்பொன்றே அடிப்படையாகும்’ (முடி.க.ப.82) என்று குடும்பத்திற்கு மொழியையும், அன்பிற்கு இலக்கணத்தையும் உவமித்துள்ளார்.

‘உயிர்வரின் உக்குறள் மெய்விட்டு ஓடும்’ என்பது குற்றியலுகரப் புணர்ச்சி இலக்கண விதி. இவ்விலக்கணத்தைப் பூங்கொடி காப்பியத்தில்,

**“கொடுங்கோ லாட்சி நெடும்பகல் நில்லாது**
**மடம்படு மாந்தர் மதியொளி பெறுங்கால்**
**படும்படும் அந்தக் கெடும்பரின் ஆட்சி**
**உயிர்வரின் உக்குறள் ஓடுதல் போலக்**
**கதிர்வர வறிந்து காரிருள் ஓடிப்**
**பதுங்கி மறைந்தது பகலவன் வளர்ந்தான்” (பூ.கொ.24:79-84)**

என்னும் பாடலடிகளில் கதிரவன் வந்ததும் காரிருள், உயிர்வரின் உக்குறள் ஓடி மறைந்ததைப் போல பதுங்கி மறைந்ததென்று இலக்கண உவமையை நுட்பமாகப் புலப்படுத்தியுள்ளார்.

தன் மகள் வேல்விழிக்கு ஆண் மகவு பிறந்துள்ள பெருமகிழ்வை வயத்தரசன் தன் நாடு போரில் ஈடுபட்டிருந்த சூழலில் பலா்க்குரைத்து திருநாள் கொண்டாடாமல் நீண்ட பொருளைச் சுருக்கியுரைக்கும் இலக்கண நூற்பாவைப் போலச் சுருக்கிக் கொண்டான் (வீ.கா.52:231) என்றுரைப்பா்.

பாடலுக்கு எதுகை, மோனை போன்ற நயங்களே அழகும், வலிமையும் தருவன இதனைப் போர்க்களத்தில் தோற்ற மன்னன் வலிமையிழந்து நிற்பதற்கு,

**"மோனை எதுகை முதலன இழந்த**
**புன்மொழிப் பாட்டெனப் பொலிவில னாகி**
**வன்மை யிழந்து வந்துளன் ஈண்டு" (இ.வ.ப.280)**

என்று மோனைஎதுகையிழந்த பாடலை உவமையாக்கிக் கூறுவது புதுமையாகும்.

**வேறுபடுத்திக் காட்டுவதில் புதுமை:**

படைத்தல், காத்தல், அழித்தல், அருளல், மறைத்தல் ஆகிய ஐந்தொழில்களில் வல்லவன் சிவன் என்றுரைப்பது சைவத்தமிழ் இலக்கிய மரபு. வாணிகத்தில் கடத்தல், மறைத்தல், கலத்தல், பதுக்கல், முடக்கல் ஆகிய ஐந்தொழில்களையும் முழுவதும் தெரிந்து வைத்திருக்கும் போலி வணிகா்களிடம் அவா்களது கொடுஞ்செயலைக் கண்டு சிவன் தோற்றிடுவார் (ம.தே.ப.129) என்று குமுகாய அவலத்தைச் சிவபெருமானின் ஐந்தொழில்களோடு ஒப்பிட்டுப் பாடியிருப்பது புதுமையானதாகும்.

முடியரசனார் கவி மரபில் பாரதியைத் தன் பாட்டனென்றும் பாரதியைத் தன் தந்தையென்றும் உரிமை பாராட்டுகின்றார். பாட்டனைக் காட்டிலும் தந்தையை உயர்த்திப் பேசுதலும் மிகுந்த அன்பு செலுத்தலும் உலக இயல்பு. அதற்குக் கவிஞரும் விதிவிலக்கு அல்லா். அவ்விருவரையும் வேறுபடுத்திக்காட்டும் இடங்களில் புதுமையான கருத்துகளைத் தருகின்றார்.

**"இருட்புலத்திற் கவியுலகம் மூழ்குங் காலை**
**எழுவெள்ளி பாரதியாய் வந்த திங்கே**
**மருட்புலத்தை மாய்க்கின்ற ஞாயி றாக**
**மன்னவனே நீ வந்தாய் அவன்பேர் சொல்ல" (பு.வி.செ.ப.177)**

என்னும் பாடலடிகளில் பாரதியை விடிவெள்ளியாகவும் பாரதிதாசனை ஞாயிறாகவும் உருவகிக்கிறார் முடியரசனார்.

'பாரதிப்புலவன் நூலைப் பரப்பிட இங்கு பலருள்ளனர். ஆனால் பாரதிதாசன் பெயரைச் சொல்லக்கூட சிலர்தான் உள்ளனர்' (பு.வி.செ.ப.175) என்று உள்ளம் வருந்தும் கவிஞர்,

**"பாரதியென் றுரைக்குமொரு பருவமேகம்**

**பாரதிக்குத் தாசனெனும் கரிய மேகம்" (வ.கோ.ப.18)**

என்று பாரதியைப் பருவத்தில் தோன்றும் மேகமாகவும், பாரதிதாசனை எல்லாக்காலத்தும் மழை பெய்விக்கும் கார் மேகமாகவும் நுட்பமாய் வேறுபடுத்துகிறார்.

**"பாட்டுக் குரியவனைப் பாரதியை விஞ்சிவிட்ட**

**பாட்டுக்கு வேந்தனவன் பாரதியின் தாசன்" (ஞா.தி.ப.116)**

என்று பாரதியை விஞ்சிய பாரதிதாசனென்று உயர்த்திப் பாடுகிறார்.

குருவை மிஞ்சிய சீடனாகவே இங்கு பாரதிதாசனைப் புகழ்ந்துரைக்கிறார். பாரதிதாசனின் பாண்டியன் பரிசு நூலில் உள்ள

**"கன்னலிலே சாறெடுத்து தமிழ் குழைத்துக்**

**கனிஇதழாற் பரிமாறும் இனிய சொல்லால்"[17]**

என்னும் பாடலடிகளுக்கு முடியரசனார் சொல்நயம் உரைக்கும் பாங்கு புதுமையானது. 'பரிமாறும்' என்ற பாவேந்தரின் சொல்லாட்சி கவிஞரின் கற்பனைக்கு நுட்பமான பொருளை விளைக்கின்றது. 'தலைவி பேசும் இனிய சொல்லைப் பாரதிதாசன் இப்பாடலில் உணவாக உருவகம் செய்துள்ளார். அவ்வுணவு கருப்பஞ் சாற்றிலே சமைக்கப் பெற்றது; தமிழுடன் ஒன்றாகக் குழைத்து ஆக்கப் பெற்றது. அவருடைய வாய்ச் சொற்களை உணவு என உருவகம் செய்ததற்கேற்ப 'பரிமாறும்' என்ற சொல்லைக் கவிஞர் பயன்படுத்தியுள்ளார். பரிமாறுவதென்றால் பசி தீர, வயிறார, மனம் நிறைவு கொள்ளும் வகையிலல்லவா பரிமாற வேண்டும். அவ்வகையில் தலைவி, தலைவனின் காதற்பசி தீர, செவியார, உள்ளம் நிறைவெய்த இன்சொல் வழங்கினாள் என்பதைப் 'பரிமாறும்' என்ற சொல் உணர்த்துகிறது.

உணவு பரிமாறுவதற்கும், சொல் பரிமாறுவதற்கும் உள்ள வேறுபாட்டையும் அச்சொல் உணர்த்துகிறது. உணவை ஒரு கையால் பரிமாறுவர்; இன்சொல்லைப் பரிமாறும் தலைவியோ வாயிதழ்கள் என்ற இரண்டு கைகளாலும் பரிமாறுகிறாள். உணவு பரிமாற ஒரு கை முயற்சியிருந்தால் போதுமானது. ஆனால் சொல் பரிமாற இரு உதடுகளின் முயற்சியும் தேவையல்லவா? தலைவனின் உள்ள நிறைவுக்கு ஒரு கையால் மட்டும் பரிமாறினால் போதாது; இரு கைகளாலும் பரிமாற வேண்டும் என்னும் கருத்துடன் பரிமாறுகிறாள் என்ற குறிப்புணர்வும் தென்படுகிறது. (எ.வ.த.பக்.58-59) இதில் உணவு பரிமாறுவதற்கும், சொல் பரிமாறுவதற்கும் உள்ள வேறுபாட்டை நுட்பமாகவும், புதுமையாகவும் முடியரசனார் எடுத்துரைக்கிறார்.

கம்பராமாயண வாழ்த்துப் பாடலில் இறைவனின் முத்தொழில்களான படைத்தல், காத்தல், நீக்கல் ஆகியனவற்றைக் கம்பர் குறிப்பிடுவர்.[18]

நம் கவிஞரோ படைத்தல், காத்தல், அழித்தல் என மூன்று தொழில்களையும் இறைவன் மட்டும் செய்யவில்லை. அதை இன்னொருவரும் செய்கின்றார் என்று உரைப்பர்.

**“ஆக்குந் தொழிலுடையேன் ஆகும் பொருளனைத்தும்**
**காக்கும் வினையுடையேன் காத்த அவைமுழுதும்**
**நீக்குந் திறலுடையேன் நீங்கா விளையாட்டிற்**
**போக்கும் பொழுதில் புரிகின்றேன் முத்தொழிலும்;**
**முந்நீர்மை செய்திங்கு முப்பொழுதும் வாழ்கின்ற**
**என்னீர்மை சொன்னேன் இறைவனெனில் ஒவ்வாதோ?” (த.மு.ப.165)**

என்னும் பாடலடிகளில் இறைவனுக்கு நிகராக முத்தொழில்களையும் ‘நீர்’ செய்வதால் அதனையும் இறையெனக் கருதலாம் என்று இயற்கையில் இறையைக் காணுகின்றார்.

**தலைப்பிடுவதில் புதுமை:**

கவிஞர் தம் படைப்புகளுக்குப் பல தலைப்புகளை புதுமையாகச் சூட்டியுள்ளார். புதருள் கனி, உயிர்ப்பொம்மை, இன்பத்தின் நிழல், கடவுள் எழுதிய கவிதை, கவிதை எழுதிய காகிதம், தப்புத்தாளம், திருமணச் சந்தை, ஈழம் சிவந்தது, தேர்தல் திருவிழா, சமயத்தில் நட்டதமிழ், கண்ணீர்ப்பொங்கல், நீர்ப்பானை ஓட்டையானால்..? கனவின் நிழல்

போன்ற கவிதைத் தலைப்புகளும், சொற்றமிழ் பாடு, கேள்விமுயல் போன்ற கடிதத் தலைப்புகளும், வலைப்படாமயில், அளிபெறு தும்பி, வேர்ப்பலா, மகார் நோன்பு போன்ற கட்டுரைத் தலைப்புகளும், எக்கோவின் காதல், அத்தை வீட்டில் பேய், கிருஷ்ணார்ச்சுன யுத்தம், காக்கையின் கடிதங்கள் போன்ற சிறுகதைத் தலைப்புகளும் புதுமைத் தலைப்புகளில் குறிப்பிடத்தக்கவை ஆகும்.

**இலக்கிய மரபில் மாற்றம்:**

காலத்திற்கேற்ப மரபு மாறிக்கொண்டேயிருக்கும். கால, இடச் சூழலுக்கேற்ப மரபுகளிலும் மாற்றம் விளையும். அவ்வாறு மாற்றம் பெறாத மரபுகள் காலச் சூழலால் ஒதுக்கிப் புறம் தள்ளப்படும்.

பழையனவற்றை முற்றிலுமாகப் புறம் தள்ளுகிற புதுமைப் போக்கு மிகவும் ஆபத்தானது. பெருமைமிக்க பழைய மரபுகளைப் போற்றிக் காக்க வேண்டியதும், பழமையை அழித்தொழிக்காத புதுமையை வரவேற்பதும் படைப்பாளனின் முதல் கடமையாகும்.

**மரபு மாற்றம் குறித்து அறிஞர்களின் சிந்தனைகள்:**

“கவிதையில் ஒரு முறை மரபுகள் அமைந்துவிட்ட பிறகு அடுத்துவரும் பாட்டுகள் கூடியவரையில் அந்த மரபுகளைப் போற்றியே அமைகின்றன. புதிய உணர்ச்சிகள் எழுந்து புதிய போக்கில் பாடும் போது அம் மரபுகளில் சிலக் கடந்து அமைவதும் உண்டு. பெரும்புலவர்களின் நூல்கள் சிற்சில மரபுகளை மீறி அமைந்துள்ளமையைக் காணலாம். ஆகவே, மரபுகள் பெரும்பாலும் பிற்கால இலக்கியங்களுக்கு வழிகாட்டியாகவும், சிறுபான்மை ஏவலாளாகவும் இருந்து வரும். மிகப் பெரும் புலவர்க்கு அவை குற்றேவல் புரியுமளவிலேயே நிற்கின்றன. அவர்களாலேயே மரபு மாறியமைகின்றன”[19] என்றுரைப்பர் மு.வரதராசனார்.

“இலக்கிய வளர்ச்சிக்கு மாற்றம் தேவை. ஆனால் அது அடிப்படையையே அகற்றிவிடுவதாக அமையக் கூடாது. சிறந்த கவிஞன் தன் மதி நுட்பத்தால் தேவையான சிற்சில மாற்றங்களைச் செய்கிறான். அதனால் இலக்கியப் படைப்பு வலிவும் பொலிவும் ஏரும் எழிலும் பெறுகின்றன. சிலப்பதிகாரம் சங்கப்பாடல் மரபைச் சிறிது மாற்றியுள்ளது.

திருக்குறளும் இவ்வாறு மரபை மீறியுள்ளது. ஆனால் இவை மரபை முறிக்கவில்லை. எனவே தான் அவை இன்னும் வாழ்கின்றன"[20] என்பர் பேரா.அ.ச.ஞானசம்பந்தன்.

"மரபு மாற்றத்திற்குக் கால வளர்ச்சி, பாடுபொருள் ஒற்றுமை, சமுதாய மாற்றம், புதுமை வேட்கை ஆகியன காரணங்களாக அமைகின்றன. இம்மரபு மாற்றங்கள் புதிய மரபு, மரபு வளர்ச்சி, மரபுப் பிறழ்ச்சி, மரபு வீழ்ச்சி என்னும் நான்கு நிலைகளில் அமையும்"[21] என்பர் பேரா.சே.செந்தமிழ்ப்பாவை.

பொதுவாகக் கவிஞனுக்கு 'இலக்கியப் பரம்பரை உணர்வு' ஒன்று வேண்டும். எத்தனை எத்தனையோ நூற்றாண்டுகளாக வருகின்ற கவிஞர் பரம்பரையிலே தானும் ஒருவன் என்ற எண்ணம் வேண்டும். பழைய 'மரபுகளை' வெட்டிச் சாய்க்கப் புறப்படாமல் ஒட்டிக் காக்க முற்படுகிற பழக்கமும் வேண்டும். பழங்காலக் கவிஞர்களையெல்லாம் இழித்துப் பேசிவிடுவதாலும், தம் காலக் கவிஞர்களையெல்லாம் பழித்து நகைத்து விடுவதாலும் தாம் மட்டும் கவிஞராகிவிடுவதாக நினைப்பவர்கள் கவிஞர்கள் அல்லர்; தாம் அமர்ந்திருக்கும் 'கோடு குறைக்கும்' அறிஞர்கள். பழைய இலக்கியங்களின் அமைப்பு, போக்கு, நடை முதலிய சிறப்புகளை இவர்கள் திரும்பியும் பார்ப்பதில்லை. இதனால் இவர்கட்குப் பரம்பரை உணர்வும் வாய்ப்பதில்லை.

முடியரசனார் பரம்பரையுணர்வு மிக்கவர். மரபு போற்றும் கவிஞர்; அவரது படைப்புகளில் பகுத்தறிவிற்கு ஏற்றுக்கொள்ளப்படும் இலக்கிய மரபுகளை, பழைமைகளை ஏற்றுக் கொள்ளவும் பகுத்தறிவிற்கு ஒவ்வாதனவற்றை எதிர்க்கவும் செய்கிறார்.

"பழமையைப் போக்கும் உள்ளமும் தமிழை வணங்கும் தனிக்கொள்கையும், சமுதாயச் சீர்திருத்தத்திலே ஆர்வமும் கொண்டவர் கவிஞர் முடியரசனார்."[22] முடியரசனாரின் இலக்கிய மரபு மாற்றங்களை யாப்பு மரபில் மாற்றம், இலக்கியக் கருத்தில் மாற்றம், பழமைக்கு மாற்றம், உலகியல் நிலைக்கு மாற்றம் என்னும் தலைப்புகளில் பகுத்துக் காண இயலும்.

**யாப்பு மரபில் மாற்றம்:**

கணவனை இழந்தபின் கைம்மை பேணலும் உடன்உயிர் துறத்தலும் புறப்பொருளாகச் சுட்டப்படுகிறது.

**“அளிய தாமே சிறுவெள் ஆம்பல்**
**இளையம் ஆகத் தழையா யினவே; இனியே,**
**பெருவளக் கொழுநன் மாய்ந்தெனப் பொழுதுமறுத்து**
**இன்னா வைகல் உண்ணும்**
**அல்லிப் படூஉம் புல் ஆயினவே”**[23]

என்னும் பொதுவியல் துறைப் பாடலில் ஒக்கூர் மாசாத்தனார் ‘இந்த ஆம்பல் இலையும் பூவும் அவள் இளமையாக இருந்த காலத்தில் அவளது காதலன் தைத்துத் தந்த தழையாடையாக இருந்தன. இப்போது பெருவளம் படைத்திருந்த கொழுநன் இறந்துவிட்டதால் வைகறைப் பொழுதில் பொழுது மறுத்துப் புல்லரிசிச் சோறுண்ணும் காலமாக மாறிவிட்டது அந்தோ!’ என்று பாடியுள்ளார்.

முடியரசனார் ‘புதருள் கனி’ என்னும் கவிதையில் (முடி.க.ப.71) ஊராரின் பழிச்சொல்லுக்குப் பயந்து ஊமையாகிவிடும் விதவையின் காதலைப் பாடியுள்ளார்.

‘இழந்தகாதல்’ (முடி.க.பக்.97-99) என்னும் கவிதையிலும், எக்கோவின் காதல் என்னும் சிறுகதையிலும் (எ.கா.ப.22) பெண்பாற் கைக்கிளையைப் பாடியுள்ளார்.

**இலக்கியக் கருத்தில் மாற்றம்:**

தமிழ் இலக்கிய மரபைப் போற்றும் கொள்கையுடைய கவிஞர், வடமொழியிலிருந்து தமிழுக்கு வந்து தமிழர் வாழ்வியலோடு இயைத்துக் கூறப்படும் புனைவு இலக்கியக்கூறுகளை எதிர்க்கிறார்.

‘கைவேலைக் களிறின் மேல் பாய்ச்சி நின்று, விரைந்து வரும் வேழத்தை எதிர்க்க மெய்வேலைப் பறித்தெடுத்து நகைத்து மேவாரை வெல்வதுதான் தமிழவாழ்வு என்று புறநானூற்றுத் தமிழரின் வீரத்தைப் போற்றுகிற கவிஞர், மெய்வீரன் ஒருவனுடன் எதிரில் நிற்க மிக நடுங்கி மரங்களிடையே மறைந்து நின்று பொய்வீரம் காட்டுகிற புன்மையெல்லாம் தமிழவாழ்வா? அது வேறு வாழ்வாம் என்று வாலியைப் புறமிருந்து கொன்ற இராமனின்

செயலை வெறுக்கின்றார். கம்பரின் கவிநயத்தைப் போற்றுபவராக இருப்பினும், கம்பராமாயணத்தில் சுட்டப்பெறும் இராமனின் செயலை ஏற்றுக் கொள்ள மறுக்கிறார். (கடி.மு.ப.8)

மன்னரையும், கடவுளரையும் பாட்டுடைத் தலைவராகப் பாடிய தமிழ் இலக்கிய மரபில் இளங்கோவடிகள் வணிகர்குலக் கண்ணகியையும், கோவலனையும் காப்பியத் தலைமாந்தராக்கிப் புரட்சி செய்தார்.

கால மாற்றத்தில் புலவரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு சிற்சில இலக்கியங்கள் தமிழில் தோன்றின. புலவராற்றுப்படை என்றழைக்கப்படும் திருமுருகாற்றுப்படை நக்கீரரால் இயற்றப்பெற்றது. பிள்ளைத் தமிழ் இலக்கியங்களில் திரிபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளை இயற்றிய சேக்கிழார் பிள்ளைத்தமிழ், கம்பராமன், சித்தன், தங்கவல்லி, தமிழ்வேள், சிவனடியான், இரா.திருமுருகன், அப்துல் காதர், சொ.சொ.மீ.சுந்தரம், இளந்தேவன், மரியதாசு ஆகியோர் பாடிய கம்பன் பிள்ளைத்தமிழ், க.இராசேந்திரன், சவகர்லால், சு.சண்முகசுந்தரம், கருப்பட்டிக்கவிராயர், பூமிநாதன், கலைச்செல்வி, சாரதா, சபாபதிசிதம்பரம், வ.கலியமூர்த்தி, க.நாராயணசாமி, அரு.சோ ஆகியோர் பாடிய திருவள்ளுவர் பிள்ளைத்தமிழ், சொ.சொ.மீ.சுந்தரம், இயற்றிய பண்டிதமணி பிள்ளைத்தமிழ் போன்ற சிற்றிலக்கியங்கள் புலவர்களைப் பாட்டுடைத் தலைவர்களாகக் கொண்டு பாடப்பெற்றவையாகும். புலவரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு காப்பியம் பாடப்பெறவில்லை. இந்நிலையை முடியரசனார் மாற்றினார். பண்டிதமணி கதிரேசனாரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு ‘ஊன்றுகோல்’ என்னும் காப்பியத்தை இயற்றியுள்ளார். இக்காப்பியம் தமிழ்வாழ்த்துடன் தொடங்கி கதிரெழுகாதை, கலைபயில் காதை, சபைகாண் காதை, மணம்புணர்காதை, நெறியுணர்காதை, மயக்குறாக்காதை, வழக்காடு காதை, சொல்வல்ல காதை, நட்புவளர் காதை, பேராசிரியக்கதை, பொதுப்பணி புரிகாதை, விருதுபெறுகாதை, நூல்தரு காதை, மணிவிழாக் காதை, பிணியுறு காதை, கதிர்மறை காதை, சிலைகாண் காதை எனப் பதினேழு காதைகளைக் கொண்டது. இக்காப்பியத்திற்குச் சிறப்புப் பாயிரம் பாடிய வ.சுப.மாணிக்கம் அவர்கள் நூலின் பதிப்புரையில் ‘புலவனைப் பொருளாகக் கொண்ட தமிழ்க்காப்பியம்

இதுவரை தோன்றியதில்லை' (ஊ.கோ.ப.4) என்று அறுதியிட்டுக் கூறுவது இங்கு முடியரசனாரின் மரபு மாற்றத்திற்கு அணி சேர்க்கிறது.

தமிழ் இலக்கிய மரபில் சைவம், வைணவம், பௌத்தம், சமணம், கிறித்தவம், இசுலாமியம் போன்ற சமயங்களுக்கென்று தனித்தனி காப்பியங்கள் உள்ளன. ஆனால் தாய்மொழிக் கென்று ஒரு தனிக் காப்பியம் தமிழில் இல்லை என்ற ஏக்க நிலையை மாற்ற 'பூங்கொடி' என்னும் மொழிப் போர்க் காப்பியத்தை முடியரசனார் படைத்துள்ளார். இக் காப்பியத்தில் தமிழ் வழிபாட்டைப் புதிய மரபாக்கித் தருகிறார்.

"தண்டியலங்காரம் கூறும் காப்பிய மரபைக் கவிஞர் பின்பற்றவில்லை."[24] பூங்கொடி காப்பியத்தில் தமிழ்த் தெய்வ வணக்கம் மட்டும் பாடியுள்ளார். திருமணம், புனல் விளையாட்டு, முடிசூட்டிக் கொள்ளுதல், மதுஉண்டு களித்தல், மக்கட்பேறு போன்ற பழைய காப்பிய நிகழ்ச்சிகளைக் கூறாமல் விடுத்து, மொழிகாக்க ஆள்வோர்க்குத் தூது, அறிஞர்களின் ஆலோசனை, வெளிநாட்டுப் பயணம், மொழிப்போர், சிறைப்படல் எனக் காலத்திற்கேற்ற புதிய கருத்துகள் 'பூங்கொடி' காப்பியத்தில் இடம்பெற்றுள.

இந்நூல் 'மணிமேகலை' காப்பியத்தின் வழி நூலாகக் கருதப்படினும் மணிமேகலை காப்பியத்திலிருந்த புனைவு நிகழ்ச்சிகள், சமயக் கோட்பாடுகள், இன்றி தமிழ்வாழ்வுக்காக இல்லற வாழ்வைத் துறக்கும் பெண்ணொருத்தியின் மொழிப்பற்றைக் கருப்பொருளாகக் கொண்டு காப்பியம் அமைந்திருப்பது (பா.ப.வா.ப.ப.152) மரபு மாற்றத்திற்குரியச் சிறந்த சான்றாகும்.

இந்தியெதிர்ப்புப் போராட்டத்தை அடிப்படையாக் கொண்டு எழுதப்பெற்ற பூங்கொடி காப்பியத்தில் ஓரிடத்தில் கூட 'இந்தி' என்ற சொல் பயன்படுத்தப் படவில்லை. அயல் மொழி, பிறமொழி என்றே சுட்டப்பெற்றுள்ளது.

சருக்கம், இலம்பகம், பரிச்சேதம் ஆகிய நூற்பிரிவுகளை விடுத்துக் காதை என்ற அமைப்பையே பிரிவுகளாக்கியுள்ளார். சிலப்பதிகாரம், மணிமேகலை காப்பியங்களிலும் காதைகளே உட்பிரிவுகளாய் அமையப் பெற்றுள்ளன.

காலந்தோறும் புலவர்களின் நாவில் ‘தமிழ்’ நடமாடியதைத் தொல்காப்பியர் முதல் தற்காலப் புலவர் வரை பல்வேறு சான்றுகள் காட்டலாம். தொல்காப்பியத்தில்

தொல்காப்பியத்தில் ‘தமிழ்’ என்னும் சொல்,

**“தமிழ் கூறு நல்லுலகம்”**[25]
**“செந்தமிழ் நிலத்து வழக்கு”**[26]
**“செந்தமிழ் சேர்ந்த பன்னிருநிலம்”**[27]
**“தமிழென் கிளவி”**[28]

என நான்கிடங்களில் பயின்று வந்துளது. சங்க இலக்கியங்கள் தமிழுக்கு,

**“தள்ளாப் பொருளியல்பின் தண்டமிழாய் வந்திலார்”**[29]
**“தமிழ்கெழு கூடல்”**[30]
**“நற்றமிழ் முழுதறிதல்”**[31]

என்று அடைகொடுத்து வழங்குகிறது. தமிழ்த் தேசிய சிந்தனை சங்க இலக்கிய மரபில் இருந்ததனை

**“தமிழ் கெழு மூவர் காக்கும்**
**மொழி பெயர் தேஎம்”**[32]

என்னும் அகநானூற்றுப் பாடலடிகள் உணர்த்தும். இக்கருத்து சிலப்பதிகாரக் காப்பியத்தில் வலுப்பெறுகிறது.

**“தமிழ் நாடு”**[33]
**“தென் தமிழ் நாடு”**[34]

என்று சிலப்பதிகாரத்தில் சுட்டப்பெறும் தமிழ் நாடு, தென் தமிழ் நாடு ஆகிய சொற்கள் தமிழ்த்தேசியத்தை வலியுறுத்துகின்றன.

பக்தி இலக்கியங்களில் தமிழையும், கடவுளையும் ஒன்றாய் நோக்கும் போக்கு வளர்ந்தது.

‘ஞால மளந்த மேன்மை தெய்வத் தமிழ்’[35] என்று சேக்கிழார் தெய்வத்தமிழ் எனக் குறிப்பிடுகிறார்.

பிற்காலத்தில் சிற்றிலக்கியங்களில் தமிழ் பாடும் மரபு தழைத்தோங்கியது. முத்தொள்ளாயிரம் தமிழ் மன்னரை 'தமிழர் பெருமான்'[36] எனக் குறிக்கிறது. அகத்துறை இலக்கணம் வாயிலாக 'தமிழ் விடு தூது' படைக்கப்படுகிறது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த தண்டபாணி சுவாமிகள் 'தமிழே தந்தை மொழி'[37] என்று தமிழ்மாலை நூலில் குறிப்பிடுகிறார்.

தமிழ்த்தாய் வாழ்த்துப் பாடிய மனோன்மணியம் பெ.சுந்தரனார் 'தமிழணங்கே'[38] என்று பாடுகின்றார். பாரதி 'தமிழ்த்தாய்' என்னும் தலைப்பிலான பாடலில் தமிழ்த்தாய் தன் மக்களாகிய தமிழரிடம் பேசுவதாகப் பாடல் இயற்றியுள்ளார்.

பாரதிதாசன் 'தமிழ்காக்க எழுந்திரு' என்னும் பாடலில் ஒண்டமிழ்த்தாய், உயர்தமிழ்த்தாய்' என்று அடைமொழிகள் தந்துள்ளார். 'மங்கை ஒருத்தி தரும் சுகமும் மாத்தமிழுக்கு ஈடாகுமோ?' என்று வினவினார். 'இன்பத்தமிழ் எங்கள் உயிருக்கு நேர்' என்று தமிழை உயிருக்கு நிகராகக் கருதினார். 'செந்தமிழே உயிரே நறுந்தேனே செயலினை மூச்சினை உனக்களித்தேனே! நைந்தாய் எனில் நைந்து போகுமென் வாழ்வு' என்று தமிழ்வாழ்வே தன்வாழ்வாகக் கருதினார். நாமக்கல் கவிஞர் 'தமிழன் என்றொரு இனமுண்டு'; 'தமிழன் என்று சொல்லடா' என்று பாடினார்.

பாரதிதாசன் பரம்பரைக் கவிஞர்களில் வாணிதாசன் 'தமிழ்தாழ்ந்தால் தமிழரும் அழிந்துபோவர்; தமிழ் வாழ்ந்தால் தமிழர் வாழ்வர்' என்றும் சுரதா 'தமிழ் காத்தோர் வரலாற்றில் செத்ததில்லை' என்றும் பெருஞ்சித்திரனார் 'தமிழ் புகுந்த உயிருக்கு இறப்பில்லை' என்றும் பாரதிதாசனின் அடியொற்றிப் பாடுகின்றனர்.

முடியரசனார் தமிழ் மொழியின் மீதுள்ள அளவில்லாத பற்றால் பல்வேறு மனித உறவு முறைகளோடு மொழியை இயைத்துப் பாடுவதோடு மட்டுமின்றி தமிழை மனைவியாகவும் மகனாகவும் கருதிப்பாடுவது தமிழ் இலக்கிய மரபில் முற்றிலும் புதுமையானதாகும்.

**அகப்பொருள் மரபில் மாற்றம்:**

கற்பு வாழ்வில் தலைவனைப் பிரிந்து வாடும் தலைவியின் துயரைச் சங்க இலக்கியங்களில் காண்கிறோம். ஆனால் தலைவியைப் பிரிந்து வருந்தும் தலைவனை முடியரசனாரின் 'இன்பமில்லை' என்னும் கவிதை காட்டுவது சங்க இலக்கிய மரபிலிருந்து மாறுபட்டது.

**"எத்தனைதான் காத்திருந்தும் என்ம னத்தே**
**இடங்கொண்டாள் எழில்கொண்டாள் நகைக்கும் பற்கள்**
**முத்தனையாள் வரவில்லை பொறுத்தி ருக்க**
**முடியவில்லை அறிஞரவர் வரைந்து தந்த**
**புத்தகத்தைப் புரட்டிவிட்டுப் பேசா தங்குப்**
**பூட்டிவிட்ட வானொலியைத் திருப்பி விட்டேன்;**
**அத்தனையும் வீணாயிற் றென்னி டத்தே**
**ஆவளில்லை ஆதலினால் இன்ப மில்லை!" (மு.க.ப.70)**

என்னும் பாடலில் மனைவியைப் பிரிந்திருக்கும் தலைவனின் தனிமைத் துயர் வெளிப்படுகிறது.

தலைவனைத் தலைவி தேடிச் செல்வதும் தலைவனிடம் நேரிடையாகக் காதலுரைப்பதும் சங்க இலக்கிய மரபில் இல்லாதன. எழுத்தாளர் எக்கோவைத் தேடிச்செல்லும் மல்லிகா எக்கோவைச் சந்தித்து காதலுரைத்து, மணம் செய்ய வேண்டுவதாக 'எக்கோவின் காதல்' என்னும் சிறுகதையில் கவிஞர் சித்திரித்துள்ளார். (எ.கா.பக்.114-117) இது சங்க இலக்கிய மரபிலிருந்து முற்றிலும் மாறுபட்டது.

பொதுவாகத் தலைவி நலனைத் தலைவன் பாராட்டுவதே தமிழ் இலக்கிய மரபு. ஆனால் முடியரசனார் தலைவன் நலத்தைத் தலைவி பாராட்டுவதாக 'புதுமைப் பெண்' (முடி.க.பக்.75-76), 'அழகிய மணவாளன்' (பா.கு,ப.234) ஆகிய பாடல்களில் புனைந்துள்ளார்.

காதலனை ஏமாற்றிய காதலி குறித்து 'ஏன் மறந்தாள்?' என்னும் தலைப்பிலான கவிதையில்,

**"காதலை வடித்துக் கொட்டிக்**

**கடிதங்கள் எழுதி விட்டு**
**வேதனை தந்தா ளன்றி**
**விழிக்கடை தந்தாள் அல்லள்;**
**மாதவள் மயங்க விட்டாள்**
**மடல்களோ நூறு விட்டாள்" (முடி.க.ப.102)**

என்னும் பாடலடிகளில் தன்னை மணந்து கொள்வதாகக் கூறிக் காதலித்து வேறொருவரை மணந்து கொண்ட தலைவியின் கடிதங்களை எண்ணி வருந்தும் தலைவனைக் காட்டுவது இலக்கிய மரபில் காலத்திற்கேற்ப அமைந்த பாடுபொருளாகும்.

இலக்கியங்களில் காதலுக்குத் தடையாகச் சாதி இருந்தமை பற்றிய குறிப்புகள் இல்லை. முடியரசனார் 'புதருள் கனி' (முடி.க.பக்.71-72) என்னும் கவிதையில் காதலுக்குச் சாதி தடையாய் நிற்பதைக் காட்டுகிறார். தொல்காப்பியம் 'கண்துயில் மறுத்தல்' என்பதைத் தலைவிக்குரிய மெய்ப்பாடாகக் குறிப்பிடும்.[39] 'துயில்' என்னும் கவிதையில்,

**"புத்தகங்கள் படித்துணர விரித்த போதும்**
**புதுக்கவிகள் எழுதிடநான் எண்ணும் போதும்**
**புத்தம்புதுப் படங்காணச் சென்ற போதும்**
**பொல்லாத துயிலே! நீதொல்லை தந்தாய்!**
**கத்துகுரல் புள்ளொடுங்க வருவேன் என்றாள்**
**கடையாமம் வந்துமவள் வந்தாள் இல்லை;**
**இத்தனை போழ் தாகியும் கண் மூட வில்லை**
**இரிந்தோடி மறைந்தாயோ காதல் முன்னே!"**

**(முடி.க.ப.155)**

என்று தலைவன் இரவுக்குறியில் தலைவியின் வரவிற்காய் கடையாமம் வரை கண்துயில் மறுத்திருப்பதைக் கவிஞர் பாடுவர்.

**புறப்பொருள் மரபில் மாற்றம்:**

சங்க இலக்கிய மரபில் பெண் ஆடவரை எதிர்த்துப் போரிட்ட செய்தி கூறப்பெறவில்லை. முடியரசனார் வீரகாவியத்தில் முறுவலனை எதிர்த்துச் சண்டையிட்ட மானத்தியின் வீரத்தை,

**"சாவதற்கும் அஞ்சாராய்ப் புரியும் வீரம்**

**சாற்றுதற்கும் எளிதாமோ? விந்தை! விந்தை!**
**நாவகத்துச் சொல்லெல்லாம் கூட்டிச் சேர்த்து**
**நவின்றாலும் இவள்திறத்தை நவிலப் போகுமோ!" (வீ.கா.65:299)**

என்று முறுவலன் வழி போற்றியுரைப்பது இலக்கிய மரபுமாற்றத்தைக் காட்டுகிறது.

வரையாது வழங்குகின்ற கொடை வள்ளல் எழுவர் என்பது தமிழரின் பண்டைய மரபு வள்ளல்கள் எழுவர் அல்லர்; அழகப்பரோடு சேர்த்து எண்மர் என்பதனை,

**"வரையாது வழங்குகொடை வள்ளல் தம்மை**
**வரையறுத்தார் முன்னாளில் எழுவர் என்றே;**
**குறையாமல் கல்விக்கே கோடி கோடி**
**கொடுத்துயர்ந்த அழகனுமோர் வள்ளல் ஆனான்**
**கரவாத பிறரெவரும் இருப்ப ரேல்இக்**
**காலத்தும் உளரெழுவர் வள்ளல் என்பேம்**
**பிறராருங் காணேமால் ஒருவன் நின்றான்**
**பெருங்கொடைஞர் அறுவர்க்கு யாண்டுச் செல்கேம்?**
**ஆதலினால் முன்வகுத்த எழுவர் என்ற**
**எண்மாற்றி அவருடனே எண்மர் என்போம்" (க.மு.பக்.58-59)**

என்று பாடுவர். மேலும் அழகப்பர் மற்றைய வள்ளல்களை வென்ற வள்ளல் என்பதனை,

**"பாரிவிடும் தேரதனால் வாழ்வு பெற்ற**
**படர்முல்லைக் கொடி ஒன்றே; செல்வம் எல்லாம்**
**வாரிவிடும் அழகப்பன் தந்த வீட்டால்**
**வாழ்வுபெறும் பூங்கொடிகள் கணக்கில் உண்டோ?**
**சோரிவிடத் தலைதந்தான் குமணன் என்பர்;**
**சொல்லரிய பொருளெல்லாம் கல்விக் காக**
**மாரிபடத் தந்ததன்மேல் வாழ்வே தந்தான்**
**மனமுள்ளோர் இவன் கொடையின் அருமை காண்பர்**
**படுபெயலால் மிகநனைந்து குளிரால் வாடிப்**
**பதைபதைத்து நடுநடுங்கக் கண்டு நெஞ்சு**
**துடிதுடித்தே அடடாஓ! என்று பேகன்**
**துய்யமயில் ஒன்றுக்கே ஈந்தான் போர்வை;**
**கொடையழகன் பலமயில்கள் கற்ப தற்குக்**
**குடியிருக்கும் தன் வீட்டை ஈந்தான் கண்டோம்;**

**கொடைமடத்தால் உளம்பெரிது பேக னுக்கு**

**கொடுப்பதிலே உரம்பெரிதே அழகனுக்கு" (க.மு.ப.63)**

என்று அழகப்பரை பாரி, குமணன், பேகன் ஆகிய வள்ளல்களின் கொடைத்தன்மையோடு ஒப்பிட்டு அவர்களைக் காட்டிலும் கொடைத்தன்மையில் அழகப்பர் சிறந்தவரென்று போற்றி உரைக்கின்றார்.

'பெண்களை இழிவுபடுத்தும் மடமை என்ற கோட்டை மதிலை இடித்துப் பொடியாகத் தகர்த்து மாய்ப்போம் என்றுரைக்கும் கவிஞர் யாரேனும் பண்டைய மரபு, வேதமுறை என்று சொல்லி எதிர்க்க விரைந்தெழுந்தால் அவர்களையும் தீயிட்டுக் கொளுத்தி மாய்ப்போம்' (க.மு.ப.91) என்று புதுமைக்குக் கட்டியமிடுகின்றார்.

'கல்வியறிவு சிறிதுமில்லாத கம்பன் நாவில் காளி எழுதியதால்தான் கம்பருக்குக் கவித்திறன் கிடைத்தது' என்று கற்றறிந்தோரும் ஏற்றுக் கொள்ளும் புனைவுக் கதையை பகுத்தறிவுப் பாவலரான முடியரசனார் மறுக்கிறார். இதனை 'கம்பன் முற்றுமுணர்ந்த அறிஞன், கலைக்கடலில் மூழ்கிஎழும் கலைஞன், காலம் காணா சொற்றமிழ் கவிஞன், நறை பழுத்த துறைத் தமிழில் தோய்ந்தெழுந்த புலவன், தொடுத்திருக்கும் பழம்பாடல் தொடைகள் தாங்கி தொன்மைக்கும் தூய்மைக்கும் முதன்மை காட்டத் தமிழாகிய கடலைக் கடந்து, எல்லையிலாப் புகழை அடைந்தான். தென்மொழியில் மட்டுமின்றி வடமொழியையும் கற்றுக் கரைகடந்தவன்' (க.மு.ப.156) என்னும் அவர்தம் கூற்று நன்கு விளக்கும்.

'இமயத்தில் கொடியை நட்டோம்' என்று பழம்பெருமை பேசுகின்ற பலர் தமிழைக் கொன்றொழிக்கின்ற செயல்களில் ஈடுபடுவதைக் கண்டு கவிஞர் உள்ளம் நொந்து 'தைத்திங்கள் பிறக்கும் நாளைச் சங்கராந்தி என்றும், சிறுவர்கள் கூடிக் கொண்டாடும் தமிழர் விழாவான மகார் (சிறார்) நோன்பைத் தசரா என்றும், திருமறைக்காடென்ற பெயரை வேதாரண்யம் என்றும் அண்ணாமலை என்னும் பெயரை அருணகிரி என்றும் நம்தமிழர் திருநாள், ஊர், பெயர் என எல்லாவற்றையும் பெயர் மாற்றி அழைத்து அயலாரிடம் அடிமைப்பட்டுக் கிடக்கும் பழமை ஒழிய வேண்டும் (தா.மொ.கா.பக்.64-65) என்று பாடுகின்றார்.

‘காரிகை கற்றுக் கவி பாடுவதிலும் பேரிகை கொட்டிப் பிழைத்தல் நன்று’ என்ற பழமொழியைக் காட்டி யாப்பிலக்கணத்தைக் கற்று எழுதுவதைவிட பேரிகை கொட்டிப் பிழைத்துவிடலாம் என்று தவறாகப் பொருள் உரைக்கப்பெறுகிறது. அதனுட் பொதிந்து கிடக்கும் கருத்தைப் பலா் உணரவில்லை. வறுமையில் வாடிய புலவன் ஒருவன் உள்ளம் வெதும்பி கவிபாடிப் பிழைப்பதை விடப் பேரிகை கொட்டிப் பிழைப்பது எவ்வளவோ மேல் என்று வறுமைத்துயர் தாளாமல் புலம்புவதே அக்கருத்து’ (முடி.கடி.ப.81) என அதற்குப் புதிய விளக்கம் கூறுவது சுட்டுதற்குரியது.

**உலகியல் நிலைக்கு மாற்றம்:**

**“செந்தமிழ் நாடெனும் போதினிலே - இன்பத்**
**தேன்வந்து பாயுது காதினிலே”[40]**

என்று பாடினார் பாரதி. செந்தமிழ் என்பதற்கான விளக்கமாகச் செம்மை பொருந்திய தமிழ் என்று சான்றோர் கூறுவர். முடியரசனார் ‘செந்தமிழ்’ என்பதற்கான விளக்கமாக,

**“முந்தைத் தமிழ்கெடுக்க மூண்டெழுந்த நோக்கமுடன்**
**எந்தத் துணைகொண்டிங் கெந்தமொழி வந்தாலும்**
**நோவுக்கும் அஞ்சோம் நொடிப்பொழுதில் வீழ்கின்ற**
**சாவுக்கும் அஞ்சோம் தமிழ்காப்போம் என்றெழுந்த**
**அஞ்சலிலாக் கூட்டத்தை ஆளவந்தோர் தாக்கியதால்**
**நெஞ்சிருந்து சிந்தி நெடிதோடுஞ் செங்குருதி**
**பாய்ந்து தமிழ்மொழியாம் பைங்கூழ் செழிப்பதனால்**
**ஆய்ந்தமொழி செந்தமிழென் றானதென நானுரைப்பேன்”**

**(தா.மொ.கா.பக்.95-96)**

என்னும் பாடலடிகளில் மொழிப்போரில் சிந்திய தமிழரின் செங்குருதியில் செழிப்பதால் செந்தமிழானது என்றுரைப்பது புதிய சிந்தனையாகும்.

தமிழ் இலக்கியத்தில் மரபுக்கவிதை, புதுக்கவிதையென்று வகைப்படுத்துவது உலகியல் மரபு. ஆனால் கவிஞா் இதனைக் கடிந்துரைக்கிறார். ‘மரபுக் கவிதையென்று பலர் கூறுவது புதுமையாகவும், வியப்பாகவும் இருக்கிறது. அவ்வாறானால் மரபு கெட்ட கவிதையென்று ஒன்று உளதா? மரபு அமைந்திருந்தால்தானே அது கவிதை எனப்படும். அது கெட்டால்

கவிதையெனப்படாதே.. பிள்ளை பெற்ற தாய் என எவரும் கூறார். பிள்ளை பெறாத தாயரும் உள்ளரோ? தாய் என்னும் பெயர் பிள்ளை பெற்றவளுக்குத்தானே உள்ளது ஆதலின் இனி, மரபுக் கவிதையென்று எழுதாதே. கவிதை என்று மட்டும் எழுது' (முடி.கடி.ப.78) என்று கவிஞர் தம் கடிதவிலக்கியத்தில் உலகியல் மரபிற்கு எதிர்ப்புத் தெரிவிக்கிறார். இதே போன்று கவிதையெழுதுபவரைக் கவிஞன் என்னும் பெயரிட்டு அழைக்கும் உலகியல் நிலைக்கு மாற்றம் தெரிவிக்கின்றார்.(க.மு.பக்.85-86)

தமிழகத்தில் பிறந்து, வாழ்வோரைத் தமிழரென்று குறிப்பது வழக்கம். ஆனால் முடியரசனார் இக்கருத்தை மறுக்கிறார். பூங்கொடியிடம் தாமரைக் கண்ணி அறிவுரைப்பதாக அமைந்த பாடலில்,

**"உள்ளமும் உயிரும் உணர்வும் தமிழென**
**உள்ளுவோன் எவனோ அவனே தமிழன்!**
**தமிழ் தமிழ் என்றுரை சாற்றுவோர் எல்லாம்**
**தமிழ்காப் போரென நினைப்பது தவறு" (பூ.கொ.10:61-64)**

என்று பகர்கிறார்.

தமிழர் குடியில் மணமான பெண்களுக்கு அடையாளமாய்த் தாலி அணிந்திருத்தலை எண்ணுவதும், தாலியைப் புனிதமாகக்கருதிப் போற்றுவதும், திருமணத்தின்போது ஆண் பெண்ணுக்குத் தாலி அணிவிப்பதும் உலகியல் நிலை. ஆனால் முடியரசனார் பார்வையில் விதவைப் பெண்களின் வாழ்வை அழித்த தாலிக்கயிறு அடிமைக்கயிறாகத் தென்படுகிறது. அதனை 'எக்கோவின் காதல்' என்னும் சிறுகதையில் எக்கோவின் வாயிலாகக் கூறுகின்றார். 'தாலி! நல்ல தாலி! அந்த அடிமைக் கயிறு கட்டுவதால் தானே எத்துணையோ பெண்கள் விதவை என்ற இழிந்த பெயரைப் பெறுகிறார்கள்' (முடி.கடி.ப.120) என்பர்.

'ஆற்றங்கரைக் காதலி' என்னும் தலைப்பிலான கவிதையில்,

**"மந்திர மில்லாமல் - ஓதும்**
**மறையவர் இல்லாமல்**
**சந்தன மில்லாமல் - தாலிச்**
**சரடுமே இல்லாமல்**
**அந்தஇடம் மணந்தோம் - சான்றும்**

**அகமன்றி வேறில்லை" (கா.பா.ப.64)**

என்னும் பாடலடிகளில் மறையோர் மந்திரமின்றி, தாலியின்றி மணம் செய்யும் சீர்திருத்தத் திருமணத்தைக் குறிப்பிடுகிறார்.

பொதுவாக உலகியலில் தம் மகளுக்கு மணமகன் தேடும் பெண் வீட்டார் மணமகன் கைநிறையச் சம்பாதிக்கிறாரா என்றும், மணமகள் கண்ணுக்கு நிறைந்த அழகாய் இருக்கிறாரா என்றும் தான் பார்ப்பார்கள். ஆனால் பண்டிதமணியின் மனைவி மீனாட்சி சராசரிப்பெண்களிலிருந்து வேறுபட்டு உடலழகைப் பாராமல் உள்ளத்தழகை உணர்ந்து மணம் செய்து கொண்டார் என்பதனை,

**"கைநிறைந்த பொருள்பார்ப்பர் பெண்பெற்றார்**
**கண்ணிறைந்த கணவ னைத்தான்**
**மைவரைந்த விழியுடைய பெண்பார்ப்பாள்**
**மாநிலத்தில் ஈதி யற்கை**
**ஐவிளைந்த கொடியிடையார் மீனாட்சி**
**அன்பரவர் மெய்யைப் பாரார்**
**கைநிறைந்த மதிவிளைந்த மெய்பார்த்துத்**
**தரம்பார்த்து மணந்து கொண்டார்" (ஊ.கோ.4:11)**

என்று பாடுவர்.

**மரபுக் காப்புணர்ச்சி:**

முடியரசனார் மரபு போற்றும் பாவலராகத் திகழ்ந்ததை அவரது படைப்புகள் நன்கு புலப்படுத்துகின்றன.

**இலக்கணம் போற்றும் கொள்கை:**

மரபோடிருந்தால் தான் அதுகவிதையாகும் என்பதை வலியுறுத்தும் கவிஞர் புதுமை என்ற பெயரில் தோன்றுவனவெல்லாம் புதுமை அல்ல என்று மறுப்புத் தெரிவிக்கிறார்.

'யாழெடுத்து வா' என்னும் தலைப்பிலான கவிதையில்

**"புதுமைக்கு வழிகாட்டு புலமைக்கோர் உணர்வூட்டு**
**பொருள் மிக்க பழம்பாட்டின் புகழுக்கு மெருகேற்று"**

**(பா.கு.ப.212)**

என்று பழமை போற்ற அறிவுறுத்துகிறார்.

**“வண்ணங்கள் எண்ணங்கள் புதிதாகவே**
**வடிவங்கள் அமையுங்கள் மரபாகவே**
**எண்ணுங்கள் எண்ணுங்கள் முனியாமலே**
**எழுதுங்கள் முயலுங்கள் இனியாவது**
**தனியான மரபுள்ள தமிழாகுமே**
**தரமான நெறிகொண்ட மொழியாகுமே” (பா.கு.ப.236)**

என்று தனிமரபுடைய தமிழில் புதுமையான எண்ணங்களை மரபு வடிவில் கவிதையாக்க வேண்டும் என விழைகின்றார்.

‘வாழிய கவிதை’ என்னும் தலைப்பிலான கவிதையில்,

**“அரைகுறை யாக வெந்த**
**அரிசியைச் சோறென் றோதிப்**
**புரைபடும் அறிவைக் காட்டும்**
**போலியர் சிலராற் பாட்டின்**
**நெறிமுறை பிறழ்தல் கண்டேன்;**
**நிலைதடு மாறும் அந்த**
**உரைநடைக் கூட்ட மெல்லாம்**
**உணர்ந்திடக் ‘கவிதை’ வாழ்க” (ம.க.கொ.ப.263)**

என்னும் பாடலடிகளில் புதுக்கவிதை என்னும் பெயரில் உரைநடையைக் கவிதையென்று கூறும் புல்லறிவுக் கூட்டத்தைச் சாடுகின்றார்.

யாப்புறுப்புகள் இல்லாப் புதுக்கவிதையை ‘உறுப்புகள் இல்லாப் பிண்டம்’ என்றும் (தா.கா.ப.711) ‘சீலைகட்டிய ஆண்’ (தா.கா.ப.72) என்றும் பழிக்கின்றார்.

‘அதன்பெயர் என்ன? என்னும் தலைப்பிலான பாடலில்,

**“எழுதிய வெல்லாங் கவிதை - என்றால்**
**எங்ஙனம் ஒப்புவ ததனை?**
**பழுதுகள் அடைந்தன உறுப்பு-பின்னும்**
**பாவெனச் சொல்வதா சிறப்பு?” (தா.கா.ப.74)**

என்று புதுக்கவிதையின் மீது வினா தொடுக்கின்றார்.

‘கவிஞனாக விரும்புகிறாயா?’ என்னும் கடிதத்தில் உரைநடையைத் தூண் எனவும், கவிதையைச் சிலை எனவும் ஒப்புமைப்படுத்துகிறார். இலக்கண அமைப்பு மட்டுமோ, அல்லது கருத்து மட்டுமோ கவிதையாகிவிடாது. உயிரும் உணர்ச்சியும் பொருளும் இலக்கண அமைப்பும் கலந்ததுதான் கவிதை. இலக்கணத்திற்குக் கட்டுப்பட்டு, அதற்கு அடிமையாகி எழுதப்படுவது உயிர்க்கவிதையாகிவிடாது; இலக்கணத்தைக் தனக்குக் கட்டுப்படுத்தி அதனை அடிமையாக்கி எழுதப்படுவதுதான் உயிர்க்கவிதையென்றும் உணர்ச்சிக் கவிதையென்றும் சொல்லப்படும். அஃதாவது கவிஞன் இலக்கணத்திற்குப் பின்னே செல்லுதல் கூடாது. இலக்கணம் கவிஞருக்குப் பின்னே வர வேண்டும்’ (முடி.கடி.பக்.74-76) என்று கவிஞருக்கு இலக்கண அறிவும் புலமையும் அவசியமானவை என அறுதியிட்டுரைக்கின்றார்.

‘இருபதாம் நூற்றாண்டில் கவிதை’ என்ற தலைப்பில் 1968-இல் உலகத் தமிழ்மாநாட்டு மலரில் வெளிவந்த கட்டுரையில் ‘கல்லாக் கவிஞர், இலக்கணம் வேண்டாவெனும் பொல்லாக் கொள்கையுடையவராக இருத்தல் இயல்பு. கல்லார் சொல்லை நல்லோர் ஏலார் என்றுமே வாழ விழையுங் கவிஞர் இலக்கணத்தைப் புறக்கணியார். எழுத்து வழு, சொல் வழு, பொருள் வழு, யாப்பு வழு முதலிய அனைத்து வழுக்களும் பொருந்திய பாட்டுகள் புனைவதால் தமிழ் மொழிக்கு யாது பயன்? ஓரிலக்கணமும் அறியாதார் பாக்கள் எழுதுவதும், இலக்கணமே வேண்டாவெனக் காட்டுக் கூச்சலிடுவதும் முறையன்று; நெறியும் அன்று’ (எ.வ.த.ப.37) என இலக்கணம் வேண்டாமென்பது தமிழ் மரபிற்கு எதிரானது என்று கண்டனக்குரல் எழுப்புகின்றார்.

**மரபு போற்றும் பான்மை:**

முடியரசனார் தம் காப்பியங்களை பண்டைத்தமிழ் இலக்கிய மரபின் வழிநின்று அகவற்பாவில் படைத்துள்ளார். குறுங்காப்பியங்களான காதற்சிலை, சுதமதி ஆகியனவற்றையும் நிலைமண்டில ஆசிரியப்பா யாப்பில் இயற்றியுள்ளார்.

சிலப்பதிகாரம், மணிமேகலை காப்பிய உட்பிரிவுகளான காதை அமைப்பைப் போன்று இவ்விரு காப்பியங்களிலும் காதைகளை உட்பிரிவாக்கியுள்ளார். பூங்கொடி 31 காதைகளையும், 5243 அடிகளையும் உடையது. ஊன்றுகோல் 17 காதைகளையும் 2043 அடிகளையும் உடையது. இவ்விரண்டுமே பெருங்காப்பியப் பண்புகள் பல நிறைந்த சிறுகாப்பியங்களாகும்.

சங்க இலக்கிய மரபை அடியொற்றி முடியரசனார் தம் காதல் பாடல்களில் தலைவன், தலைவியின் இயற்பெயரைச் சுட்டவில்லை.

குறிஞ்சி என்னும் தலைப்பிலான பாடலில் குறிஞ்சித் திணைக்குரிய முதல், கரு, உரிப்பொருள்களை அமைத்துள்ளார். தொல்காப்பியம் சுட்டுகின்ற காட்சி, ஐயம், தேறல், புனல் தரு புணர்ச்சி, குறிப்பறிதல் ஆகியவற்றையும் காதலின் படிநிலைகளாய்க் காட்டியுள்ளார். (க.மு.பக்.72-79)

'சங்கத் தமிழர் மரபில் சாதியில்லை, இடையில் புகுந்த சாதியைத் தமிழர் போற்ற வேண்டியதில்லை' என்னும் கருத்தினை

**"சாதிப் பிணக்கெல்லாம் சங்கத்தமிழ் மாந்தர்**
**ஆதிப்பழக்கமன் றவ்வழியில் வந்தவன் நான்"(க.மு.ப.76)**

என்னும் பாடலடிகளில் வெளிக்காட்டி மரபு போற்றுகிறார்.

**பாரதி-பாரதிதாசன் இலக்கிய மரபில் வழி மாறா முடியரசன்:**

பழங்காலத்திலிருந்து தற்காலம் பரை பல சிறந்த புலவர்கள், கவிஞர்கள் தமிழகத்தில் தோன்றி தமிழ் இலக்கிய உலகிற்குத் தலைசிறந்த இலக்கிய, இலக்கண நூல்களைப் படைத்துத் தந்துள்ளனர். தொல்காப்பியர், திருவள்ளுவர், இளங்கோவடிகள், ஔவையார், கபிலர், கம்பர், காளமேகம், திருமூலர், வள்ளலார் ஆகிய புலவர்களின் வரிசையில் இருபதாம் நூற்றாண்டில் பாரதி, பாரதிதாசன், கவிமணி, நாமக்கல் கவிஞர், முடியரசனார், வாணிதாசன், கண்ணதாசன், சுரதா போன்ற கவிஞர்கள் இலக்கியங்கள் பல படைத்துத் தமிழுக்கு அணியும், புகழும் அளித்துள்ளனர். இருபதாம் நூற்றாண்டுக் கவிஞர்களுள் தமிழ்க்கவிதையின் நோக்கையும், போக்கையும் மாற்றியமைத்த பெருமைக்குரியவர்கள் பாரதியும், பாரதிதாசனும் ஆவர்.

பாரதியின் கவிதா மண்டலத்தைச் சார்ந்த கவிஞராக அறிமுகமான பாரதிதாசன், காலப்போக்கில் தனக்கென ஒரு தனித்தன்மையை வகுத்துக் கொண்டார். கவியுலகில் தனக்கென ஒரு பரம்பரையை உருவாக்கிய பெருமை பாரதிதாசனுக்கே உண்டு.

**“பாரதிதாசன் பரம்பரை வந்தோர்**
**பலர்பலர் ஆவர்; பாப்புனை தொழிலால்**
**யானுமம் மரபே யாவரும் அறிகுவர்;**
**பாரதிதாசனைத் தந்தோன் பாரதி**
**அத்தகு முறையால் அவன்என் பாட்டன்**
**பாட்டன் பாட்டினைப் பாடுவன் கேண்மோ!” (க.மு.ப.31)**

**“பாரதியாம் வாழை பயந்த அடிவாழை**
**பாரதி தாசனென்று பாருரைக்கும்; இவ்வாழை**
**எண்ணில் அடங்கா இளம்வாழை பெற்றதுண்டு**
**நண்ணி வளர்வாழைத் தோட்டத்துள் நானொருவன”** (க.மு.பக்.119-120)

**“எம் பாட்டன் பாரதிக்குத் தாச னானாய்” (பு.வி.செ.ப.179)**

**“அப்பனவன் பரம்பரையில் நானோர் பிள்ளை” (தா.கா.ப.85)**

**“பாட்டரசன் என்னும் பரம்பரையில் வந்தவன்யான்” (வ.கோ.ப.7)**

**“ஒப்புமனச் சிந்தை ஒன்றுடையாள் பாரதத்தாய்**
**என்றுரைத்தான் என்பாட்டன்” (ஞா.தி.ப.153**)

என்னும் பாடலடிகள் முடியரசனாரின் பரம்பரையுணர்வைக் காட்டும்.

“பாவேந்தராலேயே தனது கொள்கைப் பரம்பரையாகப் போற்றப்பட்ட கவிஞர் முடியரசன் தனது முன்னோரின் அரசியல் வழிப்பட்டுப் பாவேந்தரின் சிறந்த கொள்கை வாரிசாகத் திகழ்ந்திருக்கிறார்.”[41]

“பாரதியார் இக்கவிஞருக்குப் பாட்டனார்; பாரதிதாசனார் இக்கவிஞருக்குத் தந்தை போன்றவர். அப்பெருங்கவிஞர்களுடைய வழியிற் சென்று ஒவ்வொரு விதத்தில் அவர்களையெல்லாம் வென்றுவிட்டார் இவர் (முடியரசனார்)”[42] என்று கவிஞரைப் பற்றி அ.சிதம்பரனார் குறிப்பிடுவது முடியரசனாரின் தனித்தன்மையைப் புலப்படுத்தும்.

‘குயில்பாட்டு’, ‘கண்ணன்பாட்டு’, ‘பாஞ்சாலி சபதம்’ என்னும் முப்பெருங் காப்பியங்களைப் படைத்துத்தந்தார் பாரதியார். பாரதிதாசன் ‘சஞ்சீவி பர்வதத்தின் சாரல்’, ‘புரட்சிக்கவி’ ‘வீரத்தாய்’ என்னும் மூன்று காப்பியங்களுக்கு இடம் தந்தார். பாரதியையும்,

பாரதிதாசனையும் அடியொற்றிய முடியரசனும் பூங்கொடி, வீர காவியம், ஊன்றுகோல் என்னும் மூன்று காப்பியங்களைப் படைத்துள்ளார்.

பாரதியின் படைப்புகளில் வடமொழிக் கலப்பு மிகுதியாய் உள்ளன. பாரதிதாசனின் படைப்புகளில் சிற்சில விடங்களில் உள்ளன. முடியரசனாருடைய படைப்புகளிலும் முற்றிலுமாக இல்லை என்னும் அளவிற்கு பிறமொழிக் கலப்பில்லாத தூய தமிழ்ச் சொற்களைக் கொண்டு கவிதை படைத்துள்ளார்.

முடியரசனார் முன்னோர் வழி நின்றாரேயன்றி, அவர்களின் பிரதியாகத் தன்னை ஆக்கிக்கொள்ளாமல் புதுமைக்கவிஞராக, தனிப்போக்கும், தனிப்பாங்கும் கொண்டு விளங்கினார். இதனை முனைவர் தமிழண்ணல் தென்றல் ஏட்டில் ‘முடியரசன் பாரதிதாசனை வழிகாட்டியாகக் கொண்டுள்ள முற்போக்குக் கவிஞர். ஆம், ‘வழிகாட்டியாகக் கொண்டுள்ளவர்’ என்று சொன்னேன். அவரைப் பார்த்து எழுதுகிறவர் அல்லர், முன்னோர் வழி நின்று தனிப்போக்கில் தனிப்பாங்கில் தமிழ் மரபுக்குக் கட்டுப்பட்டுக் கவிதையெழுத வேண்டுமென்பதே அவர் கொள்கை’ (பா.ப.வா.ப, ப.185) என்றுரைப்பது நன்கு விளக்கும்.

**தொகுப்புரை:-**

- காலத்திற்கும் சூழலுக்கும் தக்கவாறு இலக்கியம் தன்னைத் தகவமைத்துக் கொள்ளும். காலச்சூழலுக்கு ஒவ்வாத இலக்கிய மரபுகள் தேய்ந்து மறைவதும், தேவைக்கேற்ப புதிய இலக்கிய மரபுகள் தோன்றி வளர்வதும் இலக்கியத் தளத்தில் இயல்பாக நிகழக் கூடியனவாகும்.
- ஒரு படைப்பாளன் தான் படைக்கும் இலக்கியத்தில் பழைய இலக்கிய மரபுகளை மறுப்பதும், புதியனவற்றைப் புகுத்துவதும் அவரவரின் எண்ணவோட்டத்தை, இலக்கியக் கொள்கையை வெளிக்காட்டுவதாக அமையும். முடியரசனாரின் படைப்புகள் மரபிலிருந்து மாறாச் சிறப்புடையன. முடியரசனார் மரபின் மீது மதிப்பும் மரபு மாறாத புதுமையில் விரும்பும் கொண்டிருந்தார்.
- நாடக உரையாடலுக்கு ஆசிரிய விருத்த யாப்பினைக் கையாளுதலே இலக்கிய மரபு. ஆனால் முடியரசனார் நேரிசை வெண்பா யாப்பில் பாடல் இயற்றியுள்ளார்.
- ‘ஆட வாராய்’ என்னும் தலைப்பிலான இசைப்பாடலில் எடுப்பு, தொடுப்பிற்கு அடுத்துவரும் முடிப்புப்பாடல்கள் மூன்றையும் வல்லினம், மெல்லினம், இடையின எழுத்துகளால் ஓசையின்பம் தோன்ற தனித்தனியே அமைந்திருப்பது இலக்கிய மரபில் புதுமையானதாகும்.
- முடியரசனார் உரைநடையை ஆணுக்கும், கவிதையைப் பெண்ணுக்கும் ஒப்புமைப்படுத்தியுள்ளார்.
- பேராசிரியர் இலக்குவனார் பணிநீக்கம் செய்யப்பட்டதை, சிலப்பதிகாரச் செய்தியோடு ஒப்பிட்டுக் காணும் முடியரசனார் வையை இலக்குவனார்க்கு உற்ற அவலநிலை கண்டு மண்மேல் வாராது மண்ணுக்குள்ளேயே ஒளிந்து கொண்டாள் என்று நீர்வற்றி மணற்பரப்பாய்க் காட்சிதரும் வையையாற்றைப் புதுமையாகக் காட்சிப்படுத்துகிறார்.
- வாயாற் பொய்யாதொழுகுவது வாய்மை, மெய்யால் பொய்யாதொழுகுவது மெய்ம்மை என்று சொற்களுக்கு நுட்பமான, புதுமையான பொருள் வேறுபாட்டைக் கூறுகின்றார்.

- பாரதியையும், பாரதிதாசனையும் பருவ மேகம், கரியமேகம் என்றும் சிவனைப் போன்று போலி வணிகர்க்கும் ஐந்தொழில் உண்டு என்றும் புதிய உவமைகளைக் கையாண்டிருப்பது புதுமையாகும்.
- காலத்திற்கேற்ப மரபு மாறிக் கொண்டேயிருக்கும், கால, இடச் சூழல்களுக்கு ஏற்ப மரபுகளிலும் மாற்றம் விளையும், அவ்வாறு மாற்றம் பெறாத மரபுகள் காலச் சூழலால் ஒதுக்கிப் புறம் தள்ளப்படும்.
- பெருமைமிக்க பழைய மரபுகளைப் போற்றிக்காப்பதும், பழமையை அழித்தொழிக்காத புதுமையை வரவேற்பதும் படைப்பாளனின் முதல் கடமையாகும்.
- மரபு போற்றும் கவிஞரான முடியரசனார் பகுத்தறிவிற்கு ஏற்றுக்கொள்ளப் பொறும் இலக்கிய மரபுகளை ஏற்றுக் கொள்ளவும், பகுத்தறிவிற்கு ஒவ்வாதனவற்றை மறுக்கவும் செய்கிறார்.
- தமிழ் இலக்கிய மரபைப் போற்றும் கொள்கையுடைய கவிஞர் வடமொழியிலிருந்து தமிழுக்கு வந்து தமிழர் வாழ்வியலோடு இயைந்து கூறப்படும் புனைவு இலக்கியக் கூறுகளை எதிர்க்கிறார்.
- முடியரசனார் பண்டிதமணி கதிரேசனார் எனும் புலவரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு ‘ஊன்றுகோல்’ என்னும் காப்பியத்தை இயற்றியுள்ளமை புதிய மரபாகும்.
- கற்பு வாழ்வில் தலைவியைப் பிரிந்துவாழும் தலைவனின் துயரையும், மணந்துகொண்ட தலைவியின் கடிதங்களை எண்ணி வருந்தும் தலைவனைக் காட்டுவதும் காலத்திற்கேற்ற கவிஞரின் பாடுபொருள், ஆகும்.
- வீரகாவியத்தில் முறுவலனை எதிர்த்துச் சண்டையிட்ட மானத்தியின் வீரத்தைப் போற்றியுரைத்துள்ளார்.
- கவிதை எழுதுபவரெல்லாம் கவிஞரல்லர்; தமிழகத்தில் வாழ்வோரெல்லாம் தமிழரல்லர் என்பது கவிஞரின் கருத்தாகும்.

- தொல்காப்பிய, சங்க இலக்கிய மரபுகளைப் போற்றி பாரதி பாரதிதாசன் வழிமரபில் நின்று யாப்பு நெறியிலிருந்து விலகாமல் புதுமை பூத்த மரபுக்கவிஞராகக் கவிஞர் முடியரசனார் திகழ்கின்றார்.

**சான்றெண்விளக்கம்**


1. மு.வரதராசனார், இலக்கிய மரபு, ப.173
2. பேரா.அ.ச.ஞானசம்பந்தன், இலக்கியக்கலை, ப.53
3. டாக்டர் அ.சிதம்பரநாதன், முன்பனிக்காலம், ப.86
4. தொல்காப்பியம், 636
5. மேலது, 637
6. நன்னூல், 462
7. மது.ச.விமலானந்தம், தமிழ் இலக்கிய வரலாறு, ப.160
8. சிலப்பதிகாரம், 1:1-6
9. மேலது, 2:31
10. புறப்பொருள் வெண்பாமாலை, கரந்தைப்படலம், 14
11. Xavier S.Thani Nayagam, Landscape and Poetry A Study of Nature in Classical tamil poetry, P.11 (Tamil poetry has all the marks of being indigenous to the Tamil Soil)
12. N.Sanjeevi, papers in Tamilology P.117 (Thus we find, how the early Tamils were deeply conscious of the fundamental factors of geography - land. time and things produced by them- which according to them moulded the very character of the human soul. such a clear - cut classified geographical basis for ancient love-poetry we do not find even in sanskrit, not to mention any other Litereature of any other Language of the world)
13. குறுந்தொகை, 135
14. புறநானூறு, 312
15. சிலப்பதிகாரம், 13:170-173
16. சிதம்பர ரகுநாதன், இலக்கிய விமர்சனம், ப.56
17. பாரதிதாசன், பாண்டியன்பரிசு, 76:140
18. கம்பராமாயணம், வாழ்த்துப்பாடல்
19. மு.வரதராசன், இலக்கிய மரபு, பக் 196-197
20. பேரா.அ.ச.ஞானசம்பந்தன், இலக்கியக்கலை, பக் 60-61
21. பேரா.சே.செந்தமிழ்ப்பாவை, சங்கப்பாடல்களில் மரபு மாற்றங்கள், ப.59
22. டாக்டர் சி.பாலசுப்பிரமணியன், வாழையடி வாழை, ப.146
23. புறநானூறு, 248
24. தண்டியலங்காரம், 8
25. தொல்காப்பியம், பாயிரம்.

26. மேலது, 398

27. ” 400

28. ” 386

29. பரிபாடல், 9

30. புறநானூறு, 58

31. மேலது, 50

32. அகநானூறு, 31

33. சிலப்பதிகாரம், 25:165

34 மேலது, 10:58, 25:171

35. பெரியபுராணம், மூர்த்தி.3

36. முத்தொள்ளாயிரம், 85

37. தமிழலங்காரம், 21

38. மனோன்மணியம், வாழ்த்து

39. தொல்காப்பியம், 266

40. பாரதியார் கவிதைகள், ப.47

41. தங்க செங்கதிர், மாற்றத்தின் குரல், ப.111

42. பாரிமுடியரசன், கவியரசர் முடியரசன் கவிதைகள், ப.18

## முடிவுரை

இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற கவிஞராய்த் திகழ்ந்த பெருமைக்குரியவர் கவிஞர் முடியரசன். தமிழ் வாழ்வே தம் வாழ்வாய்க் கொண்டு இனிமையும் வளமையும் நிறைந்த பல்வேறு படைப்புகளைப் படைத்துத் தமிழன்னைக்குப் புதிய அணிகலன்களைச் சூட்டி மகிழ்ந்தவர். தமிழக அரசிடம் இருமுறை சிறந்த நூல்களுக்கான பரிசு, பாவேந்தர் விருது, கலைமாமணி விருது, எனப் பல்வேறு விருதுகளையும் நல்லாசிரியர் விருது ஆகியவனவற்றையும் பல்வேறு இலக்கிய அமைப்புகளிடமிருந்து இராணா இலக்கிய விருது, தமிழ்ச்சான்றோர் விருது, கலைஞர் விருது, என பல்வேறு விருதுகளையும் அரசர் முத்தையவேள் நினைவுப் பரிசில், இந்திராணி இலக்கியப் பரிசு போன்ற பல பரிசுகளையும் பெற்றவர்.

முடியரசனாரின் கவிதைகள் பல சாகித்திய அகாதெமி, தேசிய புத்தகக்குழு, தென்னிந்திய மொழிகள் புத்தகக்குழு போன்றனவற்றால் இந்திய மொழிகளிலும் ஆங்கில, உருசிய மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பெற்றுள்ளன. 2000-ஆம் ஆண்டு தமிழ் நாட்டரசால் கவிஞரது படைப்புகள் முழுமையும் நாட்டுடைமையாக்கப் பட்டுள்ளன. இந்திய இலக்கியச் சிற்பிகள் என்னும் வரிசையில் ‘முடியரசன்’ என்னும் நூலையும் ‘முடியரசன் கவிதை முத்துக்கள்’ என்னும் நூலையும் சாகித்திய அகாதெமி வெளியிட்டுள்ளது.

முடியரசனார் தம் இருபத்தைந்து நூல்களில் கவிதை, நாடகம், சிறுகதை, கடிதம், கட்டுரை எனப் பல்வேறு இலக்கிய வடிவங்களைக் கையாண்ட சிறப்புக்குரியவர். எல்லா வகைப் பாக்களிலும் பா புனையும் ஆற்றலுடைய முடியரசனார் விருத்தப்பா யாப்பில் அதிகப் பாக்களை (2608 பாக்கள்) இற்றியுள்ளார். அடியளவில் நிலைமண்டில ஆசிரியப்பா யாப்பில் 8292 அடிகளும், கலி வெண்பா யாப்பில் 4875 அடிகளும் மிகுதியாகப் பாடப் பெற்றுள.

‘புதருள் கனி’, ‘வேண்டுவன’ என்னும் கவிதைகளை எண்சீர் விருத்தத்தின் புதிய வடிவமைப்பில் சீர்களை அடுக்கிப் பாடியுள்ளார். வஞ்சிப்பா யாப்பில் முடியரசனார் கவிதை அமையப் பெறவில்லை.

மரபான வடிவம், புதிதான கருத்து, தரமான நெறி இம்மூன்றும் பொருந்தியதே கவிதையென்பது முடியரசனார் தம் கொள்கையாகும். இயற்கையைப் பாடுவதற்கு அறுசீர் விருத்த யாப்பினைக் கையாண்டு ‘காய் காய் காய் காய் மா மா’ என்னும் வாய்ப்பாட்டில் அமைத்துள்ளார். காதல், மொழியுணர்வு போன்ற பாடுபொருளை அறுசீர் விருத்தவடிவில் ‘விளம் மா தேமா விளம் மா தேமா’ என்னும் சீர்வரிசை அடுக்கில் பாடியுள்ளார். குமுகாயம் பற்றிய கவிதைகள் கலிவெண்பா யாப்பில் மிகுதியாகப் பாடப்பெற்றுள. கலிவெண்பாக்கள் அனைத்தும் இன்னிசைக் கலிவெண்பா வகையிலேயே பாடப்பெற்றுள. இவ்வாறு உள்ளடக்கத்திற்குத் தகுந்தவாறு வடிவமைப்பைக் கையாளுதல் முடியரசனாரின் வடிவக் கொள்கையாக உள்ளது.

முடியரசனார் படைப்புகளில் இயற்கை, காதல் தமிழ்த் தேசியம், குமுகாய மேம்பாடு, தொழிலாளர் நலன், சாதி-சமய வெறுப்பு, கடவுள் மறுப்பு, கல்வி போன்றவை பாடுபொருள்களாக அமைந்துள. இதில் இயற்கைப் பாடுபொருள் அழகிய சிந்தனைகளைத் துண்டுவதோடு மட்டுமின்றி மொழித்தூய்மை, நிலையாமை, தொழிலாளர் நிலை, சாதிப் பாகுபாடின்மை போன்றவற்றையும் வெளிப்படுத்துவனவாய் உள்ளமை சுட்டத்தக்கது. இயற்கையின் அழகு, அழிவு இரண்டையும் பாடுவதில் தனித்துவமிக்க கவிஞராய் முடியரசனார் திகழ்கின்றார். இயற்கையைத் தாயாக, கடவுளாக, அரசியாக, ஆசானாகப் பாடுவதிலிருந்து கவிஞர் இயற்கையிடத்தில் கொண்டிருந்த பற்று புலனாகின்றது.

முடியரசனாரின் படைப்புகளில் தமிழ் குறித்த உள்ளடக்கம் தனித்த இடத்தைப் பெறுகின்றது. முடியரசனாரின் கவிதை, கட்டுரை, கடிதம், சிறுகதை போன்ற படைப்புகள் அனைத்தும் பிறமொழிக் கலப்பின்றி மொழித்தூய்மையை நிலைநாட்டுவனவாய் அமைந்துள.

பிறமொழிச் சொற்களைக் கையாளும்போது தமிழ் ஒலி மரபிற்கேற்பக் கையாளுதல் வேண்டும். இலக்கணத்தோடுதான் கவிதை எழுதப்பெறவேண்டும் போன்ற கொள்கைகளில் முடியரசனார் உறுதியோடிருந்தார். இதைத் தம் படைப்பு முழுவதும் கையாண்டுள்ளார். மேலும் தம் படைப்புகளில் பழந்தமிழ்ச் சொற்கள் பலவற்றை மீட்டுருவாக்கம் செய்துள்ளார். தாய்மொழியை வளர்ப்பதில் கட்சி, சாதி, சமயப் பாகுபாடுகள் இருத்தல் கூடாது. கலைச்சொல்லாக்கம், திருமண நிகழ்வு, இறைவழிபாடு, இசையரங்கு, ஊர், தெரு, மக்கள் பெயர்கள் என அனைத்திலும் தமிழ் ஒலிக்கச் செய்திட வேண்டுமென்று தமிழ்வளர்ச்சிக்கு வழியுரைக்கின்றார்.

தமிழின மீட்சிக்காகத் தன் படைப்புகளைப் படைக்கலன்களாகக் கொண்டு போராடிய முடியரசனார் இனம் மீள, மொழி வாழ வேண்டுமென்பதில் உறுதியோடிருந்தார். கவிஞருக்குத் தாயகம் என்பது தமிழகமே. இந்தியாவை நாடென்று குறிப்பிடாமல் பல மொழி, இனம், பண்பாடு, நாகரிகங்கள் கொண்ட ஒன்றியம் என்று குறிப்பிடும் கவிஞர் ஆட்சியாளர்கள் இந்திக்கும் வடநாட்டார்க்கும் மட்டுமே முன்னேற்றம் தந்து தென்னாட்டைப் புறக்கணிப்பதாயிருந்தால் தனித்தமிழ்நாடு கோருவதைத் தவிர வேறுவழியில்லை என்று அறுதியிட்டுக் கூறுகின்றார். முடியரசனார் சார்ந்திருந்த திராவிட இயக்கம் தனித்தமிழ்நாடு கோரிக்கையைக் கைவிட்டபோதும் முடியரசனார் தமிழ்த் தேசியக் கொள்கையில் பின் வாங்கவில்லை, தமிழுக்கு ஆக்கம்தரும் பிறமொழிப் பயிற்சி வேண்டுமேயன்றி ஊறு விளைவிக்கும் நிலையுண்டாக்குமானால் அத்தகைய பயிற்சி அறவே கூடாதென்று அறிவுறுத்துகிறார்.

தலைவன், தலைவி இருவர்க்கிடையேயுள்ள உளக்கருத்தொற்றுமையே காதலுக்கு அடித்தளம் என்பதை வலியுறுத்தும் கவிஞர் தொல்காப்பியம் உரைக்கும் காதலின் படிநிலைகளான காட்சி, ஐயம், தெளிவு, தேறல், குறிப்பறிதல், உறுப்பு நலனுரைத்தல், நலம் பாராட்டல், குறியிடம், அம்பல், அலர், இற்செறித்தல், உடன்போக்கு, வேற்றுவரைவு, அறத்தொடுநிற்றல், வெளிப்பட வரைதல், படாமை வரைதல் போன்றனவற்றைத் தம் படைப்புகளில் அமைத்துள்ளார்.

மக்களிடையே ஒற்றுமை தளர்ந்து, வேற்றுமை வளர்வதைக் காணும் கவிஞர் குமுகாயம் மேம்பட, சாதி சமயமற்ற குமுகாயம் உருவாகவேண்டுமென்று கருதுகிறார். தாய்மொழி வழிக்கல்வியே சிறந்தது. சிந்தனையைத் தூண்ட வல்லது. மொழி, இனம், நாடு செழிக்க அடித்தளமானது; எனவே பள்ளிக்கல்வி மட்டுமல்லாது கல்லூரிக் கல்வியும் தாய்மொழியிலேயே பயிற்றுவித்தல் வேண்டும். விடுதலை பெற்று ஆண்டுகள் பலவாகியும் தாய்மொழி வழிக்கல்வியைக் கட்டாயமாக்க முடியவில்லையென்றால் வெறுமனே மேடைகளில் முழங்கித் திரிவது வீணென்று உரைக்கின்றார்.

தாய்மொழியை வளர்க்கவும் காக்கவும் தாய்க்குலத்தால்தான் முடியுமென்று நம்பிய கவிஞர் திருமணமான ஆண்டிலேயே இந்தி எதிர்ப்புப் போரில் தம் துணைவியாருடன் பங்கேற்றார். சமூகப் பணியில் அவரையும் ஈடுபடுத்தி, சொல்வேறு செயல் வேறு என்றிராமல் சொல்லும் செயலும் ஒன்றாய் வாழ்ந்தார் முடியரசனார். பெண்ணுரிமை வழங்குவதென்றால் முதலில் மறுமணம் தான் கவனிக்கப்படவேண்டும் என்ற கொள்கையை தம் பாடல்வழி முழங்கினார்.

மணக்கொடை, தனிமனித ஒழுக்கச் சீர்கேடு, கலப்படம், பதுக்கல், கையூட்டு திரைப்படமோகம், சாதி அரசியல், ஆட்சியாளர்களின் தன்னலப் போக்கு போன்றவற்றிற்கெதிராய்த் தம் படைப்புகளில் கண்டித்துரைக்கின்றார்.

பொதுவுடைமைக் கொள்கையிலும், பாலின சமத்துவக் கொள்கையிலும் முடியரசனார் உறுதியோடிருந்தார். குமுகாயச் சீர்திருத்தத்திற்குப் பின் அரசியல் சீர்திருத்தம் வேண்டுமென்பதே முடியரசனாரின் கொள்கையாகும்.

முடியரசனாரின் செய்யுள் நடை சங்க இலக்கிய நடையை ஒத்தது. எதுகை, மோனை, இயைபு, முரண், ஒலிக்குறிப்பு, அடுக்குத்தொடர், வினா-விடை, உரையாடல், இலக்கணச் சொற்கள், அடுக்குவினா, எளிய சொற்கள் போன்ற எழில் நலங்களால் சிறந்து அமைந்துள. கவிஞரின் உரைநடையிலும் கவிதை நடை வெளிப்படுவது குறிப்பிடத்தக்கது.

‘அன்புள்ள பாண்டியனுக்கு’ என்னும் கடிதவிலக்கிய நூலின் தலைப்புகள் அனைத்தும் வியங்கோள் சொற்றொடர்களில் அமைந்துள்ளன. இளம்பருவத்திலேயே நல்வழிப்படுத்தும் நோக்கில் இரண்டு அல்லது மூன்று சொற்களில் கடிதங்கள் அமைந்துள்ளன. கடிதப் பொருண்மையைத் தலைப்பே விளக்கி நிற்றல் இதன் சிறப்பாகும். மேலும் பதினைந்து கடிதங்களின் நிறைவிலும் கடிதப் பொருண்மையோடு தொடர்புடைய குறட்பாக்கள் இடம்பெற்றுள. ‘எக்கோவின் காதல்’ என்னும் சிறுகதை நூலில் கடிதங்களே கதையை நகர்த்திச் செல்கின்றன.

முடியரசனார் படைப்புகளில் ஏனைய பயனுவமை, மெய்யுவமை, உரு உவமைகளைக் காட்டிலும் வினையுவமைகள் மிகுதியாக உள்ளன. உவமையணி, எடுத்துக்காட்டுஉவமையணி, இல்பொருளுவமையணி, ஏகதேச உருவக அணி, சொல்பின் வருநிலையணி, வேற்றுமையணி, தற்குறிப்பேற்ற அணி, புகழாப் புகழ்ச்சி அணி, மாறுபடு புகழ்நிலையணி, இரட்டுறமொழிதலணி, பிறிது மொழிதலணி, உயர்வு நவிற்சியணி போன்ற பல்வேறு அணிகளைப் பயன்படுத்தியுள்ளார். இதன்வழி உருவத்தையும், உள்ளடக்கத்தையும் பிணைக்கின்ற பாலமாக முடியரசனார் உத்திகளைப் பயன்படுத்தியுள்ளமை புலனாகும்.

ஒரு படைப்பாளன் தான் படைக்கும் இலக்கியத்தில் பழைய இலக்கிய மரபுகளை மறுப்பதும் புதியனவற்றைப் புகுத்துவதும் அவரவரின் எண்ணவோட்டத்தை, இலக்கியக் கொள்கையை வெளிக்காட்டுவதாக அமையும். முடியரசனார் மரபின் மீது மதிப்பும், மரபு மாறாத புதுமையில் விருப்பும் கொண்டிருந்தார்.

நாடக உரையாடலுக்கு ஆசிரிய விருத்த யாப்பினைக் கையாளுதலே இலக்கிய மரபு. ஆனால் ‘காதல் நெஞ்சம்’ என்னும் தலைப்பிலான பாடலில் தலைவன்-தலைவி உரையாடுவதாக நேரிசை வெண்பா யாப்பில் பாடல் இயற்றியுள்ளார். ‘ஆடவராய்’ என்னும்தலைப்பிலான இசைப்பாடலில் எடுப்பு, தொடுப்பிற்கு அடுத்துவரும் முடிப்புப் பாடல்கள் மூன்றையும் வல்லின மெல்லின இடையின எழுத்துகளால் ஓசையின்பம் தோன்ற தனித்தனியே

அமைத்திருப்பது இலக்கிய மரபில் புதுமையானதாகும். ‘கல்தோன்றி மண் தோன்றாக் காலத்தே’ என்னும் புறப்பொருள் வெண்பாமாலை உதாரணப்பாடலுக்கு கவிஞர் நிலவியல் நோக்கில் விளக்கமளித்துள்ளமை புதுமையானது. வாய்மை, மெய்ம்மை, உண்மை ஆகிய சொற்களுக்கு இடையே உள்ள நுட்பமான பொருள் வேறுபாடுகளை உரைத்தல், புதுமையான இலக்கண உவமைகள் போன்றவை முடியரசனாரின் புதுமை விருப்பை எடுத்தியம்புகின்றன.

மரபு போற்றும் கவிஞரான முடியரசனார் பகுத்தறிவிற்குப் பொருந்தக்கூடிய ஏற்றுக் கொள்ளப் பெறும் இலக்கிய மரபுகளை, ஏற்றுக் கொள்ளவும் பகுத்தறிவிற்கு ஒவ்வாதனவற்றை எதிர்க்கவும் செய்கிறார். தமிழிலக்கிய மரபைப் போற்றும் கொள்கையுடைய கவிஞர் வடமொழியிலிருந்து தமிழுக்கு வந்து தமிழர் வாழ்வியலோடு இயைத்துக் கூறப்படும் புனைவு இலக்கியக் கூறுகளை மறுக்கிறார்.

புலவரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு ‘ஊன்றுகோல்’ காப்பியமும் தாய்மொழிக்கென்று மொழிப் போர்க்காப்பியமாகப் ‘பூங்கொடி’ யையும் இயற்றியுள்ளார். இந்தியெதிர்ப்புப் போராட்டத்தை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பெற்ற பூங்கொடி காப்பியத்தில் ஓரிடத்தில் கூட ‘இந்தி’ என்னும் சொல் பயன்படுத்தப் பெறவில்லை. அயல்மொழி, பிறமொழி என்றே சுட்டப்பெற்றுளது. தாய்மொழியின் மீதுள்ள அளப்பரிய பற்றால் முடியரசனார் பல்வேறு மனித உறவுகளோடு மொழியை இயைத்துப் பாடுவதோடு மட்டுமன்றி தமிழை மனைவியாகவும், மகனாகவும் கருதிப்பாடுவது இலக்கிய மரபில் புதுமையானதாகும்.

செந்தமிழ் என்னும் சொல்லுக்கு தமிழர் மொழிப்போரில் சிந்திய தமிழரின் செங்குருதியில் செழிப்பதால் ‘செந்தமிழ்’ எனப் பெயர் பெற்றது என்றுரைப்பது புதுச்சிந்தனையாகும்.

முடியரசனார் தொல்காப்பிய, சங்க இலக்கிய மரபுகளைப் போற்றி, யாப்பு நெறியிலிருந்து விலகாத மரபுக்கவிஞராகத் திகழ்கின்றார். எப்பொருளையும் பண்டை யாப்பு மரபிலேயே பாடமுடியும் என்பது முடியரசனாரின் இலக்கியக் கொள்கையாக உள்ளது.

முடியரசனாரின் பாடுபொருளில் மொழிப்பற்றும் குமுகாயச் சீர்திருத்தமும் முன்நிற்கின்றன. இலக்கியம் களிப்பூட்டுவதற்கு மட்டுமல்ல, கருத்தூட்டுவதற்கும் உரியது என்பது முடியரசனாரின் கொள்கையாக விளங்குகிறது.

**மேலாய்வுக் களங்கள்:-**

1. முடியரசனாரின் காப்பிய நூல்களை இருபதாம் நூற்றாண்டுக் காப்பியங்களோடு ஒப்பாய்வு செய்ய இயலும்.
2. முடியரசனாரின் பொதுவுடைமைக் கொள்கை, திராவிடக் கொள்கை, தமிழ்த்தேசியக் கொள்கை போன்றவற்றைப் பிற கவிஞர்களின் படைப்புகளுடன் ஒப்பிட்டு ஆய்வு செய்ய இயலும்.
3. முடியரசனாரின் படைப்பிலக்கியத்தில் பண்டைய இலக்கியத்தாக்கம்.

## துணைநூற்பட்டியல்

### முதன்மைத் தரவுகள்


1. கவியரசர் முடியரசன் - கவியரசர் முடியரசன் படைப்புகள் - 1
முடியரசன் கவிதைகள், நெஞ்சிற்பூத்தவை,
தமிழ்மண் பதிப்பகம்,
2,சிங்காரவேலர் தெரு,
தியாகராயர் நகர், சென்னை – 600 017,
2008.

2. மேலது - கவியரசர் முடியரசன் படைப்புகள் -2
காவியப்பாவை, பாடுங்குயில்,
தமிழ்மண் பதிப்பகம்,
சென்னை – 17,
2008.

3. மேலது - கவியரசர் முடியரசன் படைப்புகள் -3
கவியரங்கில் முடியரசன், தமிழ்முழக்கம்,
தமிழ்மண் பதிப்பகம்,
சென்னை – 17,
2008.

4. மேலது - கவியரசர் முடியரசன் படைப்புகள் -4
நெஞ்சு பொறுக்கவில்லையே, மனிதனைத்
தேடுகிறேன், மனிதரைக் கண்டுகொண்டேன்,
தமிழ்மண் பதிப்பகம்,
சென்னை – 17,
2008.

5. மேலது - கவியரசர் முடியரசன் படைப்புகள் - 5
தாய்மொழி காப்போம், புதியதொருவிதி செய்வோம்,
தமிழ்மண் பதிப்பகம்,
சென்னை – 17,
2008.

6. மேலது - கவியரசர் முடியரசன் படைப்புகள் - 6
வள்ளுவர் கோட்டம், ஞாயிறும் திங்களும்,
தமிழ்மண் பதிப்பகம்,
சென்னை -17,
2008.

7. மேலது - கவியரசர் முடியரசன் படைப்புகள் -
பூங்கொடி, வீரகாவியம்,
தமிழ்மண் பதிப்பகம்,
சென்னை – 17,
2008.

8. மேலது - கவியரசர் முடியரசன் படைப்புகள் - 8
ஊன்றுகோல், இளம்பெருவழுதி,
தமிழ்மண் பதிப்பகம்,
சென்னை – 17,
2008.

9. மேலது - கவியரசர் முடியரசன் படைப்புகள் - 9
தமிழ் இலக்கணம், பாடுங்குயில்கள்,
தமிழ்மண் பதிப்பகம்,
சென்னை – 17,
2008.

10. மேலது - கவியரசர் முடியரசன் படைப்புகள் - 10
பாட்டுப்பறவையின் வாழ்க்கைப்பயணம்,
தமிழ்மண் பதிப்பகம்,
சென்னை – 17,
2008.

11. மேலது - கவியரசர் முடியரசன் படைப்புகள் - 11
அன்புள்ள பண்டியனுக்கு, இளவரசனுக்கு,
தமிழ்மண் பதிப்பகம்,
சென்னை – 17,
2008.

12. மேலது - கவியரசர் முடியரசன் படைப்புகள் - 12
எப்படி வளரும் தமிழ், எக்கோவின் காதல்,
தமிழ்மண் பதிப்பகம்,
சென்னை – 17,
2008.

13. மேலது - கவியரசர் முடியரசன் படைப்புகள் - 13
சீர்திருத்தச் செம்மல் வை.சு.சண்முகனார்,
தமிழ்மண் பதிப்பகம்,
சென்னை – 17,
2008.

## துணைமைச் சான்றாதாரங்கள்


1. அறவாணன்,க.ப - தமிழ் இலக்கியச் சமூகவியல்,
தமிழ்க்கோட்டம்,
புதுச்சேரி – 05.
1992.

2. இராமமூர்த்தி.எல் - பாவேந்தரின் மொழிக்கருத்தியல்கள்
பதிப்புத்துறை,
தமிழ்ப்பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்,
2006.

3. இராமசுப்பிரமணியன் வ.த.(உ.ஆ) - பன்னிருதிருமுறைகள்
வர்த்தமானன் பதிப்பகம்,
சென்னை - 17,
1995.

4. இளவரசு, சோ. (ப.ஆ) - நன்னூல் விருத்தியுரை,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,
அண்ணாமலைநகர்,
1981.

5. கந்தசாமி, சோ.ந. - தமிழ் யாப்பியலின் தோற்றமும்
வளர்ச்சியும், தமிழ்ப்பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்,
1989.

6. கம்பர் - கம்பராமாயணம் (இராமாவதாரம்)
கம்பன் கழகம் அண்ணாநகர்
சென்னை - 40
1976.

7. கல்லாடன் - எண்ணங்களின் வண்ணங்கள்
குழலி பதிப்பகம், புதுச்சேரி - 05
2008.

8. குலோத்துங்கன்.தி - தித்திக்கும் தீந்தமிழ் மரபுப்பாடல்,
பைந்தமிழ்ப்பதிப்பகம்,
புதுச்சேரி,
2007.

9. குழந்தை - தொடையதிகாரம்,
பாரிநிலையம்,
சென்னை – 108,
2004.

10. குழந்தைசாமி.வா.செ - சமுதாயச் சிந்தனைகள்,
பாரதி பதிப்பகம், சென்னை - 17,
2001.

11. குன்றக்குடி அடிகளார் - சமுதாய மறுமலர்ச்சி
இலக்கியங்கள்,
கலைவாணி புத்தகாலயம்,
சென்னை – 17,
1993.

12. கோதண்டராமன்.பி - எழுத்தாளர் தர்மம்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை - 2,
1965.

13. கோபாலய்யர் டி.வி(ப.ஆ) - தேவாரம், பண்முறை தொகுதி - 2
பிரெஞ்சு மொழியியல் நிறுவனம்
பாண்டிச்சேரி
1985.

14. சஞ்சீவி.ந. - இலக்கிய இயல்,
தமிழ் எழுத்தாளர் கூட்டுறவு சங்கம்,
சென்னை – 8,
1974.

15. சாமிநாதையர் உ.வே (உ.ஆ) - யாப்பருங்கலக் காரிகை
மூலமும் உரையும்,
நூல்நிலையம், சென்னை,
1968.

16. சிங்கார வடிவேலன்,அர - சங்க இலக்கிய உவமைகள்,
பழநியப்பன் பதிப்பகம்,
தேவகோட்டை,
1986.

17. சிதம்பரநாதன்.அ - முன்பனிக்காலம்,
பழனியப்பா பிரதர்ஸ்,
சென்னை – 14,
1951.

18. சிதம்பர ரகுநாதன் - இலக்கிய விமர்சனம்,
ஸ்டார் பிரசுரம், சென்னை,
1964.

19. சுப்பிரமணியதேசிகர் - தண்டியலங்காரம்,
திருநெல்வேலி தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
திருநெல்வேலி,
1938.

20. சுப்பிரமணியன், ச.வே - இளங்கோவின் இலக்கிய உத்திகள்,
உலகத்தமிழாராய்ச்சிநிறுவனம்,
சென்னை – 113,
1984.

21. சுப்பிரமணியன், ச.வே (உரை) - தொல்காப்பியம் தெளிவுரை,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை – 108,
1998.

22. சுப்புரெட்டியார், ந. - இலக்கிய வகையின் வளர்ச்சியும்
இக்கால இலக்கியங்களும்,
ஐந்திணை பதிப்பகம்,
சென்னை – 5,
1997.

23. சுப்புரெட்டியார், ந. - காலமும் கவிஞர்களும்,
சுப்பிரமணிய பிள்ளை பப்ளிஷர்ஸ்,
திருநெல்வேலி,
1958.

24. சுயம்பு, பெ. - தமிழிலக்கிய அறிமுகம்,
இலக்குமி நிலையம்,
சென்னை,
2005.

25. செங்கதிர்.தங்க - மாற்றத்தின் குரல்,
மாற்றம் வெளியீடு,
மதுரை - 14,
2016.

26. செந்தமிழ்ப்பாவை, சே. - சங்கப் பாடல்களில் மரபு
மாற்றங்கள்,
தி பார்க்கர் பதிப்பகம்,
சென்னை - 14
2007.

27. செந்தினாயகம்பிள்ளை, தி.மு (ப.ஆ) - தமிழலங்காரம்,
சைவ வித்தியாநுபாலனயந்திர
சாலை, சென்னை,
1915.

28. செயராமன், ந.வீ. - யாப்பியல் திறனாய்வு, மணிவாசகர் நூலகம், சிதம்பரம் - 608 001, 1977.

29. சேக்கிழார் - பெரியபுராணம் மூலம், காசித்திருமடம் வெளியீடு, திருப்பனந்தாள், 2009.

30. சேதுரகுநாதன், ந.(உ.ஆ) - முத்தொள்ளாயிரம், திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி, 1946.

31. சோமசுந்தரனார் பொ.வே (உ.ஆ) - கலித்தொகை, திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி, 1969.

32. ஞானசம்பந்தன், அ.ச - இலக்கியக் கலை, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை - 18, 1999.

33. ஞானமூர்த்தி, தா.ஏ - இலக்கியத் திறனாய்வியல், ஐந்திணை பதிப்பகம், சென்னை-5, 2011.

34. தண்டாயுதம், இரா - தற்காலத் தமிழிலக்கியம், தமிழ் புத்தகாலயம், சென்னை - 5, 1973.

35. தமிழண்ணல் - மனத்துக்கு மனம், மீனாட்சி புத்தக நிலையம், மதுரை-1 2010.

36. தமிழண்ணல் - தொல்காப்பியர், சாகித்திய அகாதெமி, புதுதில்லி - 01, 2012.

37. தமிழண்ணல் (உ.ஆ) - அகநானூறு
கோவிலூர் மடாலயம்,
கோவிலூர்,
2004.

38. தமிழமுது.இ (ப.ஆ) - பதினெண்கீழ்க்கணக்கு,
மாணவர் பதிப்பகம்,
சென்னை - 17,
2014.

39. நடராசன் புலவர்.பி.(உ.ஆ) - பெரியபுராணம் மூலமும் உரையும்,
உமா பதிப்பகம்,
சென்னை - 01,
2007.

40. நாகராசன்.வி (உ.ஆ) - குறுந்தொகை,
நியூ செஞ்சுரி புக்ஹவுஸ்
சென்னை - 98,
2004.

41. பரந்தாமனார், அ.கி - கவிஞராக..,
பாரிநிலையம்,
சென்னை - 108,
1984.

42. பவானந்தம் பிள்ளை.ச (உ.ஆ) - யாப்பருங்கலம், லாங்க் மான்ஸ்,
மவுண்ட் ரோடு, சென்னை,
1916.

43. பவானந்தம் பிள்ளை, ச. (ப.ஆ) - இறையனார் அகப்பொருள் மூலம்,
திருநெல்வேலி தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
திருநெல்வேலி,
1916.

44. பாக்கியமேரி - வெற்றிநோக்கில் இலக்கணம்
இலக்கிய வரலாறு மொழித்திறன்,
பூவேந்தன் பதிப்பகம்,
சென்னை - 04,
2013.

45. பாக்கியமேரி - வகைமை நோக்கில்
தமிழிலக்கிய வரலாறு,
நியூ செஞ்சுரிபுக்ஹவுஸ்,
சென்னை - 98,
2010.

46. பாரதிதாசன் - பாண்டியன் பரிசு,
பாரதி பதிப்பகம்,
சென்னை - 17,
1992.

47. பாரதிதாசன் - பாரதிதாசன் கவிதைகள்,
அருணா பதிப்பகம்,
சென்னை - 49,
2013

48. பாரதியார் - பாரதியார் கவிதைகள்,
பூம்புகார் பதிப்பகம்,
சென்னை - 108,
2004.

49. பாரிமுடியரசன் - முடியரசன் கவிதை முத்துக்கள்,
சாகித்திய அகாதெமி,
புதுதில்லி - 01,
2015.

50. பாரிமுடியரசன் - என்தந்தை முடியரசன்
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை - 108,
2016.

51. பாரிமுடியரசன் - கவிதைக்குப் பிறந்த மகன்
முடியரசன்,
கலைஞன் பதிப்பகம்,
சென்னை - 17,
2016.

52. பாரிமுடியரசன் - முடியரசன் கவிதைகள்,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை - 108
2016.

53. பார்த்தசாரதி,நா - கவிதைக்கலை,
வள்ளுவர் பண்ணை,
சென்னை - 1,
1962.

54. பாலசுப்பிரமணியன் கு.வெ(உ.ஆ) - நற்றிணை,
நியூ செஞ்சுரி புக்ஹவுஸ்,
சென்னை - 98,
2004.

55. பாலசுப்பிரமணியன், சி - வாழையடி வாழை,
பாரிநிலையம்,
சென்னை - 1,
1966.

56. பாலசுப்பிரமணியன்,சி - இலக்கிய அணிகள்,
பாரி புத்தக நிலையம்,
1977.

57. பாலசுப்பிரமணியன்,வை - பாரதிதாசன் உவமைகள்,
அருண் புத்தகாலயம்,
சென்னை - 78,
2004.

58. பாலச்சந்திரன், சு - இலக்கியத் திறனாய்வு,
நியூ செஞ்சுரி புக்ஹவுஸ்,
சென்னை - 98,
1976.

59. பிச்சமுத்து.ந - திறனாய்வும் தமிழிலக்கியக்
கொள்கைகளும்,
சக்தி வெளியீடு, சென்னை - 5,
2002.

60. பி.ஸ்ரீ (உ.ஆ) - மனோன்மணியம்,
நியூ செஞ்சுரி புக்ஹவுஸ்
சென்னை - 98,
1992.

61. புலியூர்கேசிகன் (உ.ஆ) - புறப்பொருள் வெண்பாமாலை
பாரிநிலையம், 184 பிராட்வே,
சென்னை - 8,
1963.

62. மணிமேகலை.இரா - சங்கத்தமிழ்க்காதல்,
சிந்து, காரைக்கால் - 609 605,
2006.

63. மாணிக்கம், வ.சுப - இலக்கிய விளக்கம்,
மணிவாசகர் நூலகம்,
சிதம்பரம்,
1972.

64. மாணிக்கம், வ.சுப (உ.ஆ) - மூதுரை, தமிழ்ச்சங்க வெளியீடு - 4
காரைக்குடி,
1998.

65. மாணிக்க, வ.சுப - தமிழ்க்காதல்,
மெய்யப்பன் பதிப்பகம்,
சிதம்பரம் - 608 001,
2002.

66. மாணிக்கவாசகர், இரா. (உ.ஆ) - சிலப்பதிகாரம்,
உமா பதிப்பகம்,
சென்னை
1995.

67. மோகன்,இரா - இந்திய இலக்கியச் சிற்பிகள் - முடியரசன்,
சாகித்திய அகாதெமி,
புதுதில்லி - 01,
2006.

68. மோகன்,இரா - தமிழ்க்கட்டுரைக் களஞ்சியம்,
சாகித்திய அகாதெமி,
புதுதில்லி - 01,
2009.

69. வரதராசன், மு. - இலக்கிய மரபு,
பாரிநிலையம்,
சென்னை - 1,
1960.

70. வரதராசன், மு. - பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை,
பாரிநிலையம்,
சென்னை - 108,
2006.

71. விமலானந்தம், மது.ச. - தமிழிலக்கியவரலாறு,
மீனாட்சி புத்தகநிலையம்,
மதுரை - 1,
1979.

72. வேங்கடசாமி நாட்டார், ந.மு. - கட்டுரைத்திரட்டு,
நாட்டார் பதிப்பகம்,
சென்னை - 10,
1949.

73. ஜீன்லாரன்ஸ், பகவதி.கே(ப.ஆ) - தொல்காப்பிய இலக்கியக் கோட்பாடுகள்,
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை-13,
1998.

**அகராதிகள் - நிகண்டுகள்**


| | | |
|---|---|---|
| 1. இராசேந்திரன், து. (ப.ஆ) | - | செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்திட்ட இயக்ககம், சென்னை - 40, 2007. |
| 2. கதிரைவேற்பிள்ளை, நா. | - | தமிழ்மொழி அகராதி, சாரதா பதிப்பகம், 2011. |
| 3. சுப்பிரமணியன், ச.வே. (ப.ஆ) | - | தமிழ் நிகண்டுகள் தொகுதி - 1 மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 2013. |
| 4. ராமகிருஷ்ணன், எஸ். (ப.ஆ) | - | க்ரியாவின் தற்காலத் தமிழ்அகராதி, க்ரியா, சென்னை - 41, 1992. |
| 5. Chettiar, A.C. | - | University of Madras English - Tamil Dictionary, University of Madras, 1963. |
| 6. Hirsch,E.D | - | The New Dictionary of Cultural Literacy, Houghton Mifflin Harcourt Publishing Company, Newyork, 2005. |

### ஆங்கில நூல்கள்


1. Dakshayini, K.V - The Metres in Kambaramayanam, Annamalai University, Chidambaram. 1979.

2. Prema Nandhakumar - The Life & world of the Tamils: Past and present I & II Indian council of Philosophical Research New Delhi, 2009.

3. Sanjeevi.N - Papers in Tamilology, University of Madras, Chennai, 1995.

4. Sumathi Ramasamy - Passion of Tamil Tongue: Language Devotion in Tamil India, 1891 - 1970 University of California press, Los Angel, London, 1997.

5. William Hentry Hudson - An Introduction to the study of literature Kalyani Publishers Ludhiana, Panjob, 1999.

6. Xavier S.Thani Nayagam - Landscape and Poetry A Study of Nature in Classical Tamil poetr Asia Publishing house, London, 1966.

## இதழ்கள்

1. ஊற்று திங்களிதழ், அக்டோபர் 2009
2. கல்விடுடே, இருமொழித்திங்களிதழ், நவம்பர் 2014
3. கவிதை திங்களிதழ், திசம்பர் 1980
4. சுழல் திங்களிதழ், திசம்பர் 2013
5. தமிழாலயம் இருதிங்களிதழ், மே-சூன் 2016
6. தாமரை திங்களிதழ், தை 1964
7. தினமணி நாளிதழ், 05.12.1998
8. நற்றமிழ் திங்களிதழ், அக்டோபர் 2003
9. பன்மலர் திங்களிதழ், நவம்பர் 2003
10. மீண்டும் கவிக்கொண்டல் திங்களிதழ், அக்டோபர் 2003
11. முல்லை திங்களிதழ், நவம்பர் 1946

**இணையத்தளங்கள்**

1.http://archive.org/stream/in.ernet.dli.2015.202776/2015.202776.The- Relation_djvu.txt

2. http://panpattumaiyaminnithazh.blogspot.in/2017/09/blog-post_50html?m=1

3. www.geotamil.com/pathivukal

4. www.tamilvu.org/library/Libindex.htm